உ

சிவமயம்.





திருவாலவாய் என்கிற

மதுரையில் எழுந்தருளியிருக்கிற கடவுளது

# திருவிளையாடற்கீர்த்தனை.

## விநாயகர் தோத்திரம்.

வெண்பா.

பூதலம்போற்றும் புகழ்சேர்ந்த தென்மதுரை... ... ...*
நாதரருள்சித்தி விநாயகனே—சோதி ... ... ... ...*
திருவிளையாடல் நாடகஞ்செப்பச்செய்தீர் ... ... ...*
கருவிளையா - டல்நாடகம்... ... ... ... ... ...(க)

பதம் - தன்னியாசிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி ]

வரதமகாகணபதே - ஜக - வந்திதகிர்பாநிதே

[அநுபல்லவி.]

அரகரமதுரைமீனம்பிகை பாக
ராகியசோமசுந்தரர்தருயோக
வரத

[ சரணங்கள். ]

(க) கதிதரு வேதா - கமசுர நாதா
அதிவிதபரத - நடனமிடு பாதா
முதல்வவபேதா - முத்திதரு நீதா
மதகஜவதனதிரு - நயன விநோதா
வரத

(உ) வாமன ரூபா - வரமகி பூபா
பாமரபாவன - பரஜன கோபா
நேமசல்லாபா - நிஷ்கள தீபா
சாமரகர்ணவி - சாலப்பிரதாபா

வரத

(ங) சுக்கிலாம் பரதர - சுககுகசோதர
விக்கினேசுவரஜெய - விமலசுபாகர
முக்கியரஸமதுர - மோதகதரகர
சற்குணகணஜன - ஸமுகபராபர

வரத - க.

---

## சோமசுந்தரேசுவரர் தோத்திரம்.

விருத்தம்.

வெள்ளிவெற்புஞ் சடைமுடியுங் கொன்றைமாலையும் பாம்பும் ... *
விடையும் நீக்கிக்
கொள்ளு மதுராபுரியும் மணிமுடியுந் தொடைவேம்புங் ... ... *
கோலப்பூணும்
துள்ளுமீனக்கொடியும் நாட்டமீனக்கொடியுந் ... ... ... ... *
தோய்ந்து மேலோர்
விள்ளுமுலகாண்ட சுந்தரேசா நின்கவிக்கி நின்றருள் ... ... ... *
வேண்டினேனே(உ)

பதம் - தோடிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

தேவநாயகா

[அநுபல்லவி.]

காவுலாவுமதுராபுரீசஜக - காரணபரிபூரணஅர

தேவ

[சரணங்கள்.]

(க) பரதநடவிநோதா - பதஞ்சலிபணிபாதா
வரதமுனிவர்தொழ - வடநிழலிலமரு
மறைதொழவறியாத - விநோதா

தேவ

(உ) பாண்டியதேசபூபா - பத்தர்க்கருள்பிரதாபா
காண்டீபசயில - காலகாலசாம
கானப்பிரியநடேசா - கிரீசா
தேவ

(ங) வேகரிஷபநேசா - மீனாட்சிபிராணேசா
சோகநாசனவிஷா - சனுபிரபல
சோமசுந்தரேசா - மஹேசா
தேவ - உ.

---

## மீனாட்சி தோத்திரம்.

விருத்தம்.

வரைமகளென் பதைமறைத்து வந்துபாண்டியன் ... ... *
மகளாகிக் கலைபயின்று மகுடந்தாங்கி ... ... ... *
தரைமுழுதுஞ் செயங்கண்டு திறையுங்கொண்டு ... ... *
தனித்துநந்தி கணமுதலோர் தமையும்வென்று ... ... *
உரைபெறும்ஈ சரைக்கண்டு மாலைசூட்டி ... ... ... *
யுகந்ததன தரசியல்மா முடியுஞ்சூட்டுந் ... ... ... *
துரைமகளே மீனலோ சனையேயுன்னைத் ... ... ... *
துதிக்கத்தான் வரந்தருவாய் மதிக்கத்தானே ... ...(ங)

பதம் - சாவேரிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி]

ராஜராஜேசுவரி - நித்தியகல்யாணிமீ - னாட்சிஜெகசாட்சி

[அநுபல்லவி]

தேசம்புகழுமது - ரேசுவரிஸ்ரீமகா
தேவிபாண்டியகுல - திலகநாயகிஜெக
ராஜ

[சரணங்கள்.]

(க) கவுரிமலையத்துவஜ - பாண்டிய ... குமாரி
காளிகதம்பவன - வாச ... ... சிங்காரி
தவமுனிவர்க்கருள்செய் - திடுங்கிருபை ...வாரி
சங்கரிவரது - ரந்தரி ... ... ஓங்காரி
ராஜ

(உ) கானப்பிரியவிமலி பாண்டியதே ... ...சாதி
காரசிம்மாசன கோலாகல ... ... நீதி
ஆனதுரைச்சி சவுந்தரிபரஞ் ... ... ஜோதி
அம்பாதர்மபரி பாலனி ... ... யனுதி
ராஜ

(௩) பாலலோசனி சுபாகரி ... ... பூமி
பணிவிதரணிபணியஜரிசிவ ... ... காமி
சீலமாமுனிவர் துதிசெய்யும் ... ... நேமி
தேவிசோமசுந்த ரேசுவரர் ... ... வாமி
ராஜ - ௩.

——(:*:)——

## சுப்பிரமணியர் தோத்திரம்.

விருத்தம்.

கடலும் அசுரர்கள்சேனைக்கடலு மிகக்கலங்க உயர்கிரவுஞ்ச வெற்பும்
மிடல்அசுரர் உரவெற்பும் பிளக்க மறையோர் முனிவோர் வேள்வித்தீ
அடல்அசுரமாதர்வயிற்றெரிதீயும்ஓங்குறவந்தவதரித்த ... ...... [யும்
திடவடிவேற்செல்வாநின்றிருவடியைவந்தித்தேன் சிந்தித்தேனே.(ச)

பதம் - கல்யாணிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி]

மாமயிலேறு முருகா என்றும்ரட்சிக்க
வருவாய்திருமால்மருகா

[அநுபல்லவி.]

நேமமுள்ளமதுரா - புரியில்அங்கயற்கண்ணி
நேசர்சோமசுந்த - ரேசர்தந்தருளிய
மாமயி

[சரணங்கள்.]

(க) முந்தஅசுரர்பகை - சிந்தஉயிர் குடித்துப்
பிந்தவழுதியென - வந்துசெங்கோல் பிடித்து
வந்தகடலும்வற்ற - இந்திரன்முடிபொடித்து
அந்தமகாமேருமே - தந்துலைய வடித்து
மாமயி

(உ) தெய்வசம்மந்தரெனத்-துய்யவடிவங் காட்டிச்
சைவம்வைதீகந்தானே-மெய்யென் றுநிலைநாட்டிப்

பொய்மயமதங்களை - நையவிகழ்ந்து வாட்டி
வெய்யசமணர்களைச்- செய்யகழுவில் மாட்டி
மாமயி

(௩) தனிக்கும்-பரற்குங்-கும்ப-முனிக்கும்உபதே சித்து
பனிக்கமலத்தனைய-வனிக்குட்சிறையில் வைத்து
தொனிக்கும் அன்பர்கள்மன-தினிக்கும்படிரெட்சித்து
கனிக்கிளிமொழிக்குறக்-கனிக்கிமயல் மிகுத்து
மாமயி-ச.

——[-:-]——

## சரஸ்வதிதோத்திரம்.

விருத்தம்.

மலரய னுவிற்றேன்றி-மலயவெற் பதனிற்றூவி ... ... ... ...*
பலர்புகழ் பாண்டிநாட்டிற்-படர்ந்துசெந் தமிழ்ப்பூப்பூத்து ... ...*
இலகுகுற் றடிமையாமென்-னிதயவெண் டாமரைக்குள் ... ......*
உலவுபொற் கொடியேஆள்வாய்-உனதிசை வினவத்தானே... ... (ரு)

பதம்-பயிரவிராகம்-சாப்புதாளம்.

[பல்லவி]

சரஸ்வதித்தாயே-நல்வாக்கு-தந்துரட்சிப்பாயே

[அநுபல்லவி]

சுரகணதிபர்தவ - வரமுனிவர்கள்தொழும்
சரஸ்வதி

[சரணங்கள்.]

(க) வெண்ணிலவொளிகாட்டி - வெண்டுகிலுடன்
வெண்மணியணி பூட்டி
எண்ணருமறைவண்டு - இசைக்கவாசமாய்த்தானே
வண்ணவெண்டாமரை - மலரில்வளருந் தேனே
சரஸ்வதி

(உ.) முத்திதரும் அற்புதமே - நான்முகனுவில்
முதிர்ந்ததேவாமிர்தமே
பொற்றொடிக்கையில்ஞானப் - புத்தகமுடனுளும்
நத்தும்பத்தர்தம்நாவில்-நடம்புரிந்தென்னையாளும்
சரஸ்வதி

(௩) நால்மொழிமலரெடுத்து-கனிந்தன்பெனும்
நர்ரினலே தொடுத்து

சிலமாமதுரேசர் - திருவடிதனிற் சாற்ற
சாலமகிழ்வுடனே- தரிசனஞ்செய்தேற்ற
சரஸ்வதி-டு.

---

## சிவனடியார்தோத்திரம்.

விருத்தம்.

கடிமலர்ப் பொழில்சூழ்கூடற் - கயற்கண்ணாள் பாகர்தாளில் ... ...*
முடியுறப் பத்திசெய்து-மொழிமன மெய்மூன்றொத்து ... ... ...*
நெடியசெந் தமிழால்வாழ்த்தி-நேசித்து முத்திபெற்ற ... ... ...*
அடியவர் அடியைச்சென்னிக்-கணிகுவேன் பணிகுவேனே ... ...(சு)

பதம்-பரசுராகம்-ஆதிதாளம்.

[பல்லவி]

அடியார்அடியே - அணியும்என்முடியே

[அநுபல்லவி]

கடிநகர்மதுரைஅங் - கயற்கண்ணிநேசற்கு
அடி

[சரணங்கள்.]

(க) வந்தரன்அடிதொழும்-வானவர்மணிமுடிப்
பந்தியிற்பிரம்படி - படமுடுக்கி
சிந்துமணிக்குப்பையைத் தினந்தொண்டர்அலகிட
தந்திநெந்திகேசன் - சலசமலரடிக்கி
அடி

(உ) மட்டிக்கொடுஞ்சமணர்-மலையிற்சேர்த்திறுக்கிக்
கட்டியமுக்கிவிட்ட-கடலுமுந்த
மட்டில்லாப்பேராசை-மலையுடனேபொருந்திக்
கட்டுண்டமுந்துபவக்-கருங்கடலுங்கடந்த
அடி

(ங) அரிவையர்மயல்தள்ளும்-அவர்கட்கேமிகமுத்தி
தருவமென்றருமறை - தனைச்சாற்றி
அருளும்பரமன்றன்னை - அருட்டுசியிற்சீர்த்தி
பரவைதனையிணக்கும் - படிதூதுவிடுமூர்த்தி
அடி

(ச) இருகையுந்தலைமேல்வைத்- திறைஞ்சிப்பேரின்பவெள்ளம்
விரியஉள்ளடங்காமல் - மிகவெழுந்து

இருவிழிவழிவெள்ளம் - இறைவரடிபொழிந்தும்
துரியமுதற்கடந்த - ஜோதிபதத் தழுந்தும்
அடி

(ரு) தந்தைதாளும்பிறவித் - தாளும்வெட்டியெறிந்த
மைந்தர்தாளும்நீல - மணிக்கண்டர்
அந்தமலர்ப்பொற்றுளுக் - கடியவர்க்கன்பாகி
முந்துடல்பொருளாவி - மூன்றும்உதவுந்தொண்டர்
அடி - கூ.

———(*:௱:*)———

## அவையடக்கம்.

விருத்தம்.

தற்பரனுற் றெளிந்தநந்தி ஸனத்குமாரர் ... ... ...*
தமக்கருள அவர்வியாஸர் தமக்குக்கூற ... ......*
விற்பனவியாஸர் சூதற்குச்சொன்ன ... ... ... ...*
மிக்கபதினெண்ணுலில் மிருகாந்தத்தில் ... ... ...*
அற்புதமாஞ் சங்கரசங் கிதையிற்கூடல் ... ... ...*
அழகேசர் திருவிளையாட் டறுபானுலுஞ் ... ...*
சொற்பெரிய வடநூலைத் தமிழ்நூலாகத் ... ... ...*
துதித்தபரஞ் சோதிமுனி விதித்ததாமே. ... ...(எ)

இதுவுமது.

விதித்ததிரு விளையாடற் புராணந்தன்னை ... ... ...*
விளங்குநாடகமாய்ச்சொல்லென்றுமேலோர் ... ...*
மதித்துரைக்கக் கமலமலர்க் கெதிரேகொட்டி ... ...*
மலர்ந்ததெனப் புலவோர்முன் வழுத்துகின்றேன்...*
துதித்திடுந்தேன் நச்சுமரத் தினிலுற்றுலும் ... ...*
சுவையருு தவைபோற்புன் சொல்லுற்றுலும்... ...*
நிதிக்கிறைவன் முதற்றிசையோர் பரவுங்கூடல்... ...*
நிமலர்புக ழின்சுவையாம் நெறியினோர்க்கே ...*(அ)

இதுவுமது.

நெறியான மேலவரால் உரைக்குங்கீர்த்தி ... ...*
நிகழ்த்தவறியேன் உரைக்கிற் பயனேதென்னில் ...*
வெறியாமென் சிந்தையொரு யிமைப்போதேனும் ...*
விமலர்பதம் நினைக்குமே யென்றும்என்போல் ...*
அறியாத மூடருக்கும் மிருகங்களுக்கும் ... ... ...*
அரும்பறவை களுக்குமுத்தி யளித்தாரென்று ...*

குறியாக நம்பிசிவ பெருமானுடல் ... ... ... ...*
குளறினேன் வாயில்வந்த துளறினேனே. ... (௬)

ஆதியந்தத்தொகை - விருத்தம்.

உளவெண்பா அஞ்சுகலித் துறையோர்நான்கு ... ...*
ஓதியகொச் சகமூன்றை நூற்றிநான்காம் ... ...*
வளர்விருத்தம் திபதைபதம் மூன்னூற்றேழ்பான் ...*
மருவும் ஏழாகஎண்ணூற் றெண்பத்தெட்டும்... ...*
அளவுறுமைந் திலக்கணங்கற் றுரைத்தேனல்லேன்...*
அரனருளால் மொழிந்ததுதிக் கியாதுகுற்றம் ...*
விளையினும்இவ் விதமுரையென் றெனக்குப்புத்தி ...*
விள்ளுவீர் பிழைபொறுத்துக் கொள்ளுவீரே. ...(௭)

பதம் - தோடிராகம் - ஆதிதாளம்

[ பல்லவி ]

ஏதுபிழைவரினும் - ஓதியுணர்ந்தவர்க - ளேதயவுசெய்திடுவீர்

[ அநுபல்லவி ]

ஆதிமதுரை தன்னில் - ஜோதிசெய்திருவிளை
யாடல்மகிமைதன்னை - நாடகமாகச்சொன்னேன்

ஏது

[ சரணங்கள். ]

(௧) அரியதானவிலக் - கணவிலக்கியத்திலோர்
அட்சரங்கூட அறியேன் - கல்வி
வருகவீசரெதிர் - கேட்குமொழிக்குவதில்
வார்த்தைசொல்லவுஞ்சிறியேன்
பரிவினேடுமுன்னேருரையே ... ... ஈதென்று
பகர்ந்தேன்விளையாட்டுப்பாடலி... ... தாமென்று
அருள்செய்குவீர்சொன்னேன் - சிறியமின்மினிநின்று
ஆதவன்தனக்கெதி - ராமோவது ... போலின்று

ஏது

(௨) தங்குங்கடல்நீருண்டு - உவரைக்கெடுத்துநன்னீர்
தரணிக்கருளுஞ்சீதம் - பின்
அங்குநீர்பிரித்துப்பாலுண்ணும் அன்னம்இவை
ஆமேஉமது நீதம்
எங்கும்உயர்மகத்தில் - அங்கிஅருந்தும்அவை
இமையவர்உண்டுமகிழ் - வதுபோலுமிகுஞ்சுவை

பொங்கும்எனதுகவி - உங்கள்பெரியசவை
புகுந்திடிற்சிவன்செவிக் - குகந்திடுமேஇவை

ஏது

(சு) செல்வன்கவிக்குங்குற்றஞ் -சொல்லும்பதியோருக்குச்
சிறியன்கவிதைநேரா - யான்
சொல்லியமொழியெல்லாம் - புல்லியமொழிமணற்
சோற்றிற்கல்லாய்வாரா
நல்லமறைமொழிக்கும் - அடங்காதவர் துதி
நாரணன்நான்முகனும் - அறியாரென்று மதி
அல்லும்பகலுமாகச் - சொல்லிவந்தேன் அதில்
ஆசைகேழ்க்கஇல்லை - யானென்செய்வேன் இதில்

ஏது - எ.

---

## மங்களம்.

விருத்தம்.

செழிவுளமூ வர்கள்ஈரேழ் ஜெகத்தோர்இந்தத் ... ... *
தென்மதுரை அங்கயற்கண் தேவிசெந்தேன் ... ... *
பொழிகடப்பந் தார்முருக நந்தியாதி ... ... ... ... *
புகல்கணநாதர்கள் அடியார் போற்றிநாளும் ... ... *
மொழிதருமிக் கதைபடித்தோர் கேட்போரெல்லாம் ... *
முதல்வர்அருட் பெருங்கடலில் மூழ்கவாழ்க ... ... *
எழில்மதுரா புரிச்சுந்த ரேசர்கீர்த்தி ... ... ... ... *
யின்சொல்லே மருவுமங்க ளஞ்சொல்வேனே ... (மக)

பதம்-சுருட்டிராகம்-அடதாளசாப்பு.

[ பல்லவி. ]

மங்களம் மங்களஞ் - ஜெயஜெய - மங்களம் மங்களம்

[ அநுபல்லவி. ]

மங்களங்கனத - ரங்கவேணிதர - துங்கமாதவ ஸ்தோத்திரா
சங்கராபணபு- ஜங்கபூஷணக - தம்பவாரண்ணியக்ஷேத்திரா

மங்களம்

[ சரணங்கள். ]

(க) கோபதிதற்சன-பாபமோசன-பிரதாபசோபன-வமோகா
பூபசற்குண-சல்லாபஙித்திய-மதுராபுரீச ஜகன்மோகா

மங்களம்

(உ) ஞானசாகரகிர் - பாஙிதேபிரபல- மானவியாபக-விநோதா
கானகோகிலச - மானபாஷிணிஸ்ரீ - மீனலோசனி—ஸமேதா

மங்களம்

(ங) சந்திரசேகர - முகுந்தபூசித - சவுந்தரீக உல்லாசா
கந்தர்வாதிசுர - வந்திதாஜெயது - ரந்தரீக சுந்தரேசா

மங்களம் - அ

———(*)———

## தோடயம்.

### விருத்தம்.

பூவளர்வோனும்நெடிய-புணரியிற்கண்வளர்வோனும் *
பூமலிந்த
காவளர்கற்பகநாட்டின்-கண்வளர்வோனுந்துதிக்கும் *
கதிக்குங்கூடல்
தேவளர்செஞ்சடைவிடைச்சுந்- தரக்கடவுள்விளையாடல்
சேர்ந்தஇன்சொல்
நாவளர்நாடகத்தின்நன் - னயஞ்சொல்வான் - மகிழ்ந்து
தோடயஞ்சொல்வேனே. (ம௨)

தோடயம்-நாட்டைராகம்-சம்பைதாளம்.

(க) பொன்வளர்மதுராபுரிவாசர்- புகழ்வளர்சோமசுந்தரஈசர் ... *
தன்மகிழ்வுள்ளதிருவிளையாடல் - தனைநாடகமாய்ப்பாட - ஆ- ஆ
என்மனதினிலுயர்சிவபத்தி - யேபெருகிடஅதனால்முத்தி ... *
நன்மகிழ்வொடுபெறஅருள்சித்திவி - நாயகன்துணையே - ஜெய

(உ) சுரர்பணிமீனம்பிகைபாகர் - சோமசுந்தரேசுவரயோகர் ... *
தரணியில்மகிழ்திருவிளையாடல் - தனைநாடகமாய்ப்பாட - ஆ - ஆ
பரவுதென்மதுராபுரலிங்கம் - பரிமளமிர்கமததரலிங்கம் ... *
தருவுலகினர்தொழுவரலிங்கம்- சுந்தரலிங்கந்துணையே. ஜெயஜெ

(௩) துன்னுவிபுதர் பதிதொழுமூர்த்தி - சோமசுந்தரேசுவரர் கீர்த்தி *
நன்னயம்உயர் திருவிளையாடல் - நாடகந்தனைப்பாட-ஆ-ஆ *
அன்னைகாசியில் விசாலாட்சி-அமலிகாஞ்சி வளர்காமாட்சி *
நன்னயமறைபுகழ் ஜெகசாட்சிமீ-னாட்சிபதந்துணையே- ஜெய *

(௪) பனிமதிமருவிய ஜடாதரர்-பணியணிசோமசுந்தரேசுவரர் *
தனுகிரிதரர்திருவிளையாடல்- தனைநாடகமாய்ப்பாட-ஆ-ஆ *
அனுதினமெ-னதுமுன்வருதுய்யன்-அருள்பெரு - குபரமகுரு மெய்யன்
முனிவசுரரைவெல்பன்- னிருகையன்முருகையன்துணையே-ஜெய

(௫) சுருதியறிவரியஜெகநாதர் - சோமசுந்தரேசுவரநீதர் ... ... *
சரசமொடுசெய்திருவிளையாடல்-தனைநாடகமாய்ப்பாட- ஆ-ஆ *
அருள்பெருகியெனதுநாவதி - லனுகிரசமொழுகவேதுதி *
தருகவிஅருளுங்கிர்பாநிதி - சரஸ்வதிதுணையே - ஜெயஜெயா *

(௬) சுடர்அடிமுடிநடுவெறுவரத-சோமசுந்தரேசுவரர்பரத ... *
நடனசுமுகர்திருவிளையாடல் - நாடகந்தனைப்பாட- ஆ - ஆ *
வடிவரன்அடியவரெனவும்உரு-மருவியெ-னதுகுறையொழியவரு
கொடியபிறவியறஅறிவுதரு - குருபாதந்துணையே- ஜெயஜெ (௬)

---

தோடயத்தரு-முற்றும்.





சிவமயம்.

# திருநாட்டுச் சிறப்பு.

## விருத்தம்.

மருநாட்டுங் கொன்றையணி நாதர்வெள்ளி ... ...*
மலைமறந்து வந்தரசு பெறுங்தென்னடு ... *
செருநாட்டும் பகைவரஞ்சக் கயற்கண்ணுள்தன் ...*
சென்னிமேல் முடிபுனைந்த கன்னிநாடு ... ...*
தருநாட்டுக் குயர்அமுதாந் தமிழ்ப்பிறந்த ... ...*
தமிழ்நாடு எவருமகிழ் பாண்டிநாடித் ... ...*
திருநாட்டுச் சிறப்பதனை யுரைக்கநெஞ்சந் ... ...*
தேறுவேன் தெரிந்தமட்டுங் கூறுவேனே ...(கரு)

பதம்-மத்தியமாவதிராகம்-சாப்புதாளம்.

[பல்லவி.]

பாண்டியதேசத்தின் பெருமையையெவராலும்
பகர்ந்திடஎளிதாமோ ... ... *

[அநுபல்லவி.]

வேண்டிமலையத்துவச - பாண்டியன்தவத்திலுற்ற
மீனம்பிகைதன் சமேதர்கருணைபெற்ற
பாண்டிய

[சரணங்கள்.]

(க) ஆதிசிவன்முடியில்-மாதவன்புனிதநீர்
அபிஷேகஞ்செய்தன்பி ... ... ... னலே
பாதம்பணிவதுபோல் - மேகமெல்லாந்திரண்டு
பருத்தபொதிகைமலை ... ... ... மேலே
மேதினிசெழிக்கவே - மழைபொழிந்திடஅந்த
விமலர்செய்கிருபையைப் ... ... போலே
கோதில்தவத்துக்கெல்லாம் - தாயாம்பொருனைநதி
குலவிப்பிரவேசிப்ப ... ... ... தாலே
பேதமில்லாக்குளங்கள் மடுக்கள்ஓடையி லேறிப்
பெருகநீர்வளங்கொண்டுபயிர்களெல்லாந் ... தேறி

ஒதும்பலன்கையேற - மன்னர்கடமை ஆறில்
ஒன்றுகொடுத்துமிக - உயர்வாயெல்லோரு மீறி
உம்பருலகைச்சிரிப்பார் - சிவசமயத்
தன்பர்புகழை விரிப்பார் - கொடியபவத்
துன்பமதனை யெரிப்பார் - நல்லறமான
இன்பமதனைத் தரிப்பார் - நல்விருந்துடன்
உண்ணுவர்பெரியோரை - நண்ணுவர்விமலரென்
றெண்ணுவர்பணிவிடை - பண்ணுவர் நிறைபல
ஊருங்கன - சீரும்புல - வோரும்புகழ் - தேருந்திரு
உச்சவமுமகி - ழச்செய்தேவர்களும்
மெச்சியடிதொழ - உச்சிதமேயுள்ள

பாண்டிய

(௨) அரனுக்குவிஷந்தந்த - உவர்க்கடலென்றதை
அடரும்வைகையும்உமை ... ... ... ... யோடு
திருநடஞ்செய்யும்ஈசர் - இளைப்பாறவீசுந்தென்றல்
சிறந்திட்டசந்தனக் ... ... ... ... ... காடு
பெருகும்விந்தகிரியை - வென்றமுனியைத்தாங்கும்
பெருமைசேர்பொதிகையங் ... ... ... கோடு
மருவிப்பொன்மழைபெய்ய - முத்துமுத்தமிழ்சென்னல்
வளமுமிகுந்ததென் ... ... ... ... ... னாடு
அருமறையோர்க்குழு - வுலகுஞ்செய்புந்தொண்டு
ஆண்டுசெங்கோல்செய்யும் - பாண்டியன்கெடிகண்டு
வரைமேருநடுங்கும்இந் - திரன்ஒடுங்குவன் பண்டு
வாரிதிசேரும்வற்றும் - வணிகர்க்கிணையெங்குண்டு
மகிழ்வுறக் கலிதடுப்பார் - சதுரத்தர்மழை
முகிலுக்கும் பிணைகொடுப்பார் - புருடரெல்லாம்
புகழ்பெற்ற தவந்தொடுப்பார் - மங்கையர்களும்
மகிழ்நன்தெய்வமென்றடுப்பார் - செல்வமிகுந்து
மள்ளர்முதல்எல்லோரும் - விள்ளும்பொன்மணிப்பிச்சை
அள்ளியிடுவர்மாறிக் - கொள்ளுவர்பலபண்டம்
மறவர்கள் - சிறுமியர் - பறவைமே - லெறிகல்லு
மாமுத்துக - ளாமிப்படி - யேமெத்தவு - மேமுத்திய

பாண்டிய

(௩) பதியும்பூவணமேனி - வேய்வனந்தோள்திருப்
பரங்குன்றுங்கொடுங்குன்றுங் ... ... கொங்கை

விதிதிருச்சுழியுந்தி - வயிறுகுற்றாலந்திரு
வேடகமேமலர்ச் ... ... ... செங்கை
கதிதருமதுரையே - திருமுகமாம்இந்தக்
கன்னிநாடாகிய ... ... ... மங்கை
பதினுலுஉலகையுஞ் - சதிரானசிவஸ்தலம்
பதினுலாகவேபெற்றாள் ... ... ... இங்கை
மதிசூடியுங்கவுரியுங்குகனும் எக்காலு
மநுநீதியாய்அரசாளுவர் திருமாலும்
முதலாமீனுரு - வெடுத்தா னிங்குநாலு
முகனுங்கும்பமுனியாய்ப் - பொதிகையிலுற்றுமேலு
மொழிமறைதனைநோக்கி - எவர்க்குமிரு
விழியெனுந் தமிழாக்கிச் - சிவசமய
வழியறிந்திடத் தாக்கி - மறுமதங்கள்
அழியும்படியே ஆக்கி - கருணைசெய்து
மூவரும்அணிமுடித் - தேவரும்அருந்தவர்
யாவரும்புகழ்ந்திட - வேவரும்பெருந்தவ
முத்தியும் - பத்தியும் - வெற்றியும் - சித்திய
மூலப்பொருள்-லீலைத்தொழி-லாலுற்றிடு - ஞாலத்தினில்

பாண்டிய. (௰)

---

## திருநகரச் சிறப்பு.

### விருத்தம்.

இருநிலமா மகட்குநவ ரத்நமாலை ... ... ... ... *
யெனும்பாண்டிய தேசத்திற் சிறந்தவூர்கள் ... ... *
அருணமணி யெனச்சூழ அதனுள்மின்னும் ... ... *
அழகுநடு நாயகமா மணியைப்போலும் ... ... *
மருவுதமிழ் நாட்டுமங்கை வதனம்போலும் ... ... *
வைதீகம் சைவமிக வளரஓங்கும் ... ... ... *
திருமதுரா புரிநகரச் சிறப்பையார்க்குந் ... ... *
தெரிவிப்பேன் தெரிந்தமட்டும் விரிவிப்பேனே (௧௪)

பதம்-கேதாரகௌளராகம்-ஆதிதாளம்.

[பல்லவி.]

மதுராபுரிநகர்க்-கெதிராயொருநகர்-வானுலகினிலுமுண்டோ

[அநுபல்லவி]

எதிராரெனவந்த - மீனும்பிகை சுந்த
ரேசருடன்உகந்த - நேசமிகுந்தஇந்த

மதுரா

[சரணங்கள்.]

(௧) வந்துநன்னீர்க்கடல் - அகிழாங்கோட்டையாய்
வளைந்ததுமுன்னொரு ... ... ... நாகம்
அந்தநாகந்தோல் - உரியவெளிவதுபோல்
அசைந்ததில்உலவுமே ... ... ... மேகம்
உந்திமீறுஞ்சக்கிர - வாளகிரிபோலவே
உயர்ந்தகோட்டைக்குள் ... ... அனேகம்
விந்தைசேரும்எழு - கடலுடன்எழுதீவாய்
விளங்கும்வீதியின்வை ... ... ... போகம்
சுந்தரேசுவரர்-மீனும்பிகைதமக்காங் ... ... கு
துலங்கும்விமானம்வெள்ளிமலைபொன்மலைபோலோங்கும்
அந்தமானமதில்-சூழுங்கோபுர ... மெட்டும்
அஷ்டகிரிபோலுயர்ந்-தண்டகோளத்தை முட்டும்

மதுரா

(௨) வசந்தமண்டபமுத-லாகியஆயிரக்கால்
மண்டபஞ்சூழ்ந்த ... ... விஸ் - தாரமும்
உசந்தபொற்றுமரையுஞ்சித்திரமுங்கனகத்தால்
ஓங்கியதுவசமும் ... ... பிர - காரமும்
இசைந்துமீனுட்சிசொக்க-லிங்கமென்றேகிள்ளை
யினங்கொஞ்சிப்பேசுஞ் ... சிங் - காரமும்
நிசங்கொள்ளுமீனவள் - வேளைக்கொருவடிவாய்
நிறைகொலுவிருக்கும் ... ... ஒய்-யாரமும்
திசையெங்கும்புகழ்மேள - தாளத்தின்வருக்கமும்
தீபமுந்தெரிசிக்க - வருமவ ... ருருக்கமும்
இசைமறைமுனிவர்கள் - தேவர்கள் நெருக்கமும்
ஈசர்சோமசுந்த - ரேசுவரர் ... பெருக்கமும்

மதுரா

(௩.) பூசுரர்முதலான - சாதியர்தெருக்களும்
புண்ணியமாமுனிவர் ... ... மடங்களும்

வாசநந்தவனமும் - அநந்தந்தெய்வஸ்தலமும்
மாமலர்ச்சோலையுந் ... ... ... தடங்களும்
ஓசையிடும்புலவோர் - பேசும்பெருங்கவியும்
ஓயாதகீதமும்... ... ... நடங்களும்
ஈசர்திருவிழாவும் - நித்தியகல்யாணங்களும்
என்றுமாறுமல்ச்செய் ... ... இடங்களும்
மாசில்லாநவரத்ன - மணிமாடச்சோதியும்
வாழைகமுகுநிரை ... ... தோரணவீதியும்
தேசம்புகழுமணிக் - கடைகளுங்கனங் கொள்ளச்
செழிக்கும்நவமணிகள் - கொழிக்கும் வைகையுமுள்ள
மதுரா

(௪) கற்பகஞ்சுரபிசிந் - தாமணிஇருநிதி
களுந்தெருத்தெருவெங்கும் ... ... ஓங்குமே
அற்புதமணிகளும் - பொன்னுந்தெருவிற்குப்பை
யாய்க்கழிந்துகுவிந்து ... ... யேங்குமே
பற்பற்பலமலரும்பன் - னீருஞ்சந்தனங்களும்
பாரெங்குஞ்சேருகித் ... ... தேங்குமே
பொற்புள்ளஅமரா - பதியுடனேஅளகா
புரியும்வெட்கமுற்றுப்பின் ... வாங்குமே
கற்புள்ளமாமகட் - கிதுதாமரையி லகம்
காசினிமாதுக்குத் - தேசுபெறுந்திலகம்
விற்பனவாணிக்கி - வெண்டாமரை ... மாடமாம்
விவேகசத்திக்கித்தனி - யோகபொற் பீடமாம்
மதுரா. ௰௧.

———(*)-(*)-(*)———

திருக்கயிலாசச் சிறப்பு.

விருத்தம்.

விரிக்குமா மறையின்சென்னி மேலெழுஞ் சுடரைத்தாங்கி ... *
தரிக்குமா முனிவர்தேவர் சந்ததந் தொழவேதற்கும் ... ... *
அரிக்கும்வாழ் பதமுமங்கி அழியும்நா ளினும்மங்காத ... ... *
திருக்கயி லாசவெற்பின் சிறப்பினைச் செப்புவேனே (௰௫)

பதம் - சௌராஷ்டிரராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

திருக்கயிலாஸகிரி-சிறப்பைஉரைக்கஆதி- சேஷனுக்கும்வருமோ

[அநுபல்லவி]

தருக்குலவுமதுரா-புரிக்கயற்கண்ணிமேவும்
சந்திரசேகரர்சோம-சுந்தரேசருலாவும்

திருக்

[சரணங்கள்]

(க) மெச்சும்வெண்ணிலவொளி-திசையெங்குநிறைந்தண்ட
வெளிக்குமப்பாலுயர்ந்து ... ... தோணுமே
முச்சுடருங்கண்ணாக-நட்சத்திரங்களையெல்லாம்
மொய்த்தபொற்பணியென்னப் ... ... பூணுமே
பச்சைமுகிலுமையாள்- மேனிபோலே ... துலங்கும்
பால்நிலவுங்கங்கையும்-மேல்முடியில் ... இலங்கும்
இச்சைமானும்புலியும்- கரியும்பாம்பும் ... துளங்கும்
ஈசர்வடிவமென்ன - வேசிறந்து ... ... விளங்கும்

திருக்

(உ) எங்குங்கற்பகச்சோலை - எங்கும் அமிர்தஓடை
எங்குமாமுனிவர்கள் ... ... ... ... வேதம்
மங்குலின்அமரர்கள் - மங்கையர்நடமிட
வளருங்கந்திருவர்சங் ... ... ... ... கீதம்
பொங்கும்வீணையிசைபோற் - குயில்சுருதி ... கூடும்
புனிதமறையைக்கிள்ளை - பூவையுடனே ... பாடும்
மங்கையர்நடனம்போல் - மயில்களுநட ... மாடும்
மரங்களுந்தலைஅசைத் - தேமலர்ந்து கொண்டாடும்

திருக்

(ங) பலகோடிசூரியன்போற்-பலவிமானம்மின்னும்
பரமன்கோயில்அங்கே உறையுமே
குலவுஞ்சன்னிதிமுன்னே - சிவகெங்கையென்றுபெயர்
கொண்டதீர்த்தமொன்று-நிறையுமே
சொலும் அந்தத்தீரத்தில்-தேவதச்சன் அமைத்த
ஜோதிமண்டபமொன்று-தாரகையுடன் மொய்த்த
கலைமதி-ஞானநா - யகர்பதந்-தொழ உற்ற
காலம்நோக்கியிருப்-பதுபோலிருக்கு மெத்த

திருக்-கஉ.

விருத்தம்.

இக்கயிலைமலையில்அரன்சன்னிதிக்கி எதிருறையுஞ்சிவகங்கை * அதனிலாடி
அக்கரையில்இருக்குமணிமண்டபத்தில்அமர்ந்துசந்தியாதிவினை * முடித்துமேலாம்
முக்கணரைத்தொழுஞ்சம்புபத்தன்ஞான - மொழிச்சதாநந் * தன்உத்தமன்பிரசண்டன்
உக்கிரவீரியன்முதலோர்ஆங்குமேவும் உயர்சூதர்தமைவணங்கி * ஓதுவாரே (கசு)

பதம்-கலியாணிராகம்-ஆதிதாளம்

[பல்லவி.]

தீர்த்தமூர்த்திஸ்தல-மூன்றும்உயர்ந்தஒரு
சிவஸ்தலஞ் சொல்லும்ஐயா

[அநுபல்லவி.]

தோற்றுமூவாறு புராணங்களையும் ஓது
சூதமுனியேஇந்தப் - பூதலத்தின் மீது
தீர்த்த

[சரணங்கள்]

(க) கீர்த்தி பெருகும் வேதா - கமபுராணம் ... ... ஆதி
கிளர்த்தும்பொருளேஅறம்-வளர்த்தவட்கொருபாதி
மூர்த்தமானநிலையைப்-பரமென்றுணர்ந்த ... ... நீதி
முனிவர்க்கிறையேஎங்கட்-கருள்செய்தருளுஞ்ஜோதி
தீர்த்த

(உ) மேருமந்தரங்கயி-லாசமுத ... ... லவனி
மீதுவிமலருறை-ஸ்தலங்களுந்தனித் ... ... தனி
ஆரும்பெறுங்கதியுங்-காரணங்களும் ... ... இனி
தாகவுரைத்தீர்கேட்டே-அகமகிழ்ந்தோ ... மினி
தீர்த்த

(ந) ஐயம்ஆதியான-முக்குற்றமும் ... ... அகல
அருள்செய்தீர்அதிலுந்-தெளிந்தோமில்லை ... சபல
மையல்நெஞ்சமுள்ளோர்-எங்கட்கின்னமும் ... மல
மனந்தெளிந்துயர்முத்தி- மருவும்படியே ... நல்ல
தீர்த்த-யங.

விருத்தம்.

புகன்றமுனிவரைநோக்கி மூவாறென்றேதும் ... ...*
புராணத்துட்காந்தத்திற் சங்கரசங்கிதையில் ... ...*
ஜெகந்தரும்அம்பிகைக்கரனுர் உரைக்கஅதைச்செவ்வேள்
திகழ்கலசமுனிக்கருளும்- அகத்தியசங்கிதையாம் ...*
பகர்ந்ததிற்கதிதருமோர்-ஸ்தலம்எதுஎன்றிடிலோ ...*
பரன்மதுரையெனச்சூதர்-பகரஅதின்புகழை ... ...*
மிகுந்துரைசெப்பெனப்புகழ்ந்து- மாமுனிவர்கேட்க ...*
விமலர்புகழ்மறையுரைத்தவிதிப்படிசொல்லுவரே(௧எ)

பதம் - சங்கராபரண ராகம் - ஆதிதாளம்.

[ கண்ணிகள் ]

(௧) பண்டுவேதன் அசுவ - மேதஞ்செய்திடக்காசிப்
பதியில்மைந்தரோடு ... ... ... ...வந்தார் - அங்கு
பகர் அக்ஸ்தியர் வியாதர் - நாரதர் வதிஷ்டர்ப்
ராசர் கௌதம ... ... ... ...ருந்தான்
அண்டர்புகழுஞ்சுகர் வாமதேவர் வால்மீகி
அருள் ஸனகாதியர் ... ...சூழ - இருந்
தசுவமேதம்பத்து-முடித்துமுனிவர்அவர்
அவர்க்குத்தகுந்தபொரு ... ... ...ளாக
(௨) நல்கிவேதன்உல-கடைந்தனன்முனிவர்கள்
நாதர்விசுவேசரைப் ... ... ...பணிந்து - எந்த
நாளும்அங்குளமுத்தி மண்டபத்தினில்தெட்ச
ணாமூர்த்திசன்னிதியில் ... ... ...வந்து
எல்லவரும்பத்தியா - யிருக்கும்போதுசில
இருடியர்நாரதரைப் ... ... ...பார்த்து - புகழ்ந்
திந்தஉலகினில்முச் - சிறப்புள்ளசிவஸ்தலம்
இயம்புமென்றூர்அருள் ... ... ...பூத்து
(௩) சனற்குமாரரிடம் - கற்றவியாசரவர்
தம்மைக்கேளுமென்று ... ... ...நார - தருஞ்
சாற்றவியாசருமுன் - கார்த்திகேயரிடம்
சகலமுங்கற்றிடுந் ... ... ... ...தீர
முனிக்குலம்புகழ்ந்திடும் - சயிலமாதவரடி
முடிசூடிக்கேளுமென்று ... ...கூற - அந்த
மோனமாதவரெல் - லாருங்கும்பமுனி
முன்புவந்துஅன்பு ... ... ... ...மீற

(ச) துதித்துமுச்சிறப்பும் உள்ளசைவஸ்தலம்
சொல்லவேணுமென்று ... ...போற்ற - கேளுஞ்
சொல்லுவோமென - மகிழ்ந்துமாதவர்கள்
சுரர்கள்யாவர்களும் ... ... ...ஏற்ற
மதிக்குமுத்திமண் - டபத்தினில்நாலுசே
வலையும்யானைமுக ... ... ...வனையும் - உயர
வடிவேலரொடுதட்ச - ணாமூர்த்தியைச்சிரம்
வணங்கிச்சுந்தரேசர் ... ... ...தனையும்

(ரு) அங்கயற்கண்ணியை - யுந்தியானஞ்செய்துபிரம்
மானந்தபரவசங் ... ... ...கொண்டு - பின்பு
அந்தமாமுனிவர் - தம்மைப்பார்த்துகந் ,
தகஸ்தியர்சொல்லுவர் ... ... ...பண்டு
சங்கரன்உமைக்குச் - சொலக்குகன்கேட்டெனக்கு
சாற்றும்சங்கரசங் ... ... ...கீதையில் - மெத்த
தவஞ்செய்தேவருந்தி - டாமல்முத்திதருந்
தலமொன்றேதும்ஒரு ... ...கதையில்

(சு) அந்தநற்றலமே - முச்சிறப்புள்ளது
அரனர்அதிலதிக ... ... ...மோகம் - கொண்டு
அரியலீலைஅறுபத்துநாலுசெய்தார்
அதுபூலோகசிவ ... ... ...லோகம்
சொந்தநாமந்திரு ஆலவாயெனவே
சொல்லுவார்அனேகம் ... ...பேரே - அன்று
சுப்பிரமணியர்எனக் - குரைக்கக்கேட்டபடி
சொல்லுவோம்அறிகு ... ... ...வீரே (௰ச)

——(:)(*)(:)——

## ஸ்தலவிசேஷம்.

### விருத்தம்.

திருமலனுக்கண் புடையீர் - கேட்டஸ்தலமே ... ...*
நிலமதுரைத்தலமும் தீர்த்தமும் மூர்த்தியும்போல் ...*
ஒருஉலகினிலுமில்லை - உண்மையிது மூன்றில் ... ...*
உயர்தலத்தின் பெருமைகொஞ்சம் உரைப்போமிவ்வுலகில்
தருமதலம் அதிகமதிற்சைவதலம்அதிகந் ... ...*
தனில் அறுபத்தெட்டதிகம் - அதில்ஈரெட்டதிகம் ...*
வரும்அதில் நான்குயர் தில்லைகாளத்திகாசி ... ...*
மதுரையின்னான்கிலும் அதிகம்- மதுரைநகர்இதுவே...*

விருத்தம்.

இந்தமதுராபுரியாந் -திருவாலவாய்ஸ்தலமே எதற்குமேலாம் ...*
அந்தவகைகேளுங்கா-சியிலிறக்கத்தில்லையைக் காணக்காளத்தி ...*
வந்தனைசெய்திருக்கமுத்தி - தருமதுரையெனக்கேட்டால்மறுமைநீ*
க்கம் - முந்தவருமனவடிவேற் - கடவுள்சொன்னதெனக்கும்பமுனி சொல்வாரே(யகூ)

பதம் - மோகனராகம் - சாப்புதாளம்.

[பல்லவி.]

அதிவிசேஷஸ்தலம்-மதுராபுரியெனும்-ஆலாஸ்யக்ஷேத்திரம்

[அநுபல்லவி.]

முதுமறைதொழும்உயர் - பதியுந்துதியும் உற்ற
மூர்த்தியுந்தீர்த்தமும் - மூன்றுசிறப்பும் பெற்ற
அதி

[சரணங்கள்.]

(க) மிகுஞ்சிவஸ்தலங்களில் முதன்மைபெறப்படைத்து
விடையோன்விளையாடின தாலும்
நிகரில்பிரமன்மற்ற - ஸ்தலங்களுடனேவைத்து
நிறுக்கக்கனம்உற்றது - மேலும்
அகம்அறப்பொருளெண்ணி- அறிந்துவாசஞ்செய்வோர்க்
கருளுமேஅரும்பொருள் நாலும்
புகுமிர்கம்பட்சி - முதலெவ்வுயிரும்ஞானம்
பொருந்திக்கதிபெறும் எக்காலும்
பகரும்பிர்மஅத்திகள்-களவுகள்ளுண்டல் குரு
பத்தினியைப்புணர்ந்த- பாவங்களுந் ...தகரும்
ஜெகம்இதில்ஸ்தலமெல்லாம்-மறுமையிற்கதிவரும்
தினமும்இகத்திலிது - ஜீவன்முத்தி ...தரும்
அதி

(உ) அன்னியஸ்தலங்களிற்போய் - மகங்கள்தானங்கள்செய்து
அருநதிமூழ்கவும் ... ...வேணுமோ
முன்னங்கைஅமிர்தத்தை - விட்டுப்புறங்கைநக்க
மூடருக்கும்மதி ... ...தோணுமோ
பன்னும்இப்பதியில்என் - னாளும்வாசஞ்செய்யும்
பலனிற்கோடிக்கொன்று... ...காணுமோ
என்னதவமும்ஒரு - நாள்உபவாசம்இங்கே
இருந்தவர்பலனுக்குப் ... ...பூணுமோ

சொன்னவிரதங்கள்இங்கோர்-அஷ்டமிக்கே அடுக்கும்
சோமவாரமொன் றுக் கேமரணந் ... ...தடுக்கும்
ஜென்மசாபல்லியந்தந்தெவர்க்கும் முத்திகொடுக்கும்
தேசம்பூலோககயி - லாசமென ... ...அடுக்கும்

அதி

(௩) மதுரைகடம்பவனங் - கன்னிகாபுரம்திரு
வாலவாய்சிவ ... ...நகரம்
ஸ்திதிபெருகியகூடல் - சமஷ்ட்டிவிச்சாபுரம்
சீவன்முத்தி ... ...புரம்
சதிருலாவுசிவ - லோகந்துவாத
சாந்தஸ்தலமாம்நாம ... விபரம்
புதுமையாய்உயர்ந்த - ஸ்தலம் இதன்கீர்த்தியே
பொருந்துஞ்செவிக்கி ...மதுரம்
இதன்பெருமையையெவர் - அறிந்துசொல்வார்அந்த
ஈசன்கயிலேயைவிட் - டென்றுமிங்கே யுகந்த
மூதன்மையாகும்இது - வானவர்க்கு மிகுந்த
மோனமாதவர்க்குமெஞ் - ஞானவடிவாம் இந்த

அதி

(௪)சித்திரைமாசியொடு - ஆவணிமூலம்என்ற
தெருவைக்கண்டால்த்துயர் - மாறுமே
சுத்தியகோபுரங்கண்-டாடிப்பிரதட்சணத்தைச்
சூழ்ந்தவர்பாவங்கள் நீறுமே
பத்தியுடனேநவ - ரத்தினவிமானங்கண்டு
பணிந்தவர்தமக்கன்பு மீறுமே
வற்றாததவமுள்ள - பொற்றாமரையைக்கண்டோர்
மனதுமெஞ்ஞானமுத்தி - தேறுமே
சத்திமீனலோசனை - தரிசனந்தனைக் கண்டு
சரணம்புனைந்தவர்கள்மரணஜனனம் விண்டு
முத்திபெறுவர்சுந்த - ரேசருக்கன்பு கொண்டு
முக்கியம்உற்றவர்புகழ் - மொழிய எவராலுண்டு

அதி - ௰ரு.

---

## தீர்த்தவிசேஷம்.

விருத்தம்.

உரைப்பரும்இத்தலவிசே - ஷத்தைக்கேட்டு*
உருகிமுனிவோர்இன்னம் - உரையென்றேத*

திரைப்பெருமைக்கடல்முதலாந் தீர்த்தமெல்லாம் ...*
ஜெனிக்குமுன்னேநந்திமுதலோர்க்காய்மாம ...*
துரைப்பெருமைச்சுடர்தமக்குத் - தென்கீழ்பாலாய்த்*
தோன்றச்செய்தன்றுமுதற்றுலங்கும்பொற்று ...*
மரைப்பெருமைகேளுமென்றே எவர்க்குந்துன்ப ...*
மாற்றுவார்கும்பமுனி சாற்றுவாரே. ... (உ௰)

பதம் - அசாவேரிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

பொற்றாமரைவிசேஷத் தீர்த்தத்தைப்போலே
புண்ணியதீர்த்தம் உண்டோ

[அநுபல்லவி.]

வற்றாஎழிற்சுந்த - ரேசர்தமைக் கலந்த
வல்லிமீன லோசனி - வதனம்போல்மலர்ந்த
பொற்று

[சரணங்கள்.]

(க) ஆலத்தைஉண்டமிர்த ... ... மூட்டி - அன்று
அமரரைஆண்டபர ... ... மேட்டி - பெருஞ்
சூலத்தைப்புவிதனில் ... ... நாட்டி - புவி
துறந்திந்தநவதீர்த்தம் அதுவரக் காட்டி
சீலச்சடைப்புனலைத் - தூவிக்கலந்து கந்த
தேவாதிதேவர்அதில் - ஆடியருள இந்த
ஞாலத்தில்நந்திமுத - லோருமுழுகி யந்த
நாதருக்கபிஷேகஞ் - செய்யமிகச் சிறந்த
பொற்று

(உ) முதிர்குறையினைக்கண்டால் ... வாடும் - ஒரு
முழுக்குக்கநேகதீர்த்தத் ... தோடும் - பல
நதிக்குட்படிந்தபயன் ... ... கூடும் - மற்ற
நதிகள்தீர்த்தங்கள்வந்திதில் பணிந்தாடும்
மதித்துதர்ப்பணஞ்செய்வோர் - எள்ளொன்றுக்காயிர
வருஷவீதம்அவர் - பிதிர்க்களெல்லாஞ் ... சுர
பதத்திலுறைவர்இதிற் - சிவபூசைசெய்யும் ... அர
பத்தர்க்கிகத்திற்சீவன் - முத்திதந்திடும் ... வர
பொற்று

(௩.) அவனியிற்பவமெல்லாந் ... தீர்க்கும் - ஞானம்
அறியாதமூடர்க்கும் ... ஆர்க்கும் - ஒரு

திவலைபடினுமுத்தி ... ... சேர்க்கும் - கொடும்
தீச்சுடாதோ அறியாமல்த் தொட்டோர்க்கும்
தவம்உள்ள ஆதிதீர்த்தம் - பரமதீர்த்தஞ் ... சுத்த
சைவதீர்த்தம்உயர் - ஞானதீர்த்த ... மெத்த
கவலைஅடக்குமுத்தி - தீர்த்தமெனவும் ... உற்ற
காரணப்பேரென்று - கயிலைக்கடவுள் ... வைத்த
பொற்று

(ச) பெருகுபுண்யதினத்தில் ... நாடித் - தாங்கள்
பிறந்ததினத்திலிதில் ... ஆடி - நிதி
அருளுந்தானமொன்று ... ... கோடி - யென
வாகிவருமேபலன் - அனந்தங்கள் ... கூடி
தெரிசித்துப்பரிசித்து - ஸ்தானபானஞ் செய்வோர்
செழிக்கும்அறமுதலாம் - நான்குபொருளுடன்சீர்
தருவதால்தர்ம்மார்த்த - காமமோட்ச தீர்த்
தஞ்சிவகெங்கைஉத் - தமதீர்த்தமென்றும் பேர்
பொற்று - மிசு.

————(:)*(:)————

## மூர்த்திவிசேஷம்.

விருத்தம்.

கீர்த்திபெருகியபொற்று -மறைமகிமைஉரைத்துஇன்னம் *
கேளுமென்ன
நாற்றிசைசூழுவர்க்கடலுங் - தமிழ்க்கடலும்உண்டமுனி *
நவின்றெங்கெங்குந்
தோற்றியுந்தோன்றுதபரஞ் - சோதியாகியசோம ... *
சுந்தரேச
மூர்த்திவிசேஷத்தைமுனி - வோர்க்கறியக்காட்டுவார் ... *
மூட்டுவாரே,(உக)

பதம் - சுருட்டிராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி. ]

மூர்த்திவிசேஷந்தன்னைத்- தேவருமுனிவரு- மூவரும் அறியாரே

[அநுபல்லவி.]

நாற்றிசையும்நிறைந்து - மறைமுடிவில் அழுந்த
நடிக்குஞ்செஞ்சுடர்கடம் - படிக்குள்முளைத்தெழுந்த
மூர்த்தி

[சரணங்கள்.]

(௧) சதிர்பெறுங்கயிலைபொன் - மேருகிரிமுதலாய்ச்
சாற்றுங்காசிமுத ... ...லாய்ந்து
கதிதரும்பதிகளில் - உறையும்பராபரலிங்
கங்கட்கெல்லாங்கலை ... ...யீந்து
முதலாய்முப்பத்தி - ரண்டுலட்சணமுடன்
மூளைத்துக்கௌரியுடன் - வாய்ந்து
புதுமையானசோம- சுந்தரேசரென்று
போற்றினர்அமரர் ... ...சேர்ந்து
துதியதாகியண்டம் - எங்கெங்குமே ... ...நிறைந்த
ஜோதிவடிவமிது - தொண்டர்க்கிரங்கி ...முந்த
அதிபன்கைப்பிரம்பினல் - அடிகொள்தழும்பை இந்த
அவனியில்எவர்க்குந்தங் - ததுவேசாட்சி ...அந்த
மூர்த்தி

(௨) வானவர்க்குயர்ந்தவன் -பரமன்மனிதருக்குள்
மறையவர்மலைக்குள்மா மேரு
ஆனபசுவில்த்தேனு - மணியில்ச்சிந்தாமணி
அலர்மரங்களில்க்கற்ப ... ...தாரு
தானத்தில்அன்னதானம் - யாகத்தில்அசுவமேதம்
தருமத்தில்ச்சிவதர்ம்மம் ... ...பாரு
மானதஞ்சிவபத்தி - வாரத்திற்சோமவாரம்
மந்திரத்தில் அஞ்செழுத்துச்சேரு
ஸ்தானதீர்த்தத்தில்ப்பொற்-றாமரையே ...திகழும்
சைவலிங்கத்தில்இந்தச் - சுந்தரரே ... ...நிகழும்
மாநிலவிரிவென - வேவிளங்கி ... ... ...மகிழும்
வளர்சிவஸ்தலமெல்லாம் - வந்துவந்து ...புகழும்
மூர்த்தி

(௩) கருதிக்கண்டவர்பாவம்- இரவிமுன்னிருளென்னக்
கருடன்முன்னரவென்ன ... ...மங்குமே
பருதிஉதிக்குமுன்பு - உச்சிஅந்தியில்க்கண்டால்
பலகோதானபலன் ... ... ...தங்குமே
விரவிஅர்த்தசாம - தரிசனபலன்அசுவ
மேதஞ்செய்ததற்கி ... ... ...ணங்குமே
அருகிலிருந்துஅபி - ஷேகநைவேத்தியம்
ஆற்றுமேவார்வினைஅ ... ... ...டங்குமே

தரும்உபசாரம்அர்ச்-சனைகீதம் ... ...நடனம்
தகுபிரதட்சணம்செய்து - தொழுதே ...அநுதினம்
பரவிப்பணிவிடைசெய் -பவருக்குண்டோ ...ஜனனம்
பண்ணும்தருமதானம் - என்னவேணும்...இன்னம்
மூர்த்தி

(ச) சுந்தரமிகுந்தகர்ப்பூர - சுந்தரன்கடம்பவன
சுந்தரன் ... ... ... ...அபிராம
சுந்தரன்கல்யாண- சுந்தரன்சண்பக
சுந்தரன்மிர்க ... ... ...மதசோம
சுந்தரன்பழியஞ்சு - சுந்தரன்மகுட
சுந்தரன்திருவால ... ... ...வாய்நாம
சுந்தரன்கூடற்கு - நாயகன்மதுரேசன்
தொழும்கன்னிபுரநாதன் ... ... ...நேம
சிந்தைகொள்சமஷ்டிவிச்- சாபுரேசன் ... ...கன
சீவன்முத்திபுரேசன்- சிவலோகபதி ... ...யென
முந்தநாமங்கொண்டு - முடிவில்லாத ... ...தின
மூலலிங்கமெனவும் - முளைத்தெழுந்தரு ...ளின
மூர்த்தி - யென,



## திருவிளையாடல்த்துகை.

விருத்தம்.

மூலமதாய்ப்பாதாளஉலகில்த்தோன்றி ... ... *
முளைத்தெழுந்தஇவ்விலிங்கமூர்த்திசெய்த ... *
லீலைஅறுபத்துநாலுள்ளதென்று ... ... *
நெடியவேற்கடவுள்அருட்படியேசொன்ன ... *
ஞாலமகிழ்குறுமுனியைமுனிவரேற்றி ... ... *
நடந்ததெவர்பொருட்டால்எக்காலத்திந்த ... *
ஆலவாய்அரன்செய்தவிளையாட்டெங்கட் ... ... *
கருளுமெனக்கும்பமுனிஅறைகுவாரே ... (உஉ)

பதம் - சங்கராபரணராகம் - திரிபுடைதாளம்.

[பல்லவி.]

முதல்வர்சரித்திரம்இதனைமதிப்பவர்
முத்தியுற்றவரே - சீவன் - முத்திபெற்றவரே

[அநுபல்லவி]

அதிபன்இந்திரன் - பழியைத்தீர்த்துவெள்
ளானைசாபத்தை - அகற்றிக்காத்துநல்
புதுமைபெருகிய - மதுரைகண்டுஇப்
புவனமகிழ்கடம் - பவனசுந்தர

முதல்

[சரணங்கள்.]

(க) எழில்த்தடாதகை - யானமீனும் - பிகை
பிறக்கமணஞ்செய்து வெள்ளிமன்றில்
தொழப்பணிபுலிக்கி - நடித்துஅன்னமலை
துய்த்தும் - பசிகொள்குண் - டோதரன்
குழிக்குள் - அன்னம்உண்டு - செழிக்கும்வைகைகண்டு
குடிக்கஅழைத்தெழு - கடலுங்தொடர்பவங்
கழிக்குமலையத்துவ - சனையுமாமிகண்
காணஅழைத்தகல் - யாணசுந்தர

முதல்

(உ) உக்கிரபாண்டிய - னைத்தந்தயில்வளைசெண்
டுதவிஅலைகடல் - சிதறவேல்தொட்டு
சக்கிரிமகுடங்தெ - றிக்கவளைவிட்டு
சண்டமேருவைச் - செண்டினல்
எய்க்கவேஅடித்துக் - கனமுனிவர்க்
கினியமறைப்பொருள் - வினவியோர்தென்னன்
வைக்குமணிமுடிக் - கிக்கருணையுடன்
மாணிக்கம்வித்த - மாணிக்கசந்தர

முதல்

(ங) இகல்வருணன்விடு - கடலைவற்றச்செய்து
எழில்கொள்மதுரைநான் - மாடக்கூடலென்று
அகமகிழச்செய்து - புவிக்கெல்லாம்வல்லசித்த
ராய்விளையாடியே
மகிழ்கல்லானையை - கரும்பருந்தச்செய்து
வாதமணர்விடும் - போதகத்தைஎய்து
பகருங்கௌரிமுன் - விருத்தர்குமாரும்
பாலரும்ஆன - ஆலாஸ்யசுந்தர

முதல்

(ச) விரவிமாறி - நடித்துப்பழிக்கஞ்சி
வேதியன்மா - பாதகந்தவிழ்த்து
குருவின்மனைவியை - மருவமிகமயல்
கொண்டவன்அங் - கத்தைத்துண்டித்தே
வருசமணர்விடும் - அரவையெய்துபின்பு
மாயப்பசுவையும் - மாயச்செய்துஅன்பு
தருமெய்க்காட்டிட்டுப் - பெருமைச்சுந்தர
சாமந்தனுக்கருள் - சோமசுந்தர
முதல்

(ரு) இஷ்டமாயுல - வாக்கிழிகொடுத்து
ஏற்கவளேவித்துக் - கார்த்திகைப்பெண்கட்கு
அஷ்டமாசித்தி - உரைத்துச்சோழன்வந்
தனைகொண்டே - விடையிலச்சினை
இட்டுச்சமருக்குள்ப்- பாண்டியன்சேனைக்கி
இரங்கிநீர்ப்பந்தல்-கிரம்பவைத்துப்புகழ்
தொட்டபொன்னனைக்-கிரசவாதஞ்செய்
சுரபதமருளு - மரகதசுந்தர
முதல்

(சா) ஓட்டிச்சோழனை - வீட்டிமடுவினில்
ஒருபத்தனுக்கறம் - பெருகஉலவாக்
கோட்டையருள்செய்து - வாட்டமுடன்தொழும்
குலவணிகன்மாதுலனென
தேட்டின்வழக்குரை - நாட்டிவரகுணத்
தென்னவனுக்கரன் - தன்னுலகம்அதைக்
காட்டிஉயர்முத்தி - வீட்டில்மருவக்கண்
காட்சிதந்தமீ - னாட்சிசுந்தர
முதல்

(எ) அருட்கொள்பாணன்றன் - பொருட்டில்விறகுவித்
தடுத்துத்திருமுகம் - கொடுத்துப்பலகையிட்
டிருக்கச்செய்தவன்மா - துக்காயிசைவாது
வென்றுபன்றிகட்குப் பால்
உருக்கமுடன்கொடுத் - திரக்கமுடன்வளர்த்
துரியபெரியமந் - திரிகளெனச்செய்து
கருசகுருவிக்குப - தேசஞ்செய்திட்ட
காளகண்டஅட் - டாளசுந்தர
முதல்

(அ) நாரைக்குயர்முத்தி - கொடுத்துக்கூடல்நன்
னகரந்தனைத்திரு ஆலவாயென்று
பேரிட்டேஅருள் - சாரும்பாண்டியன்
பேரில்எதிர்த்திட்டசோழனைப்
போரில்சுந்தர - பேரம்பெய்துவென்று
புலவர்க்குயர்சங்கப் - பலகைதந்துஅன்று
சேருந்தருமிக்குப் - பொற்கிழிகொடுத்து
செகமகிழவந்த - மிர்கமதசுந்தர
முதல்

(கூ) ஒக்கும்இனிய - கவிக்குமேகுற்றம்
உரைத்துப்பொற்ரு - மரைக்குள்விழுந்திட்ட
நக்கீரனைக்கரை - யேற்றிஅகஸ்தியர்தன்
னூலிலக்கணஞ்சாற்றியே
கற்கறியகவி - யிற்பெரியசங்
கத்தலைவர்கல-கத்தைத்தீர்த்துஎண்
டிக்குமகிழிடைக்காடன்பிணக்கையுந்
தீரச்செய்தகர்ப் - பூரசுந்தர
முதல்

(ய) நெடியமீன்புலக் - கொடியைமணஞ்செய்ய
நேசமுடன்வலை - வீசிவாதவூர்
அடிகளுக்குப - தேசஞ்செய்தென்றும்
ஆண்டுபாண்டியன்வேண்டவே
படியில்நரிகளைப் - பரிகளாக்கிஅப்
பரிகளைநரிக - ளாக்கிவைகைநீர்
வடியஅடைக்கவே - பிடிகொள்பிட்டுக்கு
மண்சுமந்திட்ட - சண்பகசுந்தர
முதல்

(யக) முன்வழுதிசுரந் - தன்னைச்சம்மந்த
மூர்த்தியால்அறத் - தீர்த்துச்சமணர்கள்
தன்னைக்கழுவிட்டுப் - பின்னொருவணிகத்
தையல்கூறியசாட்சிக்காய்
வன்னியுங்கிணறும் - லிங்கமும்அழைத்து
மட்டில்லாதஎட் - டெட்டுவிளையாடல்
இந்நிலம்மகிழச்செய்துமுனிவர்
அநேகர்தொழும்அபி - ஷேகசுந்தர
முதல்-யஅ.



முதலாவது.

## இந்திரன்பழிதீர்த்தது.



விருத்தம்.

எனஅறுபத்துநாலு- எழில்த்திருவிளையாட்டென்று ... ... *
வினவியீதெவர்பொருட்டால்- விளைந்ததெக்காலமென்றீர் *
மனமகிழ்முனிவரேயான்-வரன்முறையாகச்சொல்வேன் ... *
நினைவுடன்கேளுமென்று-நிகழ்த்துவார்அகஸ்தியர்தானே. (உ௩)

விருத்தம்.

பெருமையிந்திரன்பகைத்த- பெருவிருத்திரனைக்கொன்று *
கருதும்அப்பழியைவாசக் -கடம்பமாவனத்தில்இந்த ... ...*
நிருமலர்தன்னைப்போற்றி-நீங்கியேமகிழ்ந்தஆதித் ... ... *
திருவிளையாடல்தன்னை-தெரிந்திடஉரைசெய்வேனே. (உ௪)

பாயிரம் - முற்றும்.

---

பொது - விருத்தம்.

மலர்பொழிமதுரவாச-மந்தாரநீழல்மீது ... ... ... ... ... *
பலமணிக்கிரணம்வீசும்-பைம்பொற்சிங்காதனத்தில் ... ... ... *
நலமிகும்இந்திராணி-நங்கையோடின்பமாகக் ... ... ... ... *
குலவும்இந்திரன்மகிழ்ந்து-கொலுவில்வீற்றிருந்திட்டானே. (உ௫)

பதம்-சாவேரிராகம்-சாப்புதாளம்,

[ பல்லவி. ]

ராஜராஜர்-பணியும்தேவ-ராஜன்கொலுவிருந்தான்

[ அநுபல்லவி. [

வாசஞ்செய்திடு-முப்பத்துமுக்கோடி
வானவர்க்குந்-திலகனென நாடி
ராஜ

[ 'சரணங்கள். ]

(க) ஜோதிரத்தினமகுடஞ் சூட்டி - செம்பொற்
தோள்வளைமின்னவே மாட்டி
காதில்க்குண்டலங்களும் பூட்டி- மலர்க்
கையில்வச்சிராயுதம் நீட்டி

சீதச்சந்தனமார்பில் - நவரத்ன ஆரமும்
சிறந்தகற்பகமாலை - நிறைந்த சிங்காரமும்
ஓதளவராலுண்டு - பொன்னரியணை மேலே
உகந்துமேருமலைமேல் - எழுந்தசூரியன் போலே
ராஜ.

(௨) மந்தமாருதம்வந்து தாவ - தேவ
மாதர்கைக்கவரியு லாவ-
அந்தரர்பணிந்து குலாவ - நிறைந்
தஷ்டலட்சுமீகர மேவ
சிந்தாமணிவாசற் - படிக்கல்லாகி உய்ய
திரியுஞ்சுரபியுமைந் - தருவும்ஏவல்செய்ய
இந்தவைபோகங்கண் - டரக்கர்எல்லாம் ஏங்க
இந்திரபதமேபெரி - தென்றிடவே ஓங்க
ராஜ.

(௩) ஆசீர்வாதமுனிவோர் கூற- மகிழ்ந்
தண்டர்மாமலர்மாரி தூற
வாசல்மும்முரசொலி மீற - அந்த
வானுலகெங்கும்வளர்ந் தேற
நேசமுடன்கின்னரர் - கேசரர்கீதம் பாட
நின்றுமேனகைரம்பை - துன்றுநடனம் ஆட
ஆசையுடனேமகிழ்ந் - தோசைக்கடலிற் பூத்து
அலர்ந்ததாமரைபோலா - யிரங்கண்களாலும்பார்த்து
ராஜ. ௰௩,



விருத்தம்.

நடனசங்கீதலோலனுகவேமகிழ்வினேடும் ... ...*
அட்வுடன்கொலுவிருக்கும் அண்டர்கோன் சபையைநோக்கி...*
இடரறநீதியோதி இந்திரன்முதலோர்க்கன்பு ... ...*
படர்குலகுருவாம்வியாழ பகவான் அங்கெதிர் வந்தாரே...(௨௬)

பதம் - நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்.

செய்யபொன்மேனியும் - மார்பில் அணி... ...முன்னூலும்
செவியிற்குண்டலமுஞ்செஞ் - சடைமுடியுமான்றேனும்
பையரவணிந்திடும் - பரமன்வடிவம் ... ...போலும்
பாரெங்குந்தொழும்வியாழ- பகவான்வந்தார். (௨௭)

விருத்தம்.

வரும்வியாழபகவானைவணங்கிடாமல் ... ... *
மாதர்நடனத்தில்அன்பு - வைத்தான்இந்திரன்... *
பெருமிதங்கொண்டானெனவே - மீண்டுவியாழன் *
பின்பவன்முன்போகாமல் - மறைந்துவிட்டார் *
குருவருளில்லாமல்பொன் - னுலகவாழ்வு ... *
குன்றிநாளுக்குநாள் - குறையக்கண்டு ... ... *
புருகூதன்வியாழபக - வானைத்தேடிப் ... ... *
போகினன் - நாடிமெலிவாகினனே ... ...(உஎ)

பதம் - மத்தியமாவதிராகம் - சாப்புதாளம்

[பல்லவி.]

பார்த்தெங்குந்தேடிச்சென்றானே - வியாழ
பகவானைஇந்திரன் தானே

[அநுபல்லவி.]

நாற்றிசைபுகழ்ந்திடு - மாதவன் முன்னாலே
நாரிபாகர்அடி - தேடிச்சென்றது போலே
பார்த்

[சரணங்கள்.]

(க) ஈசரிருக்குங்கயி - லாசகிரிமுதலாய்
இலங்குமலையெல்லாஞ் ... ...சுற்றி
கேசவன்துயில்கொள்ளும் - ஓசைக்கடல்முதலாய்க்
கிடக்கும்பெருங்கடலும் ... ...பற்றி
தேசிகர்மறைமொழி - பேசுஞ்சமுகங்களும்
சித்தவித்தியாதரர் - மொய்த்தவையகங்களும்
பூசுரர்மகிழ்வுடன் - வாசஞ்செய் அகங்களும்
புண்ணியமாதவர் - பண்ணிய மகங்களும்
புகுந்துமனத்துயரம் - மிகுந்துபரன் அருளால்
மகிழ்ந்திடும்புவிஎங்கும் - பகுந்துபுகுந்துசென்று
பார்த்

(உ) சீலமதாகிய - பதிகளுந்துதிகொள்ளுஞ்
சிங்காரமாமலர்ச் சோலையும்
கோலமிகுந்திட்ட - மனைகளுஞ்சுனைகளுங்
குளிர்ந்திடுமரம்நின்ற சாலையும்
மேலவர்வேதபு - ராணிக ... ...ரீட்டமும்
மேன்மைபொருந்துஞ் - சிவாலயக்கூட்டமும்

ஜாலமிகுந்தமெஞ் - ஞானியர் ... ... நாட்டமும்
தங்கும்பலநதி - பொங்குநீ ... ... ரோட்டமும்
தடங்களுந்தவஞ்செய்யும்இடங்களும் ... புண்ணிய
மடங்களும்பூவுல - கடங்கலுமேபுகுந்து
பார்த்

(௩) விண்ணுலகமும்அதின் - மேலுலகமும்சத்ய
வேதன்உலகும்புகுந் தோடி.
மண்ணுலகமும்இதின் - கீழுலகமுஞ்சேடன்
வாழுலகந்தனிலும் - ... ...நாடி
எண்ணரும்உலகெங்கும் - இலையிலையா ... யாராய்ந்து
எட்டுத்திக்கிலும்ஓடி - முட்டித்திரும்பிப் ... பாய்ந்து
கண்ணுக்குள்அடங்காத-வெளியெங்கும்அலைந்தோய்ந்து
காணாமல்நடந்துள்ளங் - காலுமிகவே ... தேய்ந்து
களைத்துமனதுமெத்தஇளைத்துஅண்டம்எங்கும்... போய்
வளைத்துமலைக்கல்லையுந் - துளைத்துத்துளைத்து ஓடி

பார்த் - உக.

——[-:-]——

விருத்தம்.

எவ்வுலகினிலுந்தேடி எழில்பெறுங்குருவைக்காணான் ... ...*
அவ்வயனுலகில்ச்சென்று அந்தணன்அடிமேற்றாழ்ந்து ... ...*
செவ்வலர்க்கரங்கள்கூப்பிச் சென்னிமேல்வைத்துவாழ்த்தி ...*
இவ்வகைநடந்தவாறென் றேற்றுவான்சாற்றுவானே ...(உஅ)

பதம்-காம்போதிராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி. ]

நடந்தசெய்தியெல்லாம் இதுதான் - இனி
நானென்னசெய்வ தையா

[ அநுபல்லவி. ]

திடந்தரும்உலகம் - படைத்தவனே ... ...இன்று
செய்தபாவம்சொல்லத் - தீருமேகேளும்அன்று
நடந்த

[ சரணங்கள் ]

(க) நங்கையர்நடனத்தை - நாடிஇருந்திட் ... ...டேனே
அங்கேஎங்கள்குருவந் - தாராம்அவரைத்...தானே

செங்கண்ஆயிரம்பெற்றுந் - தெரியாமல் இருந்தேனே
அங்கவர்முனிவுகொண் - டகன்றார்அப்போது தானே
நடந்த

(௨) அன்றுமுதல்என்மீதில் - அருள்தப்பி மறைந்தாரே
தின்றநஞ்சல்லோகொல்லும்-தெரிந்துசெய்தேனேநேரே
சின்றுசிறியோர்செய்த - நெடும்பிழைபெரி யோரே
என்றும்பொறுப்பதுண்டோ- இல்லையோ உரைப்பீரே
நடந்த

(௩) அரிவையரால்அவ-மானங்கொள்வதென் ... ... புத்தி
வருவிதிராத்தங்கு - மோஇந்த ... ... ... உலகத்தில்
குருவைஇகழ்ந்தானென்று கூறவுந்துயர் ... ... முற்றி
பெருகவேதன்கேடும் - பிறர்கூடுமாய்ப் ... பற்றி
நடந்த-௨௨.



விருத்தம்.

நடந்ததுஎல்லாஞ்சொல்லநளினமாமலரோன்கேட்டு ... *
படர்ந்தமாமறைசொல்வியாழ பகவானைக்காணுமட்டும் ... ...*
அடர்ந்துநீவிச்சுவரூப னைக்குருவாய்க்கொள்ளென்ன ... ... *
தொடர்ந்துவாசவன்அவ்வாறேதொடுத்திட்டான்அடுத்திட்டானே (

பதம்-கலியாணிராகம்-சாப்புதாளம்.

[ கண்ணிகள். ]

(௧) வேதன்மொழிப்படி - வாசவனுஞ்சென்று
விசுவரூபனைப் ... ... ... ... பணிந்தான் - பணிந்
தோதினனக்குக் - குருவாயிருந்து
உயர்மகஞ்செய்யெனத் ... துணிந்தான்

(௨) அப்படியேநன்றென் - றமரரைவஞ்சித்து
அசுரரைஆள்வதற் ... கெண்ணினன்-அங்கே
ஒப்பியவாக்கினில் - ஒன்றுமனதினில்
ஒன்றுமதாயாகம் ... பண்ணினன்

(௩) அச்செயல்கண்டவன் - முச்சிரந்தன்னை
அறுத்தெறிந்தான்அண்டர் ... பதியே - அந்த
வச்சிரபாணியை - அந்தப்பிர்மஹத்தி
வருத்தமயங்கினன் ... ...மதியே

(௪) அண்டர்அப்போது - மரங்களைப்பெண்களை
அகிலத்தைநீர்தனைத் ... துதித்தார் - இந்திரன்

கொண்டதோர்ஹத்தியை - நீர்ஒப்புக்கொண்டு
குறைதவிரும்என்று ... ... விதித்தார்
(௫) மங்கையர்கெர்ப்பம் - நிறைந்திட்டபோதிலும்
மாமணவாளரைப் ... ...புல்கவும்-எங்கும்
தங்குமரங்கள் - தனைவெட்டவெட்டத்
தழைத்துத்தழைத்தது ... ... மல்கவும்
(௬) மண்ணினில்வெட்டுங் - குழிகள்தன்னாலே
மறைந்துநிறைந்தது ... ...மாறவும்- நிறை
தண்ணீரதனை - இறைக்கஇறைக்கத்
தகுருசிமிஞ்சிய ... ... ஊறவும்
(௭) வரம்இதுநல்கி - மரத்தில்பிசினென
மண்ணில்உவரெனச் ... ... சூழ -மலர்ச்
சுரிகுழல்மாதர் - இடத்தில்பொருந்திய
சூதகம்ஆகவே ... ...வாழ
(௮) நீரில்நுரையென - வேபிர்ம்மஹத்தியை
நீக்கிப்பிரித்தன்று ... ...தொலைத்தார் - மகிழ்ந்
தாரும்புகழ - அமராபதியில்
அரசனுடன்தேவர் ... ... நிலைத்தார்(௨௩)



விருத்தம்.

இந்திரன்இப்படிபிரமஹத்திநீங்கி ... ... *
இருந்தான்விச்சுவரூபன் இறந்தசேதி ... ... *
தந்தையெனுந்துவஷ்டாஎன்போன் அறிந்து ... ... *
சலமிகுந்துமகம்புரிந்து அம்மகத்தில் ... ... ... *
வந்தவிருத்திராசுரனைநோக்கியிந்த ... ... ... *
வாசவன்தன்உயிர்குடித்து - வாவென்றேவ ... ... *
அந்தநெடுந்தானவனும்வந்துவெம்போர் ... ... *
ஆடினான்இந்திரனைச்சாடினனே ... ... (௩௰)

பதம்-சௌராஷ்டிரராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி. ]

விருத்திராசுரன் - இந்திரனுடன்சண்டை
விளைத்தான்விண்ணுலகைவளைத்தானே

[ அனுபல்லவி. ]

எரித்துயுகமுடிவில் உலகைவளையும்வட
வெரியும்எரியும்மழை - இடியும்இடியுமென

உருத்துவருமுகிலும் - முகிலும்அலைகடலி
னேடுகடலுமலை - யோடுமலையுமென
விருத்தி
[ சரணங்கள் ]

(௧) அம்புசென்றிடும்நெடுந் - தூரம்உயர்ந்துபெருத்
தநுதினம்அசுரன்மெய்வீங்குவான் - வெகு
தெம்புடனேவக்கிர - தந்தங்களால்உதட்டைத்
தின்றுரத்தம்உறுஞ்சி ஒங்குவான்
செம்புபோல்இருகண்ணுஞ் - சிவந்துசெந்தழல்ப்பொறி
சிந்திப்புகையமூச்சு வாங்குவான் - வெம்பி
அம்பரர்முனிவரர் - யாவருநடுங்கவே
ஆயுதம்பலபல தாங்குவான்
கெம்பீரமுள்ள - சிரிப்பால்அண்ட கோடி
கிடுகிடென் - றதிர்ந்திடவேபயந் தோடி
உம்பர்கள் - முனிவர்எல்லாம்இடந் தேடி
ஒளித்திடவே - உடுவினங்களும் வாடி
உதிரச்சேடன்விழி - பிதிரப்பூமியெங்கும்
அதிரத்தீயபகை - முதிரக்கோபமுடன்
விருத்தி

(௨) வெள்ளிமலைமுகட்டில் - மேகம்எழுந்ததென்ன
வெள்ளானைமேல்இந்திரன்ஏறினன் - இந்தக்
கள்ளஅசுரன்ஒரு - எதிரோவென்றிந்திராணி
கண்டுமகிழவெற்றி கூறினன்
விள்ளுமலையின்சிற - கரிந்தவச்சிராயுதம்
விளங்கக்கரத்தில்க்கொண்டுசீறினன் - உள்ளந்
தெள்ளுமறைமுனிவர் - செயம்என்றுரைக்குமொழி
செவியில்க்கேட்டுமனந் தேறினன்
கள்ளத்தனஅசுரர் - குலந்தனைப் பண்டு
காயும்ஆயுதங்-களுஞ்சில கொண்டு
துள்ளுங்கடலென - முரசொலியும்விண்டு
சுரரொடுமகபதி - வருகவதனைக்கண்டு
துடித்துஅதட்டிப்பல்லைக் - கடித்துப்பெருஉதட்டை
மடித்துமிகுந்தவசை - படித்துத்துரத்திவந்து
விருத்தி

(௩) பருமலைதனில்விழும் - பலபலஇடிஎனப்
படையைஅசுரன்மெய்யில்நாட்டவே-அதை

ஒருநொடிதனில்அவன் - உதறித்தோள்புடைத்து
உறுக்கிவானவரை ... ... ...ஒட்டவே
சுரபதிஅதுகண்டு-கணைகளின்மாரிகள்
தூற்றிஅவனைமுழுக் ... ...காட்டவே - உரம்
வருகணைகளைஅவன் - தவிடும்உமியுஞ்சுழல்
வாடையில்பஞ்செனவுங் காட்டவே
அரசன்சினந்துவச் - சிராயுதம் போட
அதைத்தடுத்தவன்இருப் - புலக்கையால்ச்சாட
உரமதில்அடிபட்டு - எவர்களும் நாட
உம்பர்கோன்களைத்து - மிகமனம் வாட
ஒட்டித்தன்புஜபலங் - காட்டிஅமரரையும்
வாட்டிக்கொடுமையைப்பா-ராட்டிக்கொக்கரிப்புடன்
விருத்தி. உச.

---

விருத்தம்.

கொடியவன்தனக்காற்றுமல்க்-கோபதியோடிவிந்தக்... ...*
கடிமலர்அயன்றன்னேடு-கருமுகில்மேனியான்றன் ... ...*
அடியிணைதொழுதுகூற-அரியும்அவ்விருத்திரன்றன் ... ...*
மடியஓர்வகைகேளென்று-மாற்றுவார்சாற்றுவாரே ... (௩௧)

பதம் - தோடிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி ]

வாசவனேவிருத்திராசுரன்தனைக்கொல்ல
வகைசொல்லுவோம்கேளாய்

[ அநுபல்லவி ]

பேசும்உன்கைவச்சிரம் - பழகிமழுங்கிக்கெட்டுப்
பேடற்றதினிமேலோர் - ஈடுற்றபடைதொட்டு
வாச

[ சரணங்கள் ]

(க) அலைகடல்கடைந்தபோது - அசுரருந்தேவருங்... கூடி
வலியவாயுதங்கள்கொண்டு - வந்தார்கள் அதை... நாடி
கலகம்வருமென்றுவாங்கிக்-கருணையோர்வடிவாய்க் கூடி
குலவுந்ததீசிகையில் - கொடுத்தோம்அனந்தங்... கோடி
வாச

(உ) அந்தரருந்தானவரும் - ஆயுதங்களைத்தா... வென்று
வந்துகேளாமல்போனர் - மாமுனிவன்அதை... அன்று

முந்திவிழுங்கினான்அவன் - முதுகந்தண்டினில்... நின்று
அந்தமாய்ப்பொருந்தியது-அடர்வச்சிரம்ஆகும்... இன்று
வாச

(௩) அன்புள்ள அம்முனிவனை - அடுத்துக்கேள்உனக்காணும்
முன்பதாய்க்கொடுப்பான்அதை முனைவச்சிரமாய்ப்பூணும்.
பின்புனக்கெதிரியான - பேரில்லைஎன ... ஊணும்
தன்பலத்தைக்கொண்டல்லவோ-அம்பலத்தில்ஏறவேணும்
வாச. உரு.



விருத்தம்.

இந்தவகைமாலுரைக்கத் தேவரோடும்... ... *
இந்திரனும் ததீசிமுனி இடத்தில்ச்செல்ல... ... *
அந்தமுனிஉபசரித்துவந்தசேதி... ... ... *
அறையுமென அசுரர்குலம் எல்லாங்கொன்று ... *
நந்தம்மைஆண்டருளும் பொருளொன்றுந்தன் ... *
நவமெய்யில்இருக்குததை வழங்குகென்ன ... *
சந்திரமுகமலர்ந்து இந்திரன்பகையைஅன்று ... *
தள்ளுவான்ததீசிமுனி விள்ளுவானே...... ...(௩உ)

பதம் - காம்போதிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

ஆர்க்கும்உதவாதிந்தத்தேகம் - உங்கள்
ஆபத்துக்காவதென்யோகம்

[ அநுபல்லவி. ]

ஏர்க்கும்புல் நுனிநீர்போல் - நிலையில்லாத ஜன்மம்
எடுத்ததற் கிதைவிட - என்னவேணும்தன்மம்
ஆர்க்கும்

[ சரணங்கள். ]

(க) மாயவேஷங்கொண்டு - ஆடுங்கூத்தரென்ன
மருவிஜவர்இருக்கும் ... ... வீடு - விட
தீயபாம்பின்சட்டை - போல்ஒழிந்தொழிந் துண்டாஞ்
ஜீவன்எனும்பட்சிக்கோர் ... ... கூடு - இதைத்
தாய்தனதென்னப்பெண்டிர் தமதென்னவே பரி
சனந்தமதென்னநமன் தனதென்னமண்ணும் எரி
நாய்நமதென்னப்பிதா - நமதெனக்குழி நரி
நண்ணுவதுபோல்நாமும் - எண்ணுவதறி கரி
ஆர்க்கும்

(உ) ஈவதரிதோளண்சாண் - உடம்புஞ்சாணுகித்தா
வென்றுகேட்பதுவேதான் ... அரிதாமே - முன்பு
பூவுலகில்ஓர்மன்னன் - பறவைக்காயுடலீந்து
புகழ்பெற்றபேறெதிலும்... பெரிதாமே - தேவர்
காவலாநானினி - இறந்தாலென்ன... ... நஷ்டியோ
காடெல்லாம்எலும்பாமோ - கரைந்தமண் கெட்டியோ
தேவருடனேகிட்டிக் - கேட்பதற்கும் ... அட்டியோ
தினம்இறந்துபிறக்குஞ் சீவன் ... கருப்பட்டியோ
ஆர்க்கும்

(௩) வருவீரோஒருகோடி - தவஞ்செய்தாலும்இங்கே
வந்தீரேநான்செய்யும் ... ... உபகாரம்-இது
அரிதோபழம்நழுவிப் பாலில்விழுந்ததுபோல்
ஆச்சுதையாயெனக்... ... கின்னேரம்-மிகு
பெருமையுடையநல்லோர் ... பெரியோரையும்ஏசி
பீடிக்கும்அசுரரை - ஒழிப்பதே ... மிகவாசி
கருதிச்சம்மதியேனென் ... றுரைத்தீரோமனங்கூசி
காலம்போகும்வார்த்தை ... நிற்குமேஎன்னசீசீ
ஆர்க்கும்- உசு.



விருத்தம்.

கருதியததீசிஇவ்வாறுரைதியீந்து ... ... *
கபாலங்கீண்டுயிர்போய்வி-மானமூர்ந்து ... *
பொருதியவீடடையஅவன்முதுகந்தண்டைப் ... *
புங்கவர்கோன்வச்சிராயுதமாய்க்கொண்டு ... *
விரிகடலின்நீரையுண்டுமுழங்கிமின்னி... ... *
மேகம்எழுந்துயர்மலையைவளைந்ததென்ன ... *
வரும்அமரரோடும்விருத்திரனைநேர்ந்து... ... *
வாட்டினன்இந்திரன்போர்காட்டினனே ... (௩௩)

பதம்-தோடிராகம்-சாப்புதாளம்.

[ பல்லவி. ]

இந்திரன்விருத்திராசுரனுடனேவந்
தெதிர்த்தான்சண்டைசெய்துகதித்தானே

[ அநுபல்லவி. ]

வந்துமுன்வானவர்அசுரரைக்கடல்போலே வளைத்தார் - பொங்கு
வடவாமுகம்போலேஅசுரனுஞ்சேனையுங்கிளைத்தார் ▪ பின்பு

அந்தரார்நோகவேஅசுரர்கள்பலபடை விடுத்தார் - அந்த
அசுரர்கள்சாகவே - அமரர்கள்சிலகணைதொடுத்தார் - வெகு
ஆனைதேர்பரி - நிரைகள் அழியவும்
சேனைவீரர்கள் - வெருவிஒழியவும்
அலைகடல்என்னவே - குருதிகள்கவிய
மலைநிகர்என்னவே - பிணமலைகுவிய
இந்திரன்

[ சரணங்கள். ]

(க) இருண்டமேகமென்ன - இமையவர்வேந்தன்வில்
எடுத்துவெள்ளானையில் ... ... ஏறினன் - அங்கே
அருண்டுஎவரும் ஓட... அக்கினிமலைபோலே
அசுரனும்வில்க்கொண்டு ... ... சீறினன் - அழல்
திரண்டஇடிகளென்னச் - செந்தழல்வாளியைத்
தேவர்க்கிறைநெறியாத் ... ... தூறினன் - கண்டு
வெருண்டிடஅசுரனும் - வருணாஸ்திரம்தொட்டு
வெங்கனல்க்கணையைக்...... கொய்துதேறினன் - புவி
மருண்டிடவாய்வாஸ்திரம்-மகபதிதொடுக்கவும்
வாளரவின்கணை-யால் அவன்... ... தடுக்கவும்
புரந்தரன்சினமொடு - நாகாஸ்திரம் போடவும்
புள்ளிறைகணைவிட்டு - அசுரன் அதைச் சாடவும்
போகிமோக - நெடுங்கணைதொடவும்
வேகஞானவல் - அம்பவன் விடவும்
புங்கவர்க்கிறை - பலகணை எய்யவும்
அங்கதைக்கொய்தசு - ரன்நகைசெய்யவும்
புவிஅதிரஅலை - கடல்சுவற மலை
பொடியவுயர்திசை - மதகயமும்நிலை
தவறிஅலறவிண் - ணிரவிமதியொடு
தவமுனிவர்களும் - வெருவஅமரிடு
இந்திரன்

(உ) சூரனும்உயர்மயில் - வீரனும்எனநின்று
தொடுங்கணைஅண்டத்தை ... ... நாடவே - பூமி
பாரமிகுந்துஆதி - சேடனும்மெலிவுற்றுப்
பதுங்கிவிழிபிதுங்கி ... ... ... வாடவே - அதி
வீரமிகுந்ததிக்குப் - பாலருந்திடுக்கிட்டு
வெருவித்தம்மிருவிழி ... ... மூடவே - வெகு
தீரம்உடையவா - னவருந்தானவரும்
திசைஎங்கனுமறைந்து ... ... ஓடவே - வந்து

சேருங்காளியொடு - கூளிகள் ... ...நிறையவும்
செம்பருந்துங்கழுகும் - கும்புகொண்டுறையவும்
ஓரிநாய்நரிகள் - நிணமுண்டு ...களிக்கவும்
ஒடிக்கவந்தங்கள் - உதிரத்திற்குளிக்கவும்
ஊழிகால - இடிக்கு ... நிகரென
வாழும்நீள்குலி - சத்தை வெகுசின
மோடுவாசவ - னப்பொழுது ... ... விட
நாடியேஅசு - ரர்க்கிறைவன் ... அடல்
ஒழியமிகுபிலம் - இழியவெகுமலை
வொடுமனமருகி - உடல்பதறிநிலை
அழியஇரவிமுன் - இருளெனவும் நடு
அலைகொள்கடலினில் - ஒளியஉரமொடு

இந்திரன்

(ங) கடலினுண்மைநாக - மலைபோல்ஒளித்தவஞ்சன்
கபடத்தைவாசவன் ... ... கண்டான்-மறை
படருமலரயன்முன் - னுரைத்துஅவனுரைத்த
படியேஅகஸ்தியர்க்கு ... ... விண்டான்-அந்தக்
குடமுனிஉள்ளங்கையில்-உளுந்தழுந்தும்அளவாய்க்
குரைகடல்நீரெல்லாங் ... ...கொண்டான்-கொண்ட
உடனேமுன்வாதாபி - உயிருண்டதுபோலவே
ஓமென்றுதரத்தினில் ... உண்டான்-சிவன்
அடியார்க்கிதுஒரு - அதிசயமோ ... ... இந்த
அவனியில்மூவர்செய்-தொழிலுஞ்செய்யாரோஅந்த
மடுவாரியிலுள்ள - உயிர்கள்எல்லாந் ... துள்ள
மன்னும்பவளச்சோதி - துன்னும்இருளைத்தள்ள
வாடியீனன் - ஒளித்திடு ... ... மலையை
நாடிமாதவம் - உற்றிடும் ... ... நிலையை
வானநாதன் - மகிழ்ச்சியோ ... ... டரிய
ஊனுலாவும்வச் - சிராயுதம் ... எரிய
வருகுலிசம்இடி - யெனஅசுர ... னணி
மகுடமுடிகொய்து - உயிரைஉண மணி
நிரைகொள்அலைகடல் - குருதிநிறையவும்
நிதமும்மகிழ்வுடன் - அமரர்உறையவும்

இந்திரன். உள

விருத்தம்.

விருத்திராசுரன் இறக்கத்தேவர்கோனை ... ... ... *
விரைந்தந்தப்பிரமஹத்திபிடித்துவாட்ட ... ... *
வருத்தமாயீசானதிசையில்ச்சென்றோர்... ... ... *
வாவிஅம்போருகநூலில்மறைந்திருந்தான்... ... *
திருத்தமாம்நகுடனென்போன்தேவர்கோவாய்ச் ... *
சிறந்துவரவறிந்துசசிகுருவைப்போற்றி ... ... *
ஒருத்தன்எனதிறையிருக்கஇவன்மேற்சிந்தை... ... *
ஒப்புமோஎனக்குருவுஞ்செப்புவாரே ... (ருச)

பதம்-மத்தியமாவதிராகம்-சாப்புதாளம்.

[ பல்லவி. ]

காரிகையேஇந்திராணிமாதே - உந்தன்
கற்பினிறைதவ ...றுதே

[ அநுபல்லவி. ]

நேரும்இந்திரப்பட்டம் - அழியினும்அழியாத
நித்யசுமங்கலி - நீயேகற் ... பொழியாத
காரிகையே

[ சரணங்கள். ]

(க) மாமகம்நூறுசெய் ... ... தோங்கச்-செம்பொன்
மணிச்சிவிகையில்எழு - முனிவரும்தாங்க
நேமமுடனேவரும் - அவனே ... சுரபதி
நீஅணைந்துமருவும் - நாயகன் ... எனமதி
காரிகையே

(உ) அதிகாரம்எவன்காணி ... யாட்சி-ஒன்றும்
அரியாயோநான்சொல்ல-வேணுமோசாட்சி
இதுவரையில்ஈனத்-தனைஇந்திரனைக் ... ... கண்டாய்
எந்தமதியால்கைப்புண் - ணுக்குக்கண்ணடிகொண்டாய்
காரிகையே

(ங) நிறைதவறுவது ... ... நன்றோ-வேறு
நினையாதேமுன்னடந் - ததுகனவன்றோ
முறைமுறையாய்வரும் - நடத்தைபிசக ... லாமோ
முன்னோடினவாய்க்கால்-பின்னோடாமல்போமோ
காரிகையே, உஅ.

## விருத்தம்.

குரவன்இதுசொலஇசைந்துநகுடன்றன்னைக்... ... *
கோதைசசிவருகவெனத்தூதுவிட்டாள் ... *
சுரபதிபொற்சிவிகைதனைத்துரிதமாகத் ... ... *
தூண்டுதற்காய்ச்சர்ப்பசர்ப்பவென்றுரைத்தான்... *
அரியகும்பமுனிசினந்துசர்ப்பமாய்நீ ... ... *
ஆவாயென்றிடநகுடன்அரவாய்ப்போனுன் ... *
புரவலன்இல்லாமையினுல்அமரர்ஏங்கிப் ... ... ... *
போற்றுவார்குருவினிடம்சாற்றுவாரே ... (௩௫)

பதம் - ஆநந்தபைரவிராகம் -ஆதிதாளம்.

[ பல்லவி. ]

என்னபிழைசெய்தாலும்-பொறுப்பதுமதுகடன்
எங்களைரட்சியும் - ஐயா

[ அநுபல்லவி. ]

பொன்னவனேபிள்ளைக்கும் - தாய்க்கும்பிணக்கோ அன்பு
பூண்டமெய்யடியவர் - ஆண்டவனுக்கு ... முன்பு
என்ன

[ சரணங்கள். ]

(௧) பெருங்கெடுமெதிகண்ணுக்குத்-தோணுதுகண் ... கெட்ட
பின்புதானல்லோசூரிய - நமஸ்க்காரம்செய்வ ... திட்ட
மருவும்உம்மைஇகழ்ந்து - எங்கள்இந்திரன் ... பட்ட
வாதனைஇதுபோதும் - போதும்தேவரீர் ... கிட்ட
என்ன

(௨) அகமுமதருளன்றிப் - பகைவருந்துயர் ... செய்யா
அற்பர்க்குப்பகைசெல்வ - மாமென்பதுவும் ... பொய்யா
நகுடன்காமக்கர்வத்தால் - அரவாகினுனே ... மெய்யா
நாங்கள்பிடித்தகொம்பும்-மிதித்தகொம்பும்போச் சையா
என்ன

(௩) அரசில்லாப்படைவெட்டு - மோவிண்ணுலகம் ... வாடி
அலைந்துகொழுகொம்பில்லாக்- கொடிபோல்மனத்தள்ளாடி
இரவினில்மதிஇல்லா - வானம்போல்இருள் ... மூடி
எதிரிக்கிளக்கரமா - யிருக்குதேஇதை ... ... நாடி
என்ன, ௨௬.

விருத்தம்.

இவ்வகைதேவர்போற்றி - இயம்பஆரியன்இரங்கி ... *
அவ்வமரர்கள்கோமானை - அழைத்துவிண்மகிழவைத்தார்
தெவ்வடுவச்சிரபாணி - தெளிந்தருள்குருவைப்போற்றி
பவ்வமார்விடம்போலுற்ற - பழிதனையொழியென்றனே

பதம் - முகாரிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

எந்தன்விதிவசத்தினால் - வந்தபழியொழிகுவ
தெந்தவிதஞ்சொல்லுவீர்ஐயா

[ அநுபல்லவி. ]

நொந்தகண்ணால்த்தானேபார்த்து - வந்துகாக்கவேணும்...உந்த
நோக்கந்தவறினால்சுகம் - ஆர்க்குண்டுபுவியில் ... முந்த
எந்தன்

[ சரணங்கள். ]

(க) துய்யவிண்ணவர்கள்துதி - செய்யவேநீவரப் ... பண்டு
மெய்யெல்லாம்கண்ணிருந்தும்என் - ஐயன்தேவரீரைக் கண்டு
செய்யதாள்வணங்கிடாத - வெய்யனானேன்துயர் கொண்டு
தையலார்மையலில்பட்டோர்க் - குய்யும்நல்மதியெங் குண்டு
எந்தன்

(உ) ஆர்க்குந்தாய்க்காகாதபிள்ளை - ஊர்க்காகாதென்பதுபோலே
நீக்கியுந்தண்டனைசெய்தாய் - காக்கும்உன்னருட்கண் ணாலே
நோக்கியும்ரட்சித்தழைத்தாய் - ஏக்கமுண்டோயினி மேலே
பார்க்கும்என்கண்ணால்மனத்தால் - வாக்கினால்அறியா மலே
எந்தன்

(ங) ஈசருக்கிழைத்தகுற்றந் - தேசிகரெண்ணிலோ ... நானும்
தேசிகர்க்குச்செய்தகுற்றந் - தேசிகரேதீர்க்க ... வேணும்
தாய்சினத்திடில்ப்பிள்ளைக்கெங் - கேசனுமைசொல்லத்தோணும்
நேசமேமிகுந்தஉந்தன் - மாசில்லாமனமோ ... கோணும்
எந்தன், ஙய.

---

விருத்தம்.

இந்திரனேதவும்இரங்கி இப்பழிமண்டலத்தில் ... *
எதினால்ஒழியும்என்று இயம்புகுருவோடும் ... *
முந்திவெள்ளிமலைமுதலாந் தலந்தொழுதுநன்னீர் ... *
மூழ்கித்தென்பால்வந்து கடம்பவனம்புகுந்தான் ... *

சிந்தைமகிழ்ந்திடப்பழியும் ஒழிந்துடல்பூரித்துத் ... *
தேவர்தொழப்புதுமை சிலகண்டுகுருவருளால் ... *
அந்தமுள்ளமலர்ப்பொற்ற மரைமூழ்கிஎழுந்து ... *
அந்தரேசனுங்கண்டான் சுந்தரேசரையே ... (கூஎ)

பதம் - மோகனராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

கண்டுதரிசனம் பெற்றனே - இந்திரன்இரு
கரமுஞ்சிரமேல்வைத் தானே

[ அநுபல்லவி. ]

வண்டணிமலரயன்மால்- கண்டிடாஅமுதைச்சிந்தை
வளைத்தகடம்படியில்- முளைத்தசிவக்கொழுந்தை
கண்டு

[ சரணங்கள், ]

(க) அடிக்கடிபணிந்துபணிந்தேற்றி - மயிற்கூச்சிட்டு
ஆகம்புளகிக்கஅன்புதோற்றி- ஆனந்தக்கண்ணீர்
வடித்துவடித்துத்துதிகள்சாற்றி - பிரம்மானந்த
வாரியில்முழுகிவினை மாற்றி - நதிமதியும்
முடித்தஉருவாகிஅரு ... ...வாகியஅனுதியை
முடிஅடிநடுவிலா ... வடிவைநன்னீதியை
படிக்குள்உயிர்க்குயிராய் ... நிறைந்தருள்ஆதியை
பழமறைமுடிவினில் ... நடமிடுஞ்ஜோதியை
கண்டு

(உ) அர்ச்சனைசெய்திடமலர் தேடி - அங்குயர்தடம்
அதில்பொற்கஞ்சமலர் நாடி - பொற்றமரையென்
றுச்சிதப்புனற்குப்பேர்கொண்டாடி - மலர்கொய்துவந்
தோங்கும்அஷ்டகசங்களுங்கூடி - பிடரிதாங்க
மெச்சும்விமானம்செய்து - வைத்திச்சையொடு பூசனை
மிகுந்தஅபிஷேகங்கள் - மகிழ்ந்துயர் வாசனை
கைச்செழுமலர்சொரிந்து - மெச்சுயம்பிரகாசரை
காமனைஅடர்த்தெரித்த - சோமசுந்த ரேசரை
கண்டு

(ந) ஆயிரங்கண்களுங் களிப்பேற - மட்டடங்காத
ஆசைகொண்டுதொழத்துதிகூற - விழிபோல்கையும்
வாயும்ஆயிரம்வேணுமே தேற - என்றுநினைத்து
மகிழ்ந்துமகிழ்ந்து அன்பு மீற - அடியார்மனக்

கோயிலில்இருந்துவிளை - யாடியவிநோதரை
கோதறுகிராமயபு - ராதனபிரபோதரை
ஞாயிறெனஇருள்ப்பவந் - தீயவருள்நாதரை
ராஜதுரந்தரிமீன - லோசனை சமேதரை
கண்டு, ௩௧.



விருத்தம்.

கண்டமரர்பதிவிமலர்பூசைக்காகக் ... ... *
கருதும்உபகரணமெல்லாம்ஏவல்கேட்கும் ... *
அண்டரும்ஐந்தருவும்இன்றுகொடுக்கயீசற் ... *
கபிஷேகித்தணிபணிப்பொன்னுடைசாற்றி ... *
தெண்டனிட்டுநைவேத்தியமுதலாயன்பு ... ... *
சிறந்தசோடசஉபசாரமுஞ்செய்தேற்றிக் ... *
கொண்டமகிழ்வடங்காமல்ஆடிப்பாடிக் ... ... *
குதித்திட்டான்கைகுவித்துத்துதித்திட்டானே, (௩அ)

பதம் - சுருட்டிராகம் - சாப்புதாளம்,

[ பல்லவி. ]

சரணம்அற்புத சுந்தரேசா - சிவ
சம்போகதம்பவனவாசா

[ அநுபல்லவி. ]

கிரணபணிபூஷண - தரணநடனபத
கேசவவரகம - லாசன பூசித்
சரணம்

[ சரணங்கள். ]

(க) பத்தஜனபரிபாலா - பஞ்சானனகாலகாலா
சுத்தநிஷ்கள சீலா — சுமுகநடனலோலா
துரிதபவகர - வரதமிர்கதர
புரதகனபரப் - பிரமஅரகர
சரணம்

(உ) சங்கராகனககிரிசாபா - சந்திரசடாதரபூபா
கங்காதரப்பிர தாபா-கயிலாசகிரி தீபா
கமலமுகபுய - விமலபயபய
நிமலஜகமய - வமலஜயஜய
சரணம்

(௩) மீனலோசனிசமேதா - விஷபோசனசாமகீதா
தீனரட்சக பாதா- திவ்வியவரப்பிரசாதா
தினகரகிரண - பனகதரண
மதனதகனபத-வனசசிவசிவ

சரணம், ௩உ.

---

விருத்தம்.

இப்படிஇந்திரன்தொழுதுஉம்மடியில்வாழ்க ... *
என்றும்அருள்வீர்என்றுன்னீசர்அன்று ... *
செப்பும்உயர்பூரணைசித்திரைநாட்சேர்ந்த ... *
சித்திரைமாதம்வந்துதெரிசித்தேகில் ... *
எப்பொழுதும்தொழுபலன்கள்உண்டுமேலா ... *
கியபதமும்உண்டுபின்முத்தியும்உண்டென்ன... *
ஒப்பிஅடிதொழுதுவிடைபெற்றுவிண்சென் ... *
றோங்கினன்வாழ்ந்தரசுதாங்கினனே ... ... (௩௯)

---

விருத்தம்,

சுரபதிபழியைத்தீர்த்த துதிஇதுகேட்போர்எல்லாம் ... *
பரன்அடியவராய்மேலாம்பதமதுபடைத்துவாழ்வார் ... *
தரமுறுவெள்ளையானைச்சாபம்தீர்த்திடும்இரண்டாந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே ... (௪0)

---

முதலாவது - இந்திரன்பழிதீர்த்த திருவிளையாடல்
முற்றுப்பெற்றது.

---

ஆ விருத்தம்-0௬-பதம்-0௪-ஆ ௩0.

ஆ பாயிரம்உள்பட்விருத்தம்-௩௯-வெண்பா-௧-பதம்-௩உ.

ஆ கவிதை-எஉ.



திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது

## வெள்ளையானைச் சாபந்தீர்த்தது.

விருத்தம்.

இந்திரன்பழியைத்தீர்த்த - ஈசரைமறவாவண்ணம் ... ...*
வந்தினிதுடன்பூசித்து வானுலகாண்டுவாழ்ந்தான் ... ...*
அந்தஇந்திரன்தான்ஓர்நாள் அமர்ந்ததன்பதியைச்சூழ்ந்து ...*
வந்தனன்பவனிகண்டமருவலர்வெருவத்தானே ... ... (சக)

பதம்-பந்துவராளி-ரூபகசாப்புதாளம்.

[ பல்லவி, ]

அவனிமகிழ - பவனிவந்தான் - அண்டர்பதியே

[ அநுபல்லவி. ]

நவநிதிகளுமிகுந்துசிறந்த-நாகநாடெங்கும்பணியவேஇந்த
அவனி

[ சரணங்கள், ]

(க) சங்கமிர்தங்க-முழங்கவேபுங்கவர்
தாளங்கள்மேளங்கள் ... ... அடிக்க - அண்ட
கோளம்படீர்என்று ... ... வெடிக்க -இசை
நீளுஞ்சங்கீதங்கள் ... ... ... படிக்க - இரு
வாள்விழிரம்பையர் ... ... நடிக்க -புகழ்
சாரக்குறை-தீரச்சிங்-காரமா-யொய்யாரமுடன்
அவனி

(உ) சுற்றிமணிக்குடை - வெற்றிக்கொடிகள்பி
டித்துக்கவரிகள் ... ... ... வீச-வந்து
மொய்த்திட்டசூரியப்பிர ... ...காச-மென
எத்திக்கிலும்ஒளி ... ... கூச- முடி
வைத்திட்டதேவர்கள் ... ... வாச-மலர்
சொரிய-அருள்புரிய-எழில்தெரியவே- தயிரியத்துடன்
அவனி

(ங) பால்க்கடல்உச்சியின் - மேல்ச்சுடர்போலவச்சிர
பாணிவெள்ளானையி ... லூர்ந்து - இந்தி
ராணியுடன்அருள் ... கூர்ந்து - உயர்

சேணிலஇன்பத்தைச்சேர்ந்து - கொன்றை
வேணியன்கிர்பை ... சார்ந்து - புவி
பரித்துப்பகை-யெரித்துச்ஜெயங்- தரித்துஅலங்-கரித்துமிக
அவனி. ௩௩,



விருத்தம்:
பவனிவந்தஇந்திரனை முனிதுர்வாசன் ... ... *
பரனருள்தாமரைமலரோன் றீந்துகண்டான் ... *
அவன்அதனையானைமஸ்த்தகத்தில்வைக்க ... ... *
அவ்வானை துதிக்கையால்அதைஎடுத்துக் ... *
கவனம்அறக்காலில்இட்டுச்சிதைக்கக்கண்டு ... *
கண்சிவந்துமுனிந்துவாசவனைநோக்கிச் ... *
சிவன்அணிந்தமலரைஎன்னசெய்தாயென்று ... *
சீறினன் துர்வாசன்கூறினனே. ... (சஉ)

பதம் - மோகனராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி, ]
என்னசெய்தாய்அடா - அடடாமூடா - ஏதுசெய்தாய்அடா

[ அநுபல்லவி, ]
என்னசெய்தாய்அடா - ஈசர் - தன்னடியார் ஒருக்காலே
எள்ளளவும்ஆசைஅற்றுத்தள்ளுஞ் செல்வச்செருக்காலே
என்ன

[ சரணங்கள், ]
(க) அந்தரர்தரும்பொருளைச் - சொந்தமென உற்று
சந்திரசேகரர்இடத்தில் - முந்தவேநான் பெற்று
வந்துனக்கருள்மலரைச் - சிந்தைமகிழ் வற்று
நிந்தைசெய்திகழ்வாயோ- வெண்தந்தியால்ச்சிதைத்து
என்ன

(உ) விந்தமலரயன் - மாயவன்தொழிலும் நாடா
அந்தரர்பூபதிஎன்றும் - உந்தனைக்கொண் டாடா
இந்தவாழ்வுவந்ததுவும் - நிந்தைபெறு கேடா
அந்திவண்ணர்பூசைப்பே - றென்றுந்தெரியா யோடா
என்ன

(௩) மதிஇழந்தவனேஇந்த -வானில்உன்னை விட்டு
எதிர்இல்லைஎன்றெண்ணினையோ-இவளவாஉன்மெட்டு

அதிபதிநீஆகில்என்ன - ஆகும்உன்னைத் தொட்டு
குதிரைதனக்குவால்உண் - டானால்குண்டியம் மட்டு
என்ன. ௩௪.

விருத்தம்.

இப்படிமாமுனிசினந்தோர்பாண்டியன்சீறி *
எறிவளையால்உனதுதலைசிதறஉந்தன் ... *
மெய்ப்படிகயானையுங்காட்டானையாகி ... ... *
விரைந்தொழியவெனச்சபித்தான் விண்ணோர்தாழ்ந்து *
தப்பிதஞ்செய்தான்எங்கள்இறைவன்ஏறும் ... ... *
தந்தியும்புல்லறிவாச்சுதையாவென்று ... ... *
அப்பொழுதேதூர்வாசமுனியைப்போற்றி ... *
அஞ்சினர்ஆளுமென்றுகெஞ்சினரே. ... (௩௫)

பதம் - புன்னாகவராளிராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி. ]

மனதிரங்கிஅருட்கண் பாரையா - சாப
மாற்றிஎங்களைஇன்று காரையா

[ அநுபல்லவி. ]

சினத்தைப்பேணுவதுங்கள் - தவத்துக்கு அழகல்லோ
சிங்கஞ்சிற்றெறும்பைப் - பங்கஞ்செய்வதுசொல்லோ
மன

[ சரணங்கள், ]

(க) சற்றும்பட்டபாடு - தெரியாதென்ன ... ... மதி
தன்புத்திதானேஐயா - தன்னைச்செய்வது ... சதி
நித்தியகெண்டமுந்தீர்க் - காயுசும் எங்கள் ... விதி
ரெட்சித்தாலும்பட்சித் - தாலும்நீயே ... கதி
மன

(உ) தலைமேல்த்தலையாயுன்னை - அவமானஞ் செய்வது
தகுமாபுலிமுன்னையா - நரிஊஞ்சல் ஆடுவது
துலையாதவிதிவசம் - அணுவும்மலை ஆகுது
துரும்பைத்தூணாக்கவேண்டாம் - தோணுதபிழை இது
மன

(௩) தீராதசினங்கொண்டாய் - உனக்கெதிர்இவர் ... தானோ
தெரிந்துந்தெரியாமலும் - செய்தபிழையை ஏனோ
பாராட்டுறுயிரங் - கையாளளிய வானோர்
பத்தும்பெரிதென்றெண்ணிப் - பாரும்அருதியானோம்
மன. ௩௫.

விருத்தம்,

இந்தவாறமரர்தொழமுனிஇரங்கி ... *
இவன்தலைக்கிவந்ததிவன்முடிமட்டாகத் ... *
தந்தியுங்காட்டானையதாய்நூறாண்டெய்திச் ... *
சாபம்ஒழிந்திவனைவந்துதாங்கும்என்று ... *
அந்தமுனிஅகன்றான்வெள்ளானையுங்காட் ... *
டானையாய்வனங்கள்எங்கும்அலைந்துநாடிச் ... *
சிந்தைநொந்துநூறாண்டுஞ்சென்றுசாபந் ... *
தீர்ந்துதாங்கடம்பவனஞ்சார்ந்துதானே (சச)

பதம்-ஆரபிராகம்-ஆதிதாளம்.

[ கண்ணிகள். ]

(க) சாபம்பொறுத்தவெள் - ளானைகாட்டானையாய்த்
தாரணிஎங்கெங்கும் ... ... சுற்றியே
நீபவனத்திற்ப் - புகுந்தஉடனே
விமலர்அருளது ... ... ... பற்றியே

(உ) அந்தவனத்தி - னடுவிற்பொற்றாமரை
ஆம்உயர்வாவியை ... ... ... நாடவே
தந்திக்கிநல்மதி - வந்துமலர்ப்பொய்கை
தன்னில்இறங்கிநீ ... ... ... ராடவே

(ங) மைவண்ணமாறிப் - பழையவடிவு
வரவும்மனமகிழ் ... ... வாகியே
மெய்வண்ணமாஞ்சுந்த - ரேசர்குறிமுன்
விளங்கக்கண்டேஅரு ... ... கேகியே

(ச) சுற்றித்தொழுது - துதிக்கரத்தால்நீர்
சொரிந்துபரிந்துமுன் ... ... ஞானையே
பத்தியுடனே - பூசித்துநேசித்துப்
பணிந்துகளித்தவெள் ... ... ளானையே(ஙசு)

---

விருத்தம்,

வெள்ளானைமணிமிடற்றுக்கறுப்பானைநைந்துருகு *
மெய்யாம்அன்பர்க்
குள்ளானைஉருவரியவெளியானைமதமொழுகி *
உயர்ந்தசிற்றங்

கொள்ளானையுரிபோர்த்துக்கொண்டானைக்கொடுநரகில்
அடியார்தம்மைத்
தள்ளானைஒருவினையும்சாரானைச்சுந்தரனைச் ... *
சாற்றித்தன்றே. (௪௫)

பதம் - ஆனந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

புராதனபவகரா - சதாசிவத்திரி - புராந்தகசுபகரா

[அநுபல்லவி.]

பராப்ரபரசுதராவர கருணாகரா -ஈசுவரா சங்கரா சுந்தராதி
புராதன

[சரணங்கள்.]

(௧) கலாதரவிமலா - பக்தவற்சலா - அந்தகபயங்கர திகம்பரநிமலா
பிலாசந்திரஜடிலா - தனுசயிலா - பிரபலா - அமலா - கயிலாச
புராதன

(௨) பினாகதரமனோபவதகனசுந்தரதுரந்தரபுரந்தரவந்தன *
கனமிருதுவசன - கதம்பவனநடன - சோபனபயனாச *
புராதன

(௩) நீதாநிமலபோதாவரப்பிரசாதாசாம்பவிமுகாம்புயமீனாம்பிகை
[சமேதா
நாதாவனஜபாதா - ஜெகவிநோதா - அபேதா - அதீதா - நிராதார
புராதன: ௩௭.

—:*:—

விருத்தம்.

துதித்தவெள்ளானையைநோக்கிச்சுந்தரேசர் ... *
சொல்லுனக்குவேண்டும்வரமென்னவென்னக் *
கதித்தபொன்விமானமதைத்தாங்குமெட்டுக் ... *
கரிகளோடொன்பதாயானுந்தாங்க ... ... *
மதித்தருள்வீரெனநமதுமெய்யாம்அன்பன் ... *
மகபதியைநீதாங்கில்மகிழ்வோமென்று ... *
விதித்தவிடையவன்அருளவிடைகொண்டியானை ... *
மீண்டுதாமிகவும்அன்புபூண்டுதானே ... ... ... (௪௬)

பதம் - சௌராஷ்டிரராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

மீண்டுவிண்ணுலகில்தன் - னுண்டவனிடந்தனில்
வெள்ளானைவந்ததே

[ அநுபல்லவி. ]

நீண்டகதம்பவனத் - திறைவர்தம்மைக் ... கண்டு
நேசித்துத்துதிசெய்து - பூசித்துவிடை கொண்டு
மீண்டு

[ சரணங்கள். ]

(க) சுந்தரேசர்தமக்கடுத்தமேல்த்திசையில் ... நோக்கி - அங்கே
துலங்கும்அயிராவத-தீர்த்தமென்றேஒன்றுண்டாக்கி-அதில்
தந்திமுகனையும் - ஈசனையும் ... அமைத்து
தனதுபேர்விளங்க - மனம்மகிழ்ந்து ...வைத்து
அந்தஇடத்தில்த்தானே - இருந்துபக்தி மிகுத்து
அநுதினம்பூசித்து - அடிதொழுதருள் பெற்று
மீண்டு

(உ) இவையெல்லாம்அறிந்து - இந்திரன்தூதரை...விடவே - அந்த
இந்திரன்தூதர்கள் - வந்துநின்றேஅழைத்திடவே -கண்டு
அவரைமுன்போமென்று- அனுப்பிஅவ்விடம்விட்டு
அகன்றுகீழ்த்திசையில் - வந்துதன்பெயர் நட்டு
நவமிகும்பதிஒன்று - தான்அமைத்திடப் பட்டு
நாமம்இந்திரேச்சுர - மெனும்பதிஒன் றிட்டு
மீண்டு

(ங) இந்திரேசுவரன்என் - றொருசிவலிங்கம்வைத்திங்கே - பூசித்
திருக்கயானைஇன்னம்-வரஇல்லையேஎன்றுஅங்கே-பின்னும்
அந்தஇந்திரன்யேவுந் - தூதர்கள்வந் ... தழைக்க
அமராபதியினிற்சென் - றமலர் அருள்தழைக்க
வந்தனைசெய்துமுன்னடந்ததெல்லாம் உரைக்க
வானவர்கோனுள்ள - மகிழஎவரு மெய்க்க
மீண்டு. ருஅ.

——(:)*(:)——

விருத்தம்.

வந்தகரிஇந்திரனைத்தாங்கிநாளும் ... ...*
மகிழ்ந்ததுகே - ளும்அயிராவதமென்றோது ...*
முந்துபுனல்படிந்தயிராவதக்கணேசன் ... ...*
முளரிஅடிதொழுதயிராவதப்பேர்பூண்ட ... ...*

அந்திவண்ணர்சன்னிதிகண் - டியானைசென்ற ...*
அந்நெறிபோய்வைகைபடிந் - ததன்தென்பாலாம் ...*
இந்திரேசுவரர்பதத்தைபணிவோர்என்றும் ...*
இடக்கற்றார்கொடியபவத்தொடக்கற்றாரே ...(சஎ)

விருத்தம்.

வருவெள்ளையானைச்சாப-மாற்றியலீலைதன்னை ... ...*
உருகியேகேட்போர்ஈச - ருடஅடியவராய்வாழ்வார் ... ...*
மருவியமதுரையாமிம் - மாநகர்கண்டமூன்றாந் ... ...*
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடஉரைசெய்வேனே ...(சஅ)

இரண்டாவது - வெள்ளையானைச்சாபந்தீர்த்த

திருவிளையாடல் - முற்றுப்பெற்றது.

ஆ விருத்தம் - அ, பதம் - சூ.

ஆ பாயிரம்உள்ப்படத் - திருவிளையாடல்-உக்கு

வெண்பா, க, விருத்தம், சஎ, பதம்-நஅ, ஆ கவிதை-அசூ.



திருச்சிற்றம்பலம்.

மூன்றாவது

## திருநகர்கண்ட திருவிளையாடல்.



விருத்தம்.

வெள்ளையானைச்சாபந்தீர்த்தபின்புமணவூர் ... *
மேவியேகுலசேகரன்பாராள்நாளில் ... ... *
உள்ளமகிழ்தனஞ்செயனென்றொருவணிகன்அரனன் *
புள்ளவன்மேல்த்திசையில் வாணிபஞ்செய்துதிரும்பி
கள்ளலர்செங்கடம்பவனம்புகக்கங்குல்சூழக் ... *
கலங்கும்போதங்கொரு பால்க்கடம்படியில் முளைத்த
வள்ளலைவிண்ணவர்தொழக்கண்டவனும்பூசித்து *
வந்துகுலசேகரன்முன்மகிழ்ந்துகூறுவனே, (௪௯)

பதம்-புன்னாகவராளிராகம்-ஆதிதாளம்.

[பல்லவி,]

இதுகேள்கருணாகரா-பாண்டியகுலபூ - பதியேகுலசேகரா

[அநுபல்லவி]

மதுவார்மலர்நீப - வனத்தில்மறைபரவு
சுதினம்ஐயாநேத்துச்சோமவார மிரவு

இது

[சரணங்கள்.]

(௧) எண்டிசைக்கயந்தாங்கும் - விமானத்துள்
அண்டர்பணிய ஓங்கும் - சிவக்கொழுந்தை
கண்டுபெருந்துயர்க்- கடலையும்விண்டேனே
மண்டுபொற்றாமரை - வாவியுங்கண்டேனே

இது

(௨) கிளைத்தவினைகள்போச்சு - நடுமனைக்குள்
முளைத்தகற்பகமாச்சு - ஒழிந்திடாமல்
வளைத்தபிறவிநோய்க்கு- மருந்தின்று வாச்சுதே
விளைத்ததபோபலன்கை - மேல்நமக் காச்சுதே

இது

(ங) மட்டில்லாமகிழ்வுற் றேனே - குருடன்கண்
பெற்றிட்டதெனப்பெற்றேனே - மாலயனுக்கும்
எட்டாதபொருள்அகப் - பட்டுதினிமேலாரும்
எதிர்நமக்குண்டோமிக - அதிசயம் ஐயாபாரும்
இது. ஙக.



விருத்தம்,

அணிவணிகன்உரைக்கமன்னன்அதிசயித்து ... *
அரனைஎண்ணித்தொழுதிருந்தான்அன்றிராவில்... *
துணியுமன்னன்கனவில்ஒருசித்தராகித் ... ... *
தொல்கடம்பவனத்தைநகர்செய்யென்றோதிப் *
பணிஅணிஈசருமறையவிடிந்தெழுந்து ... ... *
பலஅமைச்சர்மேலோர்க்கும்பகர்ந்துமுன்பு ... *
வணிகன்மொழிந்ததுங்கூறிஅவரோடந்த... ... *
வனங்கண்டான்உயர்சிவதரிசனங்கண்டானே (ருய)

பதம்·பியாகடைராகம்-ஆதிதாளம்,

பல்லவி,

சிவதரிசனம்பெற்றானே - வழுதிகுல - சேகரன்மகிழ்வுற்றானே

அநுபல்லவி,

தவம்உயர்ந்தருளும்பொற் - றாமரைதனில்ஆடி
கவலைஒழிந்தாநந்தக் - கண்ணீர்பெருக நாடி
சிவ

சரணங்கள்,

(க) எண்கயஞ்சுமந்து நிற்கப் - பிடரிலோங்கி
இலங்கும்விமானஞ்ஜொலிக்க
கண்களித்ததிசயங் - கண்டுடல் புளகிக்க
தண்மதிமுகமலர்ந் - தகமகிழ்ந்திடமிக்க
சிவ

(உ) துன்பப்பிறப்பைச்சாடி - பிர்ம்மாநந்தச்
சுகமாம்போகத்தைநாடி
அன்புபின்தள்ளமன - தாசைஇழுக்க ... ஓடி
முன்புவந்துதன்மணி - முடியில்ப்பொன்னடிசூடி
சிவ

(ங) மிகுபிரதட்சணஞ்சூழ்ந்து - பணிந்துபுவி
மேல்அடிக்கடிவீழ்ந்து

அகமதில்த்தெவிட்டாத - அமிர்தத்தைக்கொண்டுவாழ்ந்து
இகபரமகிழும்பே -ரின்பக்கடலில் ... ... ஆழ்ந்து
சிவ. சய.

---

விருத்தம்.

வாகரன்வல்லிருளடுந்திவாகரன்போல் விளங்கிப்விமானத்தோங்கி*
நாகரன்புபொருந்துகருணாகரன் எவ்வுயிருந்தா னஞான ... *
சாகரன்தண்ணமுதுறு நிசாகரன்சேர்சடிலனுயர்சயிலமாது *
சேகரன் தாள்பணிந்துகுலசேகரன்தான் மிகுந்ததுதிசெய்குவானே

பதம் - பூபாளராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி ]

சரணம் சரணம் சம்போ - சிவ
சரணம் சரணம்-சம்போ

[ அநுபல்லவி ]

சரணம்மங்கையோர் - பங்குறைசங்கரா
சரணம்அங்கி - அணிந்திடு செங்கரா
சரணம்

[ சரணங்கள். ]

(க) சரணம் ஆலமுகந்தருள் கந்தரா
சரணம்அந்தக்-கரண துரந்தரா
சரணம்எங்கும்-நிறைந்த நிரந்தரா
சரணம்மன்றில் - நடம்புரி சுந்தரா
சரணம்

(உ) சரணம்வேத - மகிழ்ந்து புகழ்ந்தவா
சரணம்ஆதியோ - டந்தம் ஒழிந்தவா
சரணம்நீப - வனந்தனில் வந்தவா
சரணம்மாரனை - யன்றடருஞ் சிவா
சரணம்

(ங) சரணம்அண்ட - சராசர மானவா
சரணம்அம்புலி - சூடிய கானவா
சரணம்எந்தனை - யாள்கன வானவா
சரணம்எங்கள் - குலாதிப மீனவா
சரணம் - சுக.

விருத்தம்.

இந்தவிதமெங்கள்குலந்தனையாட்கொள்ள *
இவ்வனத்திலெழுந்தீரென்றிறைஞ்சிப்போற்றி *
அந்தமுள்ளவரங்கள்பெற்று அமைச்சரோடும் *
அங்கொருபாலிருந்து மன்னனேவலாலே *
கந்தவனமொழித்து நிலந்திருத்தக்கண்டு *
கடிநகரீவ்விதஞ்செய்வோமென்றுதென்னன் *
மந்திரிமார்க்குரைக்க அங்குநிமலர்சித்தர் *
வடிவுற்றார்முன்கனவின்படியுற்றாரே (ருஉ)

பதம் - கேதாரகௌளராகம் - திரிபுடைதாளம்.

மெய்யடியார்துயர் விண்டு
உய்யவேபணியும் ரெண்டு
செய்யதாள்சுமந்து கண்டு-வையமுய்யவே
வெய்யவினைகள்வெ ருண்டு
நையவேவெண்பொடி மண்டு
பையும்மெய்யுங்காணப் பண்டுஐயன்தோன்றினர் (சஉ)

விருத்தம்.

கனவினுமேலவர்க்கறியாதவரைக்கண்டு *
களித்துமன்னன்நல்வரவுகண்டேனென்று *
வினவியாசனத்திருத்திப்பணிந்துநின்றான் *
வீற்றிருந்துகடவுள்முன்னூல்ச்சார்புநூலால் *
தனிநகரைஇவ்வாறுசெய்யென்றோதி *
தான்மறைந்தார்நிருபன்மிகமகிழ்ந்தவ்வாறே *
தினம்விதித்துச்சிற்பர்களால்அமைத்தெல்லோர்க்குந் *
தெரிவித்தான்தென்மதுராபுரியைத்தானே (ருங)

பதம் - பைரவிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

சதிராய்வளருந்தென் - மதுராபுரிநகர் - தன்னையுண்டாக்கினன்

[அநுபல்லவி.]

கதிரார்மணிக்கடல் - போலகழும் விண்ணுட்டை
கடந்தசக்கிரவாள - கிரிபோலவுங் கோட்டை
சதி

[சரணங்கள்.]

(க) வாரணந்தாங்கும்வி - மானம்புனைபதும
மண்டபம்அர்த்தமண்டபம் வேலை

சேருமாமணிமண்-டபம்வசந்தமண்டபம்
திருநாள்மண்டபம்யாக சாலை
கார்உலாவும்அறு - கால்ப்பீடமுஞ்செம்பொற்
கலசவிமானங்கள் மேலே
சாரும்வலதுபக்கந் - தன்னில்க்கயற்கண்ணன்னை
சன்னிதிபுமுன் ஞலே
நேரும்நந்திபொற்கம்பம்இருக்குங்குறடும்நாளும்
நிறைபள்ளிஅறைமடப்பள்ளியும்புறத்திற்சூழும்
வாரணமுகனுதியோர்சன்னிதி ஸ்த்திரமும்
மலர்ப்பொற்றாமரையைச்சூழ் - மாடச்சித்திரமும்

சதி

(உ) மதியுங்கதிருந்தவழ் - மதிலுஞ்சிறந்தநாலு
வாசலுமஎட்டுக்கோ புரங்களும்
அதிகசுந்தரம்பெறுங் - கோவில்இதனைச்சூழ்ந்த
அணிகொள்மாளிகைச்சிக ரங்களும்
விதவிதமாகிய - மேடையுங்கூடமும்
விளங்கும்பலமணிச்சா ளரங்களும்
நிதமுந்திருவிழா - ஓயாதபைந்தோரணம்
நிறைவீதிகளுஞ்சத் திரங்களும்
எதிரில்லாமுனிவர் - தவஞ்செய்யு மடங்களும்
இனியகூவல்களும்பனிமலர்த் தடங்களும்
மதுநந்தவனமும் - முரசொலி வாயிலும்
வடகீழ்த்திசையினில்மீ னவன்மணிக் கோயிலும்

சாதி

(௩) ஆனைதேர்பரிகள் - சேனைவீரர்கள்
அமர்ந்திடுமாளிகை வருக்கமும்
வானுலாவுமணி - மாடங்கள்உயர்ந்தமா
மறையவர்தெருக்களின் பெருக்கமும்
பானுவாமெனப்பொற் - கலசமின்னும்வணிகர்
பலமணிவீதியின் னெருக்கமும்
ஞானமாமறையோர் - முதலானமுனிவர்க்கும்
நடக்கும்வணக்கமும்நெஞ் சுருக்கமும்
மானவேளாளர்கள் - தெருக்களுமற்று முள்ள
வணங்குந்தொழிற்சாதியார் -மனைகளுங்கனங்கொள்ள
மேன்மையானகடைத்-தெருக்களும்எழில் மிக்க
விண்ணுள்ளோருமண்ணுள்-ளோரும்அதி சயிக்க

சதி-சங.

விருத்தம்.

கதிநகர்இவ்வாறமைத்துச்சாந்திசெய்யக் *
காலம்எண்ணியதறிந்துவிமலர்சூடும் *
மதியமுதைபுகுத்தடைந்தோர்தங்களைத்தன் *
மயமாக்கும்வாறெனமாநகரந்தன்னைப் *
புதுமதுரமயமாக்கிச்சாந்திசெய்தார் *
புரவலனுமகிழ்ந்தமிர்தமயமாம்இவ்வூர் *
துதிமதுராபுரியெனவேசிறந்தநாமம் *
சூட்டினன்பிரபலமுறக்காட்டினனே. (ருச)

பதம் - பந்துவராளிராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி. ]

பெருமையாகமதுராபுரியதனை - பிரபலமதாக்கினன்

[ அநுபல்லவி. ]

கரியசாத்தையன் - கீழ்த்திசையி லுலாவ
களபமுலைஅன்னையர் - தென்திசை மேவ
அரிமேல்திசையுற்று - அருள்செய்துநோக்க
அம்மைதுர்க்கைவட- திசைதனைக் காக்க
பெரு

(சரணங்கள்.)

(க) பொய்வாழ்வறஉயர் - பதம்அருளும்விமலர்
புதுமையதுமிகுந்து வாசிக்க
மெய்வாழ்காசியம் - பதியில்இருந்துவந்து
மேவியமுனிவர்கள் நேசிக்க
மைவார்குழலுமை - அருள்சேர்முந்நூன்
மறையவர்என்றும்பிர காசிக்க
சைவாகமநெறி - தவறாமல்வெகு
சதிருடன்மதுரேசர் - பதமலர் பூசிக்க
பெரு

(உ) உத்தமசாதிகள் - நான்கும்உயர்ந்துதணிந்
துகந்தமுக்குலங்களுங் கதித்து
நத்திமனுவுரைத்த - மொழிப்படிஅவரவர்
நடக்கவேயாவர்களுந் துதித்து
பத்திசெய்யுஞ்சைவமும் - வைதீகமும்மீறிப்
படரமாமுனிவரு மதித்து

எத்தலங்களும்இதற் - கிணைஇல்லௌன ஓங்க
இலகும் பூமிக்கொரு - திலகம்எனப் ... பதித்து
பெரு

(ரு) நன்றான சுபநாளில் - அரமனைபுகுந்துமா
நகர்எங்கினு மங்களஞ் ... ... சாற்றி
என்றும் உச்சவமும் - ஆறுகாலப் பூசையும்
இசையவே பழவினை ... ... மாற்றி
குன்றவில்லியாம் சோம - சுந்தரேசர் திருக்-
கோயிலை வலம்வந்து ... ... போற்றி
அன்றுமுதலாய்த்திரு - மாலென்னப்பெரும்புவி
ஆண்டுகுலசேகர - பாண்டியன்புகழ்ந் ... தேற்றி
பெரு-சச.

விருத்தம்.

தவமதுராபுரியை இவ்வாறோங்கச்செய்து ... *
தனித்துலகாண்டியர் மலையத்துவசனுமன் ... *
னவனைமகிழ்ந்தீன்றவனுக் கரசளிக்க ... ... *
அவன்மநுப்போல் அரசாளும்நாளில்ஓர்நாள் ... *
புவனமகிழ் மதுரேசர் கோயில்எய்திப் ... *
புகழ்ந்துபணிந்-தேகுலசே- கரநாம்பாண்டியன் *
உவமையில்லாரின்ப அருநிழலில்எய்தி ... *
ஒன்றிஒன்றாகிநின்று துன்றினனே ... (ருரு)

———(*)———

விருத்தம்.

உரைபெறுநகர் கண்டிட்ட - தோதினோம் ஈதுகேட்போர் ... *
தரைபுகழ்செல்வராகித் - தற்பதம்பெற்றுவாழ்வார் ... *
வரைமகள்ஒருதென்னற்கு - மகளெனப் பிறந்த நான்காந் ... *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திட உரைசெய்வேனே (ருசு)

திருநகர்கண்ட திருவிளையாடல் - முற்றிற்று.
ஆ விருத்தம் அ - பதம் - சு.

——[-:-]——

ஆ கவிதை -மசு-ஆ பாயிரம் உள்ப்படத்
திருவிளையாடல் - ந-க்கு - வெண்பா - க - விருத்தம் - ருஎரு
பதம் - சச - ஆ கவிதை - ஙா.



திருச்சிற்றம்பலம்.



நான்காவது

தடாதகைப்பிராட்டியார்

# திருவவதார திருவிளையாடல்.

விருத்தம்.

திருநகர் கண்டபின்னாள் - சிறந்ததென் மதுரையூரில் ... *
மருவிமண்ணிலமும்விண்ணு - மகிழ்குலசேகரந்தான் ... *
அருள்மலையத்துவசத்தென் - னன்புவியாண்டுமாற்றார் ... *
செருவறவெற்றிச்செங்கோல்த் - திறங்கொண்டான் அறங்கொண்டா

பதம்-சாவேரிராகம் -சாப்புதாளம். [னே. ருள

[பல்லவி.]

தேசம்புகழ்மலை-யத்துவசபாண்டியன் -செங்கோல்நடத்தினன்

[அநுபல்லவி.]

வாசவன்போல்வெகு - மேன்மைபுலாவி
வளருந்தென்மது - ராபுரி மேவி
தேசம்

[சரணங்கள்.]

(க) சாடும் புலியும்பசுவும் ஒருதுறை
தன்னில் நீருண்டு ... ... உய்ய - வளர்
ஜாதிவர்ணாச்சிரமம்அவரவர்
தப்பாமல் முறை ... ... செய்ய
வாடும்பயிர்கள் செழித்து வளரவே
மாதமும்மாரிகள் ... ... பெய்ய - இந்த
மானிலம்எங்கும் தாழ்வில்லாமலே
வாகதாகமுப்போகம்விளையத் ... துய்ய
தேசம்

(உ) பாரெங்கினுந் துஷ்டநிக்கிரகசிஷ்ட
பரிபாலனஞ்செய்து ... ... காத்து - நீதி
பகருங்குடியில்க்கடமையாறி
லொன்றுகொண்டருள் ... ... பூத்து
சாருந்தனதுபுறம்பென்றெண்ணமற்
சமன்செய்துவல்லிடர் ... ... தீர்த்து - தன்
தாரதாரபரதாரபுத்திரனாகித்
தன்னுயிர்போலவே-மன்னுயிர்எல்லாம் பார்த்து
தேசம்

(ங) நற்றமிழ்கிரந்தமுதலாகியகலை
ஞானம்எல்லாங்கரை ... கண்டு - பதி
னுயிரமாமடவாரோடுகிருஷ்ணன்போல்
நாளும்அணைந்திதழ் ... உண்டு
பொற்புள்ளமன்மதனென்னஅழகு
பொருந்தியுறுங்கலி ... விண்டு - மறை
புகலுஞ்சூர்யகுலச்சூரசேனன்மகள்
பொன்மாலைஎன்னு-மின்னைமணம் . கொண்டு
தேசம். சரு.

---

விருத்தம்.

அறையுமலையத்துவசன்பாராளும்நாளில் ... *
அருள்மகவில்லாததனல்அடைவேலொன்று *
குறையநூறசுவமேதம்புரிந்தான் ... ... *
கூறுமகம்நூறுமுடிந்தால்விண்ணோர்க்கு *
இறைதனதுபதம்போமென்றெண்ணிவந்து ... *
எழில்மலயத்துவசபாண்டியனைநோக்கி *
முறையுடனேபுத்திரகாமேஷ்டியாகம் ... *
முடியென்றுன்மைந்தருண்டாம்படியென்றனே (ருஅ)

பதம் - ஸ்ரீராகம் - சாப்புதாளம்,

[பல்லவி.]

புத்திரகாமேஷ்டி - புரிகுவாய்நாட்டி

[அநுபல்லவி.]

சத்தும்யோசியாதே - தாமசமே னிப்போதே
புத்திர

[சரணங்கள்]

(க) அதிகபாக்கியந்தரும் - அசுவமேதம் யோக
புதல்வரைப்பெறும்பலன் - தருமோ-மகவுண்டாக
புத்திர

(உ) அகந்தனிலொன்றுஞ்செய்வ - தொன்றுமானலென்னுகும்
தகுந்தமருந்துண்டாலல்லோ - கொண்டபிணிபோகும்
புத்திர

(ங) தண்ணீர்தவித்தாலெண்ணே - குடிப்பதுண்டோ - ஆரும்
எண்ணிச்செய்பவேவேணும் - இனிமேலாகிலும்நேரும்
புத்திர - சசு.

திருவவதாரம்.

விருத்தம்,

நீட்டும்வச்சிராயுதக்கை - நிருபனன்றுரைத்தவார்த்தை *
கேட்டுவானவர்க்குமேலாம்- கீர்த்தியும்பதமும்வாழ்வும் ... *
சூட்டுமீனவர்கோன்கூடல்த் - துரைமலையத்துவசன்மெய் *
நாட்டும்புத்திரகாமேஷ்டி - நடத்தினன்திடத்தினனே ... *

பதம் - கலியாணிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

நடத்தினன்புத்திரகாமேஷ்டி - யாகம்
நானிலம்புகழவே காட்டி

[அநுபல்லவி,]

திடத்தினலரசர்-பணியநேமம் ... பொருந்து
தேவியுடனேதேவேந் -திரனென்னவேஇருந்து
நடத்தி

[சரணங்கள்]

(க) ஆசையுடன்யாகசாலையதனில் அடவுடனேவந்து சேர்ந்து
தேசிகருடன்அருமாமறையோர்களுஞ்செழிப்புடனேநேர்ந்து
மாசறுசடங்கினை - முறைமுறைகூறவும்
காசினிஎங்குமகிழ்ந்தே - மனந்தேறவும்
நடத்தி

(உ) நல்லவழுதிகுலந்தழைத்தோங்கவே - நாட்டியமாமறை... நீதி
சொல்லும்உதாத்தம் - உடன்அனுதாத்தஞ்சொரிதந்தழுவஓதி
எல்லொளிமங்க - இடும்பந் ...தலாக
மல்கும்வேழ்விப்புகை - வானிலும்ஏக
நடத்தி சொரிந்து

(௩) கொண்டசமித்துப்பொரியுடனெய்யைக்- குடங்குடமாகவே
மண்டிய அக்கினிசெங்கொழுந்தோங்கி - வளர்ந்திடவேபரிந்து
எண்டிசைசொல்லமு - தென்னவேஆய்ந்து
அண்டர்கள்மெச்சவே - ஆகுதி......ஈய்ந்து
நடத்தி - ௬௭.

——(:*:)——

விருத்தம்,

ஐமுகன்சொல்மறைவழிஆகுதியீந்தந்த ... ... *
அருமகஞ்செய்போதினில்அவ்வழல்க்குண்டத்து ... *
நெய்முகத்தீயில்அத்தீக்கடவுள்செய்த ... ... *
நெடுந்தவப்பேறடையமானிலம்பூரிக்கப் ... *

பைமுகப்பாம்பரன்மகிழுப்போற்றும்பாண்டியன் ... ...*
பாக்கியவம்சந்தழைக்கப்பொன்மாலைதன்பால் ... ...*
பெய்முகமாமுலைசுரக்கஉமையாள்வந்து ... ... ...*
பிறந்திட்டாள்எவர்க்கும்அன்பாய்ச்சிறந்திட்டாளே (சுயி)

பதம்-தோடிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதிசத்திஜெக-சாட்சிமீனாட்சிவந்- தவதரித்தாள்பாரில்

[ அநுபல்லவி. ]

ஜோதிமயமாய்ச்சரா - சரங்களில்எவ் ... விடத்தும்
தோன்றியுந்தோன்றாமல்த்- தொழில்ஐந்தையும்நடத்தும்
ஆதி

[ சரணங்கள், ]

(க) பொன்மலைவில்கொண்ட - கயிலாசபதிவெள்ளிப்
பொருப்பினில்த் - தனிமையா ... யிருக்க
தன்மகளென்றிருந்த - இமவானுமனைவியும்
தமதுமனதில் - நாணம் ... ... பெருக்க
புன்மைசேர்வினைக - ளொதுங்கவெங்கலி நீங்க
புவியெல்லாமகிழத் - தவமுயர்சைவமோங்க
நன்மைசேரும்எண்ணான் - கறமுங்குது கலிக்க
நந்தாமறையுந்தேவ - துந்துமியும் ஒலிக்க
ஆதி

(உ) மலையத்துவசபாண் - டியனும்பாண்டியதேசமும்
மதுராபுரியு - மேன்மை ... ... திறக்க
நிலைபெற்றதென்மதுரா - புரியிலுள்ளவரெல்லாம்
நீங்காமகிழ்ச்சி - கொண்டு ... ... சிறக்க
கலைகற்றநவரச - கீதங்கின்னரர் பாட
கானமிகுந்தரம்பை - மேநகைநடமாட
மலர்வுற்றதாமரையில் - எழுந்தபூங்கொடிபோலே
வடிவுற்றுவேழ்வியில் - வளரும்அக்கினிமேலே
ஆதி

(ங) முத்துமணிக்கொண்டையும் - ரத்னமணிச்சுட்டியும்
மொய்த்த - பணிவகையும் ... ... மின்ன
சித்திர நூலிடையில் - மேகலையும்பதத்தில்
சிலம்புந்தண்டையுங் - கலீ ... ... ரென்ன

திருவவதாரஞ்செய்தது.

புத்தமிர்தமென்னவே - மழலைமொழி திருந்தப்
புதுநிலவெனச்சிறு - தரளநகை பொருந்த
முத்தணிச்சிறுமுலை - மூன்றுடன்எழில்தோன்ற
மூன்றுவயதுகந்து - மூன்றுலகையுமீன்ற
ஆதி, ௪அ.



விருத்தம்.

அவதரித்தகயல்கண் இளங்குழந்தை அன்னை ... ... *
ஆகிய பொன்மாலை மடிமீதிலேறக் ... ... ... *
கவலையற்றுச்சுமந்துநோகாமல்ப்பெற்ற ... ... ... *
கன்னிகையை யெடுத்து முத்தமிட்டன்புற்றாள் ... *
புவனமுற்றுந்தருதாய்தன்மகளாய்வந்த ... ... ... *
புதுமையுந்தன்மனைவிதவப்பயனுந்தோணத் ... ... *
தவமலையத்துவசன்ஒருநினைவால்ச்சிந்தை ... ... ... *
தளம்புவான்கவலையுற்றுவிளம்புவானே... ... (௬க)

பதம் - எதுகுலகாம்போதிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி, ]

இதுவோநான்பெற்றபாக்கியம் - இதுவேசிலாக்கியம்

[ அநுபல்லவி, ]

மதியில்லாப்பிறவிக் - குருடது ... ... நீங்கி
மாலைக்கண்ணனது - போலவே ... ஏங்கி
இது

[ சரணங்கள், ]

(க) அருந்தவங்கள்புரிந்து ... அரியமலர்கள்கொய்து
திருந்தச்சிவன்பதத்தில்த் ... தினம்பெய்து
வருந்திஅசுவமேத - மகங்களுந்தவ ... ... மெய்து
புரந்தரன்மொழியால்ப்-புத்திரகாமேஷ்டியுஞ் ... செய்து
இது

(௨) இனிச்சொல்லியென்னவருந்தினும் ... வாராதில்லைஎன்று
தொனிக்கும்மொழியும்-பொய்யாச்சுதோ ... நன்று
ஜெனித்திடும்சுதன்வேண்டிச்-சிந்தையில்நா... னென்று
நினைக்கத்தெய்வமொன்று-நினைத்துச்செய்ததே இன்று
இது

(௩) நிந்தைமலடனென்று ... நிகழ்த்தாமலொருமாதைத்
தந்ததெய்வம்வழியாய்த் ... ... ... தாராதே
முந்திச்செயதவினையோ ... மும்முலையுள்ளபேதை
எந்தஉலகிலுண்டு ... ... எதிரிக்கிநகைப்பிதே

இது-சசு.

விருத்தம்.

எனவுரைத்தபோதிவட்காண்பிள்ளைக்குள்ள ... *
எழிற்சடங்கெல்லாமறையின்வழியேசெய்து ... *
வினவுதடாதகையெனப்பேரிட்டுச்செம்பொன் ... *
விரைமுடிசூட்டிவள்நாதன்வரும்போதுற்ற ... *
தனமொன்றுமறையுமென்றுகாசவாக்குத் ... ... *
தற்பரன்அன்பால்ச்சாற்றப்பாண்டியன்கேட்டு ... *
மனமகிழ்ந்துமகமுடித்துமகளோடுந்தன் ... ... *
மனையுற்றுன்மிகமேன்மைதனையுற்றுனே ... ...(சுஉ)

பதம் - கவுளிபந்துராகம் - சாப்புதாளம்.

[பல்லவி,]

மலையத்துவசபாண்டியன் - கயல்க்கண்ணாள்தனைப்பற்று
மாமகிட்சிகொண்டிருந்தான்

[அநுபல்லவி.]

நிலையுற்றதென்மதுரா - புரிநல்வளங்கொழிக்க
நெடியபூமியொரு - முழமுயர்ந்து செழிக்க
மலைய

[சரணங்கள்.]

(க) கல்யாணமுரசோங்க- மங்கலமங்கையர்
கையிலாலத்தி- கொண் ... ... ... ...டெதிராக
மல்கும்சிரப்புடனே - அரசிருக்குமணி
மண்டபத்தி - லிருந்து ... ... ... ... சதிராக
நல்லமறையவர்க்குக்-கனகமழை ... சொரிந்து
நானிலத்திலெவர்க்கு-முறைமுறையேதெரிந்து
செல்வம்அருளுஞ்சுந்த- ரேசருளம்... ...பரிந்து
தினமுங்காக்கப்பணி- செய்துதவம் ... புரிந்து
மலைய

(உ) சிறைவிடும்இனிஆயத்- துறைவிடும்சிறைக்களஞ்
சீத்திடும்உலகினி ... ... ... ... லேழாண்டு

திருவவதாரஞ்செய்தது.

இறைவிடுந்திறைவிடும்-ஆலயம்அறப்புறம்
எங்குவிளக்கு - மென ... ... ... வேபூண்டு
முறையிடுவள்ளுவனால் - முரசறைந்திடத்தாக்கி
முடிமன்னர்தளைநீக்கிக் - கரிபரியுடன்போக்கி
நிறையும்பொக்கிஷந்திறந்-தெவருக்குங்கலிநீக்கி
நித்தியசோபனம் - நீங்காதமகிழ்வுண்டாக்கி
மலைய

(௩) வருமுயர்மங்களக்- கவிஞர்க்குக்கரிபரி
மாநிதிதுயில் - அணிப்பணி ... ... ... யீந்து
திருநகர்மணிவீதி எங்கெங்குஞ்சிங்காரத்
திருவிழாவிளங்கவே ... ... ... ... நேர்ந்து
பெருமையாகஅனை - வோருமகிழ்ந்து ... துள்ள
பெருநகரிதுமட்டு - மோமகிழ்ந்தது விள்ள
மருவும்அமராபதி - முதலாகமற்றும் ... உள்ள
மாநகரங்களெல்லாம் - அடங்காமகிட்சிகொள்ள
மலைய-ரும.

விருத்தம்.

இவ்வண்ணமகிழ்மலையத்துவசபாண்டியன் ... ... *
எழிற்றடாதகையெனப்பேரிட்டழைத்துச் ... *
செவ்வண்ணமகட்குச்சாதகமேயாதி ... ... ... *
செப்பும்மறைமொழிவழியேசெயவளர்ந்து ... ... *
எவ்வண்ணக்கலைகளுமாவானைபொற்றோர் ... ... *
ஏற்றம்ஆயுதவித்தையெல்லாங்கற்றுப் .... ... *
பைவண்ணப்பணிதாங்கும்உலகைத்தாங்கும் ... ... *
படிகொண்டாள்அபிஷேகமுடிகொண்டாளே (௬௩)



பதம் - மத்தியமாவதிராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி. ]

அரிசோதரிஈசு- வரிதடாதகைதேவி- அபிஷேகமுடிகொண்டாள்

[ அநுபல்லவி. ]

மருவார்பொழில்சூழ்-மதுரைப்பிர ... ... காசிக்க
மலையத்துவசபாண்டியன்- மனதுசந் ... தோஷிக்க
திருமுடிமணங்கண்டு- மந்திரிசு ... ... ... மதிமிக்க
சிறப்பெல்லாஞ்செய்துபணி-கேட்டுஅரு ..., கில்நிற்க
அரி

சரணங்கள்.

(க) ஆனைமேல்த்துந்துமி ... ... மோதி - நம்த
டாதகைக்கபிஷேகம்அறிவீரென் றோதி
மாநகர்மாமணி ... ... வீதி - எங்கும்
மங்களவோசைமுழங்கவே ... ஜோதி
மாடமண்டபமதிள்சிறந் ... திடவே - மலர்ந்தபூ
மேடைஎங்கினும்ஒளிநிறைந் திடவே - விளங்கிய
வானவெங்கதிர்வெயில்மறைந் திடவே - அலங்கிர்தம்
ஆனபந்தலின்அழகுறைந் திடவே - வீதிகளெங்கும்
வாழைகள்கமுகு ... நாட்டி
சூழவேதோரண ... மாட்டி
மாலைகளெங்கெங்கும் ... நீட்டி
கோலச்சித்திரங்கள் ... தீட்டி
மகிழுவார்மலரணிகுவார் ... சிலர்
புகழுவார்நவபணிகொள்வார் ... பலர்
மயில்கள்போலமடவியர்க ... ... ளாடவும்
நயமதாகியஇசைகள் ... ... பாடவும்

அரி

(உ) தேசாதிபரெல்லாம் ... ... இன்று - தேவி
திருமுடிபுனையும்நாள்வருகுவீ ரென்று
வாசகம்வரஎதிர் ... ... சென்று - வாங்கி
மகிழ்ந்தவர்மணிமுடிமேல்த்தரித் தன்று
மட்டில்லாரதகெஜதுரகப் படையும் - உயர்ந்துவிண்
தொட்டகேதனவகையும்உயர் குடையும் - நெருங்கவே
வச்சிரமாமணிமுடியும்அணிதொடையும் - எவர்களும்
மெச்சவேஎழில்பெறுகனக ... உடையும் - துலங்கவே
மானகர்எங்கெங்கு ... மொய்க்க
மேனகரங்கும்பிர் ... ... மிக்க
வாரும்வாருமென்று ... மெய்க்க
ஆரும்எதிர்கொண் ... டழைக்க
வரிசையாயிசைபெருகு ... ... மேளமும்
முரசுமாமுழவினோடு ... ... தாளமும்
மலியவாழ்அறநெறிகள்... ... தேறவும்
ஒலிகொள்மாமறைமொழிகள் ... ... மீறவும்

அரி

திருவவதாரஞ்செய்தது.

(ரு) செழுங்கங்கை ... முதல்அலைமோது - நவ
தீர்த்தமும்மதயானைச் சென்னியின்மீது
அழகுடன்வரமகிழ்ந் ... தோது -மறை
யவர்கும்பத்திற்பூரித் ... தார்ச்சித்தப்போது
அழல்வளர்த்தரியணையை அர்ச்சிக்கப் - பரமனைத்
தொழுதுவெற்றிகொள் அரசர்கொர்ச்சிக்கப்-புதுமையாய்
அவதரித்து·வழுதியை ... ரட்சிக்க - அருள்செய்த
கவுரியைத்தொழஎவரும்... இச்சிக்க - அருந்தவர்
அங்குரைக்கும்புகழ் ... தேற
மங்கையர்சோபனங் ... கூற
அந்தமுகிலொலி ... மாற
முந்தியசங்கொலி மீற
அமரர்மலர்மழை - பொழியமலை வில்லி
விமலிவழுதி - குலமரகத ... வல்லி
அணிபொன்னரவுயர் பணமிழல்பொருந்து
மணிஒளிகொள் அரி-அணையதி லிருந்து
அரி - ருக.

விருத்தம்.

புதுநவரத்னவன்னப்-பொன்னின்மாமகுடஞ்சூட்டி ... *
மதுவவிழ்மலர்சேர்நிம்ப - மாலையும்புயத்தில்த்தாங்கி ... *
விதுமுகமீனக்கண்ணள்-மெய்யழகெவருங்காண ... *
மதுரைமாநகரந்தன்னை-வலங்கொண்டாள்நலங்கொண்டாளே *

பதம் - பந்துவராளிராகம் - சாப்புதாளம்.

[ கண்ணிகள். ]

(க) அபிஷேகமுடிகொண்ட ... செல்வி - மது
ராபுரிநகர்வளர் ... வல்லி
சுபமாதர்சூழவே ... வந்தாள் - யாரும்
தொழுதிடத்தரிசனந் ... தந்தாள்
(உ) வரும்அவ்வெள்ளிமலை ... மேலே - எழு
வாலசூரியோதயம் ... போலே
பெருவெள்ளானைமீதில் ... ஏறினள் - அன்பு
பெருகிஇன்பமொழி ... கூறினள்

(௩) கிளர்மதிபோல்க்குடை - நிழற்ற - சந்திர
கிரணம்போல்ச்சாமரை - சுழற்ற
வளர்கேதனவகை - சூழ - மேள
வாத்யங்கண்டேமுகில் தாழ

(௪) மங்களநகர்வலம் - வந்தாள் - செம்பொன்
மாளிகைக்குள்ளே - புகுந்தாள்
செங்கோல்முறைமையுந் - தாங்கினுள் - வீர
சிம்மாசனந்தனி - லோங்கினுள்

(௫) வல்லிபொன்மாலைதன் - னேசன் - அந்த
மலையத்துவசபாண்டிய - ராசன்
கல்யாணமகள்புகழ் - கண்டான் - கரை
காணுதஆனந்தங் - கொண்டான் (௫௨)

விருத்தம்.

தநுநுதல்ப்பெண்ணரசு பெறச்சிலநாள்ச்சென்று ... *
தான்மலயத்துவசன்விண்ணு-டடைந்தான்தந்தை ... *
எனும்அவனுக்கீமவிதி யாவுஞ்செய்து ... ... *
இறைவரெல்லாம்தன்குடைக்குள் ளிறைஞ்சச்செய்து *
அநுதினமும்வீரசிம்மாசனத்திருந்து ... ... *
அன்புசெய்துமீனவள்தான்முன்புசெய்த *
மநுநெறியின்முறைவழியேசெங்கோல்செய்ய *
மனஞ்செய்தாள்ஜகபரிபாலனஞ்செய்தாளே (௫௫)

பதம் - தோடிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

ராஜமானியராஜஸ்ரீ - ராஜேசுவரிமீனுக்ஷி
ராச்சியபரிபாலனஞ் செய்தாள்

[ அநுபல்லவி. ]

தேசாதிபதிபாண்டிய - ராஜாதிபதியான
தேவிஆதராசத்தி - பூவில்மணம்போல்ப்பற்றி
ஆசையுடனேசுந்த - ரேசரிடமுவந்த
ஆதிப்பரமேசுவரிமாமனு-நீதித்துரைமாமகளாமக
ராச

[ சரணங்கள் ]

(௧) வாசலில்அனுதினம் - ஒசைமுரசெழுப்ப
வான்கதிருதிக்குமுன், ஞடி

திருவவதாரஞ்செய்தது.

பேசுங்கடிகைஐந்தி - லேசயனந்தெளிந்த
பின்திருமஞ்சனநீ ராடி
ராசமரபுக்குற்ற - ஆசாரம்தானங்கள்
நற்றெய்வபூசைகள்கொண் டாடி
நேசமுள்ளபெரியோரே - சூழச்சென்றுசுந்த
ரேசர்அடிமுடியில்ச் சூடி
நித்திலத்தணி மிகுந்து
மொய்த்தமனைக்குள்ப் புகுந்து
உத்தரசிருக்கை முந்து
சித்ரமண்டபத்தில் வந்து
நேருளஆறரி - யேறுசுமந்தெழில்
சேருயர்மாமலர் - வாசமிகுந்துபொன்
மேருவிதாமென - வாகிவிளங்கிய
வீரசிம்மாசன - மீதிலிருந்து
இனித்திடுபுத்தமிர் - தத்தைஉருச்செய்த
பொற்பதுமைக்கிணை -யுற்றமறைச்செல்வி
நிறையுமலர்வதனம் - உறைகதிர்மதியென
மறையவர்துதிசெயும் -இறையவரிருகையும்
நீட்டுதாமரை - மலருமுகையும் நிகர்
காட்டவேமக - பதிசபையிலு மிக
மேட்டிமையுடன் - உயர்தமிழ்வளர் சுக
நாட்டில்மாமது - ராபுரிதனில் மக
ராச

(௨) அலர்மகள்கலைமக - ளிருவருமனிதமின்
ஞகிநின்றுகவரி ... ... ... ...வீச
சொலும்அனிந்திதைகமலினி- யென்னுந்தெய்வப்பெண்கள்
தொழுமனிதப்பெண்ணென ... ...வாச
நிலைபெறுங்காளாஞ்சி - அடப்பஞ்சுமந்துநிற்க
நிறைந்திடும்அன்பத்தாறு ... தேச
வலியமன்னவரெல்லாம் - தேவிதன்ஆக்கினைக்குள்
வணங்கிப்பணிந்துநின்று ... ...பேச
வையம்நடுங்கவே ரெண்டு
கையுங்கட்டிக்கொண்டு துண்டு
செய்யும்வாள்பிடித்துக் கொண்டு
வெய்யகண்கொட்டாமல்த் தொண்டு

மாற்கமதாகிய ... ... சேவகர்அவர்தன்னை
நோக்கியபோதினி - லேஅடிதொழுதன்னை
வாக்குரைவாய்பொத்தி - யேயிருசெவியிலும்
தேக்கியுமேபிழைத் - தோமெனப்பணிசெய்ய
மத்திரர்ஓட்டியர் - ரெட்டியர்தொட்டியர்
மக்கர்விதப்பரர் ... ... மச்சரர்குச்சரர்
மகதரவருயரு ... ... ... குகுதரிவரமரும்
வடுகர்குடரவர் ... ... வழுவர்துழுவர்கள்ம
ருட்டியரிவரவர் - வஞ்சியர்பதிசவு
ராஷ்ட்டரிவரவர் வங்களரிறையென
நீட்டியேஒரு- கஞ்சுகிகோல்கொடு
காட்டியேயின்- றிறைஞ்சிடவேமக
ராச

(௩) நாலுமறைமுதலாம் - வடசொல்த்தமிழறிந்தோர்
நவிலறுசமயத்தோர் ... ... ... ... தோற்றும்
மேலவருடன்மந்திரி - சுமதிமுதலாயுள்ள
விற்பனர்சூழவே ... ... ... ... ... சாற்றும்
ஆலயம்அறப்புறம் - குடிகளினடத்தையை
அமைச்சரால்க்கேட்டுங்கண் ... ... ... பார்த்தும்
மேலொருதூதரால்ப் - பரிசோதித்தேயறிந்தும்
வேறொருகுன்றயின்றிக் ... ... ... ... காத்தும்
மிக்கவரோடமு ... ... ... துண்டும்
நற்கலை - புராண ... ... மண்டும்
சொற்களைச்செ - வியில்க்கொண்டும்
ஏற்பகல்ப் - பொழுது விண்டும்
மேவியஆரமு - தாயிசைபாடியு
லாவுமின்னார்நட - மாடுதல்நாடிஇ
ராவதுபோகஇவ் -வாறருள்கூடியும்
ஆவலதானபு - ராதனர்தேடிய
மெய்த்தருமத்தை - வளர்த்துமகத்தொழில்
மெத்தமுடித்து - மகுத்துவமிகுத்திரு
விழியெனஉயர்செல்வ - மொழிகல்விவளரவும்
அழகுயர்புவியினில் - எழுகலிதளரவும்
மின்னமூவரும் - முத்தொழில்செயவருள்
சன்னிதான - மகுத்துவமுளபரை

# ௬-வது-தடாதகைப்பிராட்டியார் திருவவதாரஞ்செய்தது.

கன்னியாயர - சுற்றதினுலிது
கன்னிநாடென - இப்புவிசொலமக
ராச ருங,



விருத்தம்,

இவ்விதம்கயல்க்கண்ணுள்தான் - இப்புவிஆண்டாள்என்ன ...*
அவ்வுரைமுனிவோர்கேட்டு - அகஸ்தியமுனியைநோக்கி ...*
நவ்வியங்கண்ணுள்இந்த - நரபதிமகளாய்வந்து ... ...*
இவ்வுலகாண்டமார்க்கம் - ஏதென்றுர்ஒதென்றுரே ... (௬௬)



பதம் - காம்போதிராகம் - திருபுடைதாளம்.

[பல்லவி.]

பாண்டியன்மகளாய்முடி - பூண்டுமெண்ணுலகந்தன்னை
ஆண்டதென்னசொல்லுவீரையா

[ அநுபல்லவி ]

தாண்டுபரித்தேர்உலாவித் - தூண்டுதடாதகையெனக்
காண்டிபம்பிடித்துமகிழ்ந் - தீண்டுமதுராபுரியில்
பாண்டியன்

[ சரணங்கள், ]

(க) நீண்டமாமறைமுடியுந் - தீண்டவரிதானஅகி
லாண்டபலகோடிபிர்ம் - மாண்டநாயகி
வேண்டும்அடியார்மனத்தில்த்- தாண்டவம்புரிந்துரட்சித்
தாண்டுசராசரமெல்லாம் - ஈன்றதாயானவள்இந்தப்
பாண்டியன்

(உ) தக்கன்மகளாய்அவன்பின் - முக்கண்ணர்தமைஇகழ்ந்த
துக்கமதினுலேஅவ - னுக்குமகளென்றி
ருக்கலாகாதென்றுடலை - அக்கினிக்கிட்டேஇமவா
னுக்குமகளாகிஅரன் - பக்கலிலிருந்தசெல்வி
பாண்டியன்

(௩) வானவரினுமிகுந்த - மோனமுனிவோர்களினும்
மீனவன்உயர்ந்ததவந் - தானென்னசெய்தான்
ஈனவுடலெடுக்கும்அக் - ஞானவிருள்கெடுக்குமெஞ்
ஞானரவியானதொரு - மீனவள்இம்மானிடனும்
பாண்டியன். ருச

விருத்தம்.

இருடியரிவைகேட்க்கும்போ தெழில்க்கும்பமுனிவன்நாடி ... *
வருமலயத்துவசன்தன் மனைவிபொன்மாலையென்பாள் ... *
உருகிஉள்ளன்பாய் முன்செய் உயர்தவப்பயனால்த்தேவி ... *
மருவியமகளாய்வந்த வாறெல்லாம் கூறுவாரே ... ...(௬எ)

பதம்-கலியாணிராகம்- ஆதிதாளம்.

[பல்லவி.]

கேளும் முனிவர்களே எந்த

[அநுபல்லவி.]

நாளும் மதுராபுரியை - ஆளும்மீனவள் வந்ததைக்
கேளும்.

[சரணங்கள்.]

(க) ஆதியில்விச்வாவசுவென் - றோதுமொருவிஞ்சயன்தன்
காதல்மகளானவிச் - சாபதியென்பாள்
நீதியுமையாள்தன்னிரு - பாதம்மறவாமல்நிதம்
மாதவஞ்செய்திடவேதன் - தாதையிடமோதிநின்றாள்
கேளும்

(உ) தந்தையிதுகேட்டுள்ள - மகிழ்ந்துசத்திமந்திரமும்
இந்தமதுரைப்புதுமை - யுந்தானுரைத்து
சிந்தையுவந்தேயனுப்ப - வந்துபொற்றாமரை மூழ்கிச்
சுந்தரேசரிடத்தில்உ - றைந்தவள்பதந்தொழுதாள்
கேளும்

(ந) ஆமகரமாமதிதொட் - டேமுறையிலுண்டுக்கி
நேமமுடன் ஓர்வருடஞ் - சோமவதனாள்
பூமிபுகழ்நேமிசிவ - காமிஉயர்வாமதுரை
ஏமமலைமாமகள்முன் - னேமகிழ்தவம்புரிந்தாள்
கேளும். ருரு.

—◇❋✱❋◇—

விருத்தம்.

மகரமதிமுதலா யிவ்வாறுதவம்புரிந்து ... ... *
மறுமகரமதியினி லோர்நாளிலிந்தமங்கை... ... *
புகல்மதுரை யுமையவள்முன்சென்று பணிந்தெழுந்து *
போற்றியுமைவடிவை யுட்கொண்டேயா டெய்வத்தை*
அகமகிழ்ந்துதுதித்துக் கைகுவித்துச்செம்பொன்வீ ... *
ணையையெடுத்துஉறைவிடுத்து அணிமுல்லைமாலை ... *

# ௲-வது-தடாதகைப் பிராட்டியார் திருவவதாரஞ்செய்தது.

மிகவிளங்கப்பிடரியொடு சேர்த்துத்தந்திகளை ... *
மீட்டிவிரலோட்டி இசைகாட்டினள்பாட்டினளே ... *

பதம்- பியாகடைராகம் - ஆதிதாளம்.

[பல்லவி,]

மதுராபுரிநாயகி - வரதாயகி

[அநுபல்லவி,]

துதிமாதவருறைசெயும்நேமி - சோதிசுந்தரேசுவரர்வாமி

மதுரா

[சரணங்கள்,]

(க) உயிர்யாவையும்அருளிமீ-னெனக்கண்பார்த்தென்று -மின்பம்
உதவும்கயல்விழி-மலைமகளென இன்று
மயில்பூவைகள்கிளிகள் ... தனைவளர்த்து
மகிழ்வாய்விளையாடுவதென் ... மற்று
மயிலே - குயிலே - அயிலோர்விழி - மதியே - நிதியே-கதியேதரு

மதுரா

(உ) அண்டங்களை வெண்மணலென - அள்ளி நீயே - சிற்
றன்னமாகக்கொண்டேவிளை - யாடியதாயே
விண்டங்கிய - இமயமலை யருவி
வெண்மாமணியால்மகிழவுமருவி
மிகவேசகிமாருடனாடிய - விதமே-நிதமே-பதமேதரு

மதுரா

(௩) மணிமாமறைமண - முடிமலரினில்த்தானே - மனம்
மகிழாநந்தவடி - வெனவேநிறை தேனே
அணிமேனியி - னிருபுயமிரு தனம்
அதிலாடிமெல் - லடிசிவந்ததுவென
அருவே- உருவே -திருவேஅருள்- அனமே-தினமே- கனமேதரு

மதுரா, ருசு.



சந்தவிருத்தம்.

இசையிதுசெயமிக அருள்வைத்துமையவள் ... *
எழில்மிகவொழுகிய மழலைத்திருவய ... *
தினிலொருகனியெனவெதிருற்றிடஇசை-மின்னாளும் *
இருசரணதுதொழுதினிமைத்துதிசெய ... *
வெனவரமதினைவுளதனதிச்சைசொலென ... *
எனதுளமனுதினமுனைவைத்திடஅரு ளென்றுமுன் *

நசையுளவரமினம்அருளப்புகலென ... ... ... *
உனதெழிலுளவடிவுடனிப்படிவரு ... ... ... *
நடமிடுமிளமயிலெனவற்புதமுற ... ... அன்னேநீ *
நலமுடனென திடமருவிக்கருணைசெய் ... ... ... *
யிதுபெருவரமருளுவையிப்பொழுதென ... ... ... *
நவில்மலைமகளடிதொழுதக்கனிமொழி ... மின்னேத *
திசைபுகழ்மறுமையில்மலயத்துவசனன் ... ... ... *
மனைவியெனவும்வருகுவையப்பொழிதொளிர் ... *
சிறுமகளெனவருகுவனிச்சயமென ... ... அன்னேரம்*
திடவுரையிதுபெறுமுயர்விச்சயன்மகள்... ... ... *
கௌரிதன்மொழிவழிஜனனித்தடவொடு ... ... ... *
திகழும்அவ்வழுதியைமணமுற்றனள்அவள்பொன்மாலை*
மிசையுறுதவவடிவெனவுற்றருமறை ... ... ... ... *
முடியினில்நடமிடுகமலத்திருவடி ... ... ... ... *
விமலியமலிவளர்மதுரைக்கயல்விழி ... பெண்ணுனள் *
விஜயவழுதிதனதருமைத்திருமகள் ... ... ... *
எனஉரைகொடுசெல்விமுடிபெற்றரசுசெய் ... ... *
விதமிதுவெனவுயர்பொதிகைக்குறுமுனிசொன்னரே (சுகூ)



விருத்தம்.

கருணைசேர்திருத்தடாத - கைபிறந்திட்டவாறீ ... ... *
தொருமையாய்க்கேட்போர்மாயை-யுறுபிறப்பொழிந்துவாழ்வார்
பொருதடாதகையையீசர் - புதுமணஞ்செய்தவைந்தாங் ... *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடஉரைசெய்வேனே (எ௰)



தடாதகைப்பிராட்டியார் - திருவவதாரத்திருவிளையாடல்
முற்றிற்று.



ஆ திருவிருத்தம் ௰ச-பதம்-௰உ-ஆ உசு.

ஆ பாயிரம் உள்ப்படத் திருவிளையாடல் ச-க்கு - வெண்பா-க-
விருத்தம்-சுகூ, பதம்-ருசு.

ஆ கவிதை -ஈஉசு.



ஐந்தாவது.

## திருமணஞ்செய்த திருவிளையாடல்.

விருத்தம்.

திருத்தடாதகைப்பிராட்டிதிருஅவதாரஞ்செய்து ... ... *
இருட்கலியகற்றிப்பானுவெனப்புவியதனையாண்டு ... ... *
மருத்தழைமுலைபருத்துமணஞ்செய்யும்பருவங்கொண்டாள் ... *
தரித்தபேரழகுகண்டுதாயிதுகூறுவாளே ... ... ... (௧௧)

பதம் - யதுகுலகாம்போதிராகம்- ஆதிதாளம்.

[ பல்லவி. ]

என்னயோசனைஅடிமானே - உனக் - கிசைந்தவரனைக்காணேனே

[ அநுபல்லவி ]

சின்னஞ்சிறியதான ... கன்னிப்பருவஞ்சென்று
வன்னமதாகியஎவ்-வன்ன ... மயிலேஇன்று

என்ன

[ சரணங்கள். ]

(௧) நிதியேநீயரசாளும் - நேத்திபாராமல்க் ... கால
கதியாலிறந்தமன்னன் - கவலையையுன் ... பால
மதிமுகங்கண்டாறினேன்- மகளேஉன்மணக் ... கோல
மதுவென்கண்ணுள்ளபோதல்லோ-காணவேணும்...மேலா

என்ன

(௨) முத்தேமகளென்றுன்னை - மொழியப்பத்தெட் ... டென்று
பெற்றேனுபட்டணத்துப் - பிச்சையல்லோநீ ...யொன்று
பத்தாய்க்காலாகாலத்தில்ப்-பனுகிப்பூத்துக்காய்த் தென்று
மெத்தவிளங்கவேணு - மேயதல்லவோ ... நன்று

என்ன

(௩) வரைக்குயிலுனக்கேற்ற - மணவாளனு ... ... ருற்ற
தரைக்குளில்லையேஉன்னைத்-தரும்நாள்விண்ணி... லுரைத்த
உரைப்படிநடக்குமென் - னுயிரேகண்ணே... ... கற்ற
துரைச்சிமுயற்சிசெய்து - சுபசீக்கிரமாய் ... நடத்த

என்ன. ருள.

விருத்தம்.

தாயீ தன்பொடு - சாற்றிடக்கன்னிகை ... ... *
யாயிருந்தகி - லாண்டமெல்லாந்தரு ... ... *
வேயினம்புய - மெல்லிரறுங்கனி ... ... ... *
வாயினம்புய - வல்லியுஞ்சொல்வளே ... (எஉ)

பதம் - மோகனராகம் - ஆதிதாளம்.

பல்லவி.

அன்னையேஇருபதருதே - பதருதகாரியம்சிதருதே

அநுபல்லவி.

என்னகவலையுனக் - கேனிதுவரும் ... வேளை
தன்னில்நிற்குமாளல்லாந் - தானேகாணுவாய் ... நாளை
அன்னை

சரணங்கள்.

(க) இவருக்கிவள்பாரி - என்றேவேதன் ... முன்னாலே
தவருமல்பொறித்தது - தவறுமோமண் ... மேலே
நவில்கடலுப்புமலை - நாரத்தங்காயும் ... போலே
புவனத்தில்ச்சிவன்செயல் - பொருத்திவைக்குந் தன்னாலே
அன்னை

(உ) ஏற்றவரனுங்காணேம் - ஈசர்விண்ணி ... லன்று
சாற்றுமொழியுந் - தவருதேஅதற் ... கின்று
ஆத்திரப்பட்டுநம்மால் - ஆவதென்ன ... நவின்று
பாத்திரம்நேரும்போது - பார்த்துக்கொள்ளுவோம் நன்று
அன்னை

(ங) இக்குவலயமன்னர் - எதிரில்லைஎனக் ... கெங்கே
மிக்கவனிருப்பானோ - வென்பதுண்டொரு ... சங்கை
திக்கெட்டுங்கொடிநாட்டிச் - ஜெயங்கொண்டுசென் றங்கே
பக்கத்திலெங்கெங்கும் - பார்த்துவருவேன் ... இங்கே
அன்னை - ருஅ

---

விருத்தம்

கவலைசேர்தாயைத்தேற்றிக் - கடவுளர்முனிவர்க்கெல்லாந் *
தவவடிவாகிமேன்மை - தருந்தடாதகைப்பிராட்டி ... *
அவனியில்அரசர்யாரும் - அமைச்சரும்படையுஞ்சூழ ... *
நவமிகுதிசையைவெல்ல - நடந்திட்டாள்அடர்ந்திட்டாளே (எங)

பதம் - நாதநாமக்கிரியைராகம் - சாப்புதாளம்.

பல்லவி.

மீனவள்எழுந்தாள் - எழுந்துதிக்கு - விஜயஞ்செய்துவந்தாள்

அநுபல்லவி.

ஆனதேசம்ஜம்பத் - தாறுந்தன் ... ... தாமரை
அடிக்குள்ப்பணியச்செங்கோல் - பிடிக்குந்துரை மதுரை
மீனவள்

சரணங்கள்.

(௧) கன்னிநினவறிந்து - மன்னர்மந்திரிமாருந்
துன்னும்படையுடனே - மின்னுமுகிலிடியீ
தென்னுமுரசுதாரை - சின்னந்தாளமெக்காளம்
இன்னம்பலமேளங்கள் - உன்னுந்திசைஅதிரப்
பண்ணும்பெருங்கை வாளும் - அம்பறுத்தூணி
நண்ணுமழகுத் தோளும் - சதங்கைகலீ
ரென்னும்கனகத் தாளும் - துலங்கிடவே
முன்னின்றுமிக நாளும் - பிரிந்திடாத
அன்னமெய்யாநடை - கன்னியர்படைசூழ
மன்னுங்கவரிவீச விண்ணின்மதியெனவே
பொன்னின்குடைபிடிக்க - முன்னுயர்கொடிசூழச்
சென்னிமகுடமின்னச் - சொன்னரதத்திலன்ன
மீனவள்

(௨) அண்டையில்நின்றுநோக்கம் - கண்டுசேவகஞ்செய்துக்
கொண்டுசுமதிவரச்- சண்டவாயுவெனவே
அண்டமும்புவிரவ - கண்டமும்பெருங்கால
தண்டமும்புவனம - கண்டமும்நடுங்கத்தி
ரண்டுவடபால் நாடி - வடதேசத்து
மண்டலீகரைச் சாடி - கீழ்த்திசையில்ப்போய்ச்
சண்டைசெய்யு முன்னுடி - கிட்டவந்திந்திரன்
அண்டப்பயங்கொண்டோடி - ஒளிக்கஅவ்ன்
பண்டுபெறுநிதியுத் - தண்டவெள்ளானையொடு
மண்டுதருவுங்கோவும் - அண்டமின்னார்களுடன்
கண்டதெல்லாங்கவர்ந்து - கொண்டப்படியேமற்றும்
உண்டானபாலரும்வி - ரண்டோடவேஜெயித்து
மீனவள்.

(௩) ஈசரிருங்கையி - லாசந்தனைவளைக்க
வேசிவகணங்கள்வந் - தோசைக்கடல்போலமொய்க்க
வீசும்படைவிடவே - ஆசையுடனேமகிழ்ந்
தீசரைத்தொழுவந்த - கேசவன்முதலானோர்

பூசல்கண்டோடிஒளிக்க - வாகனம்இழந்
தேசிலபேர் தத்தளிக்க - வெளிவராம
லேசிலருள்ளே சுளிக்க - இடுக்கெலிபோ
லேசிலர்நின்று முழிக்க - இரண்டுவகை
மாசேனைகளும்வெகு - ரோசமுடனேகைகள்
கூசாமல்மாறிமாறி - வாசாமகோசரமாய்
தீசொரிச்சரமாரியா - காசங்கொள்ளாமல்விட்டுப்
போர்செய்திடவேவீரா - வேசமுடன்வில்த்தொட்டு

மீனவள்

(ச) வேதண்டமெனும்பெருங் - கோதண்டம்வளைத்தன்னை
காதண்டஇழுத்தண்ட - மூதண்டம்பிளக்கவெகு-
ரோதமுடன்அம்பெய்ய - நாதனஞ்சேனைகள்கையில்
ஏதும்படைகளற்ற - போதுங்கல்க்களைவாரி
மோதுமுன்அதைத் தடுத்து - வச்சிராயுதத்தா
லேதுண்டம்படத்தொடுத்து - தெண்டாயுதத்தால்
சேதம்படவே மடுத்து - சின்னபின்னமாய்
வாதும்பிலமுங் கெடுத்து - துரத்தவெகு
மாதர்நகைக்கஓடி - ஓதுங்கணங்கள்வாடி
வேதனையுடனந்தி - பாதந்தனில்விழவே
மாதங்கிசெய்தசண்டை - ஏதென்றுசொல்வோம்அகண்ட
பூதலமெல்லாம் தந்த - மாதாவாகியஇந்த

மீனவள், ருகூ.

---

விருத்தம்,

திக்குவிஜயஞ்செய் துநந்திகேசன் ... ... *
சேனையையுந் துரத்திவென்றசெய்திஎல்லாம் *
அக்கணியார்தமக்குநந்திகூறக்கேட்டு ... *
அன்பொடுபுன்-னகைசெய்தெழுந்-திடபமூர்ந்து *
மெய்க்குமுயர்போர்க்களத்தில்வந்துநின்று ... *
வீரசத்திதனைக்கண்டார்மிகுந்தகோலங் ... *
தக்குமணிமீனலோசனியும்ஆவி ... ... *
தனைக்கண்டாலென்னமணாளரைக்கண்டாளே (எச)

பதம் - தேவகாந்தாரிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி,]

கண்டாளேதடாதகை-மனமகிழ்ந்து-கொண்டாளேதடாதகை

[அநுபல்லவி,]

பண்டாரணனுமாலும் - அறியாத ஜோதியை
பருவமானவள்தான் - மருவும்ஓர்பாதியை
கண்டாளே

[சரணங்கள்.]

(க) பொற்கழலிலங்கிய ... பதமும் - முப்
புரிநூலணிமார்பும்அருளும்அற்புதமும்
சர்ப்பாபரணபால - சந்திரகிரணகோலச்
சடையுந்தோ- ளுடையுங்கச்- சிடையும்நல்-விடையும்ஆய்
கண்டாளே

(உ) நிறைகறைஉறைந்தகந் ... தரமும் - தன்னை
நீங்காதபார்வையின் பாங்கும்சுந்தரமும்
திறவெண்ணீறணிமெய்யும்-சிறந்தமான்மழுக்கையும்
தீர-உதார-கெம்-பீரமும்-வீரமும்
கண்டாளே

(ங) குன்றுமுலையில்ஒன்று ... ... மறைய-மனங்
கொள்ளாமலேநாணமடம்அச்சம் நிறைய
நின்றுதலைகுனிந்து - நிலங்கீறிஉள்க்கனிந்து
நீதரை-வேதவி-நோதரை-நாதரை
கண்டாளே

(ச) மேவுமந்திரிசுமதி ... போற்றி - அன்று
விண்ணில்ப்பிறந்தமொழி தன்னையேசாற்றி
தேவிஇவருனது - தேவரென்றேமனது
தேறவே கூறமால் - மீறஅன்பூறவே
கண்டாளே.கூய

———(:)*(:)———

விருத்தம்.

கண்டுமந்திரிசுமதிசொல்லால்மிகவும்உள்ளங் ... *
கனிந்துநின்றகாலைஇறையவரும்நாடி ... ... *
ஒண்டொடியேநாம்நாளைச்சோமவாரத் ... *
துனைமணஞ்செய்திடவருவோம்ஊர்க்கேகென்றார் *
அண்டர்பிரான்அருள்கொண்டுமதுரைசார்ந்தாள் ... *
அங்கயல்க்கண்ணயகிகல்யாணம்யாரும் ... *

கண்டிடச்செய்துயர்மதுராபுரிதனைச்சிங் ... ... *
காரித்தார்மிகமனதுபூரித்தாரே ... ... எரு



பதம் - மோகனராகம் - அடதாளசாப்பு.

[ கண்ணிகள். ]

(க) மங்களபேரிகை - எங்குமுழங்கவ
லங்கிர்தயானைமேல் ... ... அடித்தார்-வெள்ளி
மாமலைநாயகர் - தாமருள்செய்ததை
யேமகிழ்வாகவே ... ... படித்தார்
சிங்காரமாகவே - துங்கநகர்தனை
எங்கெங்குமேயலங் ... ... கரிப்பார்-பெண்கள்
சேலையுங்கூந்தலில் - மாலையுங்காதில்ப்பொன்
ஞோலையுஞ்சீர்பெறத் ... ... தரிப்பார்

(உ) நன்றுள்ளமீனவள் - மன்றல்புரியும்நா
ளென்றென்னவேசிலர் ... ... விள்ளுவார். அடி
நங்கையரேநாளைத் - திங்கள்க்கிழமையில்
மங்களமாமென்று ... ... துள்ளுவார்
இன்றுதொட்டாறுநாள்ச் - சென்றுவருந்திங்க
ளென்றுவிரலெண்ணி ... ... நாடுவார்-தொகை
ஏறியநாளாறும் - ஆறுயுகமாக
மீறுமேஎன்றுரை ... ... யாடுவார்

(௩) அடுத்திதுகாண - இடத்தோளெனக்குத்
துடித்துதடியேயென் ... ... றிடுவார்-தே
வாலயமோடயர்- சோலையும்பூங்கிழல்ச்
சாலையுமேசெப்ப ... ... மிடுவார்
தொடுத்தமலரும் - எடுத்தணிகந்தப்
பொடித்திரள்க்குப்பையும் ... ... கூட்டுவார்-அந்தத்
தூசிஅடங்கவே - வீசும்பன்னீர்கொண்டு
வாசலெங்குமுழுக் ... ... காட்டுவார்

(ச) வஸ்திரமும்பல - சித்திரமும்உயர்
சத்திரமும்ஒளி ... ... விரிப்பார்-மத
வாரணமும்சில - பூரணகும்பமுந்
தோரணமும்அலங் ... ... கரிப்பார்
நத்துமத்தாணியு - முத்தமுங்கேணியும்

ரத்னத்திட்டாணியும் ... ...அமைப்பார்-நா
ளுவண்ணமாகிய - காவணமும்பல
ஆவணமுமிகச் ... ... சமைப்பார்

(ரு) மீறுங்கமுகுகள்- தேறுங்கரும்பொடு
தாறுள்ளவாழையும் ... ... நாட்டுவார்-வெகு
வேடிக்கையாகிய - சோடிப்புயர்ந்தகண்
ணுடிப்படங்களு ... ... மாட்டுவார்
ஆறுங்குளங்களும் - ஊரெங்குஞ்சந்தனச்
சேறுஞ்சகதியு ... ... ... மாக்குவார்-மகிழ்ந்
தாரும்புகழ்மக - மேருவெனும்நிலைத்
தேருந்தெருவெங்கு ... ... நோக்குவார்

(சு) ஆணிப்பொன்னல்செய்த- சேணுற்றமாடத்தில்
மாணிக்கத்தீபங்கள் ... ... ஏற்றுவார்-எங்கும்
ஆலத்திசுற்றிமின் - போலுற்றமாதர்கள்
மேலுற்றபூமலர் ... ... தூற்றுவார்
தூணுக்குத்தூண்ஒரு - சாணுக்குச்சாண்மலர்
தோணத்தொடுத்தெங்கு ... ... நிறைப்பார்-நெடுஞ்
சுற்றுள்ளமாநகர் - முற்றுமிராப்பகல்
சற்றுந்தெரியாமல் ... ... மறைப்பார்

(எ) பாலிகையும்மலர் -மாலிகையும்நல்ல
பீலிகையும்பல ... ... நிரைப்பார்-உயர்
பண்ணவருமிந்த - மண்ணவருமந்த
விண்ணவருந்துதித் ... ... துரைப்பார்
சாலமகிழ்ந்தபொன்- மாலையிடந்தனில்
ஞாலமகிழ்ந்திட ... ... ஓடுவார்-உந்
தவமாமகட்குச் - சுபமாம்எனவே
நவமானமாதர்கொண் ... டாடுவார்

(அ) மைந்தருமாதருஞ் - சுந்தரமாமணி
யுந்துகிலுந்தரித் ... ... துறைவார்-அஷ்ட
மங்கலமுங்கொண்டு - சங்கீதமேளமு
ழங்கஎதிர்வந்து ... ... நிறைவார்
அந்தமதான - ரதந்துரகங்கரி
முந்துசிவிகையும் ... ... ஊர்வார்-ரா
சாதிபரும்வேத - வேதியரும்பல
சாதியரும்களி ... ... கூர்வார் (சுக)

விருத்தம்.

இப்படிமாநகரம்அலங்கரித்தார்அந்த ... ... *
இணையில்லாயிறையும்உமையவளுந்தானே ... *
மெய்ப்படிவமணவிளையாட்டுற்றிருக்க ... ... *
விரும்புமிந்தமாநகர்கொள்கோலந்தன்னைச் ... *
செப்பவெளிதோதடாதகையாட்கன்பு ... *
சேரும்அயில்வேந்தரெல்லாஞ்சிறப்பதாக *
ஒப்பருங்கல்யாணமண்டபஞ்சோடித்து ... *
உலாவினர்மகிழ்வொடுகுலாவினரே (எசு)

——————()*()*()——————

பதம்-கேதாரகௌளராகம்- ஆதிதாளம்.

[பல்லவி]

சிறப்பதாகக்-கல்யாணமண்டபஞ் -சிங்காரஞ்செய்தார்

[அநுபல்லவி.]

நிறக்கும்உயர்தடா - தகைமனமகிழ்ந்துய்ய
நேசமிகுந்துசுந்த - ரேசுவரர்மணஞ்செய்ய
சிறப்

[சரணங்கள்]

(க) எண்டிசைநடுங்கவே - இந்திரனைவென்றுபெற்ற
இந்திரவிமானத்தைப் ... போலும்
மண்டலம்புகழவே - தன்னிறையானஇம
வான்மகள்தன்னையெக் ... காலும்
கண்டுபணியநிற்குந் - தெய்வமலைக ளொத்து
கனகமயரதங்கள் - சூழஒளி ... மிகுத்து
வெண்டிறக்கயங்கள்சேர் - சொற்னப்படிக ளூற்று
விளங்கும்யாளிகள்சுமந்-திலங்கும்குறட்மைத்து
சிறப்

(உ) மரகதச்சாளரம் - இடையிடையிலங்கவே.
வயங்கும்படிகச்சுவ ... ரேற்றி
நிரைநிரையாய்ப்பல - பவளக்கால்நிறுத்தி
நீலமணிப்போதிகை ... சாற்றி
இரவியெனமாணிக்க - உத்திரங்கள் ... பரப்பி
இலங்கும்வச்சிரத்தட் - டோடுகளை நிரப்பி
மருவுங்கயிலைமலை - இதுதானெனவே செப்பி
மண்ணும்விண்ணுமகிழ - மாடவெண்ணில வப்பி
சிறப்

(௫) பொருந்துநவமணியால் - இலைகாய்செழுங்கனி
பூங்குறைவாழையும் ... ... பூகமும்
நிரைந்துசூழும்உத்தி - யானவனமும்யாக
நேமமண்டபஅ ... ... னேகமும்
திருந்துபொற்பாவைகள் - மாணிக்கவிளக் கேந்த
சேகரமாய்அஷ்ட - மங்கலவகை சூழ்ந்த
பருந்தகைக்கோயில்முன் - காவணங்களு நேர்ந்த
பாலிகைதெளித்துயர்- கோலச்சித்திரஞ்சேர்ந்த
சிறப்

(௬) அடவுடன்அயன்முதல்த் - தேவர்க்கும்அரன்இனத்
தவர்க்கும்ஆசனங்கள் ... அமத்தியே
நடுவிலொருசிங்கத்தின் - பிடரியில்நவரத்ன
நகைவிமானஞ்செய்து ... சுமத்தியே
படரும்விமானத்துள் - அரன்உமையோ ... டுற
பகருமறைமுதலாங் - கலைகளெலாந் திற
முடன்உகந்தமைந்தது - போல்விளங்குமின் னிற
ஊஞ்சலும்பீடமும் - உலகமகிழ்வு ...பெற
சிறப்-சுஉ.

---

விருத்தம்.

திருமணமண்டபமிவ்வாறமைத்துயார்க்குந் *
தேனுவும்ஐந்தருவும்ஊண்அணிகள்நல்கக் ... *
கருதிவைத்தார்விண்ணமராபதியுநாணக் ... *
காசினிமன்னவருமற்றியாவரும்வந்துற்றார் ... *
அருளும்வெள்ளிமலையினில்மால்முதலாந்தேவர்... *
அனைவர்களும்வந்துதொழஅருள்புரிந்து ... *
வருமணக்கோலங்கொண்டார்மதுரைமூதூர் ... *
வாசராகியசுந்தரேசர்தானே ... (எஎ)

பதம்-அசாவேரிராகம்-ஆதிதாளம்

[ பல்லவி. ]

சுந்தரேசர்கொண்ட கோலம் - தன்னை
சொல்லவெளிதோஅவர் சீலம்

[அநுபல்லவி.]

அந்தஇருவர்க்குமெட்டாதமெய்யைத்தொட் டுய்ய
அளகேசன்அழகேசர் - அழகுக்கழகு செய்ய
சுந்த

[சரணங்கள்.]

(க) மருங்கினில்வரிந்திட்ட - வரிப்புலியுரிதனை
மாற்றித்துகில் ... ... சாற்றி
மதியுநதியுஞ்சேர்ந்து - பதியும்அவிர்சடையை
மறைத்துமலர் ... ... நிறைத்து
பொருந்தாமையோடென்பணி- மார்பில்வெண்பொடித்தூசி
போக்கிவாச ... ... மாக்கி
புனையுமிர்கமதமுஞ் - சந்தனம்பன்னீர்கொண்டு
பூசிக்கதிர் ... ... வீசி
வருமலையருவிபோல் - நூலும்சடையின் ...வேலை
மதியமுதொழுகுவ - தெனவெண்டரள மாலை
பெருகஅதனிடைபாற் - கடல்நடுவில்ப் பிறந்த
பெருஞ்சுடரெனவேசெம் - மணியணிந்துசிறந்த

சுந்த

(உ) புதுமைபெருகுங்கறைக் - கண்டத்தில்க்கண்டிகை
பூண்டுதிசை ... ... தாண்டு
புயங்களில்க்கனகத்தா - லுயர்ந்தபட்டிகைதனைப்
பூட்டிவளை ... ... மாட்டி
துதிசெஞ்சுடரிரண்டு - நுழைந்துற்றதெனமணிச்
சோதியணிக் ... ... காதில்
சுருண்டதோடுபொற் - குண்டலம்ஒளிசெய்யவே
தூக்கியிருள் ... ... நீக்கி
அதிவிதமாகிய ... ஆபரணங்கள்தொட்டு
அம்பொன்மணிக்கரத்தில் - செம்பொற்கடையமிட்டு
கதிபெறுந்தொண்டரெல்லாங்-கண்டுமகிழ்ந்து போற்ற
கைவிரல்தனக்குரத்னப் -பவித்ரமோதிரஞ் சேர்த்த

சுந்த

(ங) நிறைமலர்முகமின்ன - நுதலில்த்திரிபுண்டர
நீறும்சந்தனக் ... ... கீறும்
நேற்றியுடனிலங்கச் -சாத்திவிரிகிரணம்
நீடிப்பல ... ... கோடி
மறைவண்டெனமுழங்கும் - பதத்தில்வீரகண்டா
மணியும்இசை ... ... அணியும்
வடிவுளநவரத்ன - நூபுரமுமிலங்க
வனைந்துஎழில் ... ... புனைந்து

கறைநிறமாகிய ... மதகரியுரிநீத்து
கனகூத்தரியந் - தனைப்புயங்களில்ப் போர்த்து
சிறைவண்டுநறையுண்டு - களிக்குங் கற்பகத்தாலே
சிங்காரமாலைதாங்கிச் - சிறப்புடனே மென்மேலே
சுந்த - சுூ.

---

விருத்தம்.

பணக்கோல அரவணையான் முதலாயுள்ள ... *
பல்லுயிர்கட்கெல்லா மங்கலங் கொடுக்கும் ... *
குணக்கோலந் தமக்கும் மங்கலங்கொள்சங்கை ... *
கொண்டுவெள்ளியிடபமேல்க் கொண்டுதேவர் ... *
கணக்கோலக் கற்பகப்பூ மழைகள்தூற்றக் ... *
கயிலைமலைவிட்டெழுந்து கருணைகொண்டு ... *
மணக்கோலமுடன்மதுரா புரியைநோக்கி ... *
வழிகொண்டார்துதிக்குமறைமொழிகொண்டாரே (எஅ)

பதம்-தோடிராகம் - ஆதிதாளம்,

[ பல்லவி. ]

இடபவாகனமேறி - அழகுடன்சோமசுந்த
ரேசரெழுந்தருளினர்

[ அநுபல்லவி. ]

தடமுள்ளவடகயி லாஸகிரியைநீக்கி
தட்சணகயிலாச - மாமதுரையைநோக்கி
இடப

[ சரணங்கள் ]

(க) அந்தரதுந்துமிமுழங்க - இயக்கரும்வல்
லரக்கரும்பூதரு-மங்களம் ... ... கூற-மிக்க
கந்திருவர்படிக்க - அரம்பையர்நடித்திடக்
கனத்தசங்கத்துவனிகள் ... ... மீற
வந்தனைசெய்துவாணன் - மணிமுழவடித்திட
மாதவர் - துதிசெய்து ... ... தேற
இந்திரன்ஒருபுறங் - காளாஞ்சிபிடிக்க
ஈசன்அடப்பங்கட்டி - அன் ... ... பூற- அங்கு
வந்துமருத்துக்கோன் ... ஆலவட்டமாட்ட
வாசப்புகைஅக்கினி - தேவன்எங்குமூட்ட
முந்துவருணன்மரு ... மலர்த்தட்டுத்தாங்க
முன்னின்றுநிருதிகண் - ணாடிகாட்டியோங்க

முதிர்குபேரன்பரிந்தே - முகிலென
நிதியின்மாரிசொரிந்தே - வரமகிழ்ந்
ததிகமானஅன்பர் - துதிசெய்தேநிரம்ப
முதல்வரானஆதி - பரன்அனாதி- மறைசொல்நீதி-தற்ஜோதி
இடப

(உ) கண்டபேர்நடுங்கத் - தண்டுகொண்டியமன்
கஞ்சுகினனநின்று ... ... தாழ - சுற்றி
எண்டிசாமுகமும் - இட்டதீவெட்டிபோல
எழுந்துமணிநாகங்கள் ... சூழ
அண்டர்நாயகர்தந் - திருவடிதனைச்சுமந்
தருமறைகள்முன்னின்று ... வாழ
மண்டுகங்கைகாவேரி - முதலாம்நதிமங்கை
மார்களெல்லாம் ... ... ஆழக் - கடல்
வெண்டிரைநிகரெனச் - சாமரைகள் ... சுழற்ற
விளங்குங்குண்டோதரன்-இலங்குங்குடை நிழற்றக்
கொண்டகேதனங்கள் - கூட்டமுடன் ... இலங்கக்
கொடிக்கெல்லாம்உயர்ந்த-விடைக்கொடியுந் துலங்கக்
கொடியபடைகள்மொய்க்கவே - அருகில்அதின்
நடுவில்எவரு மெய்க்கவே - முச்சுடரென்ன
நெடியசூலங்கொண்டு - கடியகணங்கள்பண்டு
அடிபரவியேபோற்றி - வரமும்மூர்த்தி - களும்நின்றேற்றி
இடப [இடத்தோற்றி

(ங) பந்தநான்மறையின் - பொருள்த்திரட்டெனவட
பாடல்செய் - தருவினை ... ... போக்கும் - புட்ப
தந்தன்ஏற்றிவர - வானவருயிருய்யத்
தழல்விடமடங்கவே ... ... நீக்கும்
அந்தம்ஆதிஇல் - லான்நிழல்வடிவமாய்
அமர்ந்தசுந்தரன்அன்பு ... ...தேக்கும்
இந்துநிறவெண்ணீறுந் - திருமாலையும்எடுத்
தேந்திவரமகிழ்ந்து ... ... நோக்கும் - படி
அந்தமாலபன்கை - குவித்துவர மருங்கில்
அழகுவெள்ளிமலை - மதுரைஎன நெருங்கிச்
சந்திரசேகரரிதோ - வந்தார்வந்தா ... ரென்னத்
தைபல்செவிகுளிரச் - செய்யும்வகைபோல்ச்சின்னங்

தாரைமுரசொலி மிஞ்ச - மன்னருமந்திரி
மாரும்எதிர்கொண்டிறைஞ்ச - மிகுதியான
ஆரபாரங்கொள்ளச் - சேரும்அன்பர்கள்துள்ளப்
பாரிலெவருங்காண - முச்சுடர்நாண-வடிவுதோணக்-கல்யாண
இடப.கூச.

விருத்தம்.

அருமறையோன்அரிஇந்திரன்முனிவர்தேவர் ... *
அனைவருஞ்சூழ்ந்திடக்கயல்க்கண்ணுள்க்குரித்தாய் *
வரும்அரசர்சுமதிமுதல்மந்திரிமார்கள் ... *
வந்தெதிர்கொண்டிறைஞ்சவிண்ணோர்பதிக்குமேலாம் *
திருமதுராபுரிநகருட்புகுந்துசெம்பொற் ... *
றெருவில்விடைமேல்ப்பவனிவந்தார்வந்த ... *
குரிசிலையெவ்வனமடவார்சூழ்ந்துமொய்த்துக் ... *
கொள்ளுவார்இன்பமொழிவிள்ளுவாரே ... (எகூ)

பதம் - எதுகுலகாம்போதிராகம் - சாப்புதாளம்.

[ கண்ணிகள். ]

(க) மாதவனும்வேதனுங்கா - ணுதபரஞ்ஜோதியான
ஆதியைமதுராபுரி - வீதியில்க் ... கண்டார்
பூதலமாதரும்விண்ணோர் - பேதைமார்களுமலர்ந்த
சீதவனம்போல்வளைந்து- காதலே ... கொண்டார்
(உ) அங்கயற்கண்ணுளுமிந்தக் - கங்கைவேணியரைச்சேர
எங்கேமாதவஞ்செய்தாளோ - மங்கையீர் ... என்பார்
இங்கிவர்மங்கலங்காணத் - தங்கியேநாமும்இவ்வூரும்
பொங்குமாதவம்என்செய்தோம் - மங்கைகாள் ... என்பார்
(ஈ) ஆட்சியானசுந்தரர்மீ - ணுட்சியைமணஞ்செயக்கண்
காட்சிதந்ததுசுமதி - சூட்சியா ... மென்பார்
மேல்ச்செய்தமாதவங்கைமே-லாச்சுதுநல்லமாப்பிள்ளைவாச்சுது
பொன்மாலைகுறைபோச்சுது என்பார்
(ச) தென்னவன்மகஞ்செய்திந்தக் - கன்னியைப்பெறுவதற்கு
முன்னவன்நல்வினைப்பயன் - என்னமோ என்பார்
மின்னவள்அழகுக்கேற்ற - பொன்னபிராமன்இவ்வூர்க்கு
மன்னவனிவர்தானடி - அன்னமே என்பார்

(௫) மன்னரிவரென்றால்இவர் - முன்னேதானேகணைமாரன்
கன்னிமார்மேற்சீறுறுனே - என்னடி என்பார்
மின்னரசிதொட்டவில்லை முன்னெடாமல்த்தடுத்தவர்
கன்னல்வேள்வில்லைத்தடாரோ-கன்னியே ... என்பார்

(௬) பண்டிவர்ஊரைவளைத்துச் - சண்டைசெய்தமாதரென்று
கண்டுங்காணேர்போலிருப்ப - துண்டடி ... என்பார்
எண்டிசையோரினுமிவர் - வண்டரென்றுபாயமாகக்
கொண்டுவந்தமீனவள்போ - லுண்டொடி ... என்பார்

(௭) வாணுதலார்தங்களைத்தம் - வேணிமதியால்வெதுப்பத்
தோணிஞர்குளிர்ந்துகொல்லி- காணிவ ... ரென்பார்
வீணில்மெலிவேனேமுன்னந் தோணுமுப்புரத்தோர் தம்மைக்
காணுமுன்னகைத்தெரித்த- தாணுவா ... லென்பார்

(௮) சிற்றிடையினளொருத்தி - மற்றொருவரையுங்காணுள்
எத்திசையும்மான்மழுக்கை - சித்தரைக் ... கண்டாள்
அத்திரக்கண்ணளொருபெண் - வெற்றிமதன்சேனைஎன்றே
இத்தனைமோடிசெய்குறீர் - கர்த்தனே ... என்றாள்

(௯) பூவையாளொருபூங்கோதை - ஓவியனைநோக்கிஇந்தத்
தேவனைப்படத்தெழுதித் - தாவென் ... றுரைத்தாள்
பாவையேஇவர்வடிவை - ஆவலாயெழுதவென்றால்
மூவராலுமுண்டோவென்ன - ஆவி ... மெலிந்தாள்

(௰) முன்னிவர்நெற்றிக்கண்காமன்-தன்னைக்காய்ந்ததென்றுசற்றும்
உன்னுமல்வந்துமெலியத்- துன்னினே ... னென்றாள்
மின்னொருத்திமாரனைப்போல் என்னுயிர்தந்தாலல்லது
உன்னைவிடாதுபெண்பழி - மன்னவா ... வென்றாள்

(௰௧) வஞ்சிஇவர்கழுத்தின்மை - நஞ்செனச்சொல்லுவதுபொய்
நெஞ்சிரும்பென்றிட்டகுறி- அஞ்சன ... மென்றாள்
மஞ்சுறுங்குழலோர்மங்கை - வஞ்சகரிடத்தில்எந்தன்
நெஞ்சுபோனதைக்காணேனே - என்செய்வே னென்றாள்

(௰௨) ஞாலமீதாருங்காணுத - சீலரைவரவழைத்து
மாலையிடுமீனவளே- மேலவ ... ளென்பார்
காலமோகதையோமணக் - கோலமுடன்வரும்இவர்
நீலவிழியாரைஎல்லாங்- கோலுரு ... ரென்பார்



(௯௫)

விருத்தம்.

மங்கையரிப்படிஉருகப்பவனிவந்து ... *
மால்விடைவிட்டிறங்கிஅயன்மால்கைதாங்கச் ... *
செங்கனகமங்கலமண்டபம்புகுந்து ... *
சேவித்தபொன்மாலைமொழிக்கிசைந்து ... *
துங்கமணவரைமேவிமால்முன்னோர் ... *
சூழநடம்பார்த்திருந்தார்சுந்தரேசர் ... *
அங்கயல்க்கண்ணயகியாள்மணக்கோலங்கொண் ... *
டருளினள்மறைமுடிவின்பொருளினளே (அ௰)

---

பதம் - சாவேரிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

தேவிகொண்டமணக் கோலம் - தன்னைத்
தெரிந்துசொல்லுமோ ஞாலம்

[ அநுபல்லவி. ]

காவிவிழித்திருவும் - வாணியுந்தங்கள் ... மிக்க
கைத்தவப்பயன்காட்டு - வதுபோல்அலங்கரிக்க
தேவி

[ சரணங்கள். ]

(க) அருளுடனேபொன்னுடை - அணிந்தேஜந்துவகை
ஆமணிக்கோவை ... ... தரித்து - கரு
இருளென்னுங்குழல்வார்ந்து - மலர்சூடிவிழிக்குமை
எழுதிக்கிரணம் ... விரித்துப்
பருமதியுமகரக் - கொடியுந்தனது ... குலப்
பாவைசெவியில்அந்தரங்கமொழி ... புகல
மருவியதெனத்தோடுங் - குழையும்அணிந்துநல
வான்பிறைநுதல்த்தில - கங்கண்டிருள் அகல
தேவி

(உ) மேகத்துக்கும்பிறைக்கும் - நடுவேஎழுந்தஇந்திர
வில்லெனநுதல்ப்பட்டங் ... துலக்கி - அழ
காகமுத்துச்சுட்டியும் - ரத்னமூக்குத்திநத்தும்
அணியுமிலங்க ... முலேக்கி
நாகரீகப்பொற்கச் - சிட்டதிலணி ... முத்து
நட்சத்திரங்களொப்ப - நவரத்னங்களும் ஒத்து

ஆரும்நவக்கிரகங்க - ளெனப்பொன்மலைப் புறத்து
ஆடுந்துர்வச்சக்கரம்போ - லாம்பதக்கந்தரித்து
தேவி

(௩) வார்ந்தநவரத்னப்பொன் - மாலையும்பூமலர்
மாலையுமார்பில் ... உறைய - செழுங்
காந்தள்மலரின்மேலே- வீழ்ந்தபொன்வண்டென்ன
கைவிரலாழி ... ... நிறைய
சேர்ந்தகரத்திலங்கு - கடயமும்நவ மென்னச்
செம்பொன்வளையும்அர - விந்தமலர்மே லன்ன
மார்ந்தெதனப்பதத்தில் அலம்புஞ்சிலம்புஞ்சொன்ன
அணிகொள்பாதசாலங் - கிங்கிணிகளு மின்ன
தேவி, ௯௯,

விருத்தம்.

தருமாமகிழ்வாலருளணிகள்-தரித்தாள்இவ்வாறரன்மகிழ ... *
அருமாமுகூர்த்தவேளையும்வந்-தடுத்ததப்போதடிதொழுது ... *
திருமாமகளுங்கலைமகளுஞ்-செங்கைதாங்கமீனவள்தான் ... *
மருமாமணமண்டபமதனில்-வந்தாள்சேர்வைதந்தாளே... (௪௧)

பதம் - சுருட்டிராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி, ]

திருத்தடா - தகைவந்தாளே - எவர்க்கும்அன்பு
சேர்ந்தசேர்வைதந்தாளே

[ அநுபல்லவி. ]

மருந்தமைழகுழல்ச்சுப - மாதர்களணி திரு
மங்கலமாம்திரு - மகட்கும்மங்கலந் தரு
திருத்

[ சரணங்கள். ]

(௧) தேவவாத்தியமெல்லா முழங்கப்பூமழைபெய்யத்
தேவமின்னார்கவரி ... ... வீச - மலர்ப்
பாவையிருவர்கை - தாங்கச்சுந்தரியடப்
பஞ்சுமந்துவரப்பிர ... ... காச
மேவுந்திலோத்தமைமுதலோர் அழகாக
விளங்குமங்கலவகை ... சுமந்துவரவிவேக
ஆவல்மடவார்கள் ... சோபனம்பாடவைபோக
மாகநாகரீக-யோக ... துரந்தரீக
திருத்

(௨.) அருள்பெறுந்தருணமீ - தகலீர்அகலீரென்
றம்பொற்சிலம்பொலி ... ... சிறக்க - எழில்
மருவும்இருமுலைப்பொன் - மலையைக்கண்டொருவெள்ளி
மலையைமாமதுரேசர் ... ... மறக்கப்
பரன்அணிந்திடுமானு - மதியுந்தன்னுடல்கோண
பார்வையும்முகமுங்கண் - டியர்பங்கயமும்நாண
திருவாணிகவுரிமூ - வருமிவளென்று ... தோண
தேஜோமயரத்தினத் - தீபமெனக் ... கல்யாண
திருத்

(௩.) மல்கும்சாயல்கண்டு - தன்னினமென்றுமொய்த்த
மயில்களெனப்பெருமை ... தாங்கி- வந்து
புல்குமாதரானதா - ரகைசூழுஞ்சரக்கால
பூர்ணச்சந்திரனென்னவே ... ... ஓங்கி
செல்விதன்புறவடி - நோக்கிமகிழ்ச்சி ...பொங்கி
செழுமலர்த்துகில்மீதில்-அடிவைத்தனம்போற்றங்கி
ஒல்கிமெல்லமெல்ல - ஒதுங்கிநடந் தொதுங்கி
உயர்மணவரைமேவும் - சுந்தரேசர் பங்கில்
திருத், ௬௭,



கல்யாணவிருத்தம்.

வருபாண்டியகுலதிலகவல்லிரத்ன ... ... *
மணவரைமேல்விமலர்அருகிருந்தாள்மாயோன் *
திருமலர்தன்பதம்பூசித்தருள்பெற்றன்பாய் ... *
விமலிதனைத்தாரைவார்த்தீந்தான்அந்த ... *
அருமைமரகதவல்லிசயிலவல்லி ... *
அபிஷேகவல்லிஅமலரைநீங்காத ... *
மருகருணைவல்லிதனைச்சுந்தரேசர் ... *
மணங்கொண்டார்பிரியாவங்கணங்கொண்டாரே ௮௨

பதம் - கலியாணிராகம் - ஆதிதாளம்

[ பல்லவி, ]

சோமசுந்தரேசுவரர் - திருத்தடாதகைதனைச் - சோபனம்செய்தாரே

[ அநுபல்லவி. ]

மாமலர்வாசனும் - பூமகள்நேசனும்
மாதவருந்துதிக்க - வேதமைந்தருள்மிக்க

மாமறைமுடிவினி - லேமருவியதனி
மதுரைநகரில்முந்த - அதிபதிஎனவந்த
சோம

[ சரணங்கள். ]

(க) வானவர்கின்னரர்முனி ... ...வோரும்- உயர்
தானவர்பன்னகர்முத ... ... லாரும்
மண்டலந்தனிலுள்ளோரனை ... வோரும் - பல
அண்டபகிரண்டத்திலுள ... பேரும்
மஞ்சுலவுமலர்க்குழல் - அஞ்சனக்கணையின்விழி
மங்கையருடன்வந்துவந் - துறை ... வோரும்
மிஞ்சுரதகெஜதுர - கஞ்சிவிகையளுயர்ந்த
விண்டலமுலாவிவரநிறை ... வோரும்
மங்களமறைமொழிந்து - தங்கள்தங்கள்மனையினில்
வந்தசுபமெனமகிழ்மறை ... யோரும்
எங்கினும்பன்னீர்சந்தனம் - குங்குமம்விசிறிச்சித்திரம்
எழுதிமகிழ்ச்சிபொங்கு - மிறை ... யோரும்
மாலைதொடுப் போரும் - நல்ல
சேலையுடுப் போரும் - இசை
வாதுகொடுப்போரும் - துதி
ஓதிஅடுப் போரும்-அங்கே
வந்தேவந்தனை தேடவே- வெகு
சந்தோஷம்பெறநாடவே- இசை
மங்காஇன்கவிபாடவே - மிகு
சிங்காரம்பல சூடவே-எழில்
மட்டுறுகற்பக - மிக்கமலர்த் ... தொடை
இட்டபுயப்பொன்னி- லத்தவர்மெய்ப்படை
வைத்திடுகொற்றவர்- வெற்றிமுடிச்சுடர்
இத்திசைபத்து - மிருட்டற வுற்றடர்
வானூர்கதிர்களென்னத் - தானேகிரணமின்ன
மானூர்நடனந்துன்ன - நானுவித எவ்வன்ன
மாதர்கள்வினோதபக்வ
கீதமுடனேதுசக்கிர
வாளம்சிறந்தஅண்ட - கோளம்செவிடுமண்ட
மேளம்முழங்ககண்ட - காளகூடமுன்னுண்ட
சோம

(௨) சகலரும்அருள்பெறுதுதி கூற - மிக
அகமதிலளவறுமகிழ் வூற
தரணியில்வழுதிகுலந் தேற - நில
வரமுயரறநெறிகளு மீற
சாலவுமிகுந்தருத்திரர் - சிலநந்தியொடுபத்தர்
சாரதங்களுமின்பவெள்ளத்தில் ... மூழ்க
காலனையடர்ந்தடுத்த - பாலனைமகிழ்ந்தளித்த
கமலப்பதஞ்சுமந்து - மறை ... வாழ்க
தாரணிபுகழ்ந்துரைக்கும் - மேருவிலெழுந்தகற்ப
தருவும்வல்லியுமெனவெழில் ... ... சூழ
சேருபொன்னணையினில்கௌ - மாரியோடிருந்துமிக்க
செங்கனகப்பணிகண்டு - கதிர் ... ... தாழ
சாருசடையாருநதி - நாரிவதனச்சந்திரனும்
ஆரமிர்தவடிவது- சேருமோருயர்சந்திரனும்
சரிந்தசிலவென - மீறுகோலமும்
பரிந்தமுதுகிர்பை யூறுசீலமும்
தரம்பெருகுகள - மேறுநீலமும்
கரந்தனிலொளிவு-தேறுசூலமும்
சந்ததமும்பிரப - லங்கொள்துரந்தரர்
அந்தமுமுன்பு - மொழிந்தநிரந்தரர்
சங்கரர்மங்கள - கங்கண ... சுந்தரர்
எங்கும்நிறைந்துவி - ளங்கிய ...வந்தரர்
சாமகீதஉல்லாசர் - பாமரபுரநாசர்
காமதகனநேசர்- நேமமுள்ளகிரீசர்
ஜாலர்- நடலோலர்-அநுகூலர் - அருளாலற்புத
சாலோகமும்சிறந்த - சாமீபமும்மிகுந்த
சாரூபமுமுயர்ந்த - சாயுச்சியமுந்தந்திடும்
சோம

(௩) சுபமுறைமலர்மறை ... யவன்தொடுக்க - அங்கு
விபுதர்கள்பணிகள்செய் ... தருகில்நிற்க
சுருதிமொழிந்துமுனிவரர்கள்மெய்க்க - வெகு
அருமறையவர்களும் அணுகிமொய்க்க
சொரியுநெய்யுஞ் சமித்தும் பரியும் அக்கினிதேவன்
சுவைத்துவலந்தளிர்கொண்டிட ... ஆக்கிப்
புரியுஞ்சடங்குகள்செய் - தூரியதிருமங்கலம்
பூட்டிக்கைபிடித்துமை - யொடு ... நோக்கி

துரியவடிவானவர் - எரியில்ப்பொரிசொரிந்து
துறவர்க்குத்தானங்கள்- மிகத். ... தேக்கி
எரியைவலம்வந்தன்னை-பரிபுரப்பதந்தன்னை
இறைவர் திருமலர்க்கையால்த் ... தூக்கி
துலங்குமங்கல ... ... முற்று
இலங்கும்அம்மிமேல் ... ...வைத்து
துங்கஅருந்ததிப் ... ... பெண்
எங்கேஎன்றுசொல்லு ... முன்
தோணக்கிருபைசெய்துநாடி-அன்பொடு
சேணிற்புதுமலர் தேடி- அம்பரர்
தூவச்சசிதிரு ... வோடி- தம்பெறு
மாவல்க்குழலியர் கூடி-நின்றெதிர்
சுற்றிலு-மொய்த்துஆ-லத்திசுழற்றம
குத்வ-மிகுத்த-சமத்தி-ஜெகத்துயர்
சுத்தமறைப்பொருள் - நித்தியமெய்ப்பரை
பற்றறும்-உத்தமர்-சித்தம-துற்றுறை
சூரியலங்கிர்தசிங் - காரிவிளங்குகவு
மாரிஜெகம்புகழு - நாரிநிறைந்தபரஞ்
ஜோதிமனு-நீதிமுறை-யேதிக-ழுறுதியுயர்
சூட்சிவளர்கிர்பாக - டாட்சிமதுரையர
சாட்சிசிறந்தருள்மீ-னாட்சிசமேதரான
சோம-சுஅ.

---

விருத்தம்.

அறந்தருஞ்சோபனமிவ்வா ருற்றியருள்சேர்மதுரேசர் ...*
திறந்தரும்மாலயனிந்திரன் தேவர்கணாதர்கள்வணங்க ...*
துறந்தமுனிவர்புகழ்ந்தேத்தத் தொழுமாமணவரையைநீங்கிச் *
சிறந்தமன்றல்மண்டபத்தில்ச் சேர்ந்தார்அன்புகூர்ந்தாரே. (அ௩)

பதம்-மோகனராகம்-சாப்புதாளம்.

[கண்ணிகள்.]

(க) கல்யாணமண்டப ... முற்றார்-கயல்க்
கண்ணியைப்பாகத்தில் வைத்தார்
மல்கும்விநோதங்கள் ... கற்றார்-மண
வாளரெனவெழில் பெற்றார்

(உ) போற்றியனைவருந் துதித்தார் - மனம்
பூரித்துக்கொண்டாடி மதித்தார்
நாற்றிசையோர்களுங் கதித்தார் - லோக
நாதரைச்சிந்தையில்ப் பதித்தார்

(ஙு) அன்புடனேநடம் புரிந்தார் - பணிந்
தானந்தபாஷ்ப்பங்கள்சொரிந்தார்
இன்பமுகந்தெங்குந் திரிந்தார் - சுந்த
ரேசரையாவருந் தெரிந்தார்

(சு) இங்கிதமாகவே கூடினர் - சடங்
கெல்லாமகிழ்ந்துகொண்டாடினர்
மங்களகீதங்கள் பாடினர் - திரு
மஞ்சனநீர்விளையாடினர் (சுகூ)



சோபனப்பதம் - பந்துவராளிராகம் - சாப்புதாளம்

[ கண்ணிகள், ]

(க) சோபனந்தென்மது-ரேசர்க்குச் ... சோபனம்
சுந்தரிமீனவள்-நேசர்க்குச் ... சோபனம்
பூபர்தொழும்ராஜ-ராசர்க்குச் ... சோபனம்
பூமிமகிழ்சுந்த-ரேசர்க்குச் ... சோபனம்

(உ) மூவுலகுந்தரு-மெல்லிக்குச் ... சோபனம்
முக்கனியாமின்பச்-சொல்லிக்குச் ... சோபனம்
தேவிஅறம்புரி-செல்விக்குச் ... சோபனம்
தென்மதுராபுரி-வல்லிக்குச் ... சோபனம்

(ஙு) முண்டகத்தோன்முதல்-மூவர்க்குஞ் ... சோபனம்
முனிவர்முதலான-தேவர்க்குஞ் ... சோபனம்
எண்டிசைசூழெழு-தீவர்க்குஞ் ... சோபனம்
எழில்மறையோர்முதல்-யாவர்க்குஞ் ... சோபனம்

(சு) பாண்டியதேசத்தில்-எல்லோர்க்குஞ் ... சோபனம்
பகர்மதுராபுரி-யூருக்குஞ் ... சோபனம்
ஆண்டருள்மன்னவர்-ஆருக்குஞ் ... சோபனம்
அன்புபெரும்புல-வோருக்குஞ் ... சோபனம்

(ரு) ஐயன்புகழிது - கேழ்ப்போர்க்குஞ் சோப்னம்
அன்பாய்எழுதிப்படிப்போர்க்குஞ் சோபனம்
திய்யவன்காதை - துலங்கவே ... ...சோபனம்
சோபனமேசித்திய சோபனம் ... ...சோபனம் (எ௰)

---

விருத்தம்,

இவ்விதமாமணங்கண்டுமோல்முன்னுனோர் ... *
இறைவரருள்கொண்டவரவ்வவர்நாடுற்றார் ... *
தெய்வசிவகணங்களெல்லாம்உருவமாறிச் ... *
சேவடிதாழ்ந்தேவல்செய்யச்சுந்தரேசர் ... *
அவ்வணிசேர்தென்னர்பெருங்கோமானுகி ... *
அரியணைமேல்க்கொண்டுராசாங்கங்கொண்டு ... *
திவ்வியசுந்தரபாண்டியனெனப்பேர்கொண்டு ... *
திறங்கொண்டார்செங்கோல்க்கொண்டறங்கொண்டாரே

பதம் - தோடிராகம் - சாப்புதாளம். (அச)

பல்லவி.

செங்கோல்தரித் -தென்கோவெங்கு - சிறப்பாய்ப்புவிஆண்டார் -

[அநுபல்லவி,]

மங்காதசெழுங்காவளர் - மதுராபுரியதிலேஉயர்
செங்கோல்

[ சரணங்கள். ]

(க) கபடநாடக-சூத்திரதாரிதம் - கருணைச்செயல் காட்டிச்
சுபமதாயுல-கோர்தழைத்திடச் - சுவையாமின்ப மூட்டி
இபமதேறிய-மன்னர்மன்னர்வந் - திறைஞ்சச்செயம் நாட்டி
அபயமென்றவர்க் - கஞ்சலஞ்சலென் - றாளும் பரமேட்டி
செங்கோல்

(உ) மன்னவர்க்கெல்லாஞ்சிவனைத்தொழல் - மறைநெறிஎனத்தேற்றி
அன்னகர்தனில் - நடுவூரென்றோன் - றமைத்தேதுதி சாற்றி
துன்னஇம்மையில்-நன்மையேதரும்சோதியைவைத்துப்போற்றி
தன்னருள்க்குறியானசுந்தரே - சரையும்பணிந் தேற்றி
செங்கோல்

(௩) மனிதர்க்கர-சாய்மாற்றலர்-மடங்கலென வென்றும்
வனிதையர்க்கு-வேளாய்நில-மகள்மாலென ஒன்றும்
இனியாதியாக-பரத்தாசையை-நீத்தோர்தமக் கென்றும்
தனிமெய்-யறிவானந்தபர-தத்துவமென நின்றும்

செங்கோல்-எக.

——[-:-]——

விருத்தம்,

இம்முறைஅரசாள்சுந்த ரேசபாண்டியன்னல்லோருந் ... *
தம்மையேதொழத்தாம்போற்றுந் தம்குறிமகிமைதன்னை ... *
அம்மலரோனுங்கூற அரிதெனவாக்கியார்க்கும் ... ... *
செம்மைவீடருளியாங்குசிறந்திட்டார்நிறைந்திட்டாரே. (அரு)

——(*)——

விருத்தம்.

பெருமணஞ்செய்தலீலைப்பெருமையாமிதனைக்கேட்போர் ...*
அருமையாம்பொருள்நாலும்பெற் றனந்தக்கடலில்வாழ்வார்...*
இரசிதமன்றிலன்று ஈசனார்நடித்தவாறுந் ... ...*
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (அசு)

திருமணஞ்செய்த - திருவிளையாடல் - முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௰சு-பதம் - ௰ரு - ஆ௩௧.

---

ஆ பாயிரம்-உள்ப்பட-திருவிளையாடல்-ரு-க்கு-வெண்பா-௧
விருத்தம்-அரு-பதம்-எக.
ஆ கவிதை-௱ருள.



ஆறுவது

வெள்ளியம்பலத்

## திருக்கூத்தாடிய திருவிளையாடல்.

விருத்தம்.

மணம்புணர்ந்தபின்சோமசுந்தரேச ... ... *
வழுதிமணங்காணவந்தோர் தம்மைஎல்லாம் ... *
உணவெழுந்தருளுமென்றார் ஆங்கெல்லோரும் ... *
உண்ணவெழுந்தற்றார் அம்புலிக்காலோனும் ... *
பணிமுனியுந்தில்லைநடங்கண்டருந்தும் ... ... *
பரிவெமதுநியமமென்றார்பரமன்நாடித் ... *
தணிவறுதில்லையிலதிகந்துவாதசாந்தத் ... *
தலமென்றார்மதுரையிது நலமென்றாரே. (அஎ)

பதம்-சுருட்டிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

துவாதசாந்தஸ்தலமே - நமைக்கண்டிங்கே
துதிக்கமதிக்கநலமே

[அநுபல்லவி]

அவாமிகுந்துதொழு - மாமுனிவோரேமது
வார்பொழில்சூழ்மது-ராபுரிநகர் இது
துவாத

[சரணங்கள்,]

(க) அண்டவடிவாகிய-புருஷனுக்கரைக்குமேல்
ஆகுமேலுலகம் ... ... ஏழும்-எழில்
கொண்டஅரைக்குக்கீழாய்- மண்டலமுதலாகக்
குறித்தஏழுலகுந் ... ... தாழும்
மண்டலந்தனில்அவன் அவயவங்களாய்ச் ... சோதி
மருவுந்தெய்வஸ்தலம்-அனேகம் உண்டதையோதி
கண்டிடஅடங்காது அதில்ச்சிவஸ்தல நீதி
கருதிஉரைக்கக்கேளும் காணிதற்கெல்லாம் ஆதி
துவாத

(உ) மூலாதாரம்ஆரூர்-திருவானைக்காவேநாபி
மொழிமணிபூரகம் . அருணை-திரு
மாலுடனேநீங்கள்-இருவருந்தொழுந்தில்லை
மாநகர்இதயமாங் ... ... கருணை

சாலமிகுந்ததிருக் - கழுத்தேதிருக்கா ... ளத்தி
தழைத்தகங்கைசூழ்காசி-நகரேபுருவ மத்தி
மேலாம்வெள்ளிமலையே-பிர்ம்மரந்திரமா முத்தி
வீடருள்ஸ்தலம்இதற்-கெல்லாமேலான வெற்றி

துவாத

(கூ) மறைதுதிசெய்துரைக்கு மகிமைபெருகுமிந்த
மாநகரேபுகழ் ... ... மிகுந்த தெந்த
முறையினுலெனக்கேளும், ஸ்தலங்கட்கெல்லாம்ஆதி
முதன்மையதாகியே ... ... வந்த
அறைதருநகர்இதில்-நமக்கன்பாய் ... வருந்தும்
அருந்தவரேஉமக்காயிங்கணி திருந்தும்
நிறைநடஞ்செய்வோங்கண் - டின்பஅமு தருந்தும்
நீங்கள்நமதுகிர்பை-ஓங்கிஎழில் பொருந்தும்

துவாத- எஉ.

விருத்தம்

இம்மொழிவிண்டெழில்முனிவரொடுந்தன்கோயில் ... *
எய்தினர்அங்குவிமானத்தின்கிழ்பால் ... *
அம்மதிமண்டலமோவெள்-ளிப்பொருப்போ ... *
அழகுவெள்ளிவிடையுருமா றியதோவென்ன ... *
தம்மருள்சேர்வெள்ளியம்பலமும்ரத்னத் ... *
தமனியபீடமுந்தோன்றஅதற்குளெங்கள் ... *
அம்மையொருபாகர்ஆனந்தகிர்த்தம் ... *
ஆடினர்அருள்க்கடைக்கண்ணுடினரே. (அஅ)

பதம்-தோடிராகம்- அடதாளசாப்பு.

[பல்லவி.]

வெள்ளிஅம்பலத்தில்நடனஞ்செய்தார்-மதுரை
மேவுஞ்சோமசுந்த ரேசர்-எங்கள்
மீனலோசனைபிராணேசர்

[அநுபல்லவி]

தெள்ளுதிரைத்திருப்பாற்-கடலிலெழுந்து தித்த
செங்கதிரென்னமின்னும் - ரத்தினபீடம் பத்த
ருள்ளமோமன்றமுடி-யோ அதில்நின்று மெத்த
ஒங்குமெஞ்ஞானப்பே-ரொளிவடிவாய்த் தத்த
தத்திமித்திமி-தாகசெந்தரிதா-கிணந்தக-தகதிமித்திமி
தாகசெந்தரிதா-தனந்தக-தத்தின்னம்-நந்தரிகிடதக-

தகதின்னம் - நந்தரிகிட தக-தகதரிதக-தகஜெணுதகதிமி
தகதிகதோம்- ததிங்கணதோமென

வெள்ளி

(௧) நந்திமிருதங்கம்ததிந்தத்திம்மென மூட்ட - நின்று
நாரணன்தாளந்-ததிங்கணத்தோமென மாட்ட - அர
விந்தவெண்கலைமகள் - ஆவெனவேசுதி கூட்ட - மலர்
வேதனும்ரீஎன்று - சாமயாழ்தந்தி ... மீட்ட - ஆ
நந்தநார தருந்தும்புருவு - மருகிலு
கந்தயாழி சையுந்தம்புருவு - முழங்கமி
குந்தவான்முகடுந் - திண்புவியும்- அதிர்ந்திட
வந்துசூழ்கண- மெங்குங்கவியுங் - கனம்பெற
நந்துபம்பம் பம்பம் - மென
மொந்தைதொந்தொந்தொம்மென
நாடிஅமரர்கள் - கூடி அதிசெய
நலமதுரமுயர் - மலர்மழைபொழிய

வெள்ளி

(௨) நெடியகருங்குறளன் - விழிபிதுங்கிமிர்ந்துநோக்கி - உடல்
நெளிக்கமுதுகில்வலக்-காலூன்றிஇடதுகால்தூக்கிக்- கருங்
கடலில்முளைத்தபலசூரியன்போல்ஒளி தேக்கி- திசை
கடந்தஈரைந்துசெங்- கையும்அமரர்துயர் நீக்கி-அருள்
விடமுலாவியகந்தரமும்மழுமானுடன்புனை
நெடியசூலமும்வெம்படையுமணிநீறிலங்கிய
படிகமேனியுஞ்செஞ்சடையுநதிமேல்-விளங்கிய
வடிவுலாவியஅம்புலியுமொருமூன் - றுகண்களும்
மிஞ்சுநஞ்சமுறும்புயங்கநெ
டுஞ்சரங்களணிந்துபங்குறை
மீனலோசனை •மானைநாடியே- வினவுமனவரத-நடனவிமலர்

வெள்ளி

(௩) வரநதியொடுகொன்றைமாலைவண்டோசையும் நேர்ந்து - செய
மங்களமுழவொடு- மாமறையோசையுஞ் சார்ந்து - செங்
கரயாழோசையுங்- கால்சிலம்போசையுஞ் சேர்ந்து - கல்
கல்லென்றொலிக்கவன்பர் -செவிக்கமுதாய்க்களி கூர்ந்து - அர
அரஅரசிவசிவவரதவமலா பராபர
சுரகணநிபகரசரணகமலா சடாதர
உரகபூஷணபரதநடவிமலா நிராமய
துரிதமோசனபுரதகனநிமலா பராக்கென்ன

சு-வது-வெள்ளியம்பலத்
திருக்கூத்தாடியது.

அரியமுனிவர்கள்ஜெயஜெயஜெயெனஉரியவமரர்கள்அரஅரஅரென
அம்புலிமுனிபதஞ்சலியும்விழி அருவியெழமன - துருகிஎதிர்தொழ
வெள்ளி - எ௳.

விருத்தம்.

தனிதருமுதல்வர்கூத்தைச் - சார்திசைவிண்ணுள்ளோரு ... *
மனிதருங்காணச்செய்து - மகிழ்பதஞ்சலிபுமுள்ளங் ... *
கனிதரும்புலிக்காலோனுங் - கண்டுகண்களித்துப்போற்றித் *
தொனிதரும்இசையால்ப்பாடித் - துதித்திட்டார்குதித்திட்டாரே()

பதம் -பியாகுராகம்- ஆதிதாளம்

பல்லவி

சம்போநடேசா- ஸ்தாணுகிரீசா

அநுபல்லவி.

நம்பும்பதத்தாயகா - ரசிதசபாநாயகா (சம்போ)

[சரணங்கள்]

(க) மங்களவாசா - வரதஉல்லாசா- சங்கரசற்ஜன - சமுகவிலாசா
சம்போ
(உ) சத்தியஉதாரா-சர்வசங்காரா-நித்தியநிஷ்க்கள-நிரஞ்சனநிராதரா
சம்போ
(௩) துரிதவிநாசா-சுயம்பிரகாசா-பரமஆலாஸ்யப- தேசுந்தரேசா
[சம்போ (எச)

விருத்தம்.

துதித்தவருக்கிரங்கியவர்கேட்டவண்ணந் ... *
துலங்குகன்னிநாடுசெய்ததவப்பேறெய்தக் ... *
குதித்தநடம்நீங்காமலென்றுங்கண்டோர் ... *
குலவுபவமகலவரங்கொடுத்துறைந்தார் ... *
மதித்தனுவிலாதிரைநாள்த்தொடுத்தோராண்டு ... *
மலர்பொற்றுமரைபடிந்தைந் தெழுத்தைநூற்றெட் *
டுதித்தஉருச்செவித்தநடந்தொழுதுநின்று ... *
உலாவுவார்நினைத்ததெல்லாமேவுவாரே ... (கூ0)

விருத்தம்.

அரியதோர்வெள்ளிமன்றி- லாடியலீலைஈது ... *
உரைசெய்யக்கேட்டோர்மேன்மை-யுற்றுவாழ்ந்திடுவார்குண்டோ
தரனெனும்ஒருவன்பூதந்-தனக்கன்னமிட்டவேழாந் ... *
திருவிளையாடல்தன்னைத்- தெரிந்திடஉரைசெய்வேனே (கூக)

வெள்ளியம்பலத்திருக்கூத்தாடிய- திருவிளையாடல்முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-டு-பதம்- ௩ஆ அ. ஆ பாயிரம்உள்ப்படத்திரு
விளையாடல்-சு-க்கு-வெண்பா-க-விருத்தம்-கூ0-பதம்-எச-
ஆ கவிதை-௱சுடு.



ஏழாவது.

குண்டோதரனுக்கு

## அன்னமிட்டதிருவிளையாடல்.

விருத்தம்.

இரசிதஅம்பலநடனஞ்செய்தபின்பு ... *
எழில்ப்பதஞ்சலிப்புலிக்கால்-முனிமுன்னூலோர் *
அரசர்முதல்யாவர்களும்உண்டுசென்றார் ... *
அப்பால்மீனவள்முன்புஅடிசிலாளர் ... *
விரைவதில்வந்தடிபோற்றிநின்றுஅன்ன ... *
மிகச்சமைத்தோம்சிலவேதுமில்லைஎன்றார் ... *
திரசயிலவில்லார்முன்கயல்க்கண்அன்னை ... *
சென்றிட்டாள்பணித்திதுந-வின்றிட்டாளே (கூஉ.)

பதம்-நாதநாமக்கிரியைராகம்-சம்பைதாளம்

[ கண்ணிகள் ]

(க) பத்தபரிபால - பசுபதிபவ விநாசா
பரமார்த்தமேஎனதுபதியேபிரா ணேசா
சுற்றிவருகணநாதர் - முப்பத்துமுக் கோடி
சூழவெழுந்தருளி - வருவீரெனவே நாடி

(உ) இமயமலைபோலன்ன - மும்அதைச்சூழ்ந்து கிடக்கும்
எழில்மலைகள்போல்க்கறியும்-இன்பமுட னடக்கும்
சமையல்செய்ததளவில்லைச் - சிலரையுண்ண விடுத்தீர்
தாமதனில்ச்சிலபேர்க்கு-ஏனோவிடை கொடுத்தீர்

(ங) வந்தவரில்ச்சிலரி-ருக்கச்சிலர்போக நேரோ
மதித்துச்சென்றதேன்எல்லை - மிதிக்கவே வந்தாரோ
வெந்ததுக்குவிலை - யுண்டோவீணாகத் தானே
மிஞ்சியதெல்லாமினி - மேலென்செய்வே னானே

(எரு)

விருத்தம்,

மைக்கயல்க்கண்ணாள்இவ்வாறுரைத்துநிற்க ... *
வழுதிமகளாமிவள்மேல்வைத்தவன்பால் ... *
மெய்க்குமொருவினையாடல்செயநினைத்தோ ... *
விண்மகிழும்தமதுகுடைப்பூதவேந்தன் ... *

# எ-வது-குண்டோதரனுக்கு அன்னமிட்டது.

உக்கிரமதைஅன்றெவருங்காணத்தானே ... *
உயர்ந்தசுந்தரபாண்டியநிருபனை ... *
முக்கணனார்சிறுநகைசெய்தமுதச்சந்திர ... *
முகத்தடாதகைக்கிதுமொழிகுவாரே (கூரு)

பதம்-சௌராஷ்டிரராகம்- ஆதிதாளம்.

[ பல்லவி. ]

தரணியிலுன்னைப்போல்த்தானே - செல்வம்
தரித்தபேர்களுண்டோ மானே

[ அநுபல்லவி ]

பெருமாமதிக்குல - மணிவிளக் ... கொளியே
பெண்ணமுதேகயல்க் - கண்ணே ... பைங்கிளியே

தரணி

[ சரணங்கள். ]

(க) மூவேந்தர்களிலும் - சிறந்துமறுவில் ... ... லாத
முடிமீனவன்மகள் - உனக்கரிதுண்டோ ... ஓதக்
காவேவந்துநின்-றேவல்செயக்கொள் ... ... வாயே
கனமுந்தனமும்பரி - சனமும்உள்ளவள் ... நீயே

தரணி

(உ) அகிலமீதில்உந்தன் - செல்வப்பெருமை ... தன்னே
அறியநமக்குரைத்தா-யறிந்துகொண்டோ மின்னே
புகலுமுன்விருந்துண்ணப் - பசியுள்ளோரினி ... ஒரு
பூதரும்இல்லையே-ஏதுசெய்வோம் ... ... பகரு

தரணி

(ந) சற்றும்ஈதறியாமல்ச் - சிலபேரைஅனுப்பி ... னேம்
தங்கினவரையுப - சரித்துவந்துணச்சொன் ... னேம்
நத்தியுண்ணமட்டுந்தா -னேயருந்துவர் ... மாதே
நாழிமுகப்பதுநா - ழிமுகந்தி ... ... டாதே

தரணி - எசு.

விருத்தம்.

என்றுசுந்தரபாண்டியவிமலர்அந்த ... *
எழில்த்தடாதகையைப்பார்த்தேஉரைத்து ... *
அன்றருகில்நின்றகுண்டோதரன்வயிற்றில் ... *
அழல்வடவைதனைஏவஅவன்பசிக்கு ... *
தென்றனன்இக்குடைதாங்குஞ்சிறுபூதத்துக் ... *
கேபிடிசோறிடுசொல்வோமென்றனுப்ப ... *
நன்றெனமீனவள்சொலக்குண்டோதரன்றான் ... *
நண்ணுவான்பசியுமிகுந்துண்ணுவானே (கூச)

பதம் - முகாரிராகம் - ஆதிதாளம்,

[ பல்லவி. ]

குண்டோதரன்உண்டதைக்கேளும் - பசிமிகுந்த
குண்டோதரன்உண்டதைக்கேளும்

[ அநுபல்லவி. ]

மண்டலம்புகழும்-மீனாட்சிமோ ... கத்தில்
மகிழ்சுந்தரேசர்-செய்திடும்விவா ... கத்தில்

குண்டோ

[ சரணங்கள் ]

(க) வாடியன்னமலையைக் ... ... கண்டான் - பெரியவாயை
மலைமுழைபோல்ப்பிளந்து கொண்டான்-காஞ்சமாடுகம்பி
லோடிவளைந்ததுபோ ... லுண்டான் - ஈதானைப்பசிக்
கோர்சோளப்பொரியென விண்டான் - கறிகுழம்பு
காடிகஞ்சியெல்லாம் - ஒருமிக்கவழித்தும்
கடைவாய்க்கிக்கூட- காணுமலேமுழித்தும்
ஓடிமடப்பள்ளியைச் - சாங்கமாயொழித்தும்
ஓகோஇவளவு - தானுவென்றுபழித்தும்

குண்டோ

(உ) பச்சைக்கறிகள் ... பலகாரம் - சமையல்ச்செய்யும்
பாத்ரங்களுடன்ததி ... க்ஷீரம்- நெய்மோர்பழங்கள்
மிச்சம்வையாமலேஅன் னேரம் - உண்டுபசி
விடாயடங்காமலே ... விசாரம் - உடன்கோவென்று
கெற்சிதமாயொன்றில்-லாமலே ... தீர்த்துங்
கிடந்தபசியைக்கிள்ளி - எழுப்பித்தென்றூர்த்தும்
அச்சமுறவேஅன்ன - வெறிகொண்டு ... வேர்த்தும்
ஆரைஉண்போமென்னச் - சுற்றுமுற்றும்பார்த்தும்

குண்டோ

(௩) நாரியர்ஓடிநின்று ... ... சிரிக்கச்- சிலர்பயந்து
நடுங்கிஒடுங்கிக்கையை ... நெரிக்க-இதுகண்டந்த
ஊரிலுள்ளோர்கள்பயந் ... தரிக்க-சமையல்காறர்
ஓடிஒளிந்துபோய்க்கொக் ...கரிக்கச்- சிவன்செயலை
ஆரறிவார்கண்ட-பேரெல்லா மெய்க்க
அஞ்சாமல்என்சொன்னேம்-என்றருள்மிக்க
வீரியமான - தடாதகை ... வெட்க
மிகத்தலைகுனிந் - தையன்முன் - வந்துநிற்க

குண்டோ, ௭௭,

# எ-வது-குண்டோதரனுக்கு அன்னமிட்டது.

விருத்தம்.

குடவயிறன்இவ்வண்ணம்உண்டும்தீராக் ... *
கொடும்பசியால்அரிசிநவபண்டமெல்லாம் ... *
திடமுடனேமிகவாரிவாரிஉண்டும் ... *
தியங்கக்கண்டதிசயித்துக்கயல்க்கண்அன்னை ... *
கடவுள்எதிர்வந்துதலைகவிழ்ந்துநிற்க ... *
கண்டறியார்போலையன்அனமேஇன்னம் ... *
இடவன்னம்உண்டோசொல்பெரும்பூதங்கள் ... *
இங்கழைப்போம்என்ன அன்னைஇயம்புவாளே (கூரு)

பதம் - அசாவேரிராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி. ]

தாமரைத்தாளா - உமதுசோ - தனைக்கிநானுளா

[ அநுபல்லவி, ]

மாமறைமுடிவுங்கண் - டறியாஉமது சூது
மடமையானபேதை - அறிவேனோஈதேது
தாமரைத்

[ சரணங்கள். ]

(க) ஒருகுறளிதன்பசி - ஒழியவில்லையே ... குரோதம்
உண்டோஇன்னமும்அழைப் - போமென்றீர்பலபூதம்
வரிலிவ்வுலகையெல்லாம் - வாரியுண்ணும் அப்போதும்
வளர்காலருத்திரனென் - றுளபேருமக்கே ஒதும்
தாமரைத்

(உ) அண்டமும்அணுவாகும் - அணுவும்அண்டமாய்க்கூடும்
அரனேநீர்நினைத்தால் - அடியாள்எதிரோ நாடும்
உண்டுதலையுமோவென் - றெண்ணினதெல்லாம்போச்சே
உடம்புவேண்டாங்கையை - விடும்என்றதுபோல்ஆச்சே
தாமரைத்

(௩) சிறுபூதம்இஃதென்றீர் - மெய்யென்றிருந்தேன்அங்கே
தெரிந்ததுஅதன்சேதி-ஒளிந்துவந்தேனுன்இங்கே
அறியாப்பெண்மதியால் - முன்வந்துரைத்திட்டேன்
ஐயனேஇம்மட்டில் - அமத்திவிடுங்கும்பிட்டேன்
தாமரைத், எஅ.

விருத்தம்,

அம்பிகைஇவ்வாறோதி - ஐயன்முன்நிற்கும்போது ... *
வெம்பியேபசிதீராமல் - மிகுந்தகுண்டோதரன்தான் ... *
அம்பரமுகில்போல்வாய்விட் - டரன்எதிர்வந்துநின்று ... *
எம்பெருமானேகாவென்-றிரைந்திட்டான்கரைந்திட்டானே (கூசு)

பதம்- புன்னாகவராளிராகம் - சாப்புதாளம்.

[பல்லவி,]

எனதுபசிதணிப்ப - துமதுகருணையல்லால் - எவரால்உண்டையனே

[அநுபல்லவி,]

வனிதைமீனலோசனை - யுடன்மதுரைப்பதியே
வாசரானசுந்த- ரேசதயா ... நிதியே

எனது

[ சரணங்கள் ]

(க) அன்னைசொல்ப்படிஅன்ன - மலைமலையாய்க் குவித்த
அவ்வளவுண்டும்பின் - அனலில்நெய்யைக்கவிழ்த்த
தென்னமிகுந்துதேநீர் - முன்முப்புரத்தில் வைத்த
எரிதானெனன்வயிற்றில்வந் - தேபுகுந்துதோமெத்த

எனது

(உ) மைப்பெருமிடற்றோனே - உண்டதெல்லாம் பெரு
மலைமுழுங்கிறமகா - தேவற்குக்கத ... வொரு
அப்பளம்என்பதுபோல் - ஆச்சுதேகண் ... பாரும்
ஆர்க்குவந்தவிருந் - தோவென்றிராமல்க் காரும்

எனது

(ங) கவியும்உதரச்செந்தீ - காந்தஇரண்டு ... காது
கண்ணும்அடைந்ததென்ன - காரணம்இது ... ஓது
புவியில்உம்மையல்லாது - அணுவும்அசைந்தி டாது
பூட்டினவன்திறக்க - வேணும்ஐயாஇப் ... போது

எனது-எ௬.

விருத்தம்.

காவெனக்குண்டோ - தரனிலைதளர்ந்துளங்கலங்கி ... *
ஆவெனப்பெரு - வாய்திறந்தண்டமும்வெடிக்க ... *
கோவெனப்புவி - நாயகரகுளிர்மனக்கருணை ... *
மேவெனப்பசி - நலிந்ததுமலிந்ததுமெலிந்தான் (௬எ)

விருத்தம்.

உரமிகுபூதம்அன்னம் - உண்டதையுரைத்தோர்கேட்டோர் ... *
அரனடிநிழலில்வாழ்வார் - அக்குண்டோதரனுக்காக ... *
தரும்அன்னக்குழியும்வைகை- தன்னையும்அழைத்தளட்டாந் ... *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடஉரைசெய்வேனே ... (௬அ)

பூதம்-உண்டதிருவிளையாடல்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - எ- பதம்ரு - ஆ-ய௨ - ஆக - பாயிரம்உள்படத்
திருவிளையாடல் எ-க்கு வெண்பா-க -விருத்தம்-௬அ-பதம் -எ௬-
ஆக-கவிதை-௱எஎ.



எட்டாவது

அன்னக்குழியும் - வைகையும்

# அழைத்த திருவிளையாடல்.



விருத்தம்,

குண்டோதரன்றான்உண்டபின்பு - கொண்டபசிஅன்றொழியாதைக்,
கண்டேமதுரைஅரசுகந்த - கடவுள்சுந்தரேசர்அருள் ... *
கொண்டேகயல்க்கண்ணாளுமிந்த -கோலநிலத்தோர்களுமகிழ ... *
அண்டாதெழுந்ததயிர்க்கடல்போல்- அன்னக்குழிஅங்கழைத்தாரே

பதம்- சங்கராபரணராகம்-அடதாளசாப்பு. (௬௬)

[ கண்ணிகள். ]

(௧) வந்துபசியால்மெலிந்துகுண்டோதரன்
வாடியுழல்வதை ... ... கண்டு
சுந்தரேசுவரர் மீனாட்சியைப்பார்த்துச்
சுமுகமாய்நகைத்து ... ... கொண்டு

(௨) மாதன்னபூரணிதன்னைநினைக்கவே
மண்ணிலத்தைப்பிளந் ... ... தோங்கி
சாதங்களுந்தயிரும்மாயெழுந்து
தயிர்க்கடல்போலவே ... ... தேங்கி

(௩) நாலுகுழிவரக்-கண்டுகுண்டோதரன்
நாயகர்ஏவலால்த் ... ... துளைந்து
ஏலுங்கடலைக்-கலக்கும்பெருமத்
தெனக்கைகளால்வாரி ... ... வளைந்து

(௪) எண்டிசைஅஞ்சவே- கொண்டமட்டுண்டங்கம்
எல்லாம்வயிறாய்மெய் ... ... வீங்கினான்
உண்டஇளைப்பொரு- தொண்டனுக்குமுண்டல்
லோபசிபோய்க்களைத் ... தேங்கினான்(அய)

விருத்தம்.

உண்டதோர்இளைப்பால்மண்ணில் - உயர்கருமலைபோல்வீழ்ந்து *
கொண்டதோர்தாகமிஞ்சிக் - கோவெனஅலையக்கண்டு ... *
அண்டர்கோன்சுந்தரேசர் - அருள்புரிந்தழைக்கப்பாண்டிய... *
மண்டலஞ்செழிக்கவைகை - வந்தவாறிந்தவாறே ...(௯)

பதம் - மத்தியமாவதிராகம் - ஆதிதாளம்

பல்லவி.

வைகைநதிபெருகி - வந்தமகிமைஇது-மாமுனிவரேகேளும்

[ அநுபல்லவி. ]

மெய்யைவிடாவமலர் - மீனவளுடன் வாழ்ந்து
மிலைந்தமாலையென - மதுராபுரியைச் சூழ்ந்து

வைகை

[ சரணங்கள். ]

(௧) கோரமிகுந்தபசி - அடங்கிக்குண்டோதரன்
கொண்டதாகத்தால்த் துடித்து - அந்த
ஊரில்க்குளங்கிணறு - மடுக்கள்ஓடைகள்அதில்
உள்ளநீரெல்லாங் ... குடித்து - கண
நேரத்தில்ஆவலுடன் - குருவிகுடிக்கத்தண்
ணீரில்லாமல்வாய் ... வெடித்து - தாகந்
தீராமல்அலைந்திட - விமலர்திருமுடியில்த்
திங்களுடனே ... முடித்து - நிறைந்தகங்கை
நீரும்பெருஞ்சடைக்குள்-ளேபதுங்கி மறைய
நெடுங்கடல்களும்அலை - ஒடுங்கிஓசை குறைய
கார்நிறமுகில்எல்லாந் - திசையில்ஒளிந் துறையக்
கண்டுசுந்தரேசுவரர் - கருணையினல் நிறைய

வைகை

(௨) தன்றலைக்கங்கை- தனைப்புவியில்வந்திவன்
தாகந்தணியென்றமலர் ... சாற்ற - எனை
அன்றுபகீரதனுக் - காகநதியாயதில்
ஆடுவோர்வினை ... மாற்றச் - சொல்லி
இன்றும்நதியாய்வர - வருள்புரிந்தீர்மகிழ்ந்
தெவ்வெவ்வுலகமும் ... போற்ற - வந்து
நின்றுகண்டவர்தொட்டோர்- ஆடினோர்பழவினை
நீங்கிஎன்றனை ... ஏற்ற- மதுரைநகர்
துன்றும்எல்லையில்வந்து - எவ்வுயிரும் எனது
சுந்தரவடிவமாம் - நதியில்முழுகில் ... அது
என்றுஞ்சிவலோகத்தில் - இருக்கவேவர மிது
ஈகுவீரெனப்பெற்று - வேகமுடன்தொழுது

வைகை

(௩) அந்தரமுகடுடைந்-தொழுகும்பிரளயமென
அதிவிரசுடன் ... பொங்கி - வெகு

# அ-வது-அன்னக்குழியும் வைகையும் அழைத்தது.

தந்திமுதலனந்த- மிருகமரங்கள்எல்லாந்
தாங்கக்கரங்களில்த் ... தங்கி- வரக்
கந்தசுகந்தங்கள் - அணிந்தமடவாரென்னக்
கல்லார்கவிபோல்க் ... கலங்கி - மதிமி
குந்தவர்கவியெனப் - பலதுறைதோன்றவே
கொள்பொருளாழ்ந் ... திலங்கிப் - பெருமையுடன்
வந்துதெளிந்துலகில் - அனைவரும்பயன் கொள்ள
மகிழ்ந்துகுண்டோதரன்-தாகந்தணிந்து துள்ளக்
கந்தநீபவன - நாதர்கருணை ... வெள்ளக்
கடலில்நிறைந்துஎந்தக் - காலமுஞ்செழிப்புள்ள
வைகை- அக.

---

விருத்தம்.

வைகைஇவ்வாறெழுந்து - வரஅரன்அருளினலே ... *
உய்கவாரிதியில்ச்சென்று - உண்ணுமாமுகிலும்நாண ... *
துய்யநீர்உண்டுதாகந் - துலைந்துகுண்டோதரன்றான் ... *
செய்யசுந்தரர்தாள்போற்றிச் - செழிப்பொடுதுதிசெய்வானே (௱௧)

பதம் - முகாரிராகம் - ஆதிதாளம்

பல்லவி.

மதுரேசா - வெள்ளி - மலைவாசாசம்போ

[ அநுபல்லவி ]

சதுமறைதுதிசெய்யு - முதல்வாமலர்ந்தகொன்றைச்
சரமணிகுந்தசரா- சரனேஓஅரனே
மதுரேசா

[ சரணங்கள் ]

(க) கண்ணனும்புகலும்வச்சிர - வண்ணனும் - புவிமகிழுந்
தண்ணருந்தாமரைமலர் - அண்ணலுந் - துதிக்கும்அஞ்சக்
கரனே- மலர்க்கரனே- கிருபாகரனே- மெஞ்ஞானதிவா
கரனே- சங்கர னே
மதுரேசா

(உ) ஜாலனே - அன்பருக்கநு - கூலனே - நதியணிந்த
சீலனே - சங்கீதநட - லோலனே - உயர்விஷகந்
தரனே - சசிதரனே - சலந்தரனை - யொழித்தசிரந்
தரனே - சுந்தரனே
மதுரேசா

(௩) பார்த்தருள்செய்தென்கவலை - தீர்த்தகமகிழ்ச்சிபெறக்
காத்தவாமும்மூர்த்திகட்கும் மூத்தவாசிறந்தசற்மாம்
பரனே - பரா- பரனே-சொல்லும்-பரனேகர்பணியும்சிற்
பரனே - தற்பரனே

மதுரே. அஉ.

---

விருத்தம்,

சார்ந்தகுண்டோதரன்இந்தப்படிதுதிக்கத் ... ... *
தற்பரனார்அருள்புரிந்துநோக்கித்தம்மைச் ... ... *
சேர்ந்தகணங்கட்கிறையாய்ச்செய்தாரென்றுஞ் ... *
சிவதீர்த்தஞ்சிவஞானதீர்த்தஞ்சீலம் ... ... *
ஆர்ந்துநிறைவேகவதிகிருதமாலி ... ... ... *
யாமெனப்பேர்படைத்துவைகையார்க்கும்அன்பு ... *
கூர்ந்துஇகபரபலன்தந்ததிவளங்கள் ... ... *
கொழித்துத்தான்விளங்கியதுசெழித்துத்தானே... (௱உ)

————(]*()*[)————

விருத்தம்.

பெருகன்னக்குழியும்வைகைப்-பிரளயநதியும்ஈசர் ... ... *
அருகழைத்ததிதுகேட்போர்-அவனியில்ச்சிறந்துவாழ்வார் ... *
இருநிலம்வாழ்கஈசர்-எழுகடல்அழைத்தஒன்பான் ... ... *
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடஉரைசெய்வேனே, ... (௱௩)



அன்னக்குழியும் - வைகையும்அழைத்த
திருவிளையாடல் - முற்றிற்று
ஆ திருவிருத்தம் - ௫ - பதம் - ௩ . ஆ அ.

——(:*:)——

ஆ பாயிரம் - உள்ப்படத்-திருவிளையாடல்- அ .க்கு. வெண்பா-க.
விருத்தம் - ௱உ- பதம் - அஉ
ஆ கவிதை - ௱அ௫



ஒன்பதாவது

## ஏழுகடலழைத்ததிருவிளையாடல்.

———(:)(*)(:)———

விருத்தம்.

மருவன்னக்குழிவைகைஅழைத்தபின்பு ... *
மாநிலங்காத்திடுங்தேசமன்னரெல்லாஞ்
செருவொழிந்துநின்றுதொழமதுரைச்செங்கோல் ... *
செலுத்துசுந்தரேசரிடம்தினமும்வந்து ... *
தரும்அருள்பெற்றேமுனிவர்செல்லுவார்கள ... *
தமனோர்நாள்சென்றுவிடைகொண்டுமீண்டு ... *
வருபொழுதுபொன்மாலைதொழுதுபாவம் ... *
மாற்றுத்வம்உரையுமென்றுள்சாற்றுவானே (௱௬)

பதம் - மத்தியமாவதிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி ]

பாவம்அகலத்தவ - மூவகைஅதனைப் - பாவையேகேளாய்

அநுபல்லவி.

மேவுமானதம் - வாசிக ... மெனவும்
மிகவுயருங்கா ... யிகம்எனவினவும்

பாவம்

[ சரணங்கள். ]

(க) தானந்தயவுசிவத்-தியானம்பொறுமைபஞ்
சயிந்திரியமடக்கமுதல் ... ... ஆதி
ஆனதனந்தமிது-மானதம்பஞ்சாட்
சரத்தைஅனுதினமும் ... ... ஓதி
ஞானம்அருளுமனுப் - பஞ்சசாந்தி ... முறை
நவிலுஞ்சதவுருத் - திரந்தோத்திர முறை
வானமகிழ்புண்ணிய-புராணகதையின் துறை
மாசில்லாவனந்தம் - வாசிகத்தி னிறை

பாவம்

(உ) கூற்றையடர்ந்துமதிக் - கீற்றைஅணிந்தபரன்
கோயிலைவலம்வந்து ... ... பூசித்து
வீற்றிருந்திடும்இந்தமூர்த்திஆலயந்தோறும்
விளங்குமகிமைகண்டு ... ... நேசித்து
போற்றிக்கங்கைமுதல்ப் - பலநதிகளும்ஆடிப்
புண்ணியதீர்த்தங்களெங் - கெங்குஞ்சென்றுமெய்வாடி

யாத்திரைசெய்துமிக-வருந்திப்பலன்கள் தேடி
யாவருங்கதிபெறுங்-காயிகம்இது நாடி
பாவம்

(ங) கவனமாகச்செய்யுந் - தவமிம்மூன்றினுக்குள்
காயிகதவமே ... ... ... சிலாக்கியம்
அவையில்மேன்மைபெறுந் - தவநதிஎங்கும்போய்
ஆடிவருவதே ... ... யோக்கியம்
புவனமீதுபல -நதிகளெல்லாஞ் ... சென்று
புணரியில்அடங்குவ - தாலேகே ளொன்று
கவலையில்லாமலே - மகிழ்வுடனே ... இன்று
கடலில்மூழ்கிவரு - வதுவேமிக ... நன்று
பாவம்-அங.

---

விருத்தம்.

என்றுமாமுனிவன்கூற - வேகடலாடஅன்னை ... ... *
சென்றிடவேணுமென்று - திருமகட்குரைக்கச்செல்வி ... *
அன்றுதன் கணவற்கோத - ஐயனேர்கடலோபோதும் ... *
இன்றுபாரெனப்பேராழி - ஏழும்அங்கழைத்திட்டாரே ... (௱௫)

பதம்-ஆரபிராகம்-ஆதிதாளம்.

[பல்லவி.]

அதிசயம்இதுபாரும் - எழுகடல் - அழைத்ததை அணைவோரும்

[அநுபல்லவி.]

மதுராபுரிமீன - லோசனையாள் சொல்ல
மகிழ்ந்துசுந்தரேசு - வரர்மாமிக்காக நல்ல
அதி

[சரணங்கள்.]

(க) துண்டவெண்மதித் - திரளெனநிறை ... சங்கும்
சுருவும்நெருங்கநுரை - துகிலெனவே ... விளங்கும்
அண்டமுகடுமுட்டி - மணிகொழித்துல கெங்கும்
அதிரஅலைஎறிந்து - ஆரபாரமாய்ப் பொங்கும்
அதி

(உ) காணுமதுரையஞ்சிக் - கலிமுடிவதில்ச் ... செய்ப
கமலன்படைப்புமாறுங் - காலமோஎன்ன ஐயன்

ஆணையினாலஞ்சி - விமலர்தமது ... ... துய்ய
அடியில் அடங்கினவர் - போல அடங்கி ... உய்ய
அதி

(௯) தன்வண்ணமேழ்கடலின் - றனிவண்ணமோ டொத்துத்
தமனியமலர்ப்பொய்கை - பொலிவெய்திட முற்று
மன்வண்ணமெனஎட்டு - வண்ணமுடன் ... மிகுத்து
வரன்சுந்தரேசர்சன் - னிதிக்குக்கீழ்பா ... லுற்று
அதி- அ௪.



கலித்துறை.

விடமேயுதவினனென்று முனியுண்ண-விட்டும்உன் ... *
திடமேஅழைத்து தண்டித்துச்சிறையிட - எண்ணுமிந்த ... *
அடமேஒழிந்தருள்என் றேழ்கடலும் - அமலர்மலர்த் ... *
தடமேகதியென வீழ்ந்ததுபோல் எதிர்சார்ந்ததுவே (௱௬)



விருத்தம்.

கருதுவர்க்கடலோடேழு - கடலையும்அழைத்தலீலை ...*
இருதயமகிழ்ந்துகேட்போர்-இன்பசாகரத்தில்வாழ்வார் *
அருமலையத்துவசத்தென் னனைஅழைத்திட்டபத்தாங் ...*
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடஉரைசெய்வேனே ... (௱௭)
எழுகடல்அழைத்த-திருவிளையாடல்-முற்றிற்று.



ஆ திருவிருத்தம்-௯- கலித்துறை - ௧- பதம்-௨-ஆ ௬.



ஆ பாயிரம்-உள்ப்படத்-திருவிளையாடல்-௯க்கு -வெண்பா -௧-
கலித்துறை-௧- விருத்தம்-௱௰-பதம்-அ௪.
ஆ கவிதை -௱௯௬.

பத்தாவது

மலையத்துவசபாண்டியனை

## அழைத்ததிருவிளையாடல்.

விருத்தம்.

பொங்கும்எழுகடல்அழைத்தபின்புவிண்ணோர் ... *
பூதலத்தோர்தொழச்செங்கோல்பூண்டுமின்னுங் *
துங்கமணிமுடிபுனைந்தமதுரைச்சோம ... *
சுந்தரர்சொல்லால்க்கயற்கட்டோகைசென்று ... *
அங்கெழுந்தஎழுகடல்நீராடென்றன்னைக் ... *
கறையஅவள்மறையவரைஅழைத்துமேலாய்த் ... *
தங்குகடல்ஆடுமுறைகேட்டுநெஞ்சந் ... *
தளம்புவாள்மகட்கிதனைவிளம்புவாளே (௱அ)

பதம் -காம்போதிராகம்-ஆதிதாளம்.

[பல்லவி]

தனியேகடலாடலாகாதே - என்று - சாற்றுகிறார்மறையோர்மாதே

[ அநுபல்லவி ]

கனியேஉன்னுடனொருசுதனற்றுலும் உன்னைக்
காணத்தவஞ்செய்தஎன் - கணவனைஅற்றஎன்னை
தனியே

(சரணங்கள்.)

(க) கொண்டபுருஷன்கையை - கோத்துநீராட ... நன்று
குறித்தமைந்தன்கைபற்றிக் - கொண்டுமூழ்குவர்சென்று
ரெண்டுந்தப்பினல்ஒரு - பசுவின்றன்னிளங் ... கன்று
நெடுவால்பிடித்துக்கொண்டு - நீராடுவதாம் ... இன்று
தனியே

(உ) பழுதுவருமோஉன்னைப் - படைத்தவர்க்குநான்... பாவி
பாவமுன்என்செய்தேனோ - பலித்துதிகத்தில்... மேவி
எழுதாப்பொறிக்கிஇனி - அழுதென்னகூவிக் ... கூவி
இட்டதிருக்கஆசைப் - பட்டாவதென்ன ... தேவி
தனியே

(ஈ) கனமாயுந்தனைப்பெற்று - காணுதெல்லாங் ... கண்டு
கழித்தேன்என்பதம்இந்த - உலகில்எவருக் ... குண்டு
எனஇருந்தும்பசுவின் - கன்றின்வால்பற்றிக் ... கொண்டு
எழுகடல்ஆடுவேனோ - எவரும்நகைக்க ... விண்டு
தனியே- அடு.

## ௰-வது-மலையத்துவச பாண்டியனை அழைத்தது.

விருத்தம்.

இன்னபடிஉரைத்தஅன்னேகுறையைச்சுந்த ... *
ரேசரிடமீனவள்சென்றியம்பக்கூடல் ... *
மன்னவனும்அரன்மயைத்துவசன்றன்னை ... *
மனதிலெண்ணஇந்திரனேடமர்ந்திருந்த ... *
பொன்னவிராசனநீங்கிஅமரர்போற்றப் ... *
புதுமையதாய்உயர்மலையத்துவசபாண்டியன் ... *
தன்னகரில்அனைவருங்கண்டிறைஞ்சவந்து ... *
சார்ந்திட்டான்மனமகிழ்ச்சிசேர்ந்திட்டானே (௱௬)

பதம்-கலியாணிராகம் -சாப்புதாளம்.

[பல்லவி,]

மலையத்துவசபாண்டியன் - தெய்வதேகத்துடன்
மதுராபுரியில்வந்தானே

[அநுபல்லவி.]

நிலையற்றவிண்பதமும் - பெரிதல்லவெனநீக்கி
நீங்காதபதந்தரு- நிமலர்அருளை நோக்கி
மலை

[சரணங்கள் ]

(௧) பகலவன்தேருடனிறங்கியதெனஒளி
பரந்தவிமானம்வந் ... ... துதிக்க - அதில்
நிகரில்லாமன்னனை - நிதிகண்டதுபோல்க்கண்டு
நிலத்தில்யாவர்களுந் ... ... துதிக்க
நகரிலுள்ளோர்கன விலுங்காணக்கிடையாத
நரபதிமுகங்கண்டு ... ... கதிக்க-அங்கே
சகலராஜர்களும் -அமைச்சருந்தளங்களுந்
தங்கள்நிருபன்எங்கே - எங்கேயென்று குதிக்க
மலை

(௨) பெருமையாகஅத்தி - பூத்ததுபோல்க்கண்ட
பேரெல்லாம்அதிசயித் ... ... துள்ள-மதில்
உருகுபொன்மாலைகற் பல்லோஇறந்தவனிவ்
வுலகில்வந்தானென்று ... ... துள்ள
மருகனைஐயனிடத்தில்வந்தேமன்னன்
வணங்குமுன்னனைவரும் ... ... விள்ள- தமக்
கருமைமாமனென்ன - முறைமைஅதுவிளங்க
ஐயன்கையமத்திப் - பையத்தழுவிக் கொள்ள
மலை

(௩) கன்னிதடாதகை- தன்னைக்கண்டானந்தக்
கண்ணீர்சொரிந்தனைத் ... ... தன்று- எந்தன்
அன்னமேஉனைப்பெற்று- நான்பெற்றபேறினி-
ஆர்பெறப்போறார்கேள் ... ஒன்று
முன்னேஉன்திருமணங்காணுதகவலையும்
முடிந்ததுவிடிந்தது ... இன்று-இன்னம்
என்னவேணும்இந்திர-பதமும்பெற்றேனல்ல
இதமும்பெற்றேன்பிறப் - பேதிறப்பேதென்று
மலை - அசு.

---

விருத்தம்.

வருமலையத்துவசன்பொன் மாலையோடைந்தெழுத்தைக் ... *
கருதிமாமறையோரால்ச்சங் கல்பஞ்செய்தெழுகடல்க்குள்... *
இருவருங்கைகோத்தாடி யேகரைஏறிஈசன் ... ... *
திருவருள்நோக்கம்பெற்றுச் சிவவடிவாகினாரே ... ... (௱௰)

பதம் - மத்தியமாவதிராகம் - சாப்புதாளம்

பல்லவி.

மலையத்துவசனும்பொன் மாலையும்ஒருசிவ-வடிவானார்பாரும்

அநுபல்லவி.

அலைவுற்றபவம்அற்று - நிலையுற்றதவம்பெற்று
மலையத்

[ சரணங்கள், ]

(௧) விண்ணிலிருந்து - கதிர்தடு ... ... மாறி
விழுந்ததெனவே - எழுந்தொளி ... மீறி
கண்ணின்முன்னோர்- விமானம்வரத் ... தேறி
கடவுளருளால் - அவ்விமானத்தில் ... எறி
மலையத்

(௨) எறுமிவரை - விமானஞ்சுமந் ... ... தரு
ளீசருலகத்துக் - கேகுமப்போ ... தரு
மாறிமகளு - மருகனுமா ... ... மிரு
வருமணிக்கோவில்ப் - புகுதக்கண்டே ... ஒரு
மலையத்

(௩) அன்னையுமையனு - மகள்மருமகன் ... என்று
அன்புடனேநம்மை - ஆளவந்தார் ... இன்று
என்னவும்நாடித் - தொழுதுகொண்டே ... அன்று
எவர்களும்போற்றமேவ-சிவலோகம் அதில்ச்சென்று
மலையத் அ௭,

அழைத்தது.

கொச்சகம்.

சிவன்உலகினில்இவ்வாறு - சேர்ந்தனர்இவர்முன்செய்த ... *
தவஉருவாங்கயல்க்கட் - டையலாள்மகிழ்ந்துபோற்றி ... *
எவர்களுந்துதித்துக்கூறும் - எழில்பெறுசுந்தரேசர் ... *
செவிநிறைஅமுதாய்க்கொங்கைச் - செப்பினுள்செப்பினளே.

பதம் - சௌராஷ்டிரராகம் - அடதாளசாப்பு

பல்லவி.

காக்குங்கருணைவாரிதியே - மூவர் - கடவுளர்முனிவர்க்கும்பதியே

அநுபல்லவி.

ஆர்க்கும்அருள்நிறைந்து - அகிலமெங்கும்உறைந்து

காக்கும்

[சரணங்கள்]

(க) காமதேனுவினிளங்-கன்றுக்குக்குறை ... ஏது
கருத்திலதுபோலஎன் பொருட்டினாலே இப்போது
ஆமென்னன்னையோர்கடல் - ஆடவேணும்என் றோது
வதுகண்டெழுகடலும் - அழைத்தீரேபுவி மீது

காக்கும்

(உ) எழுகடல்அழைத்தபின் - எனதன்னையுடன் ... மூழ்க
இறந்தமன்னனையுமிங் - கழைத்தவர்குறை போக
தொழுமிருவர்களுக்குஞ் - சின்மயத்திவ்விய ... தேக
சுவரூபமுஞ்சிவலோக - சுகமுமீந்தீர்அன் ... பாக

காக்கும்

(௩) மகிமைபெருகியபெண் - கிளைபெருங்கிளை ... என்று
வளரும்இக்குலம்வாழை - அடிவாழையாய் நின்று
அகிலம்பாரம்பரிய - மாயாளவே ... யென்று
மருள்செய்யுந்தேவரீர்க் - கடியாளென்சொல்வதின்று

காக்கும்: அ அ.

கொச்சகம்.

மின்னரசியானஜெய-மீனவள்இவ்வாறுரைக்க ... *
அன்னவள்தன்எண்ணம்- அறிந்தேமனமகிழ்ந்து ... *
மன்னர்மன்னர்போற்றிசெய்ய - வந்தசுந்தரேசரெங்கள்
தென்னர்குலந்தழைக்கச்செங்கோல்செய்திருந்தாரே (௱௰உ)

விருத்தம்,

தருமலையத்துவசப்பேர் - தரித்தென்னனை அழைத்த ... ... *
பரிவிதுகேட்போர்எல்லாம் - பாரினில்ச்சிறந்துவாழ்வார் ... *
முருகவேளுக்கிரனை - முன்வருமொருபன்னென்றுங் ... ... *
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடஉரைசெய்வேனே (௱௰௩)

மலையத்துவசபாண்டியனைஅழைத்த- திருவிளையாடல்முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ௐ-கொச்சகம்-க-பதம்-ச-ஆ ௰ -ஆ-பாயிரம்உள்ளப டத் திருவிளையாடல்-௰-க்கு-வெண்பா-க-கலித்துறை-க- கொச்சகம்-க-விருத்தம்-௱௰-பதம்அ அ-ஆ கவிதை-உாக.



பதினொன்றாவது - உக்கிரபாண்டியன்

# திருஅவதாரஞ்செய்தருளிய திருவிளையாடல்.



விருத்தம்.

மலையத்துவசபாண்டியன்வந்து - மருவும்உயர்பொன்மாலையுடன்*
அலையுற்றிடும்ஏழ்கடல்மூழ்கி - அரனார்உலகம்அடைந்தபின்னாள்*
சிலைவிற்சுந்தரேசப்பேர்ச் - செழியர்தமக்குத்தடாதகைபால் *
உலையிற்காய்ந்தசுடர்வடிவேல் - உக்ரபாண்டியன்உதித்தானோமிசு

பதம் - பந்துவராளிராகம் - ரூபகசாப்புதாளம்

[பல்லவி.]

சண்முகேசனே -உக்ரபாண்டியனாகத் - தானவதரித்தான்

[அநுபல்லவி]

விண்முனிவோர்தொழவேல்கொண்டதீர -வீரவடிவுள்ளசூரசம்மார

சண்

சரணங்கள்.

(க) அடுத்தசோம - வாரம்ஆதிரை
அணுகியசுப ... தினமும் - தன
தாட்சியாஞ்சு - க்ஷேத்ரத்தில்க்குரு
அமர்ந்தஹோரிலக் ... கினமும் - வந்து
தொடுத்தசுபவே - ளையினில்த்தேவதுந்
துமியுமறை ... யினமும்- மிகத்
தொனிக்கத்தேவர் - கற்பகமலர்
சொரியமுனிவர் ... மனமும் - மிகு
சுகமும்தரும-முகமும்மறையோர்-மகமும்இந்தவை-யகமுந்
சண் [தழைக்க

(உ) கயல்க்கண்ணாள்மன- மகிழத்திருவும்
கலைமின்னும்புகழ் ... படிக்கத் - திசை
காக்குங்கரியும் - நாகமுஞ்சுமை
கழிந்ததெனவே ... நடிக்க - மாவி
ஜயக்கொடிக்கெல் லாமேலதாகத்
தருங்கயல்க்கொடி ... பிடிக்கச்-செம்பொற்
சயிலம்வருணன் - முகிலோடிந்திரன்
தனக்கும்இடக்கோள் ... துடிக்கப் - புவி
தாங்கவேகுறை-நீங்கவேதென்னா-டோங்கவேகன -பாங்
சண் [கதாகவே

## ௰௧-வது-உக்கிரபாண்டியன திருஅவதாரஞ்செய்தது.

(ரு) கோதில்லாததந்-தாயுந்தந்தையுங்
கொண்டகோலத்துக் ... கேற்கச் - சுதீ
கோடிபாலசூரியோதயம்போலக்
குவலயந்தனைக் ... கார்க்க-இந்த
மேதினிபுகழ்பாண்டியன்குலம்
விளங்கியேகலி ... தீர்க்க - அந்த
விண்ணுள்ளோர்களும்மண்ணுள்ளோர்களும்
மிகுந்தபுதுமை ... பார்க்க- மலர்
வேதனும்அறி-யாதகனவி-நோதன்அகில-நாதனுகிய
சண் - அகூ



விருத்தம்.

உக்கிரபாண்டியன்இவ்வாறுதயமாய்நா ... *
ளொருவண்ணம்பொழுதொருமேனியதாயாரும் *
அக்குமரனேஇவனென்றிடவளர்ந்து ... *
ஐந்தாண்டில்உபநயனம்அதுவும்பெற்று
மிக்கஅறிவாற்சகலகலையும்வில்வாள் ... *
வீரமும்வெம்பரிகரிதேர்விடுசமத்தும் *
நற்குருவால்அறிந்துபத்துவயதாய்எங்கும் ... *
நாடினுன்மகிழ்ந்துவிளையாடினுனே ... (௱௰௫)

பதம் - மத்தியமாவதிராகம் - சாப்புதாளம்

[ கண்ணிகள். ]

(க) சுந்தரமாக-நிறைந்ததுகிலுஞ்சி
றந்தபணிகளுஞ் ... சூடுவான் - தன்னைச்
சூழவெழுந்துயர்- மீளிகள்போல்வரு
தோழருடன்விளை ... யாடுவான்
தந்தியுமற்றெரு-தந்தியும்போர்செய்யத்
தந்திரமாய்ச்சண்டை ... மூட்டுவான் - நல்ல
தகருடன்மற்ருேர்- தகரும்பொருதித்
தகரும்படிக்கமர் ... காட்டுவான்

(உ) சேவலுமற்றெரு- சேவலும்போர்செய்பச்
சேவலன்வேடிக்கை ... பார்ப்பான் - வெகு
திட்டமாய்மைந்தரோ- டிஷ்டமுடன்மல்லுக்
கட்டியேதோள்வலி ... சேர்ப்பான்
ஆவலுடன்விண்ணில் - தாவியேஎங்குமு
லவிவரப்பரி ... ... விடுவான் - தொழும்

அச்சுடரோனிட - பச்சைத்துரகமும்
அச்சமுறவட்டம் ... இடுவான்
(௩) எண்டிசையானையுங்-கொண்டலும்அஞ்சவே
துண்டமதக்கயம் ... ஏறுவான் - உல
கெங்கும்வணங்கவே-தங்கமலையும்ந
டுங்கவேதேர்மிசை ... மீறுவான்
அண்டர்புகழ்ந்திடும்-வண்டுறுமாமலர்த்
தண்டலைவாவிகள் ... ... தேடுவான் - வைகை
ஆற்றினுலாவியே-நாற்றிசையோர்தொழ
தோற்றிமகிழ்வுடன் ... ஆடுவான்
(௪) வட்டமதிதொட-எட்டும்பொதிகையில்
இஷ்டமாய்வேட்டைக்கு ... நண்ணுவான் - அங்கு
வாசஞ்செய்மாதவர்-ஆசிமொழிந்தன்பு
பேசித்தருங்கனி ... உண்ணுவான்
மட்டில்லாமன்னர்கை-கட்டிவரச்சிங்கக்
குட்டிஎனவேஉ ... லாவுவான் - கணை
மாரன்இவனல்ல- மாரன்இவனல்ல
மாறன்இவனென்று ... மேவுவான் (கூ0)

——[-:-]——

விருத்தம்,

உலவிஇவ்வாறைமூன்றுவயதாய்வேலும் ... *
உயர்மயிலுந்தம்மிறைவன்இவனேஎன்று ... *
நலமுறவேவந்தருகில்உற்றுப்போலே ... *
நாரியரும்அவர்விழியுமருங்கில்மொய்க்க ... *
மலர்மதனைவென்றதிருவழகனை
மைந்தன்உக்கிரபாண்டியன்றன் வடிவையாய்ந்த
கலைகணிநற்புருடவிலக்கணம்ஈதென்று
காணுவார்விடவரவம்பூணுவாரே (ா0௬)

பதம் - சாரங்கராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி ]

புருஷலக்ஷணம்இது தானே - எல்லாம்
பொருந்தும் இவனேகனவானே

[ அநுபல்லவி ]

மருவும்அடிக்கைமூக்கு-வயிறுபுயங்கள் ... நெற்றி
மார்பிவ்வாறுமுயர்ந்-திடில்செல்வமிகும்வெற்றி

புருஷ

ஙக-வது-உக்கிரபாண்டியன்
திருவவதாரஞ்செய்தது.

[ சரணங்கள். ]

(க) கன்னங்கண்மூக்கிரு - கையுடன்னடு ... நெஞ்சும்
கா ணும்ஐந்திவைநீண்டால் - கனநன்மைபகையஞ்சும்
தன்னகம்விரல்க்கணு - தந்தம்மயிர்தோ ... லஞ்சும்
தான்மெலிந்திடில்ஆயுள் - தழைத்திடும்புகழ்மிஞ்சும்
புருஷ

(உ) கோசம்மலர்க்கைநாக்கு - முதுகுடனே ... நாலும்
குறுகிடில்ப்பாக்கியம் - கூடிவரும்அப் பாலும்
ஓசைநாபிபிலம் - மூன்றும்ஆழ்ந்தெக் ... காலும்
உள்ளதுமேன்மையை - உதவுமேமென்... மேலும்
புருஷ

(ங) உள்ளங்கால்கைநகம் - கட்கடைஉத ... டாறும்
உண்ணுக்கும்சிவப் -புறில்த்திருவருள்... ஊறும்
விள்ளுந்தலைநெற்றிரெண்-டகன்றிடில்நன்மை மீறும்
மிகும்இம்முப்பத்திரண்டு -மேமேதினியோர் கூறும்
புருஷ ஙஙக.

———(*)———

விருத்தம்,

இலக்கணங்கள்இவைஉக்கிரபாண்டியனுக்கே ... *
இசைந்ததெனப்பார்த்துலகைஎல்லாந்தாங்கும் *
வனுத்தயவுகிர்த்திதெய்வபத்திவீறு ... ... *
மகிழ்ச்சிதரல்எவ்வுயிர்க்கும்மாறுதன்பு... ... *
வெலற்கரியார்தம்மைவெல்லுந்தீரம்என்றும் ... *
மேலவர்க்கும்அரியதுசெய்வித்தல்எல்லாம் ... *
பிலத்தவனும்என்றுமுன்புமணமுடித்து ... ... *
பின்புமுடிசூட்டஅரன்பிரியமுற்றுரே ... (௱ஙஎ)

விருத்தம்,

தரணியில்உக்ரபாண்டியன்-தான்அவதரித்தலீலை ... *
இருசெவியுற்றோர்நல்வாழ்-வெய்துவாருக்ரனுக்குக் ... *
குருதிசார்-வளை-வேல்-செண்டு-கொடுத்திட்டபன்னிரண்டாந் ... *
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடஉரைசெய்வேனே (௱ஙஅ)

உக்கிரபாண்டியன்-திருவவதாரத் திருவிளையாடல் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ரு பதம்-ங ஆ-அ.

ஆ பாயிரம் உள்ப்படத் திருவிளையாடல் -ஙக-க்கு-வெண்பா-க-
கலித்துறை க கொச்சகம்-க-விருத்தம்-௱ஙரு-பதம்-ஙஙக-

ஆ கவிதை-உ௱ங.



பன்னிரண்டாவது

உக்கிரபாண்டியன்

## வளைவேல்செண்டு பெற்ற திருவிளையாடல்.



விருத்தம்.

உக்கிரபாண்டியன்பிறந்து - ஓங்கும்நாளில்அவன்றனக்கு ... *
மிக்ககுலமன்னவர்மகளாய்-விளங்கிவேட்கவேணுமென்று ... *
அக்கமணிசுந்தரபாண்டியன்- அகத்திலெண்ணஅதுவறிந்து ... *
தக்கவமைச்சர்கன்னிகைவி - சாரித்தார்பூரித்தாரே ...(௱௰௬)

பதம் - பைரவிராகம் - ரூபகதாளம்.

[ கண்ணிகள். ]

(௧) உக்கிரபாண்டிய - னுக்குமாமணம்
மெய்க்கவேசெய்யப் ... ... பூரித்தார் - அனை
வோருஞ்சொல்மந்திரி - மாருஞ்சென்றெழில்
சேருங்கன்னிவி ... ... சாரித்தார்
வைக்குமாமுடி - முக்யமன்னரில்
மிக்கொனுரென ... ... ... மதித்தார் - வட
மணவூர்தனில்ச் - சோமசேகரன்
குணவானென்ன ... ... விதித்தார்

(௨) வென்றிவேந்த - வன்மகளாகிய
நன்றுள்ளாள் - காந்தி ... ... மதியை - இன்று
வேட்கலாஞ்சென்று - கேட்கலாமென்று
நோக்கினர் - அந்தப் ... ... பதியை
அன்றிராவினில்க் கொன்றைவேணியர்
சென்றுசோம ... ... ...சேகரனும் - புவி
அதிபன்கன - வதில்முன்னின்று
மதுராபுரி ... ... ... யரனும்

(௩) உன்மகள்தனைத் தென்மதுரையில்
உக்கிரபாண்டியற்குச் ... ...செழித்து - மகிழ்ந்
துதவென்றுரை - யிதுவிண்டனர்
அதுகண்டவன் ... ... ... விழித்து
பின்விடிந்தஉ - டன்மகிழ்ந்தவன்
நன்மையானசொப் ... ... ... பனமே - நல்ல
பெரியோர்களும் - உரியோர்களுந்
தெரியச்செய் - தத் ... ... தினமே

வளைவேல்செண்டுபெற்றது.

(ச) சொந்தமாமகட் - கந்தமீனவன்
மைந்தனேவரன் ... என்றான்- என்று
துரைசோமசே - கரமன்னன்ம
துரைநோக்கியே ... சென்றான்
வந்தமார்க்கத்தில்ச்சுந்தரேசுவரர்
மந்திரிமார்களுங் ... கண்டார் - வரு
மன்னவாளங்கள் - தென்னர்சேய்க்குந்தன்
பின்னைத்தாவென ... விண்டார் (கூஉ)

விருத்தம்.

திகழுமந்திரிமாருரைக்கமகிழ்ந்துசோம ... *
சேகரன்தான்கனவுகண்டசெயலுஞ்சொல்லி ... *
மகளையருள்வேனெனவேயுரைத்துக்காந்தி ... *
மதியொடுதன்மனைவியருமந்திரிமாரும் ... *
துகளறுநற்றளங்களுடன்மதுரைசார்ந்து ... *
சோமசுந்தரபாண்டியன்தனைவணங்கி ... *
மிகமகிழ்வாயிருந்தார்கள்மணநாள்வைத்து ... *
விரித்திட்டார்நகரைஅலங்கரித்திட்டாரே (ருஉழ)

பதம் - புன்னாகவராளிராகம் - ஆதிதாளம்.

[கண்ணிகள்]

(க) மங்களமுரசடித்தார் - தேசதேச
மன்னர்க்குத்திருமுக - முன்னேயனுப்பிமிகச்
சொர்னமயமாய்நகர் - தன்னைச்சோடித்தார்
தங்கக்காவணம்இடுவார் - உயர்அன்ன
சத்திரங்களுஞ்செம்பொ - னுத்திரங்களுமணிச்
சித்திரங்களிலும்வி - சித்திரஞ்செய்வார்

(உ) வாசலில்க்கோலம்இடுவார் - உயர்மத
வாரணமுஞ்சிறந்த - வாரணமுமுழங்க
ஆரங்கள்நிறைத்துச்சிங் - காரங்கள்செய்வார்
தேசுளகொடிநடுவார் - சந்தனச்
சேறுமிர்கமதமும் - மீறுபுதுமதுரம்
ஊறுமலரும்வீதி - தோறுநிறைப்பார்

(ங) காசினிமன்னவரெல்லாந் - திருமுகங்
கண்டுமனமகிழ்ந்து - ரெண்டுகையாலும்வாங்கிக்
கொண்டுமுடிமேல்வைத்துத்- தண்டுதளங்கள்

ஓசையிடவேஎழுந்தார் - புகழுறை
பூரன்பெருமையுயர் - சேரன்முதலாயுள்ள
ஓரன்பத்தாறுதேசத் - தாரனைவர்
(௪) முனிவர்கள்மறையவரும் - கனம்பெறு
மூவரும்மணிமுடித் - தேவருந்திசையுறை
யாவருங்கடலென - மேவவருமா
மனைவியர்தனையருடன் - மதுரையில்
வந்தனர்முறைமுறை - சுந்தரவிமலர்தம்
விந்தமலரடிப - ணிந்தனர்அன்பாய் (௯௫)

---

விருத்தம்.

நன்னகரில்மணங்காணவந்தோர்க்கெல்லாம் ... *
நலமிகுந்தவரிசைநல்கிநாளும்ஓங்கும் ... *
தென்னர்பிரானனசுந்தரேசர்சோம ... ... *
சேகரன்றன்மகள்வடிவைப்பார்த்துமெச்ச ... *
அன்னதுகண்டேதேவர்குருவாம்வியாழன் ... *
ஆங்குமுன்னூல்வழியாயாராய்ந்துநோக்கி ... *
மின்னனார்க்குரியஇலக்கணங்களெல்லாம் ... *
மேதினியில்அறியஅன்றுவிளம்புவாரே ... (௱உக)

பதம் - அசாவேரிராகம்- ஆதிதாளம்.

[ பல்லவி. ]

மங்கையர்க்கிதுஇலக்கணமே - காந்தி - மதிஇவள்க்குளதிந்தவணமே

[ அநுபல்லவி. ]

செங்கண்யானைமஸ்தகம் - போலத்திரண்டுயர்ந்த
சென்னியாள்வயது - தீர்க்கமுள்ளவள் இந்த
மங்கை

[ சரணங்கள். ]

(க) கறுத்துநெருங்கிநீண்டு - தழைத்துமிர்துவதாகி
கடைபிளவாமல்க் ... ... ... குழன்று
நெறித்துவாசனையுற்று - நெய்த்தகுழலிபதி
நேசபத்தினியாவ ... ... ... ளென்று
முறித்தமதிபோலவே - நரம்புரோமமற்று
மூவிரலகலம் ... ... ... அகன்று
குறிக்கத்தசைந்தநெற்றி - யுள்ளவள்ஆரோக்கியம்
கொண்டுகமலத்திரு ... ... ... வென்று

வளைவேல்செண்டுபெற்றது.

திறத்தகணவன்மெச்சச்சுகமாவள்வெண்மை கொண்டு
சேலெனப்பாலென்னத் - திகழ்நடுவிழி வண்டு
நிறத்துடனீண்டுபொற் - குழைகிழிக்கு மிரண்டு
நேத்ரம்உள்ளகன்னிக்கு- நிகரெவ்வுலகில் உண்டு

மங்கை

(உ) கருப்புவில்ப்புருவமும் - திரண்டுஇரண்டுதுளை
களுமொத்துக்கமலப்பூ ... ... மேலே
இருக்கும்எள்மலரென- மூக்கும்மடல்சுழிக
ளிரண்டும்நன்ருய்வள்ளை ... ... போலே
திருத்தமுடனேநீண்டு - தாழ்ந்துஉள்க்கவிழ்ந்திரு
செவிகளுள்ளவள்மென் ... ... மேலே
பெருங்கம்அடைகுவள்கண் ணுடிமண்டலமென்னப்
பிறங்கித்தசைந்துசெம்பொன் ... ணுலே
பொருத்துசாணைபோலும் - இருந்திடும்இருகன்னப்
பொர்ப்பும்கொவ்வைக்கனி- போன்றபவளவன்ன
முருக்கிதள்திரண்டிரு - புறமும்குவிந்து துன்ன
மொழிரேகைபோலுற்றுல்க் - கொழுநர்க்கிசைந்தமின்னும்

மங்கை

(௩) இடைவெளியற்றுமேல்கீ - ழிரண்டொழுங்குஞ்செவ்வாக
வேவெளுத்திடும்பல்லெண் ... ... ணுங்கும்
உடையவள்நன்மையே-புள்ளவள்சிவந்தும
னேக்கியமாய்மிருதுவா ... ... யோங்கும்
வடிவநாக்குள்ளவள் - இனியபொசிப்பையுண்பள்
வட்டமாய்த்துதைந்து ... ... பாங்கும்
அடவாயிருவிர - லளவிற்சிபுகமுள்ள
ததிநன்மைமறுவது ... ... ... நீங்கும்
உடுபதியெனக்கஞ்ச - மலரின்வாசம் ... பெற்று
உயர்முகமும்சங்கென - நால்விரலள ... வுற்று
மிடறுதிரண்டுஎழில்கொள் - ரேகைமூன் ஞெற்று
மிகத்தசைந்திடிலவள் - வேந்தன்மனைவி நற்றும்

மங்கை

(௪) மார்பகம்மூவறு - விரலகன்றுதசைந்து
மயிர்நரம்பகன் ... ... ... றுயர்ந்து
சாரும்இளமூங்கில்ப்போத் - தெனமயிர்நரம்பற்றுந்
தசைந்ததோளெழில் ... ... உகந்து

நேருடன்கணுக்கள்பெற் - றடவேசிறுத்துருண்டு
நீண்டமுன்கையுள்ளா ... ளுவந்து
சீர்பெருகுவள்சர - சரப்பற்றுருட்சியாகச்
சிவந்துமிருதுவாகச் ... சிறந்து
சூர்நகம்சேர்ந்திட்ட-விரலுமங்கள ரேகை
கொண்டுசிவந்துமலர்க் - கோகனம்போலேகை
ஏர்வையுள்ளவள்மாத-ரெவர்க்கும்மேலானதோகை
என்றும்வையகம்புகழ்ந்-திடவாழ்ந்திருப்பள்வாக்கை
மங்கை

(ரு) வட்டமாய்ப்பெருத்துக்-கனத்துப்பளபளத்து
மார்பிடங்கொண்டிறு ... மாந்து
கெட்டியாகியொரு-ஈர்க்கிடஇடமற்று
கிட்டிநெருங்கியொத்துச் ... சேர்ந்து
தொட்டில்மிர்துவான- பூர்ணகும்பமென
துலங்குமுலைகளும்வண் ... டேர்ந்து
ஒட்டியதெனரோம - ரேகையுமயிர்நரம்
புற்றிடாவயிறும் ... சார்ந்து
திட்டமுள்ளவள்க்கிச்சை- யாம்பொசிப்பெல்லாமெட்டும்
சிறந்தநீர்ச்சுழிபோலுந் - தியுமும்மதங்கள் கொட்டும்
துட்டயானைமஸ்தகம்-போலவேபிற் ... றட்டும்
துலங்குங்கன்னிகைக்குச்-சொலும்லட்சுமிகரம்கிட்டும்
மங்கை

(௬) நவிலிருபத்துநாலு-விரலள்வாயிடை
நரம்புமயிரற்றழ ... ... காக
புவிபுகழச்சிறுத்து-வட்டமாய்மெல்லிதாய்ப்
புகலும்நிதம்பமுள்ளாள் ... யோக
மெவர்மொழிகுவர்மயிர்-நரம்பற்றுவாழைத்தண்
டெனக்கரபமெனவும் ... நாகத்
துவணத்துதிக்கையெனத்-தொடையும்வட்டமாய்த்தசைந்
துளமுழந்தாளும்அ ... நேக
நவமுள்ளவள்க்கிசையும்-ரோமங்கள்நரம் பற்றுத்
தசைந்தடவேசிறுத்-திடுகணைக்கால் பெற்று
குவியும்ஆமைமுது-கெனத்திரண்டுயர் வுற்று
குலவும்புறங்காலுள்ளாள்- கோலத்திருவாமுற்றும்
மங்கை

வேல்வளைசெண்டுபெற்றது.

(எ) செங்கழுநீரித - ளனஉயர்ந்தவிரலும்
சேரும்அர்த்தசந்திரன் ... போலும்
தங்கும்நகமும்மிர் து- வாய்த்தசைந்தேபஞ்சுந்
தரிக்கப்பொருவுள்ளங் ... காலும்
அங்கனகமென்ன-மாந்தளிர்எனவும்வேர்வை
அணுகாமெய்யுந்திசை ... நாலும்
பொங்குமணமிருந்த- தாமரைபாதிரி
பொருந்தும்மல்லிகைஎக் ... காலும்
கொங்குறுசண்பகம்- நீலோத்பல ... வாசம்
கொண்டுகோகிலம்கிளிவீணையிசைபோல் நேச
மங்காதமொழியுள்ள - மாதர்தேச ... தேச
மகிழ்ந்திடுமிகுபாக்கிய - வதியாகுவள்பிர காச
மங்கை - கூச.

---

விருத்தம்.

வழுத்துமிவைகேசாதிபாதமீறாய் ... *
மருவுமிலக்கணங்களெல்லாம்வரிசையாகச் *
செழித்துவளர்காந்திமதிஇவட்கேநன்றாய்ச் ... *
சேர்ந்துதிவைஎவர்க்குமரிதாகுமென்று *
அழுத்தமுதுமறைஅறிவியாழன்சொல்ல *
அனைவர்களுங்கேட்டுமகிழ்ந்தார்இம்மாதர் ... *
தொழத்தகும்வேளிவனெனவேஉக்கிரபாண்டியன் *
தோணுவான்மணக்கோலம்பூணுவானே. (௬௨௨)

பதம் - மோகனராகம்- ஆதிதாளம்.

[ கண்ணிகள். ]

(க) திருவளர் சீருள்தென் - மதுரா
புரிவளர் மீனவள்தன் - சுதனுயர்
மருவளர்மலர்நிறை - தருவளர்கரைவைகை
வருவளநீர்படிந்தான்

(உ) சேர்பொன்னுடைவிரித்தான் - மருங்கினில்ச்
சூரியனெனவே தரித்தான்-மிர்கமதச்
சேர்வையும்நவமணிக் - கோர்வையும்உயர்ந்திட்ட
போர்வையுந்தோளில்த்தரித்தான்

(ங) கண்டசரங்கள் பூட்டினன் - இளநகை
வெண்டரளம்போல்க்காட்டினன்-மதிமுக

மண்டலம்எழில்கொள்ளக்- கொண்டலங்கிர்தமுள்ள
குண்டலங்காதில் மாட்டினுன்

(௪) சூழும்பொன்னூல்சேர்த்தான்-ஆரங்கள்
வாழும்புயத்தில் எர்த்தான்- முனிவர்கள்
வாழியுரைக்கஒற்றை - யாழிக்கதிர்போல்க்கணை
யாழிவிரலிற் கோர்த்தான்

(௫) தங்கவரைஞாணுந்தொட்டான் - நெற்றியில்
செங்கதிர்த்திலக மிட்டான் - குறமகள்
வங்கணமாகிய - தங்கணவனெனவே
கங்கணங்கையில் இட்டான்

(௬) மின்னுமகுடம் புனைந்தான் - சந்தனம்
பன்னீராலே நனைந்தான் - பணிசெய்து
மன்னவர்கொண்டாட - மின்னார்நடனமாடப்
பொன்மணவரையில் வந்தான் (௬௫)

கலித்துறை

கோலங்கொண்டுக்கிர- குமாரன்மனதுகுளிர்ந்துஇந்திர ... *
நீலங்கொண்டுற்ற- மணவரைமேவினன்னீண்டிணைந்த ... *
ஆலங்கொண்டார்விழிக் - காந்திமதியும்அருமறைகள் ... *
ஓலங்கொண்டோங்கும்- மணமண்டபந்தனில்-உற்றனளே ௱௨௩

பதம் - கௌளிபந்துராகம் - சாப்புதாளம்

பல்லவி.

மயில்போல்க் காந்திமதி - கல்யாண
மண்டபத்தில்வந்தாள்

[அநுபல்லவி]

அயில்பெறும்விழிவேலுடன்முரு-கையனைத்தேடிஆவலாய்வரு
மயில்

(௧) [சரணங்கள்] [சை
நடைகண்டன்னப்பெடைகளும்லச்சை-நாடிப்பதுங்கி- ஒடவேகச்
அடரும்முலையைஇடைக்குயிர்ப்பிச்சை-அருளென்றேசிலம்பிரைய

(௨) மயில் [வேபச்சை
சுரர்கள்அமுதைப்பழிக்கநீதித் - துரைகள்சுரர்போல்விழிக்கஆதித்
தருணவல்லிதெய்வானைமாதித்- தையலாமெனப்பையச் சாதி
மயில்

(௩) சுந்தரரத்தினப்பணிகள்மின்னத்- தோழிமார்கள்சூழ்ந்துதுன்ன
சந்திரவதனந்தளத ளென்னத் - தங்கப்பிரதமைதானெனச்சொன்ன
மயில் - ௬௬.

வேல்வளை செண்டு பெற்றது.

விருத்தம்.

வருகாந்திமதியுமணவரையில்உக்ர ... *
வழுதிவலப்பாகமுற்றுள்மறையோர்மன்னர் ... *
இருடியர்மூவர்கள்தேவர்சூழச்சுந்த ... *
ரேசுவரர்மீனாட்சியுடன்இருந்தார்ஆங்கு ... *
மருவுபத்னியுடன்சோமசேகரன்தன் ... *
மகளைமிகுசீருடனேதானமீந்தான் ... ... *
துரைஉக்ரபாண்டியன்கைக்கொண்டுமென்றலத் ... *
துறைசெய்தான்மறைமொழியின்முறைசெய்தானே ஙஉச

பதம் - குறிஞ்சிராகம் - ஆதிதாளம்
[ கண்ணிகள் ]

(க) வாசமலர்வாசன்முதல் - மாமுனிவோர்மறை மொழிய
ஆசையுடன்தேவரெல்லாம் - அற்புதமாமலர் பொழிய

(உ) சங்கீதமேளமுடன் - தகுவாத்தியங்களு ... மீற
பங்கயமாமுதலான-பாவையர்சோபனங் ... கூற

(ங) நாரதர்தும்புருவொடுகின் - னரர்சங்கீதம் ... பாட
ஊர்வசியும்மேனகையும் -உல்லாஸமுடன் ... ஆட

(ச) கந்தபொடிபுழுகுசட்டம் - கஸ்தூரியுடன் ... வாச
சந்தனமும்பன்னீரும் - தான்கலந்தேமிக ... வீச

(ரு உகந்ததொருதேவகுரு - உயர்சடங்கின்முறை தொடுக்க
மகிழ்ந்திடும்அக்கினிதேவன்-வளர்ந்துவலங்கொழுந் தெடுக்க

(சு) ஆணிப்பொன்னால்அலங்கரித்து-அற்புதமாயொளிபொருந்து
மாணிக்கமாமணிஇழைத்த -மணவரையின்மீ திருந்து

(எ) திருமங்கலத்தாரணமுஞ் -செய்துசடங்குகள முடித்தான்
கருணையுக்ரபாண்டியனுங் - காந்திமதிகைப்பி டித்தான்

---

விருத்தம்.

திருமணஞ்செய்தேஅக்கினி-தேவனைவலம்புரிந்து ... *
பொரிசொரிந்தமிமிதித்துப்- புகலருந்ததிபார்த்தேபொன் ... *
வருமறையோர்க்கீந்துக்ர -மாறன்தன்மனைவியோடும் ... *
பெருநகர்வலங்கொள்போது-பேதைமார்மயல்கொள்வாரோஉரு

பதம்-புன்னாகவராளிராகம்-ரூபகதாளசாப்பு.

[கண்ணிகள்.]

(க) சீர்வளர்மதுராபுரியெனச்
சிறக்கும்பாரிலே - மிக - நிறக்கும்ஊரிலே
கார்வளர்குழல்மீனவள் தரு
காண்டீபவீரன் - உக்கிர - பாண்டியதீரன்

(உ) காந்திமதியுடன்பவனிவர
கண்டுமொழியினர் - வரி - வண்டுவிழியினர்
சூழ்ந்துதுதித்துத்-தாழ்ந்துமதித்துச்
சுற்றிக்கொள்ளுவார்- மயல்-முற்றிவிள்ளுவார்

(௩) சின்னஞ்சிறிய-மருங்குதுவளச்
சேலைசோருவார் - குழல்- மாலைசோருவார்
மின்னேஇவனை-மருவஇதுவே
வேளையாமென்பார் - இவன் - வேளேயாமென்பார்

(௪) கந்துகமென்ன மீறுமாமுலைக்
கச்சைநீங்குவார் - மிக - லச்சைநீங்குவார்
வந்துகுயில்கள்-மயில்கள்போலே
வளையச்சோருவார் - கை -வளையைச்சோருவார்

(௫) கன்னிநாடிதைக்-காப்பவனம்மைக்
காரானேவென்பார் -முகம்-பாரானேவென்பார்
மன்னுமடவார்.சூழ்வதால்இவன்
மாரன்தானெனன்பார் -இவன்-மாறன்தானெனன்பார்

(௬) மன்னவாளந்தன்-முகத்தைப்பார்காந்தி
மதியோஅழகென்பார்-காந்தி-மதியோஅழகென்பார்
குன்னமாகவே-மெலிந்துகாதுக்
கொப்பையொழிகுவார்-தமக்- கொப்பையொழிகுவார்

(௭) மிஞ்சியுரைத்தால்-உனக்கெங்கள்மொழி
வேம்பாகுமேயென்பார்-மாலை-வேம்பாகுமேயென்பார்
அஞ்சுதலையுற்றோம்-இரங்கிச்செய்
ஆறுதலையென்பார்-உனக்குமுண்- டாறுதலையென்பார்

(௱௮)

வேல்வளைசெண்டுபெற்றது.

விருத்தம்,

மடவியர்இப்படியுருகப்பவனிவந்து ... *
மகிழ்ந்து இம்மைதனில்நன்மைதருமுன்னோனை *
அடவுடனேபணிந்துகயல்க்கண்ணிபாகர் ... *
அடியிணையுந்தொழுது அரமனையிலுற்றான் ... *
திடவிண்ணோர்முதல்எவர்க்கும்வரிசைநல்கிச் ... *
செலவனுப்பிமகிழ்ந்திருக்கும்நாளில்மாம ... *
குடமணிந்துசிறந்துஉக்கிரபாண்டியன்செங் ... *
கோல்பெற்றான்செண்டுவளைவேல்பெற்றானே (ளஉசு)

பதம்-சங்கராபரணராகம்-அடதாளசாப்பு.

பல்லவி.

பருவேல்வளைசெண்டு பெற்றான் - உக்ர
பாண்டியன்மணிமுடியுற்றான்

அநுபல்லவி.

திருமதுராபுரி - தனில்மநுநெறி ... கண்டு
செங்கோல்ச்செயுந்துரைத்-தனமுங்கனமுங்கொண்டு
பருவேல்

[ சரணங்கள் ]

(க) விளையும்பகையுனக்கிங் - கிரனுங்கட்லுமனம்
களையாமல்வேல்தனைப் ... ... போட்டுச்-சற்றும்
இளையாமல்க்கடல்தன்னை... ... ஓட்டு-இந்த
வளையால்இந்திரன்முடிமேல் ... மாட்டு-என்று
விளையாடல்புரிந்திடும்-விமலர்விளம்பக்கேட்டு
பருவேல்

(உ) பெருக்கமிகுந்தகொடு-முடியுள்ளமகமேரு
செருக்கடைந்திடும்அங்கே ... சென்று-கையில்
இருக்குமிச்செண்டினால் ... வென்று-அதின்
தருக்கறசிதிகொள்வாய் ... என்று-மிக
உருக்கமுடனேஅரன்உரைத்தருளவேஅன்று
பருவேல்

(௩) சமதைசெய்துமகனே-தரணியைஆளென்று
சுமதியைநோக்கிநான் ... பெற்ற-இந்தக்
குமரனைக்காஎன்று ... மெத்தச்-சொல்லி
உமைதனைஒருபாகம் ... வைத்த-எங்கள்
விமலர்சுந்தரபாண்டியன் - நேசமுடன்கொடுத்த
பருவேல், கக

விருத்தம்,

மைந்தன்வேல்வளைசெண்டுதாங்கச்செம்பொன் ... *
மணிமுடியுஞ்சூட்டிஅரசாளவைத்து ... *
அந்தமுபர்கணங்களுந்தாமுந்தடா ... ... *
தகைப்பிராட்டியுமுன்போல்ஆகிச்சூழச் ... ... *
சுந்தரபாண்டியன்அஷ்டகெசங்கள்தாங்குஞ் ... *
சுடர்மணிக்கோயில்ப்புகுந்துசுபாவமுற்றார் ... *
சந்ததமுந்தொழுதுக்கிரபாண்டியன்செங்கோல்த் ... *
தாங்கினன்அரசுபுரிந்தோங்கினனே ... (ஈஉஎ)

---

விருத்தம்.

குருபரன்வளைவேல்செண்டு - கொண்டருளாடல்கேட்போர் ... *
வெருவுதல்ஒழிந்துவாழ்வார் - விண்ணவர்கோமான்ஏவும் ... *
இரைகடல்வற்றக்கூர்வேல் - எறிந்திடும்ஒருபன்மூன்றாந் ... *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடஉரைசெய்வேனே, ... (ஈஉஅ)

---

உக்கிரபாண்டியன் - வேல்வளைசெண்டுபெற்ற
திருவிளையாடல் - முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-கூ-கலித்துறை-க-பதம்- அ- ஆ ய அ.
ஆ பாயிரம் - உள்ப்படத் - திருவிளையாடல்- ய௨- க்கு- வெண்பா- க-
கலித்துறை - உ - கொச்சகம்-க- விருத்தம்-ஈஉச-பதம்-கூகூ,

---

ஆ கவிதை-உஈஉஎ.



பதின்மூன்றாவது

## கடல்சுவறவேல்எறிந்த திருவிளையாடல்.



விருத்தம்.

பேசுவேல்வளைசென்டுபெற்றபின்பு ... ... *
பேருலகந்தனையாண்டஉக்ரபாண்டியன் ... *
தேசிமகம்ஒருதொண்ணூற்றாறுசெய்தான் ... *
செய்புமந்தமகம்நூறுந்தீர்ந்தாற்சுந்த ... *
ரேசர்அருள்பெற்றுவிண்ணோர்எல்லாம்போற்ற ... *
இந்திரபதம்பெறவருவானென்னவெண்ணி ... *
வாசவனும்வருணனைப்பார்த்திதற்கென்செய்யும் ... *
வழிஎன்றான்மதுரையைநீஅழிஎன்றானே ... (ஹஉகூ)

பதம்- பந்துவராளிராகம்- ஆதிதாளம்.

[ பல்லவி. ]

வருணாநீஇந்த - மதுராபுரிதன்னை- மதியாதழிப்பாயே

[ அநுபல்லவி ]

ஒருகணமாகிலும் - தாமிசப்படுத் ... தாதே
யுகமுடிவெனஇந்த- உவர்க்கடலாவிப்போதே

வருணா

[ சரணங்கள். ]

(க) உக்கிரபாண்டியன்என்போன் - செய்பரிமகம் ... நூற்றுக்
கொருநான்குகுறைவது-முடிந்தால்அவனே ... கூற்று
மிக்கவென்பதம்பெற- வருவான்அதனை ... மாற்று
வெள்ளம்வருமுன்னணை-கோலவேணுமே ... பார்த்து

வருணா

(உ) மகிழும்நகுடன்குறு - முனியால்ஒழிந்தான் ... சென்று
மலையத்வசன்மகமோர்- வழியால்ஒழிந்து ... தன்று
பகரடிக்கடிவேலை - இதுதானநன்று ... ... நன்று
பாரொருதேழையானல்ப் - பசுபத்தினியாம் ... இன்று

வருணா

(ங) அரக்கர்க்கும்நமக்குந்தான் அடிக்கடிபகை ... நாட்டம்
அதுவும்போராதென்று - பெருத்தார்அரசர் ... கூட்டம்
சுரக்கும்பகைஊரச்சே-துடைக்காவிடில்ப்பின் ... வாட்டம்
தோனும்சிறபாக் கொருதோப்பாம்அது ... போராட்டம்

வருணா, ஈ.

விருத்தம்.

மாலைமந்தாரப்புயத்தோன் - வார்த்தைகேட்டுவருணன்மலர்ச் ... *
சோலைமதுரைதனையழிக்கத் - தொனிவாரிதியைவிடராகு ... *
மாலைமதியைவிழுங்கவரு - வதுபோல்வரஉக்கிரவழுதி ... ... *
வேலைசுவறவடிவேலை - விட்டான்கீர்த்திதொட்டானே ... (௱௩௰)

பதம் - சுருட்டிராகம் - ரூபகசாப்புதாளம்.

பல்லவி-

வேலைஅடங்க - உக்கிரபாண்டியன் - வேல்எறிந்தானே

[அநுபல்லவி]

மேலுலகில்இந்திரன்சொல்லாலே - வெகுண்டுவருணன்விடமென் }
விண்ணும்நடுங்க - மண்ணும்ஒடுங்க [மேலே }
மீறிஎழுமுகிலொத்திடங்கொடு - சீறிமதுரைஅழிக்கவந்திடு
வேலை

[ சரணங்கள். ]

(௧) இரவினில்நடு- நிசியில்எழுந்து- இருள்மலையெனத் ... திரண்டு
எட்டிஅண்டத்தைமுட்டியேஅலை எறிந்து இரைந்துகொண்டு
வரும்அலைபரி - மகரமீன்கரி - வங்கந்தேரென ... ... மண்டு
மற்படையொடுபொருத மாறன்மேல்வரும்படைஎனக்கண்டு
தரையிலேஎவ் - வுயிர்களுமாயத்
தருமலைகள்எல் - லாம்நிலைசாயச்
சத்தப்புயல்களு மயங்க - எத்திக்குகளுந் தியங்க
மெத்தப்பெருகியபயங்க - ரத்தைத்தரும் உயர்வங்க
வேலை

(௨) துரிதமாய்க்கடல்-வருவதுதனைச்- சுந்தரேசுவரர் ... மிக்க
சுதன்கனவினில்ச் - சித்தராய்வந்து - சொல்லவேஎழுந்தொக்க
மருவும்அமைச்ச- ருடனேகோட்டை- வாசல்கடந்து ... நிற்க
வருங்கடல்தன்னைக்-கண்டுஈதென்ன-மாயமென்றதி ... சயிக்க
கருதிக்கனவில்- வந்தது போலே
கடவுள்எதிர்வந்-தேகடல்மேலே
காலத்தழல் - போலுந் தட - வேல்விட்டிடு - வாஎன்றிட
ஞாலத்தில்எல் - லோருந்திட - மேலுற்றிட -வேநின்றட
வேலை

(௩). பண்டசுரரை- நீறதாக்கிய- படியெவருங் ... கொண்டாட்
பயந்துவருணன்- திடுக்கிட்டேநிலை - பதறிக்கதறி ... ஓட
மண்டலம்எங்குங் கிடுகிடென்னவே வலஞ்சுழட்டிவேல்போட
வளைத்தபனியைக்- கணத்திற்கரத்தால்- வரட்டுஞ்சுடர்போல்ச்
மண்டுநீரெல் - லாம்வேல்முனையுண்ண [சாட
வற்றியேகணைக்-கால்மட்டாய்நண்ண

மதுராபுரியும்வாழ - சதிராயெவருஞ் சூழ
பதிவாசவனுந்தாழ -எதிராய்ஙிறையும்ஆழ
வேலை ாக.

---

விருத்தம்.

சத்தமைக்கடல்தான்தென்னன் - தன்கணைக்கால்மட்டாகி ... *
வற்றஅவ்விடத்தில்ச்சித்தர் - வடிவமாய்வந்துஙின்ற ... ... *
வித்தகன்கௌரியோடு - விடைமிசை விண்ணில்த்தோன்றச் ... *
சுத்தனும்உக்கிரபாண்டியன் - துதித்திட்டான் - மதித்திட்டானே ()

பதம்-சாவேரிராகம் - ரூபகசாப்புதாளம்.

[கண்ணிகள்.]

(க) தேவதேவகௌரீசா - ஸுர- ஸேவிதாஸர் ... வேசா
பாவகல்மிஷநாச - மகானு-பாவாமகா ... தேவா
(உ) விமலாகர - கமலாசதுர் - வேதாவேத ... காந்தா
அமலாசுர - பூசிதாவே - தாந்தாகுண ... சாந்தா
(௩) சந்திரசேகர - சம்புகெங்கா - தராபுராந்தக ... தீரா
மந்திரதந்திரவி - நோதரூபம - யேசுவரா - ஓங்காரா
(௪) பவபஞ்சன - நவசுந்தர - பரமா - கிரி ... வாசா
சிவசங்கர - சிவசங்கர - சரணம்மது ... ரேசா(ஈஉ)

விருத்தம்.

துதியுரைத்து வழுதிதொழ விண்ணோர்ஐந்து ... *
துந்துமியுமுழக்கவிண்ணின்வழியாயீசர் ... *
மதிமுடித்தமணிக்கோயில் புகுந்தார்உக்ர ... *
வழுதியுஞ்சென் றடிதொழுது விடைபெற்றியாரும் *
அதிசயிக்க அரண்மனையில்மேவிஜயன் ... *
அருள்ப்பூசைக்கவ்வூர் தொட்டாழிமட்டும் ... *
திதிமிகுத்துவிளைவயல்சூழ்நகரமெல்லாஞ் ... *
சேர்த்திட்டான் இவ்வுலகைக்காத்திட்டானே. (ஈ௩உ)

விருத்தம்.

திரைசெறிகடலைவேலால்ச் - செயித்ததாம்இதனைக்கேட்போர் ... *
புரையுறுஜனனவேலை - போக்கிவாழ்ந்திருப்பார்விண்ணாட் ... *
டரசன்மாமுடிதெறிக்க - அணிவளையெறிபன்னுன்காந் ... *
திருவிளையாடல்தன்னைத் -தெரிந்திடஉரைசெய்வேனே (ஈ௩௩)

கடல்சுவற வேலெறிந்த - திருவிளையாடல் - முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் ௫க பதம் - ௩ ஆக அ-ஆகபாயிரம் உள்படத் திருவிளையாடல் க௩-க்கு -வெண்பா க- கலித்துறை உ. கொச்சகம்க- விருத்தம் கஉ௯ - பதம் ஈஉ - ஆக கவிதை -உஈ௩௫.



பதினேன்காவது

இந்திரன் முடிதெறிக்க

## வளைஎறிந்த திருவிளையாடல்.

விருத்தம்.

இலங்கும்உக்கிரபாண்டியன்கூர் வேலெறிந்து ... *
எழுங்கடலைவற்றச்செய் திட்டபின்னுள் ... *
துலங்கும்உலகாண்டிருக்கும் நாளில்மேகம் ... *
சொரியுமழையற்றிந்த வையம்எல்லாம் ... *
கலங்குவதால்ச்சோழனுடன் சேரன்உக்கிர ... *
கௌரியனும் பொதிகைமலைக் கேகியேயைம் ... *
புலன்குறுகும் அகஸ்தியமா முனியைக்கண்டு ... *
போற்றினர் பணிந்திதனைச் சாற்றினரே ... (௱௩௪)

பதம் -மத்தியமாவதிராகம்- அடதாளசாப்பு.

[பல்லவி.]

மழையற்றதே கும்ப......முனியே - செய்யும்
வகையெமக்கருள்செய்வீரினியே

அநுபல்லவி.

தழையும்புல்முதலான உயிர்களெல்லாம் நாட
தாய்முகங்காணுத -சேய்முகம்போல் வாட

மழை

[சரணங்கள்,]

(௧) நதிகுளம்கிணறோடை - எங்குநீரற்றுப் ... ... போச்சு
நல்லமறையோர் நித்திய - கர்மங்கட்குந்தாழ் ... வாச்சு
அதனால்ச்செங்கோல்புரி -அரசர்க்கன்றோ ... ... ஏச்சு
ஆகில்குடிகளுக்கப் - பாலென்னவிலை ... ... நீச்சு

மழை

(௨) வரவரநாளுக்கு-நாளாயக ... ... ... மிறங்க
வருத்தும்பசிமிகுந்து - எவருமன ... ... முறங்க
இரவலர்மிகுத்தீவோ - ரற்றுக்கலி ... ... பிறங்க
எங்குங்கொடியதாப - மிகுந்துலகங் ... ... கிறங்க

மழை

(௩) வையத்தில்ச்சிறப்பொடு - பூசனை ... ... செல்லாது
வானம்வறக்குமேல்வா-னோர்க்குமீண்டெனை ... ... ஓது
துய்யமறைமொழிபொய் யோதொல்லுலகின் ... ... மீது
சொரிவானஞ்சுருங்கத்தா-னம்சுருங்குமே ... ... ஏது

மழை-௱௩.

வளைஎறிந்தது.

விருத்தம்.

மன்னவர்ஈதுரைக்கவெய்யோன் சேய்முன்செல்ல ... *
வருவெள்ளிபின்செல்வதா லீராருண் ... *
டின்னம்வளமறுக்கும்மழை பெய்யச்செய்வோன் ... *
இந்திரனும்அவனிடஞ்சென் றியம்புமென்ன ... *
அன்னவன்முன்செல்லுவதெவ் வாறென்றேத ... *
அணிசோமவாரவிர தத்தையாற்றி ... *
முன்னவன்றன்அருள்பெற்றுல்ச் செல்வீரென்று ... *
முனிஇந்துவாரவிர்த முறைசொல்வாரே. (௱௩௫)

பதம்-சாவேரிராகம்- திரிபுடைதாளம்.

[பல்லவி.]

மகிமைபெறும்சோமவாரவிரதவிதியே-செய்ப-வர்க்கொல்லாந்திரு
மருவஉயர்கதிதருவர்உமா ... பதியே

அநுபல்லவி.

சகலதேவர்க்கும்உத்தமனும் . வேணி
தரித்தபரன்சக்திமாரிலுருத் திராணி
மிகவுத்தமிவிர்தங்களிலுத்தம மிது
விமலிதனக்குமுன்விமலருரைத் தது

மகிமை

(சரணங்கள்.)

(க) துதிகொள்மந்தரம்காசிமுதல்நற்
பதியில்இதுதொடுப்-பது ... தலம்
சோமசுந்தரர்க்குரியவாரமி
தாமதுரையிற்செய்வ-தே ... பலம்
மதிகொள்கார்த்திகைமார்கழிமுக்கியம்
மற்றெதிலுமுன்னெடுப்-பது ... நிலம்
வழுத்தும்மலமதி-யொழித்துமிகும்அமா
வாசைவருதின-மும் ... நலம்
உதவும்விடியுமுன்-னெழுந்துமதிமுடி
உத்தமனைஎண்ணி-நித்தியகர்ம்மமுடித்
ததன்பின்சங்கற்ப-பூர்வமாய்வடி
வாம்பொற்றுமரை-யாடிமுறைப்படி.

மகிமை

(உ) மிகவிபூதிருத்திராட்சமணிந்துசித்
திகணபதிதனைப் ... ... பூசித்து
விரும்பிச்சங்கல்ப்பம்செய்துசுந்தர
விமலர்பூசைதனில் ... ... நேசித்து
பகரும்பலஅபிஷேகஞ்செய்துநற்
றுகிலணிப்பணிப்ர ... ... காசித்து
பல்கும்சந்தனமலரிஞரங்கள்
மல்கச்சாற்றியு ... ... பாசித்து
தகுநெய்வேத்தியமும் - ஈரெட்டுப சாரம்
சகஸ்திரனுமவில்வார்ச் - சனைசெய்தன்னேரம்
நிகழ்பிழைஏதுவும்-பொறுத்தேஎன்வி சாரம்
நீக்குமென்றுபோற்ற-நினைத்ததெல்லாம்சாரம்

மகிமை

(௩) பூசைக்குரியவ-ரல்லார்பொருள்கொடுத்
தேசெய்வித்திரவுண்பா ... ... ரன்று
புகலவ்வூணற்றும்-நிகழ்சித்திரையற்றும்
பொருந்துநாற்சாமமும் ... ... நின்று
நேசமாயிரவும்-பூசைசெய்வார்ஆக
நிகழ்த்தும்ஐந்திதில்ஒன்றுக் ... ... கொன்று
நிலத்தில்உயர்ந்ததி-பலத்தையுதவுமே
நேர்வதொருவருஷம் ... ... என்று
பேசுமறைரெண்டு-மூன்றீரா ... ருண்டு
பின்பும்ஆயுள்-மட்டும்விரதம் பூண்டு
தேசுகொள்வ-ரெவரும்முடிவி ... லீண்டு
செய்வதுத்தியாபனம்- ஐமுகரைவேண்டு

மகிமை

(௪) ஆயுளளவும்-விர்தம்செய்பவர்முன்னுத்
யாபனம்செய்துபொய்-விடுத் ... திட்டே
அன்புசெய்வர்மதி-வாரம்தோறுமுத்தி
யாபனவிதியை-எடுத் ... ... திட்டே
நேயமுடன்சொல்வேன்-ஒருமண்டலம்வெகு
நேத்தியுடனேசெய்-தடுத் ... ... திட்டே
நிறையுந்தோரணம்-நறைகொள்மாலைகள்
நெருங்கவேமிகத்-தொடுத் ... ... திட்டே

வளைஎறிந்தது.

தூயமண்டபம் - குண்டம்அமைத் ... தங்கு
சொலுமுப்பதுகளஞ்-சுயர்வெள்ளியால்பொங்கு
தீயவிஷஅமு - தாகவுண்டு ... ... தங்கு
சிவனுருவதனைச்-செய்துவைத்தே ... எங்கும்

மகிமை

(ரு) குருமொழியாலுதயத்தில்-நித்தியகாமம்
குறையறவேசெய்து ... ... பத்தியே
கொண்டுபகல்முழு-தும்புண்ணியகதை
கூறக்கேட்டுப்பின் ... ... னத்தியே
இரவுதனில்நாலு - ஜாமம்சிவபூசை
யேசெய்தன்பது ... ... முத்தியே
இயம்புமூலமந்திரத்தாலோமம்நூற்
றெட்டுத்திரமும்ந ... ... டத்தியே
பரனைச்சகஸ்திர - நாமவில்வார்ச் ... சனை
பண்ணியேபஞ்சாட் - சரத்தால்அர்க்கியம்மதனை
பெருகவீந்துமறை - சொல்லிஓம வினை
பிரியமொடுசெய்து - பெறுவர்பதந் ... தனை

மகிமை

(சா) பூரணாகுதிசெய்துமறுதினம்
புகல்நித்தியகர்ம்மங்கள்தனை ... யுற்றே
புனிதமறையவர் - பதின்மூவர்கள்தம்மைப்
போற்றிச்சிவபத்தராய் ... வைத்தே
சேரும்ஆசனம்-தனிற்பரனோடுருத்
திராணியென்றெண்ணிக்குறை ... வற்றே
சிறப்புமிகச்செய்து-நிறக்கப்பூசனை
செய்துபணிந்தவர்அருள் ... பெற்றே
நேராகஅவர்முன்-கதலிஇலை ...விரித்து
நிறையஅரிசிகள்-சொரிந்துப சரித்து
க்ஷீரக்குடமும்வைத்-தேநமஸ் ...கரித்துச்
செழிக்கக்கொடுப்பது - தினம்புகழ்தரித்து

மகிமை

(எ) தானம்மிகச்செய்துபதின்மூவர்களையும்
தானனுப்பிஅன்பு ... புரிந்துமே
சற்குருவைப்பத்னியுடன்பீடிகையேற்றி
சம்புஅம்பிகைஎன்று ... பரிந்துமே

ஞானமுடன்பூசை-செய்துசோடச
நற்றானம்செய்துபூச் சொரிந்துமே
நமஸ்கரித்துஅனுப்பிப்பின்மறையூவர்
நன்மைத்தராதரம் தெரிந்துமே
ஆனவரிசைசெய்-தவருடன் இருந்து
அன்றுபொசிப்பது-விரதமிது திருந்து
வானோர்முனிவர்மா-லயனிந்திரன் வருந்து
மனிதருஞ்செய்தருள் - மருவுவார்பொருந்து
மகிமை-௱௪.



விருத்தம்.

விரதம்இதுசெய்வோர்முன்பலஜன்மத்தில் ... *
விளைந்தவினைதீர்ந்துமுத்திபெறுவார்கேட்போர் *
உரைசெய்வோர்இந்திரபதம்முறையேஈரேழ் ... *
உற்றுப்பின்முத்தியடைவார்களென்று ... *
கரகமுனிசொல்லஇதுகேட்டுஅன்று ... *
கருதும்இந்துவாரவிர்தம்செய்தேஇந்த ... *
அரசர்மூவர்களும்விண்மார்க்கங்கண்டு ... *
அன்புற்றார்இந்திரன்றன்முன்புற்றாரே. (௱௩௬)

பதம்-தோடிராகம்-ஆதிதாளம்.

[பல்லவி,]

சேரன்சோழனுடன்உக்கிரபாண்டியன்-இந்
திரன்இடஞ்சென்றதைக்கேளும்

[அநுபல்லவி,]

ஆரணம்புகழ்ந்திடுஞ்-சோமவார விர்தத்
தாலேசுந்தரேசர் - அருள்பெற்றே சுகுர்த
சேரன்

[சரணங்கள்]

(௧) அமரர்அமரும்விண்வழிகண்டுமூவரும்
அமராபதிதனக் கேக-இந்தக்
குமரனேடிருவரும்-வருவதைஇந்திரன்
குறித்துத்தனக்குத்தாழ் வாக
இமையவரால்மூன்-றாசனம்அமத்தச்செய
திருக்கும்போதில்இவர் ... போக
அமரர்கோன்இரு - வரையும்பார்த்திருமென்ன
அமர்ந்தார்அதுகண்டதி ... யோக-முள

ம்ச-வது-இந்திரன்முடிதெறிக்க
வளைஎறிந்தது.

உமையாள்திருமகன்-நம்மிலும்இவ னென்ன
உசத்தியென்றுநினைந்-திந்திரன்உடன் துன்ன
சமமாகஇந்திரன்-இவனேஅவனே என்னத்
தமனியரத்தினசிம்மா - சனத்தில்இருந்தான்மின்ன
சேரன்

(உ) அந்தரர்பதிமனங்கறுத்துப்பின்சேரன்சோ
ழனையும்அகமகிழ்ந்து நோக்கி-அங்கு
வந்தசெய்திகேட்டவர்நாட்டினில்மழை
வருஷிக்கவேசெய்து போக்கி
இந்தமன்னவனுக்கு வரிசைசெய்பவன் போல்
இருண்டமனத்தில்வஞ்சந் தேக்கி
சுந்தரப்பணிகொண்டு-வாருமென்றிந்திரன்
சொல்லஅளவற்றபேர் தூக்கி-கொண்டு
வந்தபொன்னாரத்தை-ஒருகையினால் வாங்கி
மாலைக்கடப்பமலர்-போலப்புயத்தில்த் தாங்கி
கந்தனேஇவனென்-றமரர்திடுக்கிட் டேங்கிக்
கருதஇந்திரன்அதி-சயமுற்றிடவே ஓங்கி
சேரன்

(ங) பாரம்பொருந்தியபொன்-னாரத்தைத்தாங்கிய
படியினால்இவருக் கின்று-முதல்
ஆரந்தாங்கியபாண்டியனெனும்பேரென்று
அமரர்கள்புகழுந் வின்று
தீரந்தனைப்புகழுந்-தேவேந்திரன்தன்னைச்
சிறிதும்எண்ணாமலே நன்று
நேரும்போதுபார்த்துக் கொள்வோங்கங்கையுமூன்று
நெடும்பிழைபொறுக்குமே என்று-வந்த
காரியந்தனையுங்கே-ளாமலேசின முந்தக்
கடுகுசிறுத்திட்டாலும் - காரம்போகுமோ இந்த
வீரன்இவனிடத்தி-லேன்வந்தோமென் றுகந்த
விண்ணவரூர்விட்டுத்-தன்னூர்க்குவந்தான் அந்த
சேரன்- ரு.

———()*()*()———

விருத்தம்.

இப்படிமன்னவர்இந்திரனிடம்போய்வந்தார் ... *
இருவர்நாடுஞ்செழிக்கப்பாண்டியநாடு ... *

வெப்பமுறப்பொதிகைவெற்பில்ச்சென்றுதென்னன் *
வேட்டைசெய்தான்புட்கலாவர்த்தமாதி ... *
மைப்புயல்நான்கும்மேயப்பிடித்துவந்து ... *
வலுவிலங்கிட்டருஞ்சிறையில் என்றும்வைத்தான் *
செப்பவிதையறிந்துஉக்கிரபாண்டியன்மேல்ச் ... *
சீறினன்சமர்க்குஇந்திரன்மீறினனே (௱௩௭)

பதம் - மோகனராகம் - ஆதிதாளம்

[பல்லவி.]

சண்டைசெய்திட இந்திரன் மீறினன் - மனி
தனுக்கிவ்வளவாவென்று கூறினன்

[ அநுபல்லவி. ]

விண்டலத்தினிலுள்ளோர் - அனைவருடனே அன்று
விரல்உரலானல்உரல் - எவ்வளவாகா ... தென்று
சண்டை

[ சரணங்கள் ]

(௧) கனத்ததிரைக்கடலை - வற்றச்செய்த ... தென்பு
கண்டுநம்முடன்சம - மாகஇருந்தான் ... முன்பு
சினத்துத்தெண்டியாமல் - மகிழ்ந்தோமேஅது கொம்பு
சீவிவிட்டதுபோல்ஆச் - சென்றுமிகவே ... தும்பு
சண்டை

(௨) புயலைநெஞ்சஞ்சாமல்ச் - சிறைஇட்டானென்ன சொல்ல
புயத்தில்த்தாங்களன்கைப் - படைபொன்னுர மல்ல
ஜெயமுறும்ஒருபெருஞ் - சிங்கத்தைநரி ... வெல்ல
திரிவதுபோலாச்சு - தென்றுசிரித்து ... வல்ல
சண்டை

(௩) சேரன்சோழனிலும் - இவனுக்கென்ன ... சத்தி
சிறந்தாலுஞ்சிறுகூபந் - தனக்கஞ்சிக்கட லொத்தி
தூரப்போமோவிருத் - திரனைக்கொன்று ... வெற்றி
தொட்டகுலிசமுண்டு - நாமுண்டென்றுகைப் பற்றி
சண்டை - ௱சு.

---

விருத்தம்.

மண்டமர்செய்திடஅயிரா - வதமேறிமலர்க்கரத்தில்வயிரந்தாங்கி *
அண்டரொருமுப்பத்துமூவரும் - யாவருஞ்சூழஆர்ப்பரித்து ... *

வளை எறிந்தது.

கொண்டலெனமுரசிரைய மதுரைதனைவளைத்தவிண்ணோர் கோமான் [றன்னைக்
கண்டவுடன்உக்கிரபாண்டியன்சீறி எதிர்த்திட்டான் கதித்திட்டானே

பதம் - பந்துவராளிராகம் - சாப்புதாளம் (௱௩௮)

பல்லவி.

எதிர்த்தானேஉக்கிரபாண்டியன் - வளையெறிந்து
கதித்தானே உக்கிரபாண்டியன்

அநுபல்லவி.

எதிர்த்தான்முகிலைச்சிறை - விதித்தானெனவேமுறை
இட்டுவருணனோதிச் - சுட்டுநாராசங்காதி
லேற்றியதுபோல்ச்செய்ய - நேத்திஎனவேவெய்ய
இந்திரன்பொருசமர்விளைக்கவே - வந்துதென்மதுரையைவளைக்க [வே

சரணங்கள்.

(க) வடமேருகிரியென்னத் - திடமாம்ரதங்கள்துன்ன
மடமடென்றுமுழங்கிக்-கட்டல்போல்த்தளங்கள்பொங்கி
வருங்கரிகளும்வெற்றி - தரும்பரிகளுஞ்சுற்றி
வாள்படைகளுமொய்க்கவே - எங்கெங்குஞ்செந்
தூள்ப்பெருகி வளைக்கவே - துந்துமியோசை
மண்டலங்கிடுகிடென்க - எண்டிசைகளும்நடுங்க
வாசுகிவிழி பிதிரவே - பூமலரென்ன
தேசுளவிண்மீன்உதிரவே - மிகப்படைகள்
மட்டில்லாமலேதிரண்டு - அஷ்டகாசஞ்செய்துகொண்டு
மாமுகில்என்னவே நிறைந்தார் - விண்டலம்விட்டுப்
பூமிகொள்ளாமல்வந்துறைந்தார் - முகிலைச்சிறை
வைத்தவனாரடாவைத்தொ - ளித்தவனாரடாகண்டு
மாட்டுமாட்டும்என்று நாடுவார் - எங்கேஅவனைக்
காட்டுங்காட்டும்என்றுதேடுவார் - திடமுடனே
வண்டராம்அசுரர்சிந்தச் - சண்டைசெய்யும்நமக்கிந்த
மானிடன்எதிரி ஏது - நம்முடனேதான்
யேனிவனுக்கிந்தவாது - வந்ததுவென்று
மண்டுமுப்பத்துமுக்கோடி - அண்டருஞ்சினந்துகூடி
வந்துமனிதரைப் பகைப்பார் - இவர்காலமு
டிந்ததுஇன்றெனநகைப்பார் - இவ்விதம்சக்கிர
வாளகிரியதுதனைச்சுற்றும் - நீளஅலைகடலெனச்சற்றும்
வாட்டமறுமதுரையில்ப்பண்டு - கோட்டைதனைவளைவதைக்க [ண்டு

(௨) சுற்றியேவளைந்துகொண்டு - மொய்த்தஆரபாரங்கண்டு
தூதர்சொல்லத்தமிழ்நாட்டு - நீதமன்னன்அதுகேட்டு
தொழுமந்திரிமாரைநாடி - எழுமிந்திரன்போரைக்கூடித்
துடருமென்னவழக்கென்றான் - விண்ணவர்அஞ்ச
திடமுரசமுழக் கென்றான் - வாய்த்துதின்றைக்கு
தொக்கிதாயிந்திரன்வந்து - சிக்கினன்என்றுமகிழ்ந்து
துள்ளித்துள்ளிக்கொண்டுலாவினன் - உயர்ந்தமத
வெள்ளையானைமீதில்த் தாவினன் - அளவில்லாத
துங்கமாதுரங்கசது - ரங்கரணரங்கசேனை
சுற்றிமொய்க்கமுன்னேதூண்டினன் - கோட்டைவாசலைச்
சற்றிமைக்குமுன்னே தாண்டினன் - மேளதாளத்தின்
துடரொலிஇரைந்துதுன்னக் - கடல்மடைதிறந்ததென்னத்
துகைமிகுந்துபடைகள்மீறியே - வந்திடக்கண்டு
பகைமிகுந்தமரர் சீறியே - இடிகளென்ன
சூலம்வேலுலக்கைபிண்டி - பாலந்தோமரங்கள்மண்டி
தூற்றுமஞ்சாய்மூடத்தொடுத்தார் - நரரைஆடிக்
காற்றில்ப்பஞ்சாயோட விடுத்தார் - இதனைக்கண்டு
துரைக்கமர்செய்யஆசை - வரச்சினந்திருவீசை
துடிக்கவேவிழிசிவந்தான் இந்திரன்கண்டு
திடுக்கிடஎதிரே வந்தான் - வந்தவர்களைத்
தூரத்தியடமொடுபற்கடித்துக்- கரத்திலடவொடுவிற்பிடித்துச்
சுரர்களனைவரும்பயந்தோட - நரர்களனைவருஞ் ஜெயந்தேட

எதிர்த்

(௩) கருதிவந்ததேவரும் - பொருதி வந்ததேவரும்
கறுவிவந்ததேவரும் - உறுமிவந்ததேவரும்
கசடனென்றதேவரும் - அசடனென்றதேவரும்.
கண்டதுண்டமாகி மடிந்தார் - கால்தலைஅற்று
முண்டமுண்டமாகி முடிந்தார் - சின்னபின்னமாய்க்
கரமற்றுஉரமற்று - வரமற்றுச்சிரமற்று
கைப்படைஇழந்துவாடுவார் - சிலதுதேவர்
தப்பியேஒளிந்து ஓடுவார் - பிணமருந்திக்
காளிகள்புகழ்படிக்கக்- கூளிகள்தாளம்பிடிக்கக்
கவந்தங்கள் கூத்தாடும் - நாய்நரிகழு
குவந்தங்கே பார்த்தாடும் - இப்படியாகக்
கடவுளர்மடியக்கண்டு - திடமுடன்இந்திரன்விற்கொண்டு

## ௰௪-வது-இந்திரன்முடிதெறிக்க வளைஎறிந்தது.

காசினியோரை விரட்டினன் - செங்கதிர்க்கணை
வீசுமழையெனக் கொட்டினன் - மதிக்கணையால்க்
காவலன்அதைத்தடுக்கத் - தேவர்கோன்புவிநடுக்கக்
காய்ந்துசிங்கக்கணை தூற்றினன் - சிம்புட்கணையால்
ஆய்ந்துமன்னன் அதைமாற்றினன் - மோகவாளியைக்
கரியவன்தொடுக்கஞானச் - சரமிவன்எடுக்கவானக்
கர்த்தன்வச்சிராயுதம் வீசினன் - பேசித்தடுத்துன்
வெற்றியைக்காட்டெனஏசினன் - மதுரைமன்னன்
கையின்வளையைஎறிந்துசீறத் - தெய்வவயிரமுறிந்துமாறக்
கண்டதேவர்கள்மனதும்பதற-அண்டர்கோனிடமகுடஞ்சிதற
எதிர்த் ஈஎ.



விருத்தம்.

மகுடபங்கம்உற்றுஇந்திரன்பதியில்ச்சென்று ... *
வான்முகிலைச்சிறைவிட்டால்மாரிபெய்து ... *
சுகமுறச்செய்வேனெனவேலைவிட்டான் ... *
துரைஉக்கிரபாண்டியன்அவன்உரைதேருமல் *
முகமலர்ந்தோர்வேளாளன்பிணைகொடுக்க ... *
முகிலைவிட்டான்திங்கள்மும்மாரிபெய்து ... *
ஜெகமகிழச்சிறந்துதிந்தப்பாண்டிநாடு ... ... *
சீர்பெற்றூர்கார்காத்தார்ஏர்பெற்றூரே. (ஈ௬௬)



விருத்தம்.

புருகூதன்முடிதெறிக்கப் பொருவளைஎறிந்தலீலை... *
பர்வியேகேட்போர்பாரில்ப் பகையறவாழ்வார்மேரு *
வரைமதமடங்கச்சென்டால் மாட்டியபதினைந்தான *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே()
இந்திரன்முடிமேல்-வளைஎறிந்த-திருவிளையாடல்முற்றிற்று.

ஆ திருவிருத்தம் எ, பதம்-ரு ஆ ௰உ



ஆ பாயிரம்உள்ப்படத் - திருவிளையாடல் - ௰௪-க்கு - வெண்பா - க
கலித்துறை-உ-கொச்சகம்-க,விருத்தம்-ஈ௬௬, பதம் - ஈஎ
ஆ கவிதை - உர௪எ.



பதினைந்தாவது

மகாமேருவைச்

# செண்டாலடித்ததிருவிளையாடல்.



விருத்தம்.

வளைஎறிந்துக்கிரன்மக பதியைவென்றுபின்பு ... *
மாநிலங்காத்திருந்திட்டான் காந்திமதிவயிற்றில் *
உளமகிழஒருபால கன்வந்துபிறந்தான் ... *
உயர்ந்தவொருவீரபாண்டியனெனப்பேரிட்டு ... *
வளர்நாளில்நவக்கிரக வக்கிரத்தாலுலகில் ... *
மழைஅற்றுத்திறைகொடுக்கவருத்தமுற்றுக்குடிகள் *
தளர்வதறிந்துக்கிரபாண் டியன்கோவில்ப்புகுந்து ... *
தாழ்ந்துசுந்தரேசரிடம் சாற்றுவன்போற்றுவனே *

பதம்-புன்னுகவராளிராகம்-ரூபகசாப்புதாளம்.

[பல்லவி]

சரணம்உமது-சரணம்உமது-சரணம்சுந்தரேசா
தமியேனுக்கருள்புரியுந்-தருணமந்தஹாசா

[அநுபல்லவி.]

மரணமுடன்ஜனனமற-மகிழ்ந்துபத்தர்பங்கில்நிற்கும்
வாசாகெவு-ரீசாசர்-வேசாமது-ரேசா-சாமி
சரணம்

[சரணங்கள்.]

(க) சகலசரா-சரூப-சல்லாபகிரி ... சாப
சுகுணசுசீலாபாப - துரிதபவ கோபா
வெகுவிதவிநோதநயவேஷமாகியபிரதாபா
விவேகாவை-போகாஜெகன்-மோகாசிவ-லோகாதிப
சரணம்

(உ) பத்தஜனபரிபாலபால - நயன கால
மர்த்தனநிர்த்தனலோலவரதாவனுகூல
சத்தஸபரி-சரூப-ரசகந்தமய லீலா
சாஸ்த்ராகம-ஸ்தோத்திராசற்-பாத்திராதிவ்விய-காத்திராசிவ
சரணம்.

(ங) தாய்முகம்பாராதுபிள்ளை தாயுமிந்தப்புவி மீது
சேய்முகம்பாராதிருந்தால் - சேய்க்குயிரேதேதோது

செண்டாலடித்தது,

நீமுகம்பாராதுறிலோ -நிலமேது-குல மேது
நீதாசாம-கீதாயிரங்-காதாளன்மேல்-வாதா-சாமி
சரணம் - ௱அ.



விருத்தம்.

இன்னவிதந்துதித்திடலும்ஐயன்கால ... *
ஏற்கையரிந்தருள்புரியாதிருந்தார்அப்பால் ... *
மன்னன்மனையில்த்துயிலுற்றிருந்தான்சித்தர் ... *
வடிவாகிக்கர்த்தரவன்கனவில்வந்து ... *
தென்னவகேள்மழைமறுக்குஞ்செண்டால்மேருச் *
செருக்கடக்கிநிதியெடுத்துவருவாயென்றூர் ... *
அன்னவனும்அகமகிழ்ந்துசெம்பொன்வெற்பை ... *
அடுத்திட்டான்செண்டடியுங்கொடுத்திட்டானே-()

பதம்-தேசிகதோடிராகம்-ரூபகதாளசாப்பு,

பல்லவி.

வேண்டிஉக்கிரபாண்டியன்பொன்
மேருவைச்செண்டாலடித்தான்-பொன்வேண்டி

[அநுபல்லவி.]

காண்டிபநுதல்மீனவளுக்கு - கந்தநேசரைச்சுந்தரேசரை
வேண்டி

[சரணங்கள்.]

(க) பலரும்புகழும்-ரதகசதுரக-பதாதிகளும் ... மூள
படர்ந்துஅண்டகோளத்துக்கப் - பாலுமொலிக்கு... மேள
மலியும்யானையில்-மகரகேதனம்-வானக்கிழித்து ... நீள
மதுரைநகர்விட்டெழுந்துஇந்த - மன்னுயிர்தன்னையேதன்
வேண்டி [னுயிர்போல்ஆள

(உ) தென்பெருங்கடல்வடதிசைதன்னில்ச்செல்லுவதெனத்தோற்றி
தேசதேசமெல்-லாங்கடந்தேவட தேசராசர்கள் போற்றி
அன்புசெயஅருட்கங்கையாடியே-அகிலநாதரை ... ஏற்றி
அருவனங்களும் -பெருமிர்கங்களும்-அடர்ந்து-தொடர்ந்து-
வேண்டி [கடந்துகீர்த்தி

(ங) அடங்கும்பாரத-கண்டமென்பதா -யிரம்யோசனையுங் கடக்க
ஆங்குபொன்னி-மயாசலங்கண்-டதையுந்தாண்டி ..., நடக்க

இடங்கொள்கிம்புருட- கண்டமொன்பதாயிரம்யோசனைபின் கிடக்க
ஏமகூடமுந்தாண்டிஅடுத்தோர்இடுக்கம்-விடுக்கநடுக்கம் - ஒடுக்க
வேண்டி

(௪) அரிவருடமொன் - பதினுயிரயோசனையையுஞ்சென்று ... நீக்கி
அப்புறம்நிட - தாசலமென்னும்வெற் - பத்தையும்பின் னுக்கி
மருவுஜம்பு-விளறும்பெருங்கனி மலிந்தமதுரந் ... தேக்கி
வருகுமாநதியாகச்சூழிளவரதவருடவடிவை ... நோக்கி
வேண்டி

(௫) தடையறஈரெண்ணுயிரம்யோசனை- தரையிலேவே ... ரோடித்
தலைஎடுத்தெண்பதாயிரம் யோசனைமட்டும் விண்ணில்க் கூடி
அடியில்நாற்பத்தெண்ணுயிரம் யோசனைஅகன்றுற்றுமே லாடி
அகலந்தொண்ணூற்ருறுயிரம்யோசனையான மலையினிலையை நாடி
வேண்டி

(௬) கனமலைகளுக்கர - சேயெந்தந்தைகையின்சிலையே ...தேறக்
கதிருமதியுஞ் - சூழும்பாரின் - களைகண்ணேவினை ... யாற
எனதுசொல்லொன்றுகேளென்றையன் இரங்கிஇம்மொழி கூற
ஏதும்வணங்கி-ஒதிடாமல்இருக்கும்பொருப்பின்செருக்குமாற
வேண்டி

(௭) பாரில்அசையா-மேருவசைந்து-பந்துபோல்எழுந் ... தாட
பந்திபந்தியாஞ்-சிகரங்களின்மணி - பருதிபோல்உதிர்ந்தோட
சாருமலைகள்மடுக்கள்வனங்கள்-தருக்களுந்தளர்ந் ... தாட
தணிந்துபணிந்துதுணிந்துமாநிதி - தந்துவந்துவந்து கொண்
[டாட

---

விருத்தம்-

சென்டால்அடிபட்டுயர்மேருச் -செருக்குநீங்கித்தெளிந்தெழுந்து *
எண்டோளும்பொன்முடி-நான்குமிலங்குஜோதிவெண்குடையுங் *
கொண்டேநாணிமுன்னிற்கக்-கோமான்பார்த்துக்கொண்டசினம் *
விண்டேன்வரத்தாமதமென்ன-வெற்போதியிடும்அப்போதே ௱௬௫

பதம் - பியாகடைராகம் - அடதாளசாப்பு

பல்லவி.

மதமானதுமிஞ்சினானே - தா - மதமாயிருந்துவிட்டேனே

அநுபல்லவி.

இதமாய்மதிதர - வேவந்தாயேவர

மத

செண்டாலடித்தது.

[ சரணங்கள். ]

(க) பொன்னென்றுடபலபணி - யாவதெனஇவ் ... வுரு
பூண்டவனேஎன்னை - ஆண்டபரம ... குரு
என்னவும்அறியேனு - மன்னவாநான் ... ஒரு
ஏந்திழைமோகத்தா - லேமயங்கியே ... பெரு
மத

(உ) இறைவனேஎன்றுமிவ் - வடிவுடன்றொழும் ... வாறு
இன்றுமறந்தின்னேரம்-இருந்தேன்விரக ... மீறு
திறமடங்கவேசெண்டால் - அடித்தாயேமயி ... லேறு
செல்வனேஉனக்குநான் - செய்வதென்னகை... மாறு
மத

(௩) பெருமையாகமகா - லட்சுமீபர ... தேசம்
பிறப்பட்டதுபோலிங்கே - தெனேத்தேடிவந்தநேசம்
வருமுன்கோபமென்பாக்கிய - மாச்சிந்தவிசு ... வாசம்
மறப்பேனேஐயாநீபொறுப்பாஇந்தஅ ... யாசம்
மத. ௱ ௰.

---

விருத்தம்.

இன்னவிதம்உரைத்துவந்தவாறுங்கேட்டு ... *
இறைவாஉன்தேசத்துக்கேற்றமாற்றின் ... *
பொன்னுயர்தேமாநிழலில்ப்புதைத்திருக்கும் ... *
போயுனக்குவேண்டியதைக்கைக்கொள்ளென்று... *
பின்னதைக்கையால்க்காட்டவேந்தன்சென்று ... *
பேர்த்துவைப்பில்வேண்டுநிதிபெற்றுப்பின்னுங்... *
தன்னுதெனமுடிமுத்திரைவைத்தன்பு ... *
சார்ந்திட்டான்மதுரைவந்துசேர்ந்திட்டானே (௱சச)

பதம்-தோடிராகம்-ஆதிதாளம்

பல்லவி.

மகமேருமலேயுற்று - மிகவேநிதிகள்பெற்று
மதுராபுரியிலுற்றனே

அநுபல்லவி.

தகமேன்மைபெருகிய - ஜெகமேதொழவெங்கெங்கும்
தாண்டியபுகழுக்கிர - பாண்டியன் ... கனந்தங்கும்
மக

[ சரணங்கள். ]

(க) சித்திரரதமும்எழில்ப் - பெற்றமதமுயர்சி
னத்தகரிகளுங்க - னத்தபரிகளும்பின்
மொய்த்தபடைகளும்பி - டித்தகுடைகளுடன்
வெற்றிக்கொடிகள்துன்னவே - மிகுந்ததவ
ரத்தினமுடிகள் மின்னவே - அழகொடு
பத்தியாய்மகுட - வர்த்தனர் சூழ
படைமுரசடியினில் - இடிஒலிதாழ
மெத்தவேஅதிச - யித்துயாவர்களும்
சுற்றிவிருதுகூறப்-பகைவர்மாறக்-கனதைமீற-வும்தேற

மக

(உ) தேசுமிலைகொள்ளும்பிர - காசமலைகளும்நல
வாசவனங்கள்வெகு - தேசங்களும்கடந்து
ராஜாதிபரெதிர்கொண் - டேசேர்வைசெயயவந்து
காசிநதியில் ஆடி - முடியில்விசு
வேசர்அடியைச்சூடி - வருகையில்
நேசமன்னர்அடிக் - கடிஎதி கொள்ள
நிறைந்துவெண்கவரி - சிறந்தங்குதுள்ள
ஆசையுடனேசுந்த - ரேசர்இருக்கும்பிரபை
வீசும்விமானங்கண்டு-பணிந்துகொண்டு-துதிகள்விண்டு-பொ

மக [ன்மண்டு

(௩) மறையவரொடுசைவத் - துறையவர்பலபல
நிறையவரவரவர் -முறையுடன்எதிர்கொள்ள
உறையும்நகர்புகுந்து - கறையணியுங்கந்தர
இறைவரைப்பணிந்தேற்றி - அங்கயல்க்கண்ணி
நறையடியையும் போற்றி - மகிழ்வுடனே
பிறைதவழரண்மனை - யதனி லுலாவிப்
பெருமையாகச்சிங் காசனமேவி
திறைஎனமலைதரு - குறைவருநிதிகளை
நிறைமலைஎனக்காட்டிக்-கலியைஓட்டிப்-புகழைநீட்டி- மெய்

மக, ௩மக. [நாட்டி

# ௰ரு-வது-மகாமேருவைச் செண்டாலடித்தது.

விருத்தம்.

வரைதருமாரியால்யாவரையுங்காத்தான் ... *
வலியகோள்வக்கிரம்போய்மாரிபெய்து ... *
தரைமுழுதுஞ்செழித்ததுபின்னருங்காணத் ... *
தன்மகனும்வீரபாண்டியன்தனக்கு ... *
விரைமகுடஞ்சூட்டிஅரசாளவைத்து ... *
வேந்துக்கிரபாண்டியனென்னும்வேடம்நீங்கிப் ... *
புரையறுமாமதுரையரன்பொற்றாணிழற் ... *
பொருந்தினன்பண்டுருப்போல்த்திருந்தினனே... ( )

விருத்தம்.

திரமுறுமேருவெற்பைச்-செண்டினல்அடித்தஇந்த ... *
திருமலர்லீலைகேட்போர்-நிலையுறவாழ்வார்வேதப் ... *
பொருள்தனைமுனிவோர்க்கீசர்-புகன்றிடும்பதினறுன, ... *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடஉரைசெய்வேனே,(௱சசு)

மகாமேருவைச்செண்டால்அடித்த-திருவிளையாடல்

முற்றிற்று.

——[-:-]——

ஆ திருவிருத்தம்-சு-பதம்- ச- ஆ ௰.

——*——

ஆ பாயிரம்- உள்படத்-திருவிளையாடல்- ௰ரு-க்கு-வெண்பா-க,

கலித்துறை - உ - கொச்சகம்-க-விருத்தம்-௱சஉ-பதம்-௱௰க,

————

ஆ கவிதை-உ௱ருஎ.



பதினாறுவது

# வேதத்துக்குப்

## பொருளுரைத்த திருவிளையாடல்.

விருத்தம்.

மேருவைச்செண்டால்அடித்தபின்புஉக்கிர ... *
மீனவன்தன்மகனானவீரபாண்டியன் ... *
பாரினையாள்நாளில்நை-மிசவனத்தில்ப் ... *
பகருகண்ணுவமுனியேமுதலாயுள்ளோர் ... *
ஆருமறைப்பொருள்தெரியாதிருக்கும்போது ... *
அரபத்தனெனும்உயர்ந்தோன்ஆங்குவந்து ... *
வாரும்உமதுளம்வாட்டம்ஏதென்றோத ... *
வணங்கிக்கண்ணுவன்முதலோர்வழுத்துவாரே(௱௪௭)

பதம்-சஹானாராகம் - அடதாளசாப்பு

[பல்லவி]

கேள்ஐயா - எங்கள்கிலேசம்

[அநுபல்லவி.]

ஆளுந்தெய்வம்-போலவந்தாயே
அனுக்கிரகம்-செய்வதும்நீயே
கேள்

சரணங்கள்.

(க) தோற்றும்நாங்கள்செய்த - சுகிர்தமே ... நன்று
கார்த்திகைப்பிறைபோலக் - கண்டோமே ... இன்று
கேள்

(உ) அருமறைப்பொருள்தெரிந்-தருள்செய்யப் பொருந்து
குருவைக்காணமலே - குறையுற்றோம் ... இருந்து
கேள்

(௩) இதைஅல்லால்எங்களுக் - கேதுண்டு ... தாட்சி
சதுரநீஇதற்கொன்று - சாற்றுவாய் ... சூட்சி
கேள் - ௱௭௨.

விருத்தம்.

இருடியர்இவ்வாறோத - எழில்மறைவல்லோனுடி ... *
கருதியஉங்களுள்ளங் - களித்திடஅமலர்தானே ... *
குருவெனவடிவங்கொண்டு- கூறுவரல்லால்மற்றிங் ... *
கருமறைப்பொருளுரைப்ப- தாரென்றான்பாரென்றானே (ராசஅ)

பதம்- பைரவிராகம்- ஆதிதாளம்

[பல்லவி,]

வேதஞ்சொன்னவரே - வேதப்பொருளுஞ்சொல்வார்
வேறுபாயமென்னமுனிவர்களே

[அநுபல்லவி.]

ஓதும்பிள்ளைபெற்றவன் - தானேபேர்இட வேணும்
ஊர்ந்திடும்பாம்புக்கால் - பாம்புக்கன்றோ தோணும்

வேதம்

[சரணங்கள்].

(க) குருடன்ராஜவிழி - விழிப்பானோஅய ... னல்லக்
கொண்டல்வண்ணன்தன்னாலுங் - கூடுமோஇதுசொல்ல
அருள்புரிந்துங்கள்உள் ளத்தின்குறையை ... வெல்ல
ஆள்க்கொள்ளுங்குருவடி-வாகியேவந்து ... நல்ல

வேதம்

(உ) பண்ணியதவத்தையல்-லாதுண்டாம்பொருள் ... ஏது
பண்ணுந்தவமும்புண்ணிய-ஸ்தலமன்றிப்பலி ... யாது
புண்ணியஸ்தலத்திலுஞ்-சிவஸ்தலத்தினில் ... ஓது
புராதனஸ்தலத்தில்ச்செய்-தவமேபயன்இப் ... போது

வேதம்

(௩) உன்னுந்துவாதசாந்த-ஸ்தலமாமதுரை ... சென்று
உகந்ததக்ஷணாமூர்த்தி-சன்னிதிதன்னில் ... நின்று
பன்னுந்தவம்புரிவீ -ராகில்அவரே ... இன்று
பகருவார்வருந்தினால்- வாராதில்லையே ... ஒன்று

வேதம் - ராயக.

---

விருத்தம்.

வேதவல்லோன்இவையுரைத்துச்சென்றான்அந்த ... *
மேலவரும்அவனுடனேமதுரைக்கேகி ... *
ஏதமில்பொற்றாமரையில்மூழ்கிச்சென்று ... *
இறைவர்சுந்தரேசர்தரிசனங்கண்டன்பாய் ... *
சீதமொழிகுளறஆனந்தபாட்பஞ் ... *
சிந்தஇருகரஞ்சிரமேல்க்குவித்துக்கொண்டு ... *

போதவடிவேமறையின்பொருளேஎன்று ... *
போற்றுவார்முனிவர் துதிசாற்றுவாரே ... (௩௪௧)

பதம் - அடாணாராகம் - ஆதிதாளம்.

[பல்லவி]

அரஆலாஸ்யபதே - சம்போசங் - கரஆலாஸ்யபதே

[அநுபல்லவி]

திரகயிலாஸ - சிகரகிரிவாஸா

அர

[சரணங்கள்.]

(க) சுரவரமிர்கதர - பரகரகமலா - சரசபரதநட சசிதரவிமலா
வரதத்ரிபுரஜெய -கிரிதரவிமலா-துரிதபவகரசு-முகசுகவமலா

அர

(உ) சங்கரபனகஅ-லங்கிர்தபூஷா-மங்களசுபகர-இங்கித வேஷா
கங்கரதரவர-துங்கமஹேசா - சிங்காராஅகளங்க உல்லாசா

அர

௩. கேசவவரகமலாசனஸ்தோத்திரா-வாசவமுனிஜனபூஜிதபாத்திரா
பாசவிநாசப்ர-காசசுகாத்திரா ஈசமீனாட்சிப்பிராணேசதிரிநே [த்திரா

அர, ௩௰௪.

—(*-*)—

விருத்தம்.

நாதரைஇவ்வணம்துதித்துமீனம்பாள்தன் ... *
நற்பதமுந்தொழுதுதக்ஷணாமூர்த்திமுன் ... *
மாதவர்வந்தேற்றிஅவர்மந்திரத்தை ... *
மகிழாபத்தனுபதே-சத்தால்ப்பெற்று ... *
ஆதரவாம்செபஓமதருப்பணத்தோ ... *
டன்னதானமுமிருமா-சஞ்செய்துற்ற ... *
போதவர்முன்னொருமறையோன்வடிவாய்வேதப் ... *
பொருளினார்மகிழ்ந்துஎழுந்தருளினாரே ...(௩௫௰)

பதம்- அசாவேரிராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி ]

அருவானவர்அருள்க்-குருவாகியதிரு உருவாயெழுந்துவந்தார்

அநுபல்லவி.

திருவாய்மலர்ந்தன்று - வருநால்வர்க ... ளோதத்
தேற்றிவடவிழலில்த் - தோற்றியுந் . தோற்றாத

அரு

உரைத்தது.

[சரணங்கள்,]

(௧) இந்தமாதவர்செய்-தவம்வெளிவந்தது
போலே-அரு-ளாலே
௬௨ரெண்வயதுமுப்பத்-திரண்டுலட்சணங்களுந்
தரித்து-மெல்லச்-சிரித்து ... ... மிக
சந்தம்உயர்ந்தவேத - பாரகஒலி ... ... சீதத்
தண்ணமுதெனத்தொண்டர்- செவிவழிசென்றுபோதச்
சிந்தைவயல்மகிழ்ச்சிப்-பயிரைவிளைக்க ... ...வேதச்
சென்னிக்கும்உலகீன்ற-கன்னிக்கும் ... எட்டாத
அரு

(௨) வரிந்தகச்சிடையினில்-விரிந்தபடவரிவ
மென்னக்-கோவணந்-துன்ன
வாகுமாலையிட்ட-தோளில்உத்தரியம்
போற்றி-எழில்-தோற்றி ... அருள்
புரிந்துநுதலில்த்திரி-புண்டரவெண்ணீ ... றிலங்கப்
பொருந்துஞ்செவியில்மணி- திருந்துங் குழைதுலங்க
பரிந்துமார்பில்முன்னூல் - அணிந்துஇருள் ... விலங்கப்
பண்டயன்மால்தேடிக்-கண்டிடாமல்க் ... கலங்க
அரு

(௩) கண்டிகையுடன்அக்கு-வடம்ருத்திராட்சங்கர்
தரத்திலும்-மலர்க்-கரத்திலும்
கனகப்பவித்திரமோ-திரமுமிடைக்கையில்ப்புத்
தகமும்-சந்திர-முகமும் ... ... தோணக்
கண்டமுனிவர்அதிசயமடைந்திட வீர
கண்டாமணிசிலம்-பணிந்துகருணைகூர
விண்டருஞ்சுருதிபா-துகையாகிச்சர ஹார
விந்தஞ்சுமந்திட-நடந்துசிர்வி கார
அரு, ௱௬௫.

—○✱○—

விருத்தம்,

வருகுருமூர்த்தியைக்கண்டுமதியைக்கண்ட ... *
வாரிதிபோல்மகிழ்ந்துமுனிவரர்கள்போற்ற ... *
இருடியரேஉமக்கிச்சைஎன்னவென்று ... *
இயம்பஅடியேங்கள்பிழைத்திடவும்இந்தப் ... *
பெருமிலங்கள்தழைத்திடவும்வேதார்த்தத்தின் ... *
பெருமைசொல்லவேணுமென்றார்முனிவரோடும் *

நிருமலர் சுந்தரலிங்கத்தெதிர்போய்க்கையை ... *
நீட்டுவார்பொருளிதென்றுகாட்டுவாரே (௱௫௧)

பதம்- பூபாளராகம்- ஆதிதாளம்

[பல்லவி.]

வேதப்பொருளேஇந்த - சோமசுந்தரலிங்கம்
வேறில்லைமுனிவர்களே

[அநுபல்லவி.]

பாதகம்அறும்போகப் - பயனுக்கும்உயர்வீட்டின்
பயனுக்குமாம்ரக - சியமுற்றமாசுக
வேதப்

[சரணங்கள்.]

(௧) உத்தமசுயம்புக்குள் - உத்தமதரமாகி
உயர்ந்ததத்துவமாம்பே ... ... ரின்பம் - மிக
நித்யமறைக்கெல்லாம் - நிதானப்பொருளாமிந்த
நிச்சயச்சுவயஞ்ஜோதி ... ... விம்பம் - ஏக
வஸ்துபராபரம் - விஞ் ... ...ஞானம் - நிரா
மயமென்றுமறை - சொல்லும்ஸ்தானம்-இதே
சுத்தப்பிரம்ம மிவ்வடி ... ... வான - சிற்
சுவரூபமென்றுநல் - லோர்சொல்லுவராதீன
வேதப்

(௨) ஆகையால்வேதமும் - ஒன்றுபொருளும்ஒன்று
அனந்தமாச்சுததின் ... ... சாகை - அந்தச்
சாகையெல்லாம்இவ - ரைத்தொழும்உலகுண்டாய்த்
தழைப்பதுஇவருண் ... ... மாய்கை - இந்த
ஏகரிடத்தினில்மும் ... ... மூர்த்தி - களும்
எண்ணில்த்தத்து - வத்துடன் ... பூர்த்தி - என
ஆகும்பிரண - வம்வந்து ... ... தோற்றி - யே
அகரமுதலானவட்- சரங்களைத்தருங்கீர்த்தி
வேதப்

(௩) இந்தவிமலர்நடு முகத்தில்சிவாகம ...
மேபிறந்ததுமற்ற ... ... நாலு - அர
விந்தமுகத்தில்நாலு - வேதமும்பிறந்ததவ்
வேதங்கர்மநூல்ஞான ... ... நூலு - மென
வந்திருவகையாகித் ... ... தேறும் - கர்ம
வழிஇவரர்ச்சனை ... ... கூறும் - பின்னும்

உரைத்தது.

அந்தஞானநூல் ... ... மீறும் - இவர்
அருவுருவந்தன்னை அறைந்துஇன்பமூறும்
வேதப்

(ச) வேருண்ணும்நீரினால்க் - கொம்புதழைப்பதுபோல்
விமலராமிவருக்கு ... ... அருத்தி - என்றும்
ஆரும்தருநல்லவி - யின்பதமிவர்வடி
வாம்பண்ணவர்பிறர்க்குந் ... திருத்தி - யாக
சேருமிவர்முகத்தில் ... ... நித்த - மாதி
செய்புழுவினைக்கு ... ... மெத்த - புகழ்
சாரும்போகங்கதி ... ... முற்ற - சிவார்ச்
சனைசெய்யும்வினைக்குங்காரணமாகுமிங்குற்ற
வேதப். நயசு.

---

விருத்தம்.

மறையும்அறிவரியபொருள்இதுதானென்றும் ... *
வளரறத்தால்ஞானமும்யோகமுமுண்டாகு ... *
முறையும்உயர்கிரியையினால்ஞானந்தன்னால் ... *
முதலவரைப்பத்திசெய்யும்விதமுமேலாம் ... *
அறையுமுயர்வைதீகமார்க்கமும்உரைத்து ... *
ஐயனருந்தவர்முதுகுதடவியன்பாய்ப் ... *
பொறையுயர்கண்ணுவன்முதலோர்தொழலிங்கத்துள்ப் *
புகுந்திட்டார்உயர்ந்தகிர்பைமிகுந்திட்டாரே (நருக)

---

விருத்தம்.

சுருதியின்பொருள்உரைத்த துதிஇதுகேட்போர்சென்மக் ... *
குரைகடல்கடந்துஇன்பங் - குலவியேஎன்றும்வாழ்வார் ... *
விரியொளிபெறுமாணிக்கம் - விலைசெய்தபதினேழான ... *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடஉரைசெய்வேனே (நருஉ)

---

வேதத்துக்குப்பொருள்உரைத்த
திருவிளையாடல் - முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-எ- பதம்-ரு- ஆ யஉ
ஆ பாயிரம்உள்ப்படத் - திருவிளையாடல்- யசு-க்கு- வெண்பா-க
கலித்துறை- உ-கொச்சகம்-க-விருத்தம்-நசகூ-பதம்-நயசு
ஆ கவிதை- உநசுகூ.



பதினேழாவது.

## மாணிக்கம்விற்றதிருவிளையாடல்.



விருத்தம்.

அருமறையின்பொருள்உரைத்தபின்புதேசத் ... *
தரசர்மகிழ்ந்திடத்தமிழ்நாடெங்குமோங்கத் ... *
திருமருவுமாலென்னவீரபாண்டியன் ... *
செங்கோல்செய்தின்பவைப்பின்மாதர்போகம் ... *
மருவியிருந்தானந்தமடவார்மைந்தர் ... *
வான்பயிருக்கெழுகளைபோல்வளர்ந்தார்அன்று ... *
கருதிஅரசாளுமைந்தர்இலையேஎன்று ... *
கவனித்தான்மனைவியொடுதவமுற்றானே (௱௫௪)

பதம்-சுருட்டிராகம்- அடதாளசாப்பு.

கண்ணிகள்.

(க) கற்புள்ளமாதோடு - பொற்பதுமத்தடம்
ஆடினன் - தவர் ... தேடினன் - விஷ
கந்தராம்சோம - சுந்தரலிங்கத்தைப்
போற்றினன் - துதி ... சாற்றினன்

(உ) அற்புதமான - மீனட்சிதிருவடி
பணிந்தான் - கிர்பை ... அணிந்தான் - உயர்
அஷ்டமிசோம - வாரம்சதுர்த்தேசிநோன்
பெடுத்தான் அன்பு ... தொடுத்தான்

(௩) சாலத்தவஞ்செய்யுங்-காலத்தில்த்தென்னவன்விர்
தத்தால்ச் - செய்சுகுர் ... தத்தால்- விண்ணில்த்
தானுறையும்வட - மீனிறையுங்கற்பின்
மானள்-கெர்ப்ப ... மானள்

(௪) ஆலவித்தின்முளை போலத்திருமகன்
உதித்தான் - வந்து ... கதித்தான் - மைந்தர்க்
காகியசாதக நர்மகரணங்கள்
சூட்டினன் - தமிழ் ... நாட்டினன்(௱௰௭)

விருத்தம்.

மைந்தன்வளர்நாள்மன்னன்-வேட்டையாடி ... *
வரிப்புலியால்மடியமனை-வியரும்யாரும் ... *
நொந்தலறும்வேளையில்மா-நிதியத்தோடு ... *
நவனுமணிமுடியும்வைப்பின்-மடவார்மைந்தர் ... *
முந்தவெடுத்தொளித்தார்மன்-னவனுக்கீமே ... *
முறைமுடித்துச்சிறுவனுக்குமகுடஞ்சூட்டச் ... *
செந்தமிழ்நாட்டமைச்சர்மணி-மகுடந்தன்னைத் ... *
தேடினர்காணமல்-வாடினரே (௱௫௫)

பதம்-ஆனந்தபைரவிராகம்- ரூபகதாளசாப்பு,

பல்லவி

ஓகோஇதுவென்னமோசம்- என்னகிலேசம்

[ அனுபல்லவி ]

வாகானமணிமகுடம்ஆச்சே - எங்கோபோச்சே
என்னபேச்சே - இதுஏச்சே - சொல்லும்
ஓகோ

சரணங்கள்.

(க) ஆனைபரிபணிநிதிசில தாமே - காணேமே-இது
ஆரோளதிராளிசெய்மதியாமே- என்செய்வோமே
மீனவன்மின்னமலே இடித்திட்ட
விதமெனவேபுலியாலுயிர்பட்ட
விதியும்பல- நிதியும்போன- சதியும்இவ்வ- வதியும்வர
(உ) ஓகோ
செத்தவன்பிள்ளையிருந்தவர்க்கடைக்கலமே- என்றுநிலமே-நம்மை
செப்புமேஇதற்கெப்படிநாம்செய்யும்நலமே-வியபிலமே
மற்றொருமாமுடி-பண்ணவென்றால் ... துய்ய
மாணிக்கம்வேணுமே - ஆணிப்பொன்னால்செய்ய
வரனேசசி - தரனேசிவ - பரனேசுந் - தரநேசனே
(௩) ஓகோ
அரசன்சிறுசேய்க்கின்றைக்கேபூணும்-முடி வேணும்-இல்லாவிடிற்
அலையுமேஎன்ன காணும்-ஆர்க்குத்தோணும் [புவி
ஸ்திரமாயெவர்-சொல்லுவர் சூட்சி-
தீராதநெஞ்சுக்குத்-தெய்வமே சாட்சி
தேசர்தொழும்-நேசர்சுந்த-ரேசர்தம்முன்- னேசொல்லுவம்
ஓகோ - ௱௰௮.

விருத்தம்.

அந்தமாஞ்சுந்தரேசா - அருள்அறிவோமென்றெண்ணிச் ... *
சொந்தமாம்வழுதிதந்த - சுதனையும்எடுத்துக்கொண்டு ... *
இந்தமாமந்திரிமார்கள் - இறைவர்பொற்கோயில்வாசல் ... *
வந்தனர்அவர்முன்ஐயன் -வணிகராய்வருகுவாரே (௩௰௫)

பதம் - முகாரிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி,]

வணிகர்வந்தாரே - சுந்தர - வணிகர்வந்தாரே

[அநுபல்லவி,]

அணிகிரணமுந்துகுண் - டலம்அசையநடந்து
... வணிகர்

(சரணங்கள்.)

(௧) இடையினில்க்கோவணம் - இலங்கமுன்னூல்த் தொட்ட
தடமார்பினில்மணித் - தாழ்வட ... மணிந்திட்ட
வணிகர்

(௨) அங்கதத்தோளில்நல் - லணிமணிப்பொதி தாங்கி
தங்கும்வேதமிதியடி - தாளிலிட் ... டோங்கி
வணிகர்

(௩) ஏதுதுயரமுற்றீர்- இறைவன்மாமுடிக் கின்று
ஜோதிமணிகள்வேண- துண்டுதருவோம் என்று
வணிகர். ௩௰௬.

---

விருத்தம்.

நல்லவணிகேசர்மந்திரிமாரைநோக்கி ... *
நடந்ததெல்லாங்கேட்டுநலமணியொன்பானுஞ்... *
சொல்லரியபலகோடிநிதிபெற்றேருங்குஞ் ... *
ஜோதியுள்ளதாயுளதுதருவோமென்று ... *
எல்லவன்றேன்றுந்திசைநோக்கிக்கறுத்த ... *
இழைத்துகிலைவிரித்திருந்துதுகிலில்ஜோதி ... *
வல்லநவமணிகளைவைத்தவையுண்டான ... *
வழியும்அதின்ஒளியும்நன்ருய்வகுத்திட்டாரே.(௩௰௭)

பதம்- கேதாரகௌளராகம் - ஆதிதாளம்

[ பல்லவி.]

நவமணிகளாமிதன்- வழியைமொழிவோமிக- நன்ருய்க்கேட்பீரே

[ அநுபல்லவி. ]

தவமாணிக்கம்முத்து-வைரம்பச்சைநீலம் கோமே
தகம்புட்பராகம்வை - டூரியம்பவள ... மாமே
நவ

[ சரணங்கள். ]

(க) முன்வலாசுரனென்போன்-தவஞ்செய்துதன்னுடல்
முழுதுமணியாய்ப்பெற்றான் ... ... அன்று
பின்னவனைஇந்திரன்-புருஷமகப்பசுவாய்
பிணித்துபாயமாய்க்கொன்றான் ... சென்று-வலன்
தன்னென்புவைரங்கண்-ணீலம்தசைபவளம்
தந்தமுத்துக்குருதி ... ... என்று
மின்னுமாணிக்கம்மயிர்-வைடூரியம்நிணங்கோ
மேதகம்பித்தம்பச்சை ... ... துன்று-நிற
மன்னுங்கபம்புட்ப-ராகமொன்பது ... ... கந்த
மாமணியாச்சுது-வரலாறிது ... ... முந்த
இன்னமுஞ்சிலவித - உற்பத்திகளும் ... அந்த
இனப்பிரிவும்நிறமும் - இசைந்தபேருமுண்டிந்த
நவ

(உ) உயர்வைரமுமுத்து - மறையவர்மாணிக்க
மும்பவழமுமன்னர் ... ... ஜாதி
வைடூரியம்புட்ப - ராகங்கோமேதகம்
வணிகராமிருந்த ... ... ஜோதி-மிகச்
செயுமுயர்நீலம்பச்சை - சதுர்த்தர்புட்பராகம்
செம்பவளம்வைர ... ... மாதி
வெயில்விரிமாணிக்கம் - வைடூரியங்கோ
மேதகம்ராஜசம் ... ... நீதி - யது
பயில்முத்துப்பச்சைசத்துவம் - நீலம்தாமதம்லோகம்
பகர்மாணிக்கமுத்துப் - பவளம்பச்சைபுட்பராகம்
வைரம்நீலம்கோமே-தகம்வைடூரியமட வாக
வண்ணம்நவக்கோளென்ன - மருவுமேநாக நீக
நவ

(௩) அமருமணிகட்கெல்லாந் - தமரிடுமாயுத
மாகும்வைரமதற் ... ... கதுவே
தமரிடுமானதால்வைரத்தைப்பெரிதென்று
தாரணியோர்புகழ் ... ... வதுவே - ஒளி

சமையுமாணிக்கமுத்து - வைரம்பச்சைநீலந்
தருமைந்துமேன்மைகொண் ... ... டதுவே
அமையுங்கோமேதகம்வை-டூரியம்புட்பராகம்
அணியும்பவளம்நாலு ... ...மெதுவேஇந்த
விமலமணிகளணி-பவர்பவனைஎன்... ... சொல்ல
விண்ணிலம்புரக்கும்தே - வேந்திரனுமெதிரல்ல
கமலராகமென்னு - மாணிக்கமுள்ளோர் வல்ல
கதிர்மணிஎல்லாம்பெற்றுக் - கதித்துவாழ்வர்நல்ல
நவ, ௱உய,

——○*○——

இந்த நவரத்நங்களின்இலட்சணங்களை விரித்துக்கூறியது
விருத்தம்.

மணியாம்இவைகள்தூய்நிலத்தில் ... *
வளர்ஆஸனத்தில்நற்றுகில்மேல் ... *
அணியாம்மாணிக்கம்நடுவைத் ... *
தருமுத்தாதியெட்டினையும் ... *
பணியார்இந்திரன்திசைமுதலாய்ப ... *
பகரெண்டிக்குஞ்சூழவைத்து ... *
தணியாதாய்ந்தர்ச்சித்தெடுத்து ... *
தரிப்பார்என்றுவிரிப்பாரே (௱௫அ) *

ஒரடி-சந்தப்பதம்-தோடிராகம்-ஆதிதாளம்
பல்லவி.

மணிகளின்இடம்தொகைவகைகுலம்பலம் - மலர்
வணங்களும்அணங்கும் இதே
அனுபல்லவி.

ராகமாலிகை-தோடி-காம்போதி-மோகனம்-ஆரபி-கல்யாணி ஸ்ரீராகம்-மணிரங்கு-மத்தியமாவதி - இந்தஎட்டுராகங்களிலும்பாடுவது.

இந்தஎட்டு ராகங்களிலும் இந்தபதத்தின் எட்டுச்சரணங்களையும் கிரமமாய்ப் பாடுவது.

அணிதோடிகழ்காம்போதியுமோகனம்
ஆரபிநயகல்யாணிஆனஸ்ரீ
மணிரங்குராகமின்னமத்தியமாவதியும்
வளர்பதம்இதுமுதல்அளவறுபொருள்தரும்

இ த ற் கு உ ரை.

அழகியமூங்கில்போன்றதோளும் மேகத்தையொத்த கூந்தலும் மின்னலுற்ற இடையும் பூமியிலுள்ளோர் இரங்கும்படியானஇன்னிசையும்பொருந்திய அபினயமங்களவதியான ஸ்ரீமகாலக்ஷுமி எப்போதும் வஸிக்கும்விர்த்தியுள்ள பதவி இதுமுதலான அளவில்லாத பொருள்களெல்லாம் தரும். இந்த நவரத்னங்களின் உத்பத்திஸ்தானங்களும் அதுகளின்தொகை வகைகுலம் அவைகள் அணிவதில்வரும் பிரயோசனம் அவைகளை அர்ச்சிக்கும் புஷ்பங்கள் அவைகளின் நிறங்கள் இவைகளெல்லாம் இதுவே என்றும் இந்தப் பல்லவி அநுபல்லவிகளின் அர்த்தங்களாம்.

க-வது- சரணம்.

தோடிராகம்-மாணிக்கத்தின்லக்ஷணம்.

(க) மாணிக்கமணியேஉத்துங்கம் இது
மக்கம்காளபுரம்தும்புரமொடு
மெய்க்கும்சீர்பெருகும்சிங்களம் இதில்
மொய்க்கும்கிரேதயுகம்கொண்டவிது
திக்கும்பாரில்மிகுந்துந்தெளிவுள
மாணிக்கம்

(உ) மாதுளமலர்விரைநாரபலமொடுகல்
ஹாரம்அழல்மின்மினிகோபம் முள்ரிசுடர்
ஆகியநவனிறம்மேல்அருகடிஒளி
ஆதியொடிடைகடைமூவிததரம் உறும்
மாணிக்கம்

(ங) மாற்றுபிறனிறச்சார்புபுள்ளடி
கீற்றுமருவுமத்தராசுபுள்ளிகள்
தீர்த்தணிசிருபற்கோதுசெல்வம்மெய்
கீர்த்திவிஜயம்எப்போதும் நல்குமே (மாணிக்கம்)

(ச) மருவும்இம்மணியணி
பெறஉடையவர்பகர்
குறுநில இறையவர்
எனினும் அவர்தரள
நிலவுவிசிறு முழு
மதியைநிகருகுடை
நிழலில் உலகுதொழும்
மிருகம்அரவும்வெருவும் (மாணிக்கம்)

(ரு) மறலியும்அஞ்சும் மணிஇவைஉலகினில்
உறையிடமிஞ்சும் நலமுளநவநவ
மணிகள்நிறைஞ்சும்நிதியதுமிகநிறை
அணிகள்இறஞ்சும் அதிபதிஎனவுயர் (மாணிக்கம்)
வாகறுகுறள்பிணி பேய்கலிசிறுதெய்வம்
நோகவருகிரகமும் ஏகுமேஎழில்தரும்
மதுகையாகமின்னும் பதுமாரகம்என்னும்
மாணிக்கமணியே உத்துங்கம்-இது
மகிழ்ந்தணிவோர்க்குண்டோ பங்கம்-பெரு
வேணிச்சுடராம்- ஜாதரங்கம் -குரு
விந்தம்ஸௌகந்திகம்- காவாங்கம் ஆகநாலங்கம்
மிகுமிவைசதுர்விதமுதுமறையோரே
முதலுளவருணமும் அடைவினில்நேரே
வினவியமுறைபெறும்
அவைஅறிவுறுவகை
விபரமதனைமொழி
குவம்உலகறியவே
மிக்கசுத்தமுற்றமெய்த்த
வத்தர்பெற்றிடக்கிடைக்கும்
மணிகளினிடம் தொகைவகைகுலம்பலம்மலர்
வணங்களும் அணங்குமிதே

உரை, இந்த மாணிக்கம் வலாசுரன்இரத்தம் கிரேதாயுகக்தில் மக்கதேசத்திலும், திரேதாயுகத்தில் காளபுரதேசத்திலும், துவாபரயுகத்தில் தும்புரதேசத்திலும், கலியுகத்தில் சிங்களதேசத்திலும் உற்பத்தி ஆகின்றது.

இந்த, மாணிக்கத்தின் பொது நிறங்கள் மாதளம்பூ - மேற்படி விரை நார்த்தம்பழம் செங்கழனீர்பூ அனற் பொறி மின்மினி - யிந்திர கோபம் - செந்தாமரைப்பூ தீபம் ஆக ஒன்பதுநிறம் உள்ளது இதில் மேலொளி கீழொளி பக்கஒளி - இந்தமூன்றும் உள்ளது உத்தமம், மேலொளி பக்கஒளி ரெண்டும் உள்ளது மத்திபம் மேலொளி ஒன்று மட்டும் உள்ளது அதமம் என்பது இதின் குற்றங்கள் பிறநிறச்சார்பு புள்ளடி - கீற்று தராசம் புள்ளிகள் ஆகஇந்த ஐந்து குற்றங்களும்இல்லாத மாணிக்கங்களாய் தரிப்பவர்கள் இதில் சொல்லிவருகிற, பயன்களைப் பெறுவார்கள். இந்தமாணிக்கம் ஸாதாங்கம் குருவிந்தம்ஸௌகந்திகம் காவாங்கம் ஆக - ச - விதமாய் இருக்கும் அதின் விபரங்கள் மேல்வரும்.

இதுவும்-மாணிக்கத்தின் லட்சணம்-௨-வது-சரணம்
இராகம் - காம்போதி

(க) கூறுசெம்மணிகளில் சாத-ரங்கம்
கோபமழல்மாதுளங்கமலர்விரை
தீபமதுவார்கருங்குவளைமலர்
தாமரையும்- மேகமும்-கிளர்பரிதி
ஆமின்மினியோ-டைந்திருநிறமே.

கூறு

(உ) கொண்டணிபவர்பெருவிஞ்சைகள்வெகுபசு
அந்தமின்னனம்அருளும்பலமும்அசுவ-ம
கங்கள்முதல்அறம்உறும்பயனும்அடைவர்
அங்கொளி-உறு-குருவிந்தநிறம்அதுகேள்

கூறு

(ங) கூர்த்தஇதட்செறிபலாசம் - செந்திலகம்
வாய்த்தசெவ்வரத்தம்விதாரம்குன்றி - வெளி
லோத்தம்உலைப்பொன்முயலாருஞ்செங்குருதி
சாற்றிடுமெட்டிதணிவார்அந்தம்பெறவே

கூறு

(ச) கும்புகொள்சங்கம்அலம்புதரங்க - நெ
டுங்கடலின்கலைஅம்புவியெங்கும் - ம
கிழ்ந்துதொழுங்குடையொன்றுளுறுந்திரு
விந்தையுடன்குலவும்புகழ்பொங்குமே

கூறு

(ரு) குளிர்ஸௌகந்திகநிறமிதுபாரும்
குயில்விழிசெங்கனகமும் - நலசோகம்
தளிர்செயபஞ்சிலவலரும்உலாவும்
தனிஐவணம்பகருவதிவைஆறும்

கூறு

(சு) கொள்பவர்மிகுபுகழுள்ளவர் - அளவறு
செல்வமுடனுலகுசொல்லமகிழ்வடைவர்
குறைகளேதுளது-மறைகளோதியது.
கூறுசெம்மணிகளில்சாத-ரங்கம்
கூடுகாவாங்கநிறம்ஒதுக்-கேளும்
தேறுகுராகுசும்பாச்சீத-மலர்
செங்கல்கொவ்வைக்கனி நான்கிங்கிவைநீதம்
செப்புமிதணியுறில் நெற்பசுநேரும்
மற்றவையுளபொருள் உற்றொளிசாரும்

திகழ்நலமணிபெறு - நவமணிகளுமுள
திருவளர்அலைகடலெனவுயர்செல்வமிகும்
திக்குமெச்சிடச்சிறக்கும்.
மெய்ச்சுடர்க்கும் - ஒத்திமைக்கும் ஆ சரணம் - ௨.
மணிகளினிடந் - தொகை - வகைகுலம் பலமலர்
வணங்களும் அணங்கும் இதே.

உரை-சாதரங்கநிறம்-இந்திரகோபம்-அனல்பொறி- மாதளைமலர்-விரைதீபம்- நீலோற்பலம்- தாமரைமலர்-மேகம்- சூரியன் - மின்மனி-ஆக இந்த பத்துமாம்.

இந்த சாதரங்கரத்நம் தரிப்பவர்கள்- வித்தை - பசு - கன்னிகை-அன்னம்-அசுவமேதயாகம் இதுமுதலிய தானயாகங்களை நடத்தின பலனை அடைவார்கள்.

குருவிந்தநிறம்- புரசமலர்- சிந்துரம்- செவ்வரத்தமலர்
குன்றிமணி - வெள்ளிலோக்தம்-உலையில் உருகும்பொன் - முயலின் இரத்தம் - ஆக இந்த எட்டுமாம்.

இந்த குருவிந்தம் தரிப்பவர் சகலபாக்கியங்களையுமடைவார்
ஸௌகந்திகநிறம்-குயிற்கண்-தங்கம்-அசோகின்தளிர்-செம்பஞ்சு-செவ்விலவமலர் ஐவண்ணம்-ஆக இந்த ஆறுநிறங்களுமாம்

இந்த-சௌகந்திகம் தரிப்பவர் - அதிகபாக்கியங்களுடனும் உலகத்தார்புகழும்படி வாழ்வார்கள்.

காவாங்கநிறம் - குராவின்புஷ்பம் - குஸும்பாமலர் - செங்கல் கொவ்வைக்கனி - இந்த நான்கின்நிறமுமாம்.

இது தரிப்பவர்கள் - சகலபாக்கியங்களையும் அடைவர்கள்

மாணிக்கத்தின் லக்ஷணம் - முற்றிற்று.

முத்தின்லட்சணம்—௩-வது- சரணம்.

இ-ம்-மோகனம்.

(க) தரளத்தின் இயல்பிது பாரும்-அது
ஸ்தலஜம்ஜலஜம்என உற்றபதின்மூவகைசொல்வார்ஈங்கது
கரிபன்றி யினுடமருப்பரவின் மானுதல் ஐவாய்மான்கரம்
முகில்சங்கிறகுவிரிகொக்கினிடநீள்களம்-மைவார்பூங்குழலியர்கந்தரமேகழை- சிப்பிமிக-வாகிய- நெல்வேய்மீன்தலை

தரளத்தின்

(௨) தானிவைய தனில்ஜவாய்மாஞெடுபகம்
மானனையவர்களம் - ஆழுவகையரி
தேனிலமிதனிலேயீராமுளதிற
மேநவிலுவமிது - கேளீர்நலமுறு
தரளத்தின்

(௩) தருபணிலமதருள்மணிபுறவினது-க
ருவின்வடிவுவெண்ணிறம்முகிலருள்தரளமே
தருணவிரவிவணம் - யெறுளிமணிகுருதி
கரிகழையின்மணி-பொன்னிறம்நெல்மணிபசுமை
தரளத்தின்

(௪) தானுத்தரளம-தாலங்கட்டிடை
நாகக்கதிர்மணிநீலம்-சிப்பியின்
வாணித்திலம்மதி யாகும்புட்கர
மீன்முத்தமதனை-யோதும்பொற்புள
தரளத்தின்

(௫) தண்பாடலமலர்-பண்பார்நிறமிவை
யின்தேவதைகள்புகழ்ந்-தோதுவமது
வெண்பால்நிறம்வருணன்-தேவிரவிவ
ணந்தானருணன்-அணங்கார்பசியது
தரளத்தின்

(௬) சமனேகடவுளன்-அமர்நீலமதரி
அமைவார்குருதி-நிறமதோவளியது
தமனியாரதெய்வம்-அமுதநாதனுயர்
தரளத்தின்இயலதுபது பாரும்- அது
தானிருமூன்றுவகை சாரும் - அவை
உரைதிண்மை விண்மணிபோல் நேரும் - ஒளி
உருட்க்ஷிபார்ப்பவர்க்கின்பம்தெருட்சிபடிகம்-ஆரும்
உளகுணமாமிவை அணிபவர்வாஞள்
வளர்செல்வமோடுயர் அழகுளமாஞர்
உருமதனெனமருவுவர்முழுமதியெனவொளிவு - பெருகி
எவர்களும் அணிய மலியும்
உப்பின் மைக்கடற்குள்இப்பி
முத்தமிக்க இப்புவிக்குள் ஆ சரணம் - ௩.
மணிகளினிடம்தொகை வகைகுலம்பலம்மலர்
வணங்களும் அணங்குமிதே.

உரை-முத்தின் இலக்கணம்-ஸ்தலஜம்-ஜலஜம்-என்னும்- உ-வகையில் - யானைதந்தம்- பன்றியின்தந்தம்- பாம்பின்நெற்றி- ஐவாய் மான்கை-மேகம்-சங்கு-கொக்கின்கழுத்து- ஸ்ரீகளின்கழுத்து-சிப்பி- நெல்மூங்கில் - மீன்தலை-ஆ ௰௩ - இடத்திலும் உற்பத்தி - இதில் - ஐவாய்மான்- கொக்கு- ஸ்ரீரிகள்கழுத்து- இந்த -௩- உற்பத்தியும் - அபூர்வங்கள், இன்னமும் வலாசுரனுடதந்தமும் ஆகும்.

இந்த - உற்பத்தி முத்துக்களின்நிறங்கள் - சங்கினமுத்து - பிருவின் முட்டைபோலும்- வெண்ணிறமாகும்- மேகத்தின்முத்து - சிவந்திருக்கும்- பன்றித்தந்தத்தின்முத்து - இரத்தம்போலும் - யானைத்தந்தத்தின்முத்தும் - கரும்பின்முத்தும் - பொன்னிறமாயும் - நெல்லின்முத்து- பசுமையாயும்

மூங்கில்முத்து- ஆலாங்கட்டிபோலும்- பாம்பின்முத்து- நீலமாகியும் சிப்பியின்முத்து - வெண்மையாயும் மீன்முத்து - பாதிரிப்பூப்போலவும் இருக்கும்.

இந்த - முத்துக்களின் தேவதைகள் - பால்நிறத்திற்கு வருணன்- சிவந்தநிறத்திற்கு சூரியன்- பச்சைநிறத்திற்கு இயமன்- நீலநிறத்திற்கு விஷ்ணு- இரத்தநிறத்திற்கு வாயு- பொன்னிறத்திற்கு சந்திரன்,

இந்த - முத்துக்கள் திண்மையாயும் - நக்ஷத்திரம் போன்ற ஒளிவும்- உருட்சியாகவும் மனோக்கியமாகவும் - தெளிவாகவும் இந்த (௬) குணமும்- உள்ளதாயிருக்கவேணும்- இதை அணிபவர் - மிகுந்தவாழ்வும் அழகும் ஆயுசும் பெறுவார்கள், இவைகளில்.

சமுத்திரத்திற்குள் சிப்பியில் உற்பத்தியாகிய - முத்தே - சிலாக்கியமென்பதாம்-ஆ முத்தின் லட்சணம் முற்றும்.

வைரத்தின்லக்ஷணம்-௪-வது-சரணம்

இராகம் - ஆரபி.

(௧) வைரமேமணிக்கெல்லாம்ஆதி - அது
மாவலாசுரனத் தீசியென்பது
கோசலாதிதங்குநாடில்முன்பு- இ
லேசதாகியும்-குலாவியுந்தெளி
வாகியேவிளங்குமேசிறந்தது
(வைரமேமணிக்)

(௨.) மலிந்தகோசலமதில்வாசையின்மலர்
கலிங்கதேசமுளதுபீதநிறமே
மதங்கதேசமதனில்வாசமல்லிகை
நிறம்சவ்வீரமதனிலேஇருளிணை

(வைரமேமணிக்)

(௩) வருங்குருதியமாரடதேசமுள
துபிங்கலநிறமே-யேமகூடமுயர்
பவுண்டரமதனில்நீலமாமலரே
பொருந்திமயமதிலேசுவேதநிறம்
(வைரமேமணிக்)

(௪) வளர்கழையிலே-கதலியின்மலர்-வாகையின்
அலர்நிறமதனுயர்-கடவுளன்மாயவன்
கரியகுவளைநிறவைரமதேயமன்
மருமலிகையின்மலர்நிறமதுகோபதி
(வைரமேமணிக்)

(௫) மன்னுநீள்இதளின்அலருகிஞ்சுகமோடு
துன்னுசான்மலியின்-மலரும்அங்குயர்வாய்வு
கன்னிகாரமலர்வருணனிந்திரகோபம்
மின்னுபானுஜலநிறமேசந்திரனுகும்
(வைரமேமணிக்)

(௬) வளரக்கினிநிற-வைரக்கடவுள்அ
ழலினுக்கிறைபடிகநிறத்ததுமுதல்
வருணனுகும்முயலினுடசோரிமன்னர்
வைரமேமணிக்கெல்லாம்ஆதி-அது
வண்ணக்கதலிமலர்ஜாதி-சொல்லும்
உயர்வசியர்வசியின் ஜோதி-தானே
உகந்தசதுர்த்தரிதே தகுந்ததணியும்நீதி
உறுகாகபதம் இரேகைதராசம்
சிறுதேசுதுளிஇதா முளதோஷம்
ஒழியமுழுதுமறை யவரணிவர்குல
அழகியர்சுபமணியி லணியநலமறும்
உற்றவர்க்கில்லை தரித்திரம்
ஒப்பெமப்பகைக்கும் அச்சம் ஆ சரணம் -௪.
மணிகளினிடம்- தொகைவகைக்குலம்பலம்மலர்
வணங்களும் அணங்குமிதே
வைரத்தின் இலட்சணம்- முற்றும்.

உ ரை.

வைரத்தின் லட்சணம்- வலாசுரன் - யெலும்பும் - ததீசிமகாரிஷியின் - முதுவெலும்புமாம் - இன்னமும் - கோசலாதிதேசங்களிலும் உற்பத்தியாம்.

இதுநிறங்கள்-கோசலதேசத்தில்- வாகையின்மலர்- கலிங்கதேசத்தில்-பொன்னிறம்-மதங்கதேசத்தில்- மல்லிகைமலர்- சவ்வீரதேசத்தில்-இருள்நிறம்.

மாரடதேசத்தில்- இரத்தநிறம்- ஏமகூடத்தில் - பொற்கொன்றைப்பூநிறம் - பவுண்டாதேசத்தில் நீலோற்பலநிறம் - இமயபர்வதத்தில்-வெள்ளைநிறம்.

மூங்கிலிலை-வாழைப்பூ-வாகைமலர்- இந்தநிறங்களுள்ளதற்கு-தெய்வம் விஷ்ணு- நீலோற்பலமலர் நிறமுள்ளதற்கு - தெய்வம்இயமன்-மல்லிகைமலர் நிறமுள்ளதற்குதெய்வம்- இந்திரன்.

முருக்கம்பூ-ஜான்மலியின் பூவின்நிறங்களுக்குதெய்வம் - வாய்வு நீலோற்பலமலர் நிறத்திற்குதெய்வம் - வருணன் - இந்திரகோப நிறத்திற்கு-தெய்வம்-சூரியன்-ஜலநிறத்திற்குதெய்வம்-சந்திரன்.

அக்கினிநிறத்திற்கு-அக்கினி-வெண்மைநிறங்கள்- பிராமணஜாதி-சிவந்தநிறங்கள் க்ஷத்திரியஜாதி.

வாழையின்மலர்நிறம் உள்ளது வைசியஜாதி- கத்தியின் பிரகாசம் உள்ளது-சதுர்த்தசாதி

இதின்குற்றம் காகபதம் ரேகை- தராசம்- அற்பவொளி- துளிஇவைகள்நீக்கி தரித்துக் கொள்ளுவார்கள் - சுபமங்கலிய ஸ்திரீகள்திருமங்கல்லியத்தில் வைத்து தரித்துக்கொள்ளக்கூடாது- இவைதரிப்பவற்கு தரித்திரமும் அபமுர்த்து பயமுமில்லை.

பச்சையின் இலட்சணம்-௫-வது-சரணம்-

இ-ம், கல்யாணி,

(௧) மகிமைகொள்பச்சையின்பிரகாச - மிக
மலியுந்தற்புகழ் வலனின்பித்தம
தனைமுன்பற்றியே உணவின்புட்பெரு
டிலின்கட்டர அதுவங்குற்றதோர்
விதமிந்தப்படி யினமுஞ்செப்புவம் (மகிமை)

(௨) வலியுற்றருணனை அருள்முட்டையினுடை
வதையக்கருட னிடையினிற்றனதனை
யிடமற்றதுதவறி யுவர்க்கடல்வனை
ஒருவைப்பினில்விழ உலகுற்றதுயினம் (மகிமை)

(௩) மயலரிமோகினி வடிவங்கொடுவரு
பொழுதரனுர் துடரவுமந்தரவரு
ஹரிஹரபாலன் வனதெய்வங்களைமிக
உதவியுமேஒழிகியயிந்திரியமிது (மகிமை)

(௪) வருகருடப்புட்பற்றியலைக்கட
லினுமெதுலுக்கற் குற்றநிலத்திலும்
இடஉலகுற்றுச் செப்பமிகுத்திடும்
அதுகருடப்பச்சைக்கலெனச்சொல்வா (மகிமை)

(௫) மருவுகாடமொடு சுப்பிரமிகவொளி
பெருகுகாளமென முப்பிரிவுபுல்நிறம்
அரியகாடமது செப்பியஸகுணம்உ
யருஸதோஷமென இப்படியிருவிதம் (மகிமை)

(௬) வடிவுளஸகுணம தறுவகையதுதனை
உலகினிலெவர்களும் மகிழ்வுறஅறிவகை
வரிசையாயினிது உரைசெய்வோமேயிது
மகிமைகொள்பச்சையின்பிரகாசம்-அது
மகிழ்காடம்உல்ல சிதம்பேசலம்பித்
தகம்-முத்தம்-பிதுகுமாம்தேசங்களிற்
றகுநிறம்-புல்-இலேசுமிகசென்னெல் மணிநேசத்
தத்தையிறகுகுலை நற்றழைதேனுர்
முற்றுவசனஇலை இத்தனைதானுர்
தரணியில்அறுவகை நிறமுளததையட
வுடனறிகுவரின முளதயும்மொழிகுவம்
சத்தமைக்கடற்புவிக்குள்மிக்கபச்சையிச்சைமுற்றும்.

ஆ சரணம்-௫.

மணிகளினிடம்தொகை வகையிலம்பலமலர்
வணங்களும் அணங்கும்யிதே

உரை.

பச்சையின்லெட்சணம் - பச்சை - வலாசுரனுடபித்தம்அவை-அக்காலம் அதைஉண்ண சிலபட்சிகள் கிரகித்துக்கொண்டு போனதில் சிந்தினது டில்லிதேசத்தில் பொருந்தியது - இன்னமும் - அருணன் உற்பத்தியான முட்டையின் உடைந்த ஓடுகளை அவன்தாயாகிய வினதை இளயமகனுகிய கருடபகவான் இடையில் ஆபரணமாக கட்டினுள் அந்தகருடபகவான் பறந்து குழந்தைப் பருவத்தில் விளையாடினதில் அந்தமுட்டைஓடுகள் இடையைவிட்டுக்கழன்று சமுத்திரத்திற்குள் ஒருதீவில்விழுந்து இந்த உலகில் விளங்கிற்று இன்னமும்-முன்னம் - மந்தரகிரிச்சார்பில் மஹாவிஷ்ணு மோகனு அவதாரஞ்செய்த மோகினியை துடர்ந்து பரமேசுபரன் காமாவிகாரங் சொண்டுபோனதில் அவரது இந்திரியம் கலனமாக அதை மோகினியான விஷ்ணுகையிலேந்த அரிஹரபுத்ரனும் மற்றவனதேவதைகளும் உண்

டானது அவர்கைவிட்டுபூமியில்அணுமாத்திரங்களாய்ச் சிதரியஇந்திரி யங்களை கெருடபட்சிகள் கௌவிக்கொண்டுபோய்சமுத்திரத்துக்குள் சிலதீவுகளிலும்மிலேச்சாளுக்கு சொந்தமாகிய தேசத்திலும்போட்டு துகள்இதுகெருடபச்சகக்கல்லென்று ஆகியது இந்தக் கெருடபச்சை- காடம்- சுப்பிரம்-காளம்-யென்னமூன்றுபிரிவாகும்இவைகள்புல்நிறமா யிருக்கும் இதில்காடம் ஸகுணம் ஸதோஷம் யென்றுயிருவிதம்இதில் ஸகுணம் ஆறுவகை அவைகள்- காடம்உல்லஷிதம்- பேசலம்- பித்தக ம்- முத்தம்- பிதுகம்-ஆசு- இவைகள்-புல்நிறம்- யிலேசு- நெல்லின்மு த்து- கிளியிறகுதுளஷியிலே- தாமரையிலை - இந்தநிறங்களாகயிருக்கும்.

சு-வது-சரணம்- பச்சைநீலம் கோமேதகம்,

இவைகளின் லட்சணம்-ஸ்ரீராகம்.

(க) சொன்னமணிகளில் விசேஷம்-இது
தோஷலேசாஞ்சிதமுதல் ஐந்துவகைஉலகினில்
ஆகுமேஆங்கதில்முதலென்றதொருதரமது
தோஷலேசாஞ்சிதமொடுதுஷ்டம்இவையின்நிறமே
நேருமேஓங்கியயெனுமிச்சயிலேஅரளியே (சொன்ன)

(உ) தோஷமூர்ச்சிதம் தோஷலேசமந்தத் தோஷமே
நேருமேற்புல்லும் சேர்சரோருகம்கலாபமே
ஆகுமேற்றதைந்தே சதோஷமொன்றிலீதுளர்
ஆயுள்நூற்றுகந்தோதுசேனைபொங்கவாழ்வரே (சொன்ன)

(ரு) தொந்தநீலமேகேளும்வலன் கணதங்கரனூர்களம்நேர்
இந்திரநீலமாநீலம் யிரண்டதில்இந்திரநீலமதே
முந்துபானுவார்சேயையடர்ந்துகொளும்பழிதானறவே
வந்துபோகிமாமேதமுறும்புகையம்பரிமாவிழியே (சொன்ன)

(ச) தோயவுமதுவார்பீளையதிந்திர
நீலமுன்அயமா யேகியபெண்டிபின்
னேபரியெனயேகாதவனிந்திரிய
மேஒழிகியமா நீலம்யெனும்புவி (சொன்ன)

(ரு) தாய்திவைதன்னைமின்னும் மண்ணிலர்இங்கே
தானுளவெண்மைசெம்மை பொன்மைகலந்தே
ஆனதைமுன்னர்மன்னர்பின்னும்இளங்கோ
யேனையர்பின்னர்யின்னசொன்னஒழுங்கே (சொன்ன)

(சு) சூடுவர்சுபமிஞ்சுமே பெருவிலைபொங்கும்
பானுறுகுடமொன்றில நூறுகுணமிலங்கும்

சுரர்அங்குபூணுவது அரிதிந்த்ரநீலமது
சொன்னமணிகளில்விசேடம்-இது
துகளில்கோமேதகத்தின் கூடம்சொல்வோம்
முன்னுருக்குநெய்த்துளிகேடம்கூடி
மொய்க்குந்தேன்துளியும் ஒக்கும்நிறம்பொன்னோட
மொழிகோசலமென மெலிதாய்ஒளிர்வது
அழகார்வலனுடலினிலார்நிணமது
முதிர்திடமும்விமலமும்மருவுமணியிது
அணிபவர்பவமொழிபுனிதமொடுவளர்வர்
முக்யமுற்றமுக்குணத்துமுச்சுடர்க்குமுற்சொலிக்கும்

ஆசரணம்-சு,

மணிகளினிடமதொகைவகைகுலம்பலம்மலர்
வணங்களும்அணங்குமிதே

உரை

இவை- பச்சை- நீலம்- கோமேதகம்- இந்தமூன்றின் இலட்சணம்-இதில்முன்சொல்லிய பச்சையில் ஸதோஷம் தோஷலே சாஞ்சிதமுதல் ஐந்துவகையாகும் இதில்தோஷலேசாஞ்சிதம்-துஷ்டம்-இருவகையும்- யெலிமிச்சயிலை- அறளியிலை- இந்தநிறங்களாகும் தோஷமூர்ச்சிதம்- தோஷலேசம்-மந்ததோஷம் இவைமூன்றும்புல்நிறம்-தாமரையிலை-மயிலிரகு-இந்தநிறங்களாம் - இந்தபச்சை தரிப்பவர்கள் தீர்க்காயுசுடன்மிகுந்தசெல்வம் பெற்றுவாழ்வார்கள் பச்சையின் இலட்சணம் முற்றிற்று.

நீலத்தின் இலட்சணம் - நீலம் - வலாசுரன்நேத்திரம் இந்திரநீலம் - மானீலம் - ஆ உ. - இந்திர நீலமாவது முன் இந்திரன் சூர்யபுத்ரனாகிய - விசுபரூபனைக் கொன்ற பழிதீர அசுவமேதயாகம் செய்யும்போது அந்த அசுவத்தின் நேத்திரத்தில் அந்த யாகாக்கினியின் புகை தாக்கினதில் அந்த நேத்திரத்திலுண்டாகிய பீளை யிந்திரநீலமாச்சுதுமற்றும் சூரிய பகவான் ஸ்திரீயாகிய சாயாதேவி பெண்குதிரைரூபங்கொண்டு போனாள் அவளைத் துடர்ந்துகொண்டு சூரியபகவான் ஆண்குதிரை ரூபங்கொண்டு காமாவிகாரத்துடன் போம்போது கலினமாகிய இந்திரியம்மானீலமாகியது இந்த நீலங்கள் பரிசுத்தமுள்ளது - இதுவெள்ளைநிறம் - சிவந்தநிறம் - பொன்னிறம் இந்த நிறங்கள் உள்ளதில் வெண்ணிறம் - பிராமணாளும் சிவந்தநிறம் க்ஷத்திரியாளும் பொன்னிறம் வைசியாளும் தரிப்பது மற்றபலநிறங்கள் கலந்ததை சதுர்த்தாள் தரிப்பது இந்தநீலம் மேன்மைஉள்ளது இந்தநீலரத்னம் ஒருகுடம்பாலுக்குள்ளானால் முன்னுள்ள நிறத்திலும் - நூறுப,

ங்கு பிரகாசிக்கும் இது மேன்மையுள்ளது இந்திரநீலம் இந்த பூலோகத்தில் அபூர்வம்தேவர்கள்பூணுவதுநீலத்தின்இலட்சணம்முற்றிற்று.

கோமேதகத்தின் இலட்சணம்,

கோமேதகம்- வலாசுரன்- நிணமாகியது இது நிர்மலமாய் பரிசுத்தமாய் - நெய்த்துளி - தேன்துளி - பொன் - கோசலம் - இந்தநிறங்களுள்ளது இது தரிப்பவர்கள் மேன்மையுள்ளவர்களாவார்கள் கோமேதகத்தினுடைய இலட்சண முற்றிற்று.

௭-வதுசரணம் புஷ்ப்பராகம் - வைடூர்யம்
இவைகளின் இலட்சணம்.

மணிரங்குராகம்.

(க) பகரமிகுந்திடுமிப்பாரில்இசை
படர்வலாசுரன்மெய்பற்றுங்கபம்ஒரு
பெரியதீவுளதுபொற்கண்பகைவனை
அடுவராகமதுக்குங்கபமுமே
புருடராகம்முடிவட்டங்கொடுலவும் பகர

(உ) பாரியாத்திரகிரிமுடியாமந்தரம்
நீடுநேற்றிகொள்மேகலையாம்இந்திரன்
மேவுகீர்த்திநகர் கொலுமாமண்டபம்
ஆகவாயத்ததவுமயனுலன்றது பகர

(ங) பைம்பொனிலங்கியசெந்தழலின்படி
வங்கொடுதங்கிமெலிந்துதெளிந்துசு
முன்றெளிபொங்கிமிகுந்துவிளங்கியெ
திர்ந்தவர்சிந்தைகவர்ந்துயர்கின்றது பகர

(௪) பங்கமறவணிவர் வயிடூரியமது
தங்கியவலன்மயிர்அதிளாவிரதம
தன்கணுலவிமிகும்மலையாளம்மகத
சிங்களமுயர்வுறுதிரிகூடமுமுள பகர

(ரு) பாரசீகம்கோரக்கம்பலபிற
தீவுமேவும்காலத்தின்கடைதனில்
மாரிஜாடுங்காருத்தங்கிடிவிழு
போதும்மேவும்பார்சுத்தும்கடல்மிசை பகர

(சூ) பணியின்கழையிலமயிலின்பிடரியும்
வெருகின்கணுமிணையெனவுஞ்சொலிநிறம்
பார்வையாயினிய யோர்வையாகுமிது

பகரமிகுந்திடும்இப் பாரில் இசை
பரவுங்கனமாய்லேசாய் நேரில்லாத

யிகழ்வில்தெளிவாய்ஒளிபூரித் தோங்கும்
இதில்வலப்புறம் ஒளிர்வது மறையோரேதேரில்
இடமாகியஒளியுளததுநேரே
படியாள்பவர்மிசையொளிவணிகோரே
யிடரறும் அடியொளியுளதுபின்னவர்யிவை
முறையொடுமொழிமலரதுபெய்தணிவர்தினம்
இச்செகத்தில்இச்சைமுற்றும்உச்சிதப்பிறபைபிரசித்த
ஆ சரணம்-எ.
மணிகளினிடம்தொகைவகைகுலம் பலம் மலர்
வணங்களும் அணங்குமீதே

உரை.

புஷ்ப்பராகம் வைடூரியம் இவைகளின் இலட்சணம் - புஷ்பராகமாவது- வலாசுரனிடகபம்- மற்றும்- இரணியாக்ஷனகொன்ற மஹாவிஷ்ணு அவதாரமான வராகமானது - கக்கியகபம் பாரியாத்ரகிரியின் கொடிமுடியாகியும் மந்தரகிரியைச்சூழ்ந்து மேகலையாகியும்விளங்கும் இந்திரன் கொலுவிருக்கும் மண்டபமாகமயனுல் உண்டாக்கினதுமாம் அதுபொன்னிறம் அக்கினி நிறம்போலவும் மெல்லிதாய் தெளிவாய் பிரகாசிக்கும் அதைப்பார்ப்பவர்மனதையுங்கிரகிக்கும் புஷ்ப்பராகத்தின் இலட்சணமுற்றிற்று.

வைடூரியமாவது வலாசுரன்மயிர் அது இளவரதகண்டம் - மலையாளம்- சிங்களம்- மகதம் த்ரிகூடபர்வதம் பாரசீகம்- கோரக்கம்-மற்றதீவுகளிலும் விளங்கும்- மற்றும் யுகாந்தகாலத்தில் ஸப்தமேகங்களும் கூடிமழைபெய்து இடிவிழும்போது சமுத்திரத்திலும் உற்பத்தியாகும் மூங்கிலிலே- கரும்பினிலே - மயிலின்பிடரி- வெருகின்கண்யிவைகிறங்களாம் பார்வைக்கியின்பமாய் இலேசாய் தெளிவாய் விளங்கும்- இதுவலதுபுறம் ஒளிவுள்ளதை பிராமணுளும் இடதுபுறம் ஒளிஉள்ளதை க்ஷதிரியாளும் மேல்ஒளிஉள்ளதை வைசியாளும் கீழ்ஒளிஉள்ளதைசதுர்த்தாளும் தரிக்கநன்மை அடைவார்கள் வைடூரியத்தின் இலட்சணமுற்றிற்று.

அ-வதுசரணம் பவளத்தின் இலக்கணம்
மத்தியமாவதிராகம்.

(க) தெம்புடனேகேளும் சொல்வோமேஇது
திண்கைவலனுடனுறுஞ்சதையும்அரிய
தென்புலருடல்கொள்களங்கமும்உயரரி
கொன்றமதுகையிடர்தங்குருதியுமலே
இன்சிறகரிபொழுதங்கெழுகுருதியும் தெம்

(௨) சேருமிடத்தினிலே விளைவுற்றிடும்
மேவுகோவைக்கனிசிதமுருக்கிதள்
ஆர்செவ்வரத்தலர்பாசிறைநற்கிளி
நாசிகையொத்திடுமேதுகிர்மற்றிது
(௩) திருகல்புழுவரித்திடலொடுபாரில் தெம்
முகமதொடிதல் குற்றமிவைகள்தீர
அணிவர்மணிநகைக் கனிமொழியார்கள்
நலவயதும்மகப் பெறுவர்கள்நாளும் தெம்
(௪) தினகரனுக்கெதிர் அனல்விளைகல்ச்சசி
முனமுதிறைத்திடு சிலையிவையிக்கதிர்
மணிகளினுட்படும் அறிபவர்நற்குண
புனிதவகப்புறம் உளதவவுத்தமர் தெம்
(௫) சீரார்செங்கமலராகம் மணிபிரவாளம்
காருடம்புருடராகம் வயிரம்நீலம்
கோமேதகம்சொல் வைடூரியம்நவமிதாயும்
நாளேசன்டன்மதிபூமன் அருணன்வியாழம் தெம்
(௬) திகழ்புகர்சனியெழு தினமிவைமுறையினில்
இறுதிமணிகளிருகதிரு மதியும்அணி
தினமும்ஆகும்இவை வினவினேம்உளது
தெம்புடனேகேளும் சொல்வோமே இது
தெளிவாய்ஆராய்பவர்கள் தாமேமரு
அம்புயமலர்சாதிப் பூமேவுசெவ்
வல்லிவெண்காந்தள் மவ்வல்சொல்சதபத்ரியாமே
அமருகள்வாயிதள் செங்கேழ்குவளையின்
யிம-மலருமணவெண் மந்தாரமலரும்
அணிவர்கள்மணிகளிலு முறைசொரிவர்கிரக
அதிபரைமணிமுறை தொழுதிம்மணியணிவர்
அற்புதமிகுத்தவிலை பெற்றுயருபொற்புநிறை
ஆ சரணம்-அ.
மணிகளினிடம்தொகைவகைகுலம்பலம்மலர்
வணங்களும் அணங்குமிதே

உரை.

பவழத்தின் இலட்சணம் பவழமாவது வலாசுரனுடைய சதை மற்றும் பிதுர்தேவதைகள் சரீரத்திலுள்ள களங்கம் மஹாவிஷ்ணுவாலே மடிந்தமதுகைகயிடவாள் இரத்தம் இந்திரன் மலைகளின் சிறகை அரிந்தபொழுது அதிலுண்டாகிய குரிதியும்ஆகும் கொவ்வைக்கனி-முருக்கம்பூ-செவ்வரத்தமலர்- பச்சைக்கிளியின்மூக்கு-இவை

களின் நிறங்களாகும் - திருகல் புழுஅரித்தல் முகம்ஒடிதல் ஆகயிந்த மூன்றுகுற்றமும்நீக்கி ஸ்ரீகள் தரிக்கில் நன்மையைப் பெறுவார்கள் சூரியகாந்தம் சந்திரகாந்தம் இவையிரண்டும் இந்தவொன்பது இரத்னங்களுக் குள்ப்பட்டதாகும் மாணிக்கமென்னும் பதுமராகம் முத்து- பவளம்- பச்சை - புஷ்பராகம் - வைரம் - நீலம்-கோமேதகம்- வைடூரியம்- இந்தஒன்பது மணிகளையும் ஆராய்ந்துபார்வையிடும்நாள் ஆதித்திய வாரமுதல் சனிவாரம்வரையில் முன்சொன்ன கிரமப்படி பார்வையிட்டு வாங்கி தரிப்பது இந்தவாரம் எழிலும் ஏழுரத்னங்கள் போக மற்ற இரண்டு ரத்னங்களையும் ஆதித்த வாரம் சோமவாரம் இவைரெண்டிலும் பார்ப்பது இந்தமணிகளை மாணிக்கமுதல் பவளம் இராகசெந்தாமரை செண்பகம் செவ்வல்லி வெண்காந்தள் மல்லிகை சதபத்ரி செங்கழுநீர் மந்தாரை ஆம்பலை இந்த ஒன்பதுபுஷ்ப்பங்களாலும் அந்தந்த மணிகளைபூசித்து அந்தந்ததேவதைகளாகபாவித்துபணிந்து பிரார்த்தித்து அந்தந்தபுஷ்ப்பங்களை தரித்துக்கொண்டு இந்த மணிகளையும் தரித்துக்கொள்ளுவார்கள். பவளத்தின் இலட்சணம் முற்றிற்று.

ஆ ஒன்பதுஇரத்னங்களின் இலட்சணங்களும்
முற்றிற்று. ௱உக

---

விருத்தம்.

மாமணியின்சிறப்புரைத்துமணிகளாங்கு ... *
வாழ்த்தியெடுத்துக்கொடுத்திவ்வழுதிமைந்தர் ... *
கேமமுடிசூட்டியபிஷேகபாண்டிய ... *
னெனநாமமிடுமினென்றுவணிகரான ... *
காமருருக்கரந்திடபமேலாய்மாலாங் ... *
கயற்கண்ணியுடன்கோயிற்புகுதக்கண்டு ... *
கோமகனும்அமைச்சருடன்விமலர்முன்போய் ... *
குதித்திட்டான்பணிந்துநின்றுதுதித்திட்டானே(௱ருகூ)

சோமசுந்தரேசுவரமூர்த்தியைஅபிஷேகபாண்டியன்
ஸ்தோத்திரஞ்செய்தது,

பதம்-அசாவேரிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

அரஅநாதரெட்ச......வரனே - என்னை
யாண்டமாணிக்கசுந்தரனே

அநுபல்லவி.

திரமதுராபுரீசா-செயமீனாட்சிபிராணேசா
அர

[ சரணங்கள். ]

(க) மருவலரால்வந்த-கண்கலக்கமும் ... ... நாண
மதிகுலத்துமதன்பு-வைத்ததெவருங் ... ... காண
பெருமாமணிதர-வந்தீரேமுடி ... ... பூணப்
பேரும் பிரதிஷ்டையும் - பெற்றேனே அறிவுதோண

அர

(உ) எங்கள்குலத்தைக்காக்கக் கங்கணமே ... ... தரித்து
இருக்கும்உம்மைச்சிறி-யேனுவப ... ...சரித்துப்
பொங்குமகிட்சிசெய்வேன்-சங்கரனே ... ...சிரித்துப்
புரமெரித்தவாஆர்தான்- புகழ்வாருமை ... விரித்து

அர

(௩) என்செய்வேனுபகாரம்-தேவரீரருள் ...சேர்க்கும்
எனதுடல்பொருளாவி-உமதையா ... ... ஆர்க்கும்
பஞ்சைபொங்கலிட்டோ- பகவானுக் ... ... கேற்கும்
பாருபகரிப்பதயோ மழை ... ... பாற்கும்

அர-௱உஉ,



விருத்தம்.

துதித்தமலர்அருள்பெற்றுமனையில்வந்து ... *
துரைமகனும்அரனருளுஞ்சுடர்மாணிக்கம் ... *
பதித்தமுடிபெற்றுவணிகேசர்சொன்ன ... *
படிதிருநாமமும்பெற்றுப்பாரோர்போற்றக் ... *
கதித்தசெங்கோல்பெற்றுஅபிஷேகபாண்டியன் ... *
கனம்பெற்றுதன்தந்தைகாமமாதாக் ... *
குதித்தமைந்தர்கவர்ந்தநிதியெல்லாம்பெற்று ... *
ஒங்கினன்மிகுந்தபுகழ்தாங்கினனே (௱சுய)

விருத்தம்.

பருதிபோளொளிர்மாணிக்கம் பகர்ந்திட்டலீலைசுது *
கருதியேகேட்போர்செல்வங் கலந்தரன்பதத்தில்வாழ்வார்
வருணன்முன்விட்ட ஆழிவற்றச்செய்திடுமீரொன்பான் *
திருவிளையாடல்தன்னைத்தெரிந்திடஉரைசெய்வேனே ( )



மாணிக்கம்விற்ற- திருவிளையாடல் - முற்றிற்று.



ஆ திருவிருத்தம் அ, பதம்- சு ஆ யச

ஆ பாயிரம்உள்படத்- திருவிளையாடல்- யஎ-க்கு-வெண்பா-க-
கலித்துறை-உ-கொச்சகம்-க,விருத்தம்-௱ருஎ, பதம்-௱உஉ.
ஆ கவிதை- உ௱அ௩.



பதினெட்டாவது

## வருணன்விட்டகடலை வற்றச்செய்த திருவிளையாடல்.



விருத்தம்

மாணிக்கம்விற்றபின்புஅபிஷேகபாண்டியன் ... *
மண்டலங்காத்திடும் நாளில்ச்சித்திரை மாதத்தில் *
சேணுற்றபூரணைசேர்சித்திரைநாள்தன்னில் ... *
தேவரொடும்இந்திரன்தென்மதுரைநகருற்று ... *
வேணிச்சுந்தரரைப்பூசித்திடவந்தானவ் ... *
வேளைதனில்அபிஷேகபாண்டியனுஞ்சென்று ... *
வாணிக்கன்பாம்வேதன்மால்பூசைசெய்யும் ... *
மதுரேசர்இருசரணமலர்பூசித்தானே (௱௬௨)... *

பதம் - பைரவிராகம் - அடதாளசாப்பு.

[ பல்லவி. ]

பூசைசெய்தானே - புதுமையாய்த்தானே

[அநுபல்லவி.]

ஆசைமீனலோ - சனைபிராணேசரை

பூசை

[சரணங்கள்]

(க) சுருதியின்முறைமறை யவர்கள்கொண் ... ... டாட
துந்துமிசங்கொலி-யந்தர ... ... மோட
வரும்அதிவிதரச-நயஇசை ... ... பாட
மங்களம்நாட - நங்கைய ... ... ராட

பூசை

(உ) செங்கனிரசமது - ரங்களுங் ... ... கூட்டி
சேருமணமுயர் - கர்ப்பூரநீ ... ... ராட்டி
தங்கமயத்துகிலோ - டணிமலர் ... ... சூட்டி
சைவத்தைநாட்டிநை - வேத்தியங் ... ... காட்டி

பூசை

(௩) மந்திரமுயர்சோ - டசஉப ... ... சார
வரன்முறைப்படிசெய்து - வணங்கிக்கர் ... பூர
சுந்தரனேநீ - ரென்றன்பு ... ... கூர
துதித்தருள்சேர - மதித்திடர் ... ... தீர

பூசை. ௱௨௩.

விருத்தம்.

பூசனைசெய்தபிஷேகபாண்டியன்சென்றான் ... *
புரந்தரனுங்காத்திருந்துபின்பூசித்து ... *
யோசனையாய்விண்ணடைந்துவாட்டமுற்றான் ... *
உயர்வருணன்வந்தபோதிதனைக்கேட்டு ... *
வாசனைசேர்தென்மதுரைவிமலர்மிக்க ... *
வரதரோவெனக்கேட்கவருணையிந்த ... *
ஈசனைநேரெவ்வுலகத்தினிலுமில்லை ... *
ஈடென்பான்அறியாயோநாடென்பானே (௱சுரு)

தேவேந்திரன்வருணனிடத்தில்
சோமசுந்தரேசுவரமூர்த்தியைப்புகழ்ந்துசொல்லியது.
பதம் - பியாகடைராகம் - அடதாள சாப்பு.

[பல்லவி.]

இந்தமதுரேசுவரர்கீர்த்தி-அறிந்- திலையோவருணஎன்னநேத்தி

அநுபல்லவி.

எந்தவுலகிலுண்டு - எவருரைப்பார்கண்டு
இந்த

[சரணங்கள்.]

(க) பண்டுநான்விருத் - திராசுரனைவதைத்துக்
கொண்டபெரும்பழியி ... ... னாலே- அள
வுண்டோபட்டபாடு ... ... அப்பாலே-இந்த
அண்டர்நாயகரைக் ... ... கண்ணாலே-நான்
கண்டேனேமனத்துயர்-காணேனே - மென்மேலே
இந்த

(உ) முந்தத்துர்வாசமுனி - எந்தன்வெள்ளானைக்கித்,
தந்தசாபமும் ... ...பறந்துதே - உல
கந்தனில்க்கீர்த்தி ... ...பிறந்துதே -சைவ
முந்தழைத்தோங்கிச் ... ...சிறந்துதே- வெகு
சந்தோஷமேமிகுந்து - தாழ்வெல்லாமறந்துதே
இந்த

(௩) உந்தன்வையிற்றுநோ - யொழிந்திடுமோயிந்தச்
சுந்தரேசுவரரா ... லென்றுரே - அதுவும்
சந்தேகமோஅடா ... ...[illegible]
றந்திடுமேபிறவி ... ...[illegible]மே- இப்போ
தந்தச்சோதனையும்-அறிந்துபார்ப் பாயே
இந்த-௱உச.

## ௰அ-வது-வருணன்விட்டகடலை.
## வற்றச்செய்தது.

விருத்தம்.

வருணனிதுகேட்டெனதுவயிற்றினேவு ... *
மாற்றும்அரன்திருவிளையாட்டறிவேனென்று ... *
திருநகராமதுரைதன்னை அழிக்கமேலாந் ... *
திரைக்கடலைஏவிவிட்டான்கடலும்பொங்கி ... *
வருபொழுதுவானவரும்எவரும்அஞ்ச ... *
மாநகரம்நடுங்கஅபிஷேகபாண்டியன் ... *
முருகனைஈன்றருள்சுந்தரேசர்முன்னே ... *
முறைஇட்டான்பணிந்துமனக்குறைவிட்டானே (௱௬௪)

பதம்-ஆகிரிராகம்- அடதாளசாப்பு.

[பல்லவி]

அலைகடல்பொங்கியதைக்கண்பாரீர் - சுவாமி
அபயம்அருளியே இதுதீரீர்

[அநுபல்லவி]

உலையவேஇவ்வூரைநாடி- ஊழிகாலம்போலேகூடி
அலை

[சரணங்கள்]

(௧) மார்க்கண்டன்மேலேதொடர்ந்து-வரும்எமன்போலேஅடர்ந் [து
மேல்க்கொண்டுவிண்ணைக்கடந்து - விரைந்துசீறியே
ஆர்க்கும்அருள்செய்துபண்டு
ஆலகாலந்தனை......உண்டு
காக்கும்உம்பதிஈதென்று-கண்டும் ... ... தேறியே
அலை

(௨) உமதுகும்பமுனிகோவித் - தண்டடங்கச்செய்துந்தாவி
குமுறிவந்ததெவ ரேவிக் - குறித்திட்டதோ
எமதுமூதாதைநீர் ... தந்த
எரிசொரிவேலாலேமுந்த
மமதைஒழித்தாரே அந்த - வைரமோ-ஏதோ
அலை

(௩) கனைகடலேழும் நடுங்கிக் - கமலவாவிபோலொடுங்கிச்
சனிதிமுன்னேதானேதங்கித் - தாழச்செய்தீரே
ஜெனனசாகரமுந் தீரக்

செய்யும்உமதருள்கூர

பனகபூஷணு இவ்வூரார் - பரதவிக்கிருரே

அலை. ௱உ௫.

---

விருத்தம்.

முறையிட்டபாண்டியனுக்கிரங்கியேபுன் ... *
முறுவல்செய்து அஞ்சலெனமொழிந்துகொன்றை *
நறையிட்டமுடிச்சடையில்உலவிவாழும் ... *
நாலுமுகிலையும்விட்டுநகர்மேல்பொங்கித் ... *
துறையிட்டகடலைஉண்டுவற்றச்செய்தார் ... *
சுந்தரேசுவரர்விளையாடலைக்கொண்டாடிப் ... *
பொறையிட்டபுயவழுதிமுதலாயாரும் ... ... *
புகழ்ந்திட்டார்பணிந்துமகிழ்ந்துகந்திட்டாரே(௱சூ௫)

---

விருத்தம்.

இருளுறுசாகரம்வற் - றியபுகழ்இதனைக்கேட்போர் ... *
மருளறவாழ்வார்இந்த - மதுரைநான்மாடக்கூடல்ப் ... *
புரியெனவாகச்செய்த - புதுமைகொண்டிடுபத்தொன்பான் ... *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடஉரைசெய்வேனே (௱சூசூ)

வருணன்விட்டகடலை-வற்றச்செய்த

திருவிளையாடல்-முற்றிற்று.

—*—

ஆ திருவிருத்தம்-௫. பதம்-௩.ஆ அ.

ஆ மதுரைக்காண்டம்-க,பாயிரம்உள்படத்-திருவிளையாடல்

௰அக்கு-வெண்பா-க-கலித்துறை-உ-கொச்சகம்-க.

விருத்தம் - ௱சூசூ. பதம்-௱உ௫.

ஆ கவிதை-உ௱கூ௰க.



பத்தொன்பதாவது

கூடல்க்காண்டம்,

## நான்மாடக்கூடலான திருவிளையாடல்.



விருத்தம்.

வருணன்விடுகடலைவற்றச்செய்தபின்பு ... *
மதுரேசர்விளையாட்டென்றறிந்திடாமல் ... *
இருணிறமாங்கடல்வேந்தன்சினந்துநோக்கி ... *
எழுமுகிலையும்அழைத்துஏவிவிட்டு ... *
அருணஒளிபெறுமனைசேர்மதுரைதன்னை ... *
அழியென்றான்அப்போதேழுகில்கள்எழும் ... *
தருணமணிக்கடல்நீரைஉண்டெழுந்து ... *
தடித்துத்தான்மழைபொழிந்துதிடித்துத்தானே (ஈகூஎ)

பதம் - சங்கராபரணராகம் - ரூபகதாளம்.

(க) கண்ணிகள்.

மதுரைநகரையழிக்கச்சூழ்ந்து - கதறிமேகங்கள் மொய்த்து - மிக
மண்டியேகடல் - கொண்டநீர்வற்ற-உண்டுதேஒரு மித்து
கதிருமதியும் - உதிருந்தாரா - கணங்களுங்கதி ... ஓய- திசைக்
கரியும்அஷ்ட - கிரியுஞ்சிதறப் - பெரியமேருவுஞ் சாய

(உ)
திரண்டுஎவரு - மருண்டுநடுங்க - இருண்டுநெருங்கிக் கூடி - இந்த
தென்மதுரையைத் - துன்னியேசுற்றி - மின்னிமுழங்கிமூடி
விரைந்துஇடிக- ளிரைந்துவிழுகக்- கரைந்துசேடனும்வாட - அந்த
விண்டலத்தினில் - அண்டருமஞ்சச் - சண்டமாருதஞ்ஜாட

(ங)
ஆயும்பூசினிக்-காயிதென்னவே-யேயுமேஆலாங் கட்டி - நின்று
ஆனும்பளிங்குத்-தூணெனமழை-ஊனிப்பேபுமேகொட்டி
பாயும்புலிமுன் சாயுமானென-வேளல்லோருந் துடிக்க - உமை
பாகர்முன்னபி ஷேகபாண்டியன்-சோகமுரைத்துப்படிக்க

(௪) [மூம்

அண்டர்நாதரும் - பண்டுபோலவே - கொண்டல்நாலையும்விடுக்க - எ
அந்தமுகில்கள்வந்துகவிந்து - இந்தமழையைத் தடுக்க
கண்டுமகிழ்ந்து-கொண்டுநீல-கண்டர்கருணை யாலே- அன்று
கதித்துமதுரைப் - பதிக்குள்ஆருந் - துதித்திருந்தார்மென்மேலே
(௱உ௬)

---

விருத்தம்.

மாநகர்மேல்மாடமெனப்போர்த்தநான்கு ... *
மாமுகில்மீதெழுமுகிலுமழைசொரிந்து ... *
தானருந்துநெடுங்கடலும்வறண்டிருண்ட ... *
தன்னுடலும்வெளுத்தோயவருணன் அஞ்சி ... *
மானமறமனத்தில்ஒருமகிட்சிசேர ... ... *
மலர்ப்பொற்றாமரைக்கரையில்வருமுன்னேவும் ... *
போனதுகண்டகமகிழ்ந்துவிமலர்தம்மைப் ... *
பூசித்துநேசித்துப்புகலுவானே ... ...(௱௬அ)

வருணன் சோமசுந்தரேசுவரமூர்த்தியை ஸ்தோத்திரஞ்செய்தது
பதம் - தன்னியாசிராகம்- ஆதிதாளம்.

பல்லவி

பேதைமதியால்இந்தச் - சோதனைசெய்தஎந்தன்
பிழைபொறுத்தாளையனே

[அநுபல்லவி.]

நாதஉமதுசெயல்ஆரறிவார் ... சின்ன
நரிவால்கொண்டுகினற்-றாழம்பார்ப்பதென்ன
பேதை

(சரணங்கள்.)

(௧) கொடியகடல்விடத்தை - அமுதெனக்கொண்டமெய்ய
குற்றத்தைக்குணமாகக் - கொள்வதுன்பரம் ... ஐய
அடியேன்செய்துற்மதியை - மதியாமலே ... உய்ய
ஆண்டவனேஅன்பு - பூண்டவனே ... வெய்ய
பேதை

(௨) இந்திரன்மொழிந்ததும்என் - ஞமல்ச்சமுத்தி ரத்தி
லேற்றுப்போட்டதுபோல் - எதிர்த்தஎனது வெற்றி
இந்தயிடத்தில்ச்செல்லுமோ - யெவளவென் சத்தி
யெழுஞ்சந்திரனைப்பார்த்து நாய்குலைத்தால்ப்போல்க்கத்தி
பேதை

(௬) வந்தும்மைவணங்குமுன்-வயிற்றுநோயுடன் ... கூடி
வலியபிறவிநோயுந் - தீரப்பெற்றேனே ... கோடி
அந்தணர்பணிந்திடும் - உமதுசன்னிதி ... தேடி
அடுத்தோர்க்குமணிமந்திரம்-அவிழ்தம்வேணுமோநாடி

பேதை - ௱௨௭.

---

விருத்தம்.

வன்றிறல்வருணன்போற்றி வரங்கள்பெற்றகன்றூன்ஈசர் ... *
மின்றிகழ்சடையைநீங்கி விண்மழைதடுத்தமேகம் ... *
குன்றுபோல்மிரிந்துநான்கு கூடமாய்க்கூடலாலே ... *
அன்றுநான்மாடக்கூடல் ஆச்சிந்தமதுரைதானே ... (௱௪௬)

---

விருத்தம்.

நரர்தொழுமதுரையைநான் மாடக்கூடலதாக்குஞ்சுந் ... *
தரர்புகழ்இதனைக்கேட்போர் சஞ்சலம்ஒழிந்துவாழ்வர் ... *
வரனெல்லாம்வல்லசித்தர் வடிவுற்றவிருபதாநற் ... ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே ...(௱௪௰)

---

நான்மாடக்கூடலான திருவிளையாடல்-முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம்-௪-பதம்-௨-ஆக-௬

ஆக பாயிரம் உள்படத் திருவிளையாடல்- ௰௬க்கு-வெண்பா-௧-
கலித்துறை-௨-கொச்சகம்-௧-விருத்தம்- ௱௪௰-பதம்- ௱௨௭

ஆக கவிதை - ௨௱௬௭.



இருபதாவது

## எல்லாம்வல்லஸித்தரான திருவிளையாடல்.



### விருத்தம்.

மதுரைநகர்நான்மாடக் கூடலாகியபின்பு மதுரைமூதூர் ... *
அதில்எவருமகிழ்ந்திடச்செங்கோல் தாங்கிமதுரேசர்-அடிபூசித்து
மதிமரபின்அபிஷேகபாண்டியன் பாராள்நாளில்- மதுரைஈசர் *
துதிபெறஎல்லாம்வல்ல சித்தராய்வடிவுகொண்டு - தோன்றினரே

பதம் - உசானிராகம் - அடதாளசாப்பு (௱எக)

[ பல்லவி. ]

ஸித்தர்வந்தார்-எல்லாம்வல்ல-ஸித்தர்வந்தார்

[அநுபல்லவி.]

சுத்தவெண்படிக - மணிமாலை தாங்கித்
தோளில்விபூதிச்-சுமைதரித்... தோங்கி

சித்தர்

சரணங்கள்

(க) வரிப்புலித்தோல்க்கோ- வணமும்சுகுணமும்
வட்டமுடிச்சடையும்- புலித்தோலுடையும்
விரித்ததோலணி- மெய்க்கச்சுடன்மெச்சும்
வெள்ளைமுத்திரையும்- விள்ளுமெய்புரையுமா

சித்தர்

(உ) திருநீறணிநுதல்ப்-பொட்டும்பொற்கட்டும்
செங்கைப்பிரப்பங்கோலும்- மெய்யில்முந்நூலும்
இருகுழையும்யோகப்- பட்டிகையும்புன்னகையும்
எவருங்கொண்டேற்றும்- தவமெனத்தோற்றும்

சித்தர்

(ங) உதரபந்தனமும் - புலம்பும்பொற்சிலம்பும்
உபநிஷதபாதுகை- யணியுங்கிண்கிணியும்
பதவரவிந்தத்தில்ச்- சூடியேநாடி
பதியெனநாளும்- கதிகொடுத்தாளும்

சித்தர் - ௱உஅ.

விருத்தம்.

வந்துயர்சித்தசாமி மதுரைமாநகரின்வீதி ... *
சந்திஉப்பரிகைவாசல் சத்திரங்கூடந்திண்ணை ... *
விந்தைசேர்கடைகள்ஒங்கும் வியன்மனைஎங்குமேனு *
நந்தநல்லருட்கண்ணுட்டி னூர்விளையாட்டினுரே(ஈஎஉ)

எல்லாம்வல்லசித்தர் மதுராபுரிபட்டணத்தில்
அனேகவிதங்களான சித்துவித்தைகள் செய்தது.

பதம்-பைரவிராகம்- ரூபகதாளசாப்பு.

[ கண்ணிகள். ]

(க)திருமாநகர்த்-தெருவெங்கினுந்-திரிவார்-அருள் ... புரிவார்
தெற்கிருப்பவர்போல்வடக்கினில்ச்- செல்லுவார்- துயர்வெல்லுவார்
கருணுகர-ரென்னக்கீழ்திக்கில்க் - காணுவார் - மேற்கேதோணுவார்
கண்ணில்லாருக்குக்-கண்தெரிந்திடக்-காட்டுவார்- பிணி - ஒட்டுவார்
(உ)ஆணைப்பெண்ணெனஆக்குவார்பெண்ணை ஆணதாகவேநோக்கு [வார்
அலியைநீக்குவார்கலியைப்போக்குவார் அருளார்மறைப்பொருளார்
கோணலாம்விருத்தர்க்குவாலிபங்கொடுப்பார்- மையல்- விடுப்பார்
குழிக்கும்வாலிபர்·தமைவிருத்தராய்க்-கூட்டுவார்-பா ... ராட்டுவார்
(ங)மலடாய்மன-மெலிவோர்பல-மகப்பெற்றிடப் ... பார்ப்பார்
வஞ்சரால்மனதஞ்சுவோர்தம்-அஞ்சலென்னவே ... கார்ப்பார்
நலமாமிந்திரசாலமும்நா-ஞவிநோதமும் ... ... புரிவார்
நத்தியாவரும்-பத்திசெய்யவே-சுற்றிஎங்கனுந் ... திரிவார்
(ச)அருமாமலைகளேயேசிறு-அணுவாக்கியே ... ... வைப்பார்
அணுவைப்பெருமலையாக்கியே-யாவருந்தொழ... உய்ப்பார்
பருவமாறியகாலத்தில்வைகைப்-படரநீர்வர ... ...வழைப்பார்
படரவைகைநீர்மேற்கேசெல்லப்- பண்ணியேஅருள்தழைப்பார்
(ரு)செவிடுமையைத்தேற்றுவார்பேசத்-தெரியாமலு மாற்றுவார்
சேர்ந்ததோழர்கள் பகையாயமர்- செய்யவேவிஞ்சைசாற்றுவார்
தவனமுடன்முகிலைஎட்டித்- தாவிநீர்பிழிந் ... திடுவார்
தறிமேலொருஊசிநாட்டியே-தலைகிழாய்நின் ... ... றிடுவார்
(சா)உந்துவாவிகள்கூவல்நீர்களை-உப்புநீரெனப் ... பண்ணுவார்
உவரிநீர்தனைத்தாகமாற்றிட-உண்ணவேசெய்து ... நண்ணுவார்
இந்தவாறுதென்மதுராபுரி-எங்குமேவிளை ... யாடினர்
எல்லாம்வல்லசித்தர்தானிவ-ரென்றெல்லோருங்கொண் டாடினர்

விருத்தம்.

இந்தவிளையாடல்செய்யும்சித்தர்தம்மை ... *
இங்கழையும்என்றுமீனவன்உரைக்க ... *
மந்திரிமார்சென்றழைத்தார்சித்தசாமி ... *
மன்னவர்முன்வரக்கருமமில்லையென்றார் ... *
அந்தஉரைஅமைச்சர்வந்துசொல்லக்கேட்டு ... *
அமலவடிவானவர்எந்தனைமாட்டேஅவ் ... *
விந்திரன்மாலையனையும் எண்ணுவரோவென்று ... *
இயம்பிஅபிஷேகமன்னன் இருந்திட்டானே (௲௭௯)

—O*O—

விருத்தம்.

தெரிவரிதெல்லாம்வல்லசித்தர்பண்பிதனைக்கேட்போர் *
அரிஅயன்தேடுமீசர் அடிநிழல்அணுகிவாழ்வார் *
கரியதோர்கல்லானைக்கிக் கரும்பருள்இருபத்தோராந் *
திருவிளையாடல்தன்னைத்தெரிந்திடஉரைசெய்வேனே ( )
எல்லாம்வல்லசித்தரான-திருவிளையாடல்-முற்றிற்று.

—O*O—

ஆ திருவிருத்தம்-ச-பதம்-உ-ஆக சு.

—[-:-]—

ஆக பாயிரம்-உள்படத்-திருவிளையாடல்-உ௰-க்கு-வெண்பா-க-
கலித்துறை-உ-கொச்சகம்-க-விருத்தம்-௱எ௰ச-பதம் - ௱உசு

ஆக கவிதை-௲௱௯.

இருபத்தொன்றுவது

## கல்லானைக்குக்

## கரும்பருத்திய திருவிளையாடல்.

—————*ஞ*—————

விருத்தம்.

எல்லாம்வல்லசித்தருளிய- விநோதமெலாம்அமைச்சர் ... *
செல்லால்கேட்டுரசரெனத் - தோணுதிருந்தான்அபிஷேக *
மல்லார்புயப்பாண்டியன்பின்புமகிமையுள்ளசித்தர்முன்பு ... *
செல்லாதிருந்தோமேயெனயோ - சிப்பான்சிந்தைவைப்பானே *

பதம்- கலியாணிராகம்- ஆதிதாளம். (௱எடு)

[ பல்லவி. ]

இன்னம்கண்டுதெரிசனஞ் செய்யாமல்ச்சும்மா
யிருந்துவீணாள்ப்போச்சே ... அம்மா

[அநுபல்லவி.]

என்னஏழைமதிபோனோம்- நாம்இன்று
எல்லாம்வல்லசித்தர்- இருக்கும்இடத்தில்ச்சென்று
இன்னம்

[ சரணங்கள். ]

(௧) நல்லோர்பெரியோர்கள் - வந்தால்அவர்முன்சென்று
நாமல்லோதொழவேணும் ... ... நீதி - அது
அல்லாமல்நமதுமுன்- வரவழைத்திடச்சொல்லி
அபசாரஞ்செய்தோம்அபக் ... ... கியாதி - பிழை
எல்லாம்பொறுத்தருள்வர் சென்றால்எவருஞ்...சரி
என்றெண்ணியேவெறுப்பு-விருப்புற்றுணர்ந்துவிரி
தொல்லுலகில்ப்புளியம் - பழத்தோடுபோல்த் திரி
துறவிக்கிவேந்தனோர் - துரும்புநாமோ ... எதிரி
இன்னம்

(௨) ஆராகிலுஞ்சிவ முத்திரைதரித்திட்டால்
அவரேசிவனென்னும் ... ... ... வேதம்-இந்தப்
பாரோர்அவர்களைப் பணிந்துகருணைபெற்றுப்
பணிவிடைசெய்துய்வதே ... ... நீதம்- இவர்

---

*அம்மாவென்பது- அதிசயஇரக்கச்சொல்.

நேரேஎவருங்காணக் - கருணைவடிவங் ... காட்டி
நிலத்தில்எங்குங்காணுப்- புதுமைமிகப்பா ... ராட்டி
தீராவினைதனைத்- தீர்த்தருள்பர ... ... மேட்டி
செழுமறைவளர்மலர்த் திருவடிதனைச் ... சூட்டி
இன்னம்

(௩) விமலர்சுந்தரேசர் விளையாடலோஎன்ன
விதமோகண்டாலல்லோ ... தோணும் - இங்கே
நமதுசெவிகுளிரக் கேட்டதெல்லாம்இப்போதே
நாடிக்கண்களிக்க ... ... வேணும் - இவர்
கமலவதனங்கண்டால்க் - குறையுண்டோ வெனநேரே
கடல்ப்புளுகும்மலைப் - புளுகுமாய்ச்சொல்கின் றூரே
தமதுபுகழ்விளங்க - எழுந்தருளிவந் தாரே
சகலமுந்தெரிந்தமெய்ப் - புகழுற்ற பெரியோரே
இன்னம். ஏ௩௰.

---

விருத்தம்.

இந்தவிதம்எண்ணிமன்னன்வரநினைத்தான் ... ... *
இதுவறிந்தெல்லாம்வல்லசித்தமூர்த்தி ... ... *
வந்துஅஷ்டகெஜந்தாங்குமணிவிமான ... ... ... *
வடமேற்கிலிருந்தார்தைமாசந்தோன்றும் ... ... *
அந்தநாளன்றுஅபிஷேகபாண்டியன் ... ... *
அமைச்சரொடுசோமசுந்தரரைப்போற்றி ... ... *
முந்திவலம்வருகையில்ச்சித்தரைக்கண்டாங்கு ... ... *
மொழிகுவான்மனக்கவலைஒழிகுவானே ... (ஏஎசு)

பதம்- மத்தியமாவதிராகம்- சாப்புதாளம்

[ கண்ணிகள். ]

(க) ஐயாநீரெந்தஊ - ரெந்தநாடுநான்
அறியவாய்மலர்ந்து ... ... ... செப்ப
வையகமெங்கிலும்-இருப்போமாகிலுங்கேள்
வாரணாசிநா ... ... ... ... மப்பா

(உ.) வாரணாசியென்ருல்த்-தேவரீர்திருநாமம்
வழங்குவதென்னசொல்லும் ... ... சாமி
எர்வையாகநம்மை எல்லாம்வல்லசித்தர்
என்றுரைக்குமேஇந்தப் ... ... ... பூமி

உக-வது-கல்லானைக்குக்
கரும்பருத்தியது.

(௩) எல்லாம்வல்லசித்த-ரென்றால்த்தேவரீரிங்
கெழுந்தருளியவித ... ... ... மென்ன
பல்லோர்தொழும்பதிக்-கெல்லாமேலாமிந்தப்
பதியில்வசிக்கவந்தோ ... ... ... மன்ன

(௪) வசிக்கவந்தால்இப்போ-தேவையானதென்ன
வழங்குவேன்உரைக்க ... ... ... லாமே
ருசிக்கும்பொருள்நீதர-நமக்கொன்றுஞ்செலவில்லை
நுவல்உனக்கருளுவோம் ... ... ... நாமே

(ரகூக)

---

விருத்தம்.

இறைவன்மொழிக்கெதிர்உரைத்தமொழியுஞ்சித்தர் ... *
இருமாப்புங்கண்டிவரையேசோதிக்கும் ... *
நிறைசவ்வாறென்றெண்ணிநிற்கும்போது ... *
நெடுங்கரும்போருழவன்கைக்கொண்டுதாழ்ந்தான் ... *
பொறைமன்னன்அக்கரும்பைக்கையில்வாங்கிப் ... *
புகலுமிக்கல்லானைஉண்ணச்செய்வீரென்னக் ... *
கறைமிடற்றார்அருள்செயச்செங்கரும்பையானை ... *
கண்டுவெறித்துப்பறித்துஉண்டுதாமே (ரஎஎ)

பதம்-சுருட்டிராகம்-அடதாளசாப்பு.

[ பல்லவி ]

கல்லானை-கரும்பையருந்திய-காரணங்கேளும்

[அநுபல்லவி]

சொல்லார்மறையே தொழவோங்குஞ்
சுந்தரேசர்விமானந்.........தாங்கும்
கல்லானை

[ சரணங்கள் ]

(க) சீறிமதத்துமிழலைச்சுளித்துச்
சினங்கொண்டுகெற்சித்துப் ... பாய்ந்து-மெத்த
மீறிநிமிர்ந்து - துதிக்கையைநீட்டி
விழித்தழல்சிந்தவே ... ... காய்ந்து-சில
மாறன்கைக்கரும்பைப் ... ...பறித்துக்-கடை
வாயில்வைத்துரெண்டாய் ...முறித்து - எங்குஞ்
சாறொழுகும்படி ... ...கறித்து - வெறுஞ்
சக்கையதாக்கிக் - குதட்டியேவெறிந்து
கல்லானை

(௨) பின்னுமெங்கள்சித்த - சாமிவிநோதப்
பெருங்கடைக்கண்ணினால் ... பார்க்க - அங்கு
அன்னிலையேதென்ன-வன்புயமாலையை
ஆனைத்தும்பிக்கையால்த் ... தூக்க - அந்த
மன்னவன்சேவகர் ... ... ... கண்டு - கையில்
மாறுகொண்டோங்கவெ ... ... குண்டு - எழில்
துன்னும்சித்தருள் ... ... கொண்டு-கையால்த்
தூக்கியமாலையை - வாய்க்குள்வைத்தேஉண்டு
கல்லானை

(௩) ஐயர்தமைமன் னவன்சேவகர்சிறி
அடிக்கக்கையோங்கியெ ... ... திர்க்கவே-சித்தர்
கையமத்திநில்லும்-நில்லுமென்றிடக்
கலங்கிமரம்போலே ... ... நிற்கவே - இவர்
மெய்யரென்றுநடு ... ... நடுக்க - மன்னன்
வீழ்ந்தெழுந்தேதுதி ... தொடுக்க - மகிழ்ந்
துய்யும்வரங்கள்பெற் ... ... றடுக்க - யானை
உண்டிட்டமாலையைக் - கொண்டிட்டமாய்க்கொடுக்க
கல்லானை. ௱௩௨.

விருத்தம்.

கல்லானைகரும்பையுண்டபின்புமுன்போல்க் ... *
கல்லாச்சுதானேஎல்லாம்வல்லசித்தர் ... *
எல்லோர்க்குந்தெரியாமல்மறைந்துவிட்டார் ... *
இதுவெல்லாஞ்சுந்தரேசுவரர்தம்லீலை ... *
அல்லாமல்வேறில்லையென்றெண்ணிஅஞ்சி ... *
அபிஷேகபாண்டியன்சன்னிதிமுன்சென்று ... *
தொல்லோனேஉமைச்சோதித்தேனேஎன்று ... *
துதித்திட்டான்தொழுதழுதுகுதித்திட்டானே(௱௩௩)

சோமசுந்தரேசுவரமூர்த்தியை அபிஷேகபாண்டியன்
ஸ்தோத்திரஞ்செய்தது.

பதம்-நீலாம்புரிராகம்-ஆதிதாளம்

[பல்லவி]

ஜோதியேஉமைஇன்று - சோதனைசெய்யவென்று
துணிந்தேனேநானே *

[அநுபல்லவி]

ஆதியுமாகியநாதியுமாய் மெஞ்ஞான
அகண்டபரிபூரணா-னந்தசொரூபமான
ஜோதி

கருப்பருத்தியது.

[சரணங்கள்.]

(௧) நீர்தரும்நான்மறைமுன்னம்-ஓதியுணர்ந்துமைஇன்னம்
மேதெரியாமல்த்தள்ளாட- மாதவன்அயனுந்தேட
நீண்டீர்-அன்பு-பூண்டீர்-வந்து-ஆண்டீர்-அகி- லாண்டமயமாகிய
ஜோதி

(௨) என்னிடத்தில்அன்புநாட்டி- மின்னருள்வடிவங்காட்டி
துன்னிருள்க்கனவ்தாக- மின்னிமறைந்தாப்போல்ப்போக
ஏதமோஎவர்-போதமோஎன்மேல்க்-குற்றேதமோஎன்ன
பேதமோ-அகண்டாகார
ஜோதி

(௩) மானிடவடிவங்கொண்டீர்- நானறிகுவேனோகண்டீர்
ஆனதால்நான்செய்தகுறை- தானிதுபொறுப்பீர்உறை
அந்தராங்-ரந்தராது-ரந்தராசோம-சுந்தரா-சச்சிதானந்த
ஜோதி - ௱௩௩.

---

விருத்தம்.

என்றுதுதித்துப்போற்றிமனையில்வந்துசித்தரரு-ளியநோக்கத்தால்
நன்றுபுரிவிக்கிரமனென்றொருமகனைஈன்றுசில நாள்ப்பாராண்டு *
சென்றுமகன்றனக்குமணிமுடிசூட்டிஅபிஷேகத்தென்னன் இன்பந்
துன்றுசிவபதப்பிர்மாநந்தவாழ்வகம்பெற்றான்-சுகம்பெற்றானே ( )

---

விருத்தம்.

பெரியகல்லானைக்கன்று- பெருங்கரும்பருத்திஅன்பு ... *
புரிதலீதறிந்தோர்வாழ்வார்- புதுமையால்ச்சமணரான ... *
தரியலர்விட்டயானை -தனைஎய்தஇருபத்திராங் ... *
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடஉரைசெய்வேனே (௱அ௰)
கல்லானைக்குக் - கரும்பருத்திய
திருவிளையாடல் - முற்றுப்பெற்றது.

---

ஆ திருவிருத்தம்- ௬- பதம்- ௪- ஆ ௰.
ஆ பாயிரம்-உள்படத்- திருவிளையாடல்-உ௰௧ க்கு- வெண்பா- ௧.
கலித்துறை-௨-கொச்சகம்-௧- விருத்தம்-௱அ௰-பதம்-௱௩௩
ஆ கவிதை - ௩௱௰எ.



இருபத்திரண்டாவது

## யானையெய்த திருவிளையாடல்.



விருத்தம்.

சிலையானைகரும்புதின்றபின்புவிக்கிரமத் ... *
தென்னவன்பாராள்நாளில்அன்னவன்மேல்ப்பகைத்து
பிலானனொருசோழன் சொலச்சமணர்புத்தர் ... *
பெருமகஞ்செய்தாரதனில் பிறந்துதோரியானை *
சலமாம்அவ்வானையைப்பார்த் தின்னகரைஅழித்துச் *
சடிதியில்வாவெனவிட்டார் தரணியெல்லாம்நடுங்கி *
மெலிவாகத்தென்மதுரா புரிநகரைநோக்கி ... *
விரைந்துதான்மதயானைவரும்இரைந்துதானே - ௱அக

பதம்-நாதநாமக்கிரியைராகம்-ஆதிதாளம்

பல்லவி.

யானைஎழுந்துவந்துதே-சமணர்விட்ட- யானைஎழுந்துவந்துதே

அநுபல்லவி.

நானிலம்அதிர்ந்திட - வானினை முட்டி
ஆனமும்மதங்கடல் - தானெனக்கொட்டி
யானை

சரணங்கள்.

(க) மண்டலமெனஇணை-கொண்டஅடியுமுயர்
அண்டமெனமுடியுங்- கண்டவர்நடுங்க
எண்டிசைக்கயங்களும்- வெண்டிமிகுந்தபய
மண்டிநிலைதவறி- ஒண்டியேஒடுங்க
யானை

(உ) தீத்திரளெனஎரி- நேத்திரமுமிருண்ட
காத்திரமுங்கொடிய- கூற்றெனஒடி
ஆர்த்திருசெவியசை- காற்றினில்மலைகளைப்
பேர்த்துயர்மரங்களைத்- தூற்றியேஜாடி
யானை

(ங) தீக்கடைசிதறிட- நோக்கியமருப்பினால்
கார்க்குலமுகில்களைத்- தாக்கியேபிளந்து
நீக்கியஇடிகளைத்- தூக்கியதுதிக்கையால்
வாய்க்குள்கவளமென- வாக்கியேவளர்ந்து
யானை - ௱ஙச.

விருத்தம்,

ஆனைவரக்கண்டஞ்சிமதுரைநசர் ... *
அழகுளசன்னிதியினில்விக் கிரமத்தென்னர் ... *
கோனிறைஞ்சியுரைக்கஅந்தரத்தோர்வாக்குக் ... *
கூறுஞ்சொல்ப்படிமதுரைக்கேகிழ்பாலில் ... *
ஆனஅட்டாலைப்பெயர்மண்டபம்உண்டாக்கி ... *
அகமகிழ்ந்தான்அங்கொருசேவகன்போல்ஆகித் *
தானரனரன்றுசிலைவளைத்திட்டேகெற் ... *
சனைசெய்தார்வரும்யானைதனைஎய்தாரே (ﬡஅஉ)

பதம்-சௌராஷ்டிராகம்- ஆதிதாளம்.

[ பல்லவி ]

எடுத்தார்நரசிம்மவாளியை - தொடுத்தார்அதுகேளும்

[ அநுபல்லவி ]

அடுத்தார்க்குயர்சுகங்- கொடுத்தாள்க்கொள்ளுமது
ராபுரிவாழ்பர - னர்பெரிதானவில்
எடுத்

[ சரணங்கள் ]

(க) இருண்டமேனியும்-மருங்கில்ச்சிவந்தகச்சை
இறுக்கிக்கட்டியஉடை ... ... வாளு - மிகத்
திரண்டசடைமறைத்து- மயிலிரகணிந்திட்ட
சிங்காரமும்மத ... ... வேளுங்-கண்டு
மருண்டிடவணிந்திட்ட-சங்கக்குழையும்பல
வாளித்தூணியிட்ட ... தோளும்-பலர்புகலப்
பரந்தநான்மறையின் - முடியாகிய நல
பாதுகையணிந்திட்ட- பதமும்வினையகல
பாரிலெவருமெதிர் காணவே - அதி
வீரவிசையஎழில்தோணவே - வரு
பத்தர்க்குயர் - முத்திப்பதமருள்
நித்தப்பொருள் - சத்தச்செழுமறை
கற்றித்தெரி-சித்துத்தொழவொரு
பற்றற்றவர் - வெற்றித்திருவடி
எடுத்

(உ) அரசன்அமைத்தமணி-மண்டபத்தினில்நின்று
ஆரபாரமுடன் ... ... நோக்கியே - வெகு

விரசுடன்சமணர்கள்-விடவருமதகயம்
வெருவிடமுழக்கமுண் ... டாக்கியே - இடக்
கரமிசைமகிழ்வொடு-பெரியவில் வாங்கிக்
காதளவும்இழுத்துமுப்புரம் ...ஏங்கி
எரிஎழுநின்றஉக்கிர- வடிவுகொண்டோங்கி
எண்டிசைக்கயங்களுந் - தன்றிசைநீக்கி
எழுந்துநிலைகலங்கி வாடியே - மத
மொழிந்திடவடவைபோல்ச்சாடியே - உல
கெங்குங்கிடுகிடெனவதிரவுயர்
மங்குல்மழையொழியவிசறியழல்
பொங்கும்பொறிநிறையவுயருமொரு
சிங்கம்தனியெழு சினமென உரு

எடுத்

(கூ) பண்டுபணிந்துநின்ற-மார்க்கண்டன்போல்விக்கிரம
பாண்டியன்மகிழ்ந்துளங் ... களிக்கவே-எதிர்
கண்டுநடுநடுங்கிப் - புத்தருஞ்சமணருங்
காலதூதரென ... ... ஒளிக்கவே-உதை
கொண்டுபுவியில்விழும் - எமனெனவே அண்ட
கூடமிடிந்ததென்ன - எங்குஞ்செவிடுகொண்ட
மண்டலமுஞ்சேடன் - முடியும்நொறுங்கவிண்ட
வாளியால்மஸ்தகம் - பிளந்துகுருதி மண்ட
மாமலைபோலவே சாய்ந் திட்டே - பெரும்
பூமியதனில்விழுந் தோய்ந்திட்டே மிக
மதிகெட்டுள- மறுகியேமலையுடல்
பதறிப்பெரு முகிலெனமிகுதிட
மதுபெற்றிடு - மதுரையதனை யடர்
மதமைக்கய - மலறியே யுயிர்விட

எடுத். ராகூ,

---

விருத்தம்-

இவ்விதம்இந்தயானை - இறந்தபின்அதன்பின்வந்த ... *
அவ்வியச்சமணர்புத்தர்- அஞ்சவேவிக்கிரமன்தன் ... *
திவ்வியபடைகளாலே - சிதைத்தகமகிழ்ந்துநின்று ... *
நவ்வியவிழியாள்பாகர் - நற்பதந்துதிசெய்வானே (ராஅகூ)

சோமசுந்தரேசுவரமூர்த்தியை விக்கிரமபாண்டியன்
ஸ்தோத்திரஞ்செய்தது -
பதம்- ஆகிரிராகம்- அடதாளசாப்பு
[கண்ணிகள்]

(க) சரணம்சரணம்ஜெகநாதா- என்னைத் - தற்காத்திட்டவி நோதா
உரகபூஷணகைலாசா - உயிர்க் - குயிராயெங்கும்நிறைந்தவாசா
(உ) அற்புதபரமஸ்வரூபா - சிதா-காசவடிவானபிர ... தாபா
நிர்குணநிர்மலதேகா- எங்கும்- நிரந்தரமானஅ ... மோகா
(௩) திவ்யதேஜோமயகாத்திரா-முனி-ஸேவிதஸுரகணஸ்தோத்திரா
எவ்வடிவுங்கொண்டநிமலா- தனித் - தேகமயமாய்நின்ற வமலா
(௪) கரியுரிதரித்திட்டதீரா- வந்த- கரியைக்கொன்றசிலை ... வீரா
திருமதுரையையாண்டபரனே- திவ்வியதெரிசனந்தந்தசுந்தரனே
(௫) என்றும்இந்தஉருத்தோண-இங்கே-இருந்தருள்வீர்யாருங்காண
நன்றுள்ளகயல்க்கண்ணிநேசா- பூ- ரணுஹரஹரமது ரேசா

—*— (௱௩௬)

விருத்தம்.

போற்றிவிக்கிரமபாண்டியனும்வரம்பெற்றேகிப்... *
புகல்ராஜசேகரனைப்பெற்றிருந்தான் ... *
தோற்றியநல்வடிவுடன்மாமண்டபத்தில்ச் ... *
சோமசுந்தரேசரென்றும்வீற்றிருந்தார் ... *
சிற்றமுள்ளகரியையெய்தநாரசிங்கத் ... *
திருவடிவைப்போற்றிமிகத்தவஞ்செய்தாங்கு *
தீர்த்தமொன்றுண்டாக்கியுரோமசன்பேறுற்றான் *
சேர்ப்பிரகலா-தனும்துதித்துச்சீர்பெற்றனோ௱அச

விருத்தம்.

கரிஎய்தலீலைஈது- கனிவொடுகேட்போர்செந்தேன் ... *
சொரிமலர்தருவினீழல்ச்- சுரர்தொழவாழ்ந்திருப்பார் ... *
பரிவிருத்தன்குமாரன்- பாலனுமிருபான்மூன்றாந் ... *
திருவிளையாடல்தன்னைத்- தெரிந்திடஉரைசெய்வேனே(௱அ௫)

இயானைஎய்த திருவிளையாடல் - முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-௫-பதம்-௩-ஆ-அ.
ஆ பாயிரம்உள்படத்திருவிளையாடல்-உஉ-க்கு-வெண்பா-க-
கலித்துறை-உ-கொச்சகம்-க-விருத்தம்-௱அ௰௫-பதம்-௱௩௬
ஆ கவிதை- ௩௱உ௫.



இருபத்தி மூன்றுவது

## விருத்தகுமாரபாலரான திருவிளையாடல்.

விருத்தம்.

பெருத்தமதயானைஎய்தபின்புகூடல்ப் ... *
பெருமானைமறவாவிக்கிரமபாண்டியன் ... *
கருத்தின்மகிழ்வொடு செங்கோல்செலுத்தும்நாளில்க் *
காசினியோர்புகழ்ந்திடுந்தென்மதுரைதன்னில்த் ... *
திருத்தழைப்பச்சிறந்தவிரூபாட்சனென்னுஞ் ... *
செழுமறையோன்மனைவிசுபவிரதையோடும் ... *
வருத்தமுறுமாதவங்கள்செய்துசிந்தை ... *
வருந்தினன்மகவாசைபொருந்தினனே ... (௱அசு)

பதம் - கலியாணிராகம் - ரூபகதாளசாப்பு

(க) [ கண்ணிகள் ]

விரும்பியேவிரூபாட்சனும்சுப - விரதையுந்தவம்தொடுத்தார் மிக
வேண்டியேசத்தகன்னிமார்பத - மீதினில்த்தொழுதடுத்தார்
கரும்புயல்க்குழல்க்கன்னிமார்தம் - கருணைமாரி யுற்றார் - செங்
கமலமாமலர்திருவெனஒரு - கன்னிகைதனைப் பெற்றார்

(உ)

கன்னிதனக்குக்கௌரிஎன்று - கனிவுடனேபே ரிட்டார்-அந்தக்
கௌரியைஅன்னைதந்தையர்மனக் - களிப்புடன்வளர்த்திட்டார்
அன்னவள்அஞ்சுவயதாய்த்தந்தைஅடியில்த்தொழுதுநின்றாள்இந்த
அரியபிறவியொழியுமந்திரம் - அருளுவாய்நீ ... என்றாள்

(ரூ)

தந்தைமனது-வந்துஅம்பிகை- தன்மந்திரத்தைக் ... கூறச் - சிறு
தையலாளதைப்பெற்றுத்தினமும் - தானுருச்செய்துதேற
இந்தமாதைச்சைவமறையோ - னில்ச்செழுமறை ... யோது - நல்ல
எழில்ப்பிரமசாரிக்கேகொடுப்ப - தென்றிருந்தானப்போது

(சு)

மங்கையுமணப்பருவமுற்று - வளருநாளில் ... எங்கும் - பிட்சை
வாங்கிஉண்ணும்ஓர் - வைஷ்ணவப்பிர்மசாரி வந்துஅங்கும்
தங்கியேதலைவாசலில்நின்று -தனித்துப்பிட்சை ஏத்தான் - மகள்
தன்னையேவிரூபாட்சனும்அவன்-தனக்குத்தாரைவார்த்தான் (௱௯எ)

விருத்தம்.

மந்திரநீரால்க்கௌரி - தனைத்தானஞ்செய்யத்தாய் - மாரும்ஊரும், தந்திரஞ்சேரினத்தாருங் கண்டென்னமதிசெய்தான் - தந்தைஇந்த, இந்திரவில்லிணைந்தநுதல்க- கன்னிகைக்குஇருந்திருந்தும் - இவ்வூர்எங்கும், வந்திரந்தவைஷ்ணவனேபதியாஞ்சுந்தரனென்பார் வரனென்பாரே. ... ... ... ... ... (ஈஅஎ)

பதம் - புன்னுகவராளிராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி ]

என்னயோசனைநாடினன் - மகட்குத்தந்தை - இந்தவரனேதேடினன்

[ அநுபல்லவி ]

அன்னியாயம்இது - சொன்னல்எவர்க்கும் ... ... ...ஏச்சே
அருமையாய்வளர்த்துத் - தூரவில்த்தள்ளிய தாச்சே
என்ன

[ சரணங்கள் ]

(க) அறியும்பாத்திரம்அறிந்தே - பிட்சைஇடு ... கோத்திரம்
அறிந்துபெண்ணைக்கொடுப்பா - யென்னவே சாஸ்திரம்
முறையிடுவதுந்தெரி-யாதோஏனிந்த ... ... ஆத்திரம்
முறையில்லாமுறைசெய்தால்- முறைமொழிவாரோஸ்தோத்திரம்
என்ன

(உ) வீரசைவன்மதி - ஏன்மயங்கி ... ... விட்டுது
மெத்தக்கற்றவன்சுத்தப் - பித்தனல்லோ ... கெட்டுது
பாரும்பொட்டலில்விளாம் - பழமகப் ... ... பட்டுது
பையன்செய்ததவம் - கைமேல்ப்பலித் ... ... திட்டுது
என்ன

(ந) பிட்சைக்குவந்தவனே - பெண்ணுக்குமாப் ... பிளை
பெருஞ்சைவனுக்கும்வைஷ் - ணவனுக்குமுண்டோகிளை
இச்சைக்குதலைமொழிப் - பச்சைக்கிளிக்கி ... விளைங்
திட்டவிதிஇதுவோ - இவனேகொள்வான் ... இவளை
என்ன. ஈஈஅ.

---

விருத்தம்.

எண்ணித்துணிவதுகருமங் - துணிந்தபின்னெண்ணுவதிழுக்கு- இந்த [மீனக்
கண்ணிக்குவிதித்ததிது - வெனத்தாயுந்தமருமொப்பக்கண்டுதந்தை
தன்னூற்றமலர்க்குழலி - தனைமணஞ்செய்திந்தான்அந்தணன் - தன் [னூர்க்குப்
பண்ணிக்குமொழியுடனே - போகவவன்தாய்தந்தைபுகருவாரே.

பதம் - மோகனராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி ]

மதியில்லாதமுழுமூடா-சைவ - மதத்தில்ச்சேர்ந்துவிட்டாயோடா

[ அநுபல்லவி ]

கதியில்லாமலிரந்தாலும் - ஸ்ரீவைஷ்ண வர்
கட்டுத்தவறிக்கடை - கெட்டுத்திரிவதெவர்
மதி

[ சரணங்கள் ]

(க) சுட்டமண்ணும்பச்சை - மண்ணும் ஒட்டுமோ... கந்தம்
சுடுசாம்பலிடுவார்க்கும்- நமக்குமுண்டோசம் மந்தம்
வட்டவாருலகில் - இவள்உனக்கென்ன ... சொந்த
மாமன்மகளோகொண்ட - காமந்தானோ இந்த
மதி

(உ) பொறுக்காததுயர்கொண்டு - வெறுப்பாகப்பா தேசம்
போனவன்மேன்மையாய்த்-தான்வந்தாலல்லோநேசம்
சிறுப்பிணையுடன்வந்து - பிறத்தியார்பரி ... யாசம்
செய்யவாழ்வதிலும் - செத்தாலென்னடாகி லேசம்
மதி

(௩) நாரியுண்டுநீ-புண்டுன்கடையைக் ... ... கட்டு
நாங்கள்வேணுமென்றால் - இவளைத்தள்ளி விட்டுச்
சேருஇவளைச்சேர்த்தால்-நம்மைப்பந்துக் ... கட்டுச்
செய்துதள்ளுவார்இனம்-சேராதிவளைத் ... தொட்டு
மதி ௱௩௧.



விருத்தம்.

வைதுமகனெடுதந்தைதாயும்ஒன்றாய் ... *
மங்கைகௌரியைத்தள்ளிவைத்துத்துன்பஞ் ... *
செய்துவந்தார்சிலநாள்ச்சென்றொருநாள்தங்கள் *
சேரினத்தில்ஒரூரில்ச்சுபம்நடக்க ... *
எய்தினர்இறக்கதவடைத்துப்பூட்டியேயங் ... *
கிவளைமனைக்காவல்வைத்தார்இருந்தமங்கை ... *
மெய்திகழும்அரனடியார்வந்திடாரோ ... *
வீண்ஜென்மம்எனதென்றுமெலிகுவாளே (௱அ௧)

கௌரிமங்கைசுந்தரேசுவரமூர்த்தியை தியானித்துவருந்தியது

பதம்-சுருட்டிராகம்-அடதாளசாப்பு.

[ பல்லவி ]

இருந்திதினல்என்னஸாரம்- ஜென்மம்- எதுக்குவீண்பூமி பாரம்

[ அநுபல்லவி ]

திருந்தவேஇகபரம்-அருளுஞ்சைவநெறி
தேடாமல்நாடாமல்-கூடாமல்உடம்பேநீ
இருந்

[ சரணங்கள் ]

(க) இகபரம்இரண்டிலும் சுகமே- பெற
வேயுறுதிகொள்ளுவ தகமே
அகமருள்வதுபரா - பரசதாசிவன்என்ப
தறியாமல்குறியாமல்-வெறியானமனமேநீ
இருந்

(உ) அறிந்தவர்க்குடல்மனம்வாக்கு - வழி
யால்வரும்சிவபத்திநோக்கு
செறிந்தபத்தியால்ச்சிவ-வடிவத்தைதெரிசனஞ்
செய்யாமல்உய்யாமல்ப் பொய்யானகண்ணேநீ
இருந்

(௩) - அச்சிவன்அருள்செய்துநேரே - சிவன்
அடியாராகிவரு வாரே
மெய்ச்சிவன்அடியார்க்கு-விரும்பிவிரும்பிப்பணி
விடையேதுங்கிடையாமல்த்-தடையானகையேநீ
இருந்-௱சய



விருத்தம்.

இன்னவிதம்தனைஇகழ்ந்துதனியேஏங்கி ... *
இரங்குமவள்க்கிரங்கிஎழில்ச்சுந்தரேசர் ... *
தன்னணிமெய்வெண்ணீறும்உருத்திராட்சத் ... *
தாவடமும்கோவணமுந்தரித்தநூலும் ... *
பன்னெடுநாள்ப்பழகியபுஸ்தகமுந்தோளில்ப் ... *
பரித்தஉத்தரியமும்கைக்குடையுந்தோன்ற ... *
அன்னமெனக்களைத்திருமித்தலைநடுக்கி ... *
அந்தணரில்ப்பழங்கிழவராய்வந்தாரே. (௱கூ௰)

பதம்-ஆனந்தபைரவிராகம்-ஆதிதாளம்

[ கண்ணிகள். ]

(க) வந்தமறைக்கிழவர் - தன்னை ஆசனத்தில்
வைத்தடிக்கடிதொழு ... ... தாளே-இ
கழ்ந்தசேற்றினிற்செந்தாமரைஎழுந்தாப்போல்க்
கண்டேனேஎன்றழு ... ... தாளே

(௨) கண்டுதொழுதுநின்ற-கௌரியைப்பார்த்துநான்
களைத்தேன்பசிதீர்ப்பாய் ... கண்ணே அன்னம்

கொண்டுவாஎன்றஉடன்-இந்தமனைதிறக்கக்
கூடாதேசாமிஎன்றாள் ... பெண்ணே

(௩) இந்தக்கதவையுன்கை - யால்த்தொட்டால்திறக்கும்
இட்டபூட்டென்றார்அப் ... போது - அவள்

அந்தப்படியேதொட்டாள்-கதவுதிறக்கக்கண்டு
அகமகிழ்ந்தாள்அந்த ... ... மாது

(௪) கணத்தில்ச்சமயல்ச்செய்து - உண்ணஎழுந்தருளுங்
கடவுளேஎன்றுநேசித் ... ... தாளே - அவர்

மணத்தபதங்கழுவித் தலையில்த்தெளித்துட்கொண்டு
மலர்கள்சொரிந்துபூசித் ... ... தாளே

(௫) பரிகலமிட்டதிலே - அன்னங்கறிவகைகள்
படைத்தேபசிதீரும் ... ... என்றாள் - ஐயன்

அருள்செய்துஅறுசுவைப்-பாகத்தைப்புகழ்ந்துகொண்
டமுதுசெய்யவணங்கி ... ... ... நின்றாள்

(௬) உண்டவர்அமிர்தத்தை-உண்டவர்போல்அங்கே
உகந்தகிழவர்உரு ... ... மாறினார் - மிக

எண்டிசைபுகழவே - கோடிமன்மதரூப
எவ்வனபுருஷன்போல் ... மீறினார்

(௭) இருந்தபுதுமைகண்டு - கௌரிநடுநடுங்கி
இருகரம்நெரித்தஞ்சி ... ஒதுங்கினாள் - இவர்

பொருந்தும்பெரியவர்போல்-இருந்துமுருத்திராட்சப்
பூனையானாரென்று ... ... பதுங்கினாள்

(௮) அந்தவேளையினில் -மாமிகணவன்மாமன்
அனைவரும்வந்துவிட் ... ... டாரே - அவர்

வந்ததுகண்டையர் - குழந்தைபோல்க்கிடந்து
வாய்திறந்தழுகையிட் ... ... டாரே

(௱௪௰௧)

# உகூ-வது-விருத்தகுமாரபாலரானது.

விருத்தம்.

அழுகுழந்தைதனைநோக்கிஏதடீயென் ... ... *
றவர்கேட்கத்தேவதத்தன்மனைவிஇந்தக் ... *
குழவியைவைத்தேகினுள்வருவாளென்று ... *
குளிர்மதுரமொழிக்கௌரிகூறக்கேட்டு ... *
அழலாடிதனைத்தொழுவோர்மகவைக்காக்க ... *
அன்பானுய்நீஎங்கள்க்காகாயென்று ... ... *
தொழுகுழவியுடன்அவளைவீடுவிட்டுத் ... ... *
துரத்தினர்உரைக்கும்அஷ்டாட்சரத்தினரே ... (௱கூக)

பதம்-மத்தியமாவதிராகம்-அடதாளசாப்பு.

[ கண்ணிகள். ]

(க) வீட்டில்இருக்கொணுதென் - ரேட்வெளியில்ப்போக
விடுத்தார் - ஏசத் ... ... தொடுத்தார் - அர
விந்தமுகத்தினளி - ருந்தகுழந்தையுடன்
மீண்டாள் - துயர் ... ... பூண்டாள்
கேட்டுப்பலரும்அங்கே-தாட்டுத்தாட்டாய்வந்து
கூடினர் - மனம் ... ... வாடினர்-இந்தக்
கிள்ளைமொழியும்அந்தப்-பிள்ளைமுகத்தைப்பார்த்துத்
தேறுவாள் - இது ... ...கூறுவாள்

(உ) அலைகடலுலகெங்கும்-நிலையெனவேதங்கும்
ஆதியே - பரஞ் ... ... ஜோதியே - உல
காக்கவும்அழிக்கவும்-காக்கவும்ஆகிய
அமலரே - அருள் ... ... விமலரே
மலைதனையேநெடுஞ் - சிலைஎனவேகொண்ட
வரனே - சிவ ... ... பரனே-இள
மதியைக்கொன்றையைக்கங்கை-நதியைப்புனைந்தகிருபை
வடிவே - மறை ... ... முடிவே

(௩) நேயராகியுயர் - தூயராகின்ற
நிருத்தரே - வந்த ... ... விருத்தரே - எந்தன்
நேரதாகவேகு - மாரனுயிருந்த
நீதரே - லோக ... ... நாதரே
சேயுமாகியேச - காயம்செய்திரென்று
செழித்தாள் - துயர் ... ஒழித்தாள் - மலைச்

செல்விமந்திரத்தைப் - பல்விதந்துதித்துச்
சிந்தித்தாள் - நின்று ... வந்தித்தாள் (௱௪உ)



விருத்தம்,

இந்தவிதங்கௌரிமங்கையுமைமந்திரத்தை ... *
எண்ணினள்பாலனுயிருந்தசோம ... ... *
சுந்தரேசுவரர்விண்ணில்விடைமேல்த்தோன்றி ... *
துதித்துநின்றகௌரிதனைஇடப்பாகத்தில் ... *
அந்தமுள்ளஉமையாள்போல்ஆக்கிக்கொண்டார் ... *
அங்குள்ளோர்அதிசயிக்கஅமரர்எல்லாம் ... *
சந்தமலர்ப்பொழியஎழுந்தருளினார்இத் ... ... *
தாரணியோர்எவரும்இன்பந்தரித்திட்டாரே ... (௱௬உ)



விருத்தம்.

ஒருவிருத்தன்குமார - னேடுபாலகனுமாம ... ... ... *
துரைஅரன்புகழைக்கேட்போர் - துதிக்கவாழ்குவரோர்தென்னர் *
அரசனுக்காகமாறி - யாடியவிருபாணன்காங் ... ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே... (௱௬௩)

விருத்தகுமார பாலரான - திருவிளையாடல் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அ, பதம் - ௬ ஆ ௰௪.

(*)

ஆ பாயிரம்உள்படத் - திருவிளையாடல் - உ௩ - க்கு - வெண்பா - க -
கலித்துறை - உ - கொச்சகம் - க , விருத்தம் - ௱௮௬ , பதம் - ௱௪உ
ஆ கவிதை - ௩௱௩௰௫.



இருபத்து நான்காவது

## மாறியாடின திருவிளையாடல்.

———(:)(*)(:)———

விருத்தம்.

விருத்தர்குமாரர்பால - ரானபின்விக் - கிரமபாண்டியவேந்தன்கூடல்
திருத்தருறைஉலகடைந்துநிமலவடிவுகந்தான்பின் னெடுநிலத்தைப்
பருத்தபுயமதுதாங்கப் பரனடியைமுடிதாங்கப் பாலனை *
திருத்தழையும்ராஜசேகரபாண்டியன் சிறந்துசெங்கோல் - செலுத்தி

பதம்-பைரவிராகம்-ஆதிதாளம் [ஞனே (ாகூச)

[ கண்ணிகள். ]

(க) ராஜாதிராஜமன்னன்-ராஜசேகரத்தென்னன்
ராச்சியபரிபாலனம் ... ... புரிந்தான்
தேசராஜர்கும்பிட்டு- நேசமாய்க்கப்பமிட்டுச்
சேவிக்கமநுநீதி ... தெரிந்தான்

(உ) அருமறைமுதலான-பெருமைசேர்கலைஞான
மறுபத்துமூன்றுங்கற்றுக் ... கொண்டான்
பரதமாங்கலையொன்று- அரனுக்குகந்ததென்று
பத்தியால்க்கற்றிடாமல் நின்றான்

(ங) தாவுபுகழ்படர்ந்து- மேவலரையடர்ந்து
தமிழ்நாட்டைஆண்டான்உ ... லாவியே
காவேரிநதிசூழும் - காவளர்புவியாளும்
கரிகாலச்சோழன்வாசல் ... மேவியே

(ச) வாசஞ்செய்திடுங்கவி- ராஜனொருவன்தென்னர்
மன்னர்பிரானைவந்து ... கண்டான்
ஆசையுடன்மதித்துப்- பேசிமிகத்துதித்து
அவ்வேளையில்ஒருரை ... விண்டான்

(ரு) கரிகாலச்சோழராஜன்- வருமெங்கள்புவிக்கீசன்
கலையறுபத்துநாலுங் ... தானே
அருமையுடனேகற்றான்- பரதநூலதில்ப்பெரி
ததுவருமோஉமக்கென் ... றானே

(௬) இந்தமொழிஅப்போதில் - வெந்தநாராசங்காதில்
ஏற்றியதுபோலவே ... ... யுற்றான்
சிந்தையில்மான்மீறி - அந்தக்கணமேதேறிச்
செப்பும்பரதசாஸ்திரம் ... ... கற்றான்

(எ) கற்றவருத்தமெல்லாம் - நித்தம்அம்பலத்தாடும்
கர்த்தர்க்கும்உண்டேஎன்று ... நாடினான்
வெற்றிமாலயன்தேடிச் - சற்றுங்காணுதபாத
மிகநோகுமேஎன்று ... ... ... வாடினான்

(௱௫௩)

விருத்தம்.

ஆடியநம்மரன்பாதம்நெடுநாள்நோகு ... ... *
மையோஇவ்வருத்தமெல்லாம்அறிந்திருந்தும் ... *
நாடியிருப்பதுஅறமோவெனவருந்தி ... ... *
ராஜசேகரபாண்டியன்சிவனிராவில் ... *
நீடியபொற்கோயிலில்ப்போய்ச்சாமம்நான்கும் ... *
நின்றுசுந்தரேசலிங்கந்தனைப்பூசித்து ... ... *
தேடிவெள்ளிமன்றில்நடங்கண்டுகண்ணீர் ... ... *
சிந்தினன்இதுசொல்லிவ-ருந்தினனே ... (௱௬௫)

பதம் - சங்கராபரணராகம் - ஆதிதாளம்

[ பல்லவி ]

அநுதினமும்இப்படி - நடனஞ்செய்தால்தேவரீர்க்
காயாஸமாகாதோஐயனே

அநுபல்லவி.

கனமாய்வாதாடிய - காளிதன்னை வென்று
கதித்தகாலாற - வேண்டாமோ ... ஸாமிநின்று

அநு

[ சரணங்கள். ]

(க) ஐயோவிதியோஇந்த-வெய்யபரதங்கற்க
ஆசைமிகுந்ததிது ... ... ... ஏனோ-என்றும்
மெய்யாந்தொழில்கள்எல்லாஞ்- செய்யவல்லவர்என்ற
வேதமொழிபொய்யாமல்த் ... தானோ
பொய்யோமெய்யோஉம - துடலென்றுநான்மறை
புகழத்தோற்றியுந்தோற் - றுதவான்போலுறை
செய்யமேனிமிக - நையுமேஇளம் ... பிறைச்
செஞ்சடைநதிமுடிச் - சிவனேஇதென்னமுறை

அநு

(உ) ஆட்டிவைத்துலகத்தைக் - காட்டிமறைப்பவர்தா
ஞடத்துணிவதேது! ... ... னீதம்-பதம்
நாட்டிஅறையிலாடி - அம்பலமேறிநின்று
நடித்ததுவுமெத்தவி ... ... நோதம்
தேட்டமுனிவர்கள் - பீஷ்டமும்நிறை வேற்றி
தேடிக்காணுதமாலும் - நாடிமகிழத் தேற்றிக்
காட்டிஓர்பதந்தூக்கி - நின்றஉம்மிளப் பாற்றிக்
கரைந்தாரில்லையேமனம் - கல்லோஇரும்போநேத்தி
அநு

(௩) அலகில்லாஉயிர்க்கெல்லாம்-உயிருமதுமெய்நொந்தால்
அனைத்துயிர்களுமெய்நோ ... ... வாதோ-இந்த
உலகில்மாதாவுக்குச்-சுகமுண்டானுல்க்கர்ப்பத்
துக்குஞ்சுகமுண்டிது ... ... ஏதோ
குலவும்நடனம்இவ -ளவுபோதுமறை பூணுங்
கோகனகத்தாள்நோகு - மென்றுலு மனங்கோணும்
இலகும்வலதுபாதந் - தூக்கிச்செந்தளிர் நாணும்
இடப்பதம்ஊன்றிமாறி - யாகிலும்ஆட வேணும்
அநு - ௱சச.



விருத்தம்.

நாட்டினுன்மறைபுகழுங்கோவேமாறி ... ... *
நடித்தெனதுமனவருத்தந்தனேஇப்போதே ... *
ஓட்டிடீர்ஆகில்உயிர்விடுவேன்என்று ... ... *
உறைவாளேஊன்றிஅதில்ப்பாயுமுன்னே ... *
நீட்டினர்இடப்பாதம்நிலத்தில்ஈசர் ... ... *
நின்றவலப்பதந்தூக்கிமாறிஆடிக் ... ... *
காட்டினர்உயர்ந்தசடைமுடிமதிப்பிர ... ... *
காசராகியமதுரைவாசர்தானே ... (௱கூரு)

சோமசுந்தரேசுவரமூர்த்தி ராஜசேகரபாண்டியனுக்காக
கால்மாறிநடனஞ்செய்தது.

பதம்-சௌராஷ்டிரராகம் - அடதாளசாப்பு.

[ பல்லவி. ]

மாறிநடனம்-புரிந்துநின்றூர்தென்-மதுராபுரிவாஸர்

[ அநுபல்லவி. ]

மாறிநடனம்-புரிந்துநின்றூர்வெள்ளி
மன்றில்நின்றுததிங்கணம்தரிகட-தந்திதோதைதந-திம்-ததிம்மென
மாறி

(க) [சரணங்கள்]

செஞ்சடைக்கொன்றை-மலரில்நிறைந்தசெந்
தேன்உண்டுவண் ... ... ... டாட - ஒளிர்
பிஞ்சுமதியும்-நதியுங்குலுங்கப்
பெருமறைகொண் ... ... ... டாடக்
கஞ்சன்இந்திரன்அமரர்முனிவர்-ஜெயாவிசயீபவா வெனத்
தஞ்சமென்றடியவர் - அரகரஹராஸதாசிவா ... வென
அஞ்சலென்றமுர்தம்பொழிந்து நிறைந்தலர்ந்துகுளிர்ந்தெழுந்து
சிறந்தமங்கள-சந்திரவிம்பமு-கங்களந்தமி-குந்திலங்கிட

(உ) மாறி

மானுமழுவும் - வரிப்புலித்தோலும்
மணிப்பணியும் ... ... ... இசைய - மத
ஆனையுரிப்பெரும் - போர்வையுங்காதில்
அணிக்குழையும் ... ... ... அசைய்
ஞானநந்திமிருதங்கம்அப்பொழுதேமகிழ்வாய் அடித்திட
தானுகந்தமுகுந்தன்அற்புத-தாளமே ... பிடித்திட
வானவிஞ்சைய ரானதும்புரு-நாரதன்புகழ்-கான மிஞ்சிட
மீனவம்பக-மானையன்பொடு- நாடிஅண்ட-மெலாமகிழ்ந்திட

(ங) மாறி

செம்பொன்னரைக்-கிங்கிணியும்பதத்திற்ச்
சிலம்பொலியும் ... ... ... மீற - வெள்ளி
அம்பலம்பொன்னம்-பலத்துக்குக்கால்மாற்
றதிகமெனக் ... ... ... கூற
முன்புநின்றுநடஞ்செய்யும்வலப் - பாதந்தூக்கிக்கொண்டு
பின்புவன்குற-ளன்றன்மே - லிடப்பாதமூன்றிநின்று
அன்புகொண்டு-கனிந்துவந்துவருந்துதென்னன்மகிழ்ந்துகண்டிட
நம்புதொண்டர்கள்அன்றுமின்றுமுவந்துவந்துபுகழ்ந்துகொண்டி

மாறி. ஈசடு. [ட

———○*○———

விருத்தம்.

வள்ளலார்மகிழ்ந்துநின்று-மாறியாடியதைக்கண்டு ... ... *
பள்ளமாம்பரமானந்தப்-பரவையில்அழுந்திவாக்கும் ... ... *
உள்ளமும்உடம்பும்அன்பே-உருவமாய்ஒத்துநின்ற ... ... *
தெள்ளறிவுடையராஜ-சேகரன்துதிசெய்வானே ... (ஈகுள)

சோமசுந்தரேசுவரமூர்த்தியை ராஜசேகரபாண்டியன் ஸ்தோத்திரஞ் செய்தது

பதம்- மங்களகௌசிகைராகம்- சாப்புதாளம்.

[ பல்லவி. ]

சரணம்சரணம்ஜெகதீசா - நாகா - பரணூரசதசபாநடராஜா

சரணங்கள்

(க)நித்தியநிட்களநிராதாரா - கன - நீதப்பிரதாபசர்வேசாதி தீரா
சத்தியசற்குணஉதாரா - ஜெய - சகலஜெகரட்சகதேவாதிகாரா

(உ) சரணம்

பரமபுருஷசதுர்வேதா முனிபதஞ்சலிவியாக்கிரபாதர்க்கருள்பாதா
புரதகனதவ போதா-தேவ-பூஜிதகாலகாலாகிரி ... நாதா

சரணம்

(ங)மன்மததகனகயிலாசா - சுர - வரகருணாலயதிவ்யப்பிர காசா
தென்மதுராபுரிவாசா - ஸ்ரீ - தேவிமீனாட்சிதினமகிழ் நேசா

சரணம், ளசசு,

---

விருத்தம்.

தேசமகிழவரும்வைகைச் - செழியன்ராஜசேகரன்தான் ... *
ஈசர்தம்மைத்துதித்தென்றும் - இந்தப்படியேநடித்தன்பர் ... *
பாசம்ஒழிப்பீர்எனவேண்டப்-பரனும்அருள்செய்தப்படியே ... *
நேசமாகஅன்றுமுதல் - நின்றார்நடஞ்செய்கின்றாரே ... (ளகூஅ)

---

விருத்தம்.

பாதநூல்அறிந்ததென்னன் - பணிந்திடமாறியாடுஞ் ... *
சரணர்லீலைஈது - சாற்றிடக்கேட்போரக்கா ... ... *
பரணர்அருளால்வாழ்வார்-பழிக்கஞ்சும்இருபத்தைந்தாம் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (ளகூகூ)

மாறியாடினதிருவிளையாடல் - முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-கூ-பதம்-ச-ஆ ம.

ஆ பாயிரம் உள்படத் திருவிளையாடல் - உசக்கு - வெண்பா - க - கலித்துறை-உ- கொச்சகம்-க- விருத்தம்-ளகூரு-பதம்-ளசகூ
ஆ கவிதை- ஙளசரு.

இருபத்தைந்தாவது

## பழியஞ்சின திருவிளையாடல்.



விருத்தம்

மாறியாடியபின்பு வெள்ளிமன்றில் ... ... *
மாறுமல்ஆடிநின்றவரதரன்பால் ... ... *
தேறியநற்கலையறிந்தநீதிராஜ ... ... ... *
சேகரன்தன்மகன்குலோத்துங்கனுக்குக் ... *
கூறியபொன்முடிசூட்டிவைத்துமன்றில்க் ... ... *
குதிப்பவர்பாதாரவிந்தங்குலவிச்சார்ந்தான் ... *
மீறியுயர்குலோத்துங்கபாண்டியன்செங்கோல் ... *
விரித்திட்டான்மிகுந்தபுகழ்தரித்திட்டானே (உ௱)

புதம் நொண்டிதரு - புன்னாகவராளிராகம் - ஆதிதாளம்.

தென்னன்குலோத்துங்கன் - மனுமுறை
செய்யவவன்மணந்த - தையலர்கள்
அன்னமென்னும்நடையார் - ஒருபதி
னாயிரர்க்கறுபதி - னாயிரம்பேர்
பாலகர்அவதரித்தார் - விளையாடல்
பார்த்துமகிழ்வொடுகு - லோத்துங்கன்
ஞாலம்புரக்குநாளில் - திருப்புத்தூர்
நகரில்இருந்தொரு - மகவுடனே
மனைவியை அழைத்துக்கொண்டு - மதுரைக்கு
மாமன்மனைக்கிவர - வேமகிழ்வாய்க்
கனமுள்ளஒருமறையோன் - பெருவனங்
கடந்துவிரைவுடனே - நடந்துவரும்
போதவனிடமனையாள் - தாகம்
பொருந்தித்தண்ணீர்என்று - வருந்தியதால்
மாதரசியைமறையோன் - அங்கொரு
வடநிழல்தன்னில்வைத் - தடவுடனே
தண்ணீர்க்கேகியபின் - பண்டொருத்தன்
தானெய்தகணையொன்று - வானமுற்றே
நண்ணியஆலிலையில்த் - தொங்கியே
நாரிபடுத்திருக்க - நேரும்விதியால்
காற்றடியால்உலைந்தே - முனைஅம்பு
கன்னிநடுவயிறு - தன்னில்விழுந்தே

கோற்றிடஉயிர்இறந்தாள் - அங்கொரு
கொலைவேடுவனுங்கைச் - சிலையுடனே
பூட்டியஅம்புடனே - வெயிற்கஞ்சிப்
போயந்தமரத்தரு - கேஇருந்தான்
அவ்வேளையில்மறையோன் - நீர்கொண்டு
அதிதாகத்துடன் - மதிநுதலாள்
செவ்வாயுலர்வளென்றே - விரைசுடன்
சென்றுனேவந்துநின்றுனே (௱௬௭)

---

விருத்தம்.

வந்திடுமறைவல்லாளன் - மனைவியாள்வாளிதைத்துச் ... *
சிந்துசெந்நீராறேடச் - சீவனற்றிருக்கக்கண்டு ... ... *
புந்திசோர்ந்தழுதுவாடிப் - புள்ளினங்களுங்கண்டேங்கச் ... *
சிந்தையில்த்துயரமீறித் - தியங்குவான்மயங்குவானே (உ௱க)

பதம்-காம்போதிராகம்-ஆதிதாளம்

[ பல்லவி. ]

என்னுயிரேஎன்கண்ணே - என்பிராணநாயகியே
என்னென்றுசகிப்பேனடி

அநுபல்லவி

அன்னியாயஞ்செய்தாயே - கொம்பிழந்தமந்தி போல்
ஆனேனேஇங்கே - நானென்செய்வேன்இனி மேல்
என்

[ சரணங்கள் ]

(க) அரியவன்கொலைஅம்பால்த்- தூண்டிமீன்போல்துடித்து
ஐயோஅநாதையாகிப் ... பட்டாயே- இன்று
வருநடுவழிபெரு - வழியாகவேஎன்னை
மறந்துநட்டாற்றில்கை ... விட்டாயே- குயிலே
பருவமயிலேஉன்னைப் - பிரிந்திருப்பேனே ... நானே
பறிகொடுப்பேனென்றுசொப் - பனத்திலும்அறியேனே
ஒருநிமிஷத்தில்மடிந் - தாயேமாயமாய்த் ... தானே
உனக்கும்எனக்கும்உற - விவளவுதானே ... தேனே
என்

(உ) தண்ணீர்கொடுத்துந்தன் - தாகந்தீர்க்காமல்இந்தச்
சதிகண்டேனேகொடும் ... ... பாவி ; இனிக்

கண்ணீர்ஆறுயோட - அழுதென்ன கதைஉன்னைக்
காணப்போறேனே ... ... கூவிக்கூவி- மிக
எண்ணியஎண்ணமெல்லாம் -விண்ணில்ப்பறந்துபோச்சே
ஏந்தியகோல்இழந்த - குருடன்இனிஎன் ... பேச்சே
வெண்ணெய்திரண்டுவரத் - தாழியுடைந்த ... ஏச்சே
வேட்டகம்ஆடுமுன்னே - விதிஇந்தப்படி ... ஆச்சே
என்

(௩) பாலன்பரிதாபமும் - பாராமல்வாய்மூலே
பறித்தெறிந்திறந்தாயே ... ... பழிகாறி - இந்த
ஆலமரத்தடியில் - உன்னைநான்இழக்கவோ
அழைத்துக்கொண்டோடிவந்தேன் ... வழிதேறி- இங்கே
கோலிநாயும்நரியும் - வந்துகூட்டம் ... கூடக்
கூவிஒற்றைக்காலோரி - ஆனேனேஎய்த ... வேடக்
காலன்எவனோகாணே - னேதெய்வத்துக்குக் ... கூடக்
கண்ணில்லாமல்ப்போச்சுதே - எண்ணிஎண்ணியோவாட
என் - ௱௬௮.

---

வெண்பா:

செய்கொலையாரேற்றதெனத் தேம்பி அங்கே வேடுவனைக்
கைகலையாவம்போடுங் கண்டானே — மெய்குலைவாய் *
எய்தேஎன்கா தலியை ஏண்டாகொன்றுயென்று ... *
வைதேசிலசிலசொல்வான் ... ... ... (௨௱௨)

பதம்- மத்தியமாவதிராகம்- அடதாளசாப்பு
கண்ணிகள்.

(௧) அடடாசண்டாளமூடவேடா- ஏண்டாஎந்தன்
அரிவையைக்கொன்றாய்நீ ... தானே- ஐயோ
கடவுளேநானென்றும்அறியேனேபெண்பழி
கருதுவேனோமறை ... யோனே

(௨) கருதாமல்நீஎய்த அம்புபட்டிறந்ததைக்
கண்ணால்ப்பாரடாகூற் ... றுவனே - ஐயா
திருவுளம்அறியநான்-பிடித்தகையம்பின்னந்
தெறிக்கவில்லையேஅருந் ... தவனே

(௩) தெறித்தென்மனைவிஉயிர்- பறித்தும்இந்தச்சாதனை
செய்தால்ஒப்புமோடாஇப் ... பூமி - இது
குறித்தாலும்நானரகக்- குழிக்கிநாற்றங்காலாவேன்
கொடும்பாவஞ்செய்வேனோ ... சாமி

(ச) செய்யேனென்றால்க்கையில்ப்பிடித்தகளவுக்கையஞ்
செப்புவதுண்டோஅடா ... ஆரும்-என்போல்
ஐயோபடாப்பழிசுமப்பார்கள்உலகினில்
அதனைவிசாரிக்கத் ... ... தீரும்

(ரு) தீர்க்கயோசனைசெய்து - கொண்டாயோபழிக்கஞ்சி
தென்னவன்இடம்போவோம் ... வாடா - இங்கே
ஆர்க்குமடியில்க்கனம்-இருந்தால்வழியில்ப்பயம்
ஐயனேவருகிறேன் ... ... ... கூட

(ாசகூ)

---

விருத்தம்.

ஐயனும்வேடுவனைமன்னன்ஆணைக்குள்ளாய் ... *
ஆக்கியேமுன்னடத்திஆங்கிறந்த ... ... *
தையலைத்தன்முதுகில்இட்டுமுலைப்பால்வேண்டித் ... *
தயங்குமிளம்பிள்ளையைஒக்கலிலணைத்து ... *
வையமிரங்கிடக்கண்ணீர்ஆறுயோட ... ... *
வந்துமதுரையில்க்குலோத்துங்கபாண்டியன் ... *
மெய்யகலாவாசல்உற்றுமுறையோவென்று ... *
வேந்தனிடஞ்சார்ந்துநின்றுவிளம்புவானே (உாகூ)

பதம்-அசாவேரிராகம் அடதாளசாப்பு

பல்லவி.

என்னசொல்வேன்இந்த அன்ஞாயம் - கேள்வி
இல்லையோஉன்செங்-கோல்ஞாயம்

அநுபல்லவி.

மன்னர்புகழ்சம்பன்ன - மனுநீதியுள்ளதென்ன
என்ன

[ சரணங்கள். ]

(க) மருவுந்திருப்புத்தூர்விட் ... டின்றே - நானு
மனைவியுமகவுமாய்வருகையில் ... நின்றே
அரிவைமெலிந்தாள்தாகம் ... என்றே-அங்கோர்
ஆலநிழலில்வைத்தே தண்ணீர்க்குச்சென்றேன்
என்ன

(உ) நீர்கொண்டுவருமுன்அம் ... பேவி- எந்தன்
நேரிழைதனைக்கொன்றான்இவ்வேடப்பாவி

பாருங்கண்ணாலக்கூவிக் ... ... கூவி - இந்தப்
பாலகன் தவிக்குதே-தரிக்குமோ ஆவி
என்ன

(௩) அடுத்தகிளையைஇழந் ... ... தேனே-இவள்
அழகுங்குணமும்இனிக்காண்பனோ நானே
கெடுத்தான்இப்பழிகாறன் ... ... தானே - பசுங்
கிளியைவளர்த்துப்பூனைக்-கிரைஇட்டதுபோல்ஆனேன்
என்ன. ாருய.



விருத்தம்.

மறையவன்வார்த்தைகாச்சி-வைத்தநாராசமென்ன ... *
இறையவன்செவியிலேறி-எயினனனைச்சிவந்துநோக்க ... *
நிறையுளவேடன்தாழ்ந்து-நின்றுவாய்பொத்திவீழ்ந்து ... *
அறையும்இப்பழிக்குநானோ-ஆளென்பான்கேளென்பானே (உாச)

பதம்-நீலாம்புரிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி ]

எண்ணுவேனோஇந்தப் ... பாவம் - செய்தால்
எங்கேதொலைப்பேன்என்னலாபம்

[ அநுபல்லவி ]

நண்ணும்என்இளைப்பாற - வடநிழல்நாடிச்சென்று
நானொருபுறம்நோக்கி - இருந்ததல்லால்இன்று
எண்ணு

[ சரணங்கள் ]

(க) வேறொருவகையாலும் - ஐயாஇக்கனை ... தைத்த
விதமும்இவளிறந்த - விதியும்அறியேன் ... உற்ற
வாறுள்ளதிதுதான்தாய்க் - கொளித்தசூலில்லை...மெத்த
வருத்திஎனைக்கொன்றாலும் - பொய்சொல்லேன்பழிசுற்ற
எண்ணு

(உ) உரலுள்த்தலைஇட்டுலக் - கைக்குமன்றும் ... புத்தி
ஒருக்காலும்நினைப்பேனோ - ஒளித்தாலும்உல...கத்தி
லரசன்றறுக்கும்தெய்வம்- நின்றறுக்குமே ... ஹத்தி
ஆமோகொன்றுரைக்கொல்லும்-அதுவிடுமோ...பற்றி
எண்ணு

(௩) கூத்துப்பார்க்கப்போன-இடத்தில்ப்பேய்பிடித் ... தாடி
குறையுற்றதுபோல்சிக்கிக்-கொண்டேன்பொதுவாய்நாடி

பார்த்திரட்சிப்பாய்தீட்டத் - தீட்டவெளுக்கும் ... வாடி
பழிகாறன்என்றெல்லோரும் - பழிக்கநான்கொலேதேடி
என்னு. ஈருயக.

——(*)——

கலிவிருத்தம்.

இக்கொலைசெய்தோன்-யானிலையென்றே-இவனேத ... *
மிக்கவில்மன்ன-இவனுரைமெய்யோ-வெனநாடிப் ... ... *
புக்கியிருந்த-அமைச்சர்கள்யாரும்- புனவோனை ... ... *
இக்கணமேதண்-டித்திடில்வெளியா - மென்பாரே (உஈரு)

பதம் - ஆனந்தபைரவிராகம் - ஆதிதாளம்

[பல்லவி.]

தண்டனைசெய்துநன்ருய் - தீரவிளங்கவேணும்
சாமிநீர்புகழ் ... ... பூணும்

அநுபல்லவி.

பெண்டிழந்தமறையோன் - வாக்கினில்ப்பொய்வராது
பிடித்தவில்லுடனின்ற - வேடுவனைஇப் ... போது
தண்டனை

[சரணங்கள்]

(க) உள்ளதுரைசெய்வானே - தன்னுயிரை ... வெறுத்து
ஊனுண்ணும்இவன்சொல்லி-தானமென்ன ...நிறுத்து
கள்ளனும்வெள்ளனும்-தெரியுஞ்சற்றே ... பொறுத்து
கண்ணுக்குங்காதுக்குங் - காதமல்ல ... ஒறுத்து
தண்டனை

(உ) தானில்லையென்றால்எவ - ராலும்நடந்த ... ... சேதி
தன்னையாகிலுஞ்சொல்லி - தப்பிக்கொள்வதே ...நீதி
நானும்அறியேன்எடுப் - பாருங்காணேனென் ... றோதி
ஞலெவர்க்கிதுமெய்யாம் - நடுநிலைமையாய்ச் ... சோதி
தண்டனை

(ங) வையகத்தில்க்கொடியோர் - நயத்தில்வாரார்கள் ... சாது
மயிலேஏறிறகுதா - வென்றால்அதுக ... ராது
ஐயாகேள்அடியாத - நாடுபடிந்தி ... ... டாது
அடியுதவுவதுபோல் - ஆருதவுவார் ... ஒது
தண்டனை - ஈருஉ.

விருத்தம்.

அனைவரும்இப்படியுரைக்கத் தென்னர்கோமான் ... *
அப்படியேசெய்மினென மள்ளர்க்கோத ... ... *
வினையமுறும்ஒருநரியைப் பலநாய்சூழ்ந்த ... ... *
விதமென்னக்குறட்டினல் மழுவாள்க்கோலால் ... *
தினையளவும்உடலில்இட மறப்புண்செய்தார் ... ... *
திடவேடன்முன்சொன்ன படியேசொன்னன் ... ... *
கனைகடல்சூழ்உலகாளுந் தென்னர்கோமான் ... ... *
கரைசெய்வான்அமைச்சரைப்பார்த் துரைசெய்வானே *

பதம் - சாவேரிராகம் - சாப்புதாளம்

[பல்லவி]

இனியோசனைஎன்னகாணும்-சாஸ்திரத்தால்நீர்சொல்லவேணும்

[அநுபல்லவி]

வனசரன்கழுவினில்-நின்றுகை ... காட்டுறன்
மறையவன்கொக்குக்கோர் - மதியென்ன நாட்டுறன்

இனி

[சரணங்கள்.]

(க) கொலைபுரிந்தவன்முகக்- குறியுரைக்குமே ... சூது
கூறயிவனுக்கிந்தக் - கோதைமேல்என்ன ... வாது
அலையுமிர்கமோர்பட்சி - யோகொன்றுபெற்ற ... தேது
ஐயோஅகாரணமா - யிருக்குதேஈதிப் ... போது

இனி

(உ) கைதவன்இவன்தானே- எவனோமேவட்டை ... இட்டு
காட்டில்மிர்கங்கள்தனை - ஓட்டிக்கணையை ... விட்டு
எய்தகுறிதப்பிப்பாய்ந் - தித்தையல்மெய்யில்ப் ... பட்டு
இறந்தகாலகதி- தானேஇவனைத் ... தொட்டு

இனி

(ங) தேரைசெவ்விளநீருண்- ணுதுபழிச்சொற் ... சேருஞ்
செயலென்னவேபடாப்- பழியைஅடைவர் ... ஆரும்
நேரும்அதைப்பரிசோ - தித்தால்அல்லவோ ... தீரும்
நீதிபுரிந்தால்கீர்த்தி- நிலைநிற்கும்இது ... பாரும்

இனி-ஈருங



விருத்தம்.

தென்னன்உரைகேட்டவர்கள் பலநூலாய்ந்து ... *
தெளியாதுதெய்வத்தால்த் தெரிவதென்றே ... *

சொன்னவுடன்ஐயனைப்பார்த்துரியாட்கேமத் ... *
தொழில்முடித்துவரவென அப்படியேவந்தான் ... *
அன்னவனசரனைஉயர்சிறையில்வைத்து ... *
அரசன்மதுரேசர்முன்சென்றடிபணிந்து ... *
உன்னரியகொலைஇதுசெய்தவன்தான் ஆரோ ... *
உளந்தெளிவதெவ்விதமென்றுருகுவானே ...(உளஎ)

குலோத்துங்கபாண்டியன் சோமசுந்தரேசுவரமூர்த்தியை தியானித்து வருந்துதல்.

பதம் - உசேனிராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி ]

ஆரென்றறிந்துரைப்பேனீதியே-மது-ராபுரிவளர்பரஞ்ஜோதியே

[ அநுபல்லவி ]

ஓரஞ்சொல்லலாமோ - ஒருபெண்பழிவீண்போமோ
ஆரென்

[ சரணங்கள் ]

(க) குறையிதொன்று வேணுமோ - எவர்க்குமிந்தக்
கொலைசெய்யத்தான் தோணுமோ
முறையோஇதுஎந்த - மூடன்செய்த சதியோ
மறையோன்மனைவிக்கி - மடியத்தலை விதியோ
ஆரென்

(உ) ஸ்திரிவதைஇவன் செய்வனோ - செய்தவனிந்தத்
தேசத்தில்இருந்துய்வனோ
பாவமோரிடத்தில் - பழியோரிடத்தில்த்தானே
தேவதேவாயிதைத் - தெரிந்துஇப்போதுநானே
ஆரென்

(ங) ஓர்ந்திதற்கென்சொல்லவோ - ஐயனேஇந்த
உலகந்தரா சல்லவோ
நேர்செய்யேனுகில்என்- னீதியைஇகழ்வாரே
ஊர்வாய்மூடஉலை - மூடியுண்டோ நேரே
ஆரென்

(ச) வேற்றொருவரும் சாட்சி - இல்லையேஅம்பால்
விழுந்ததுவேஅத்தாட்சி
சாற்றும்உயிர்கள்க்கெல்லாம்-சர்வஸாட்சி நீரே
தீர்த்திந்தச்சந்தேகம்-தெளிவித்தருள்செய்வீரே
ஆரென்

(ரு) நிலமீதுசெய்யுந் தீதே - நிலம்புரக்கும்
திருபர்தம்மைவிடாதே

உலகம்என்னைநிந்தித்தால் உமக்கன்றோ அபகீர்த்தி
கலகம்ஒன்றும்வாராமல்- காப்பீர்கருணைமூர்த்தி
ஆரெ-ன், ஈருச

கழிநெடில் விருத்தம

இறையவன்இவ்வாறிரங்கியேகூற ... *
இன்னகர்ப்புறத்தில்ஓர்பக்கம் ... *
எழில்வணிகன்றன்மனையினில்மணஞ்செய் ... *
கின்றனன்இன்றுநீஆங்கு ... ... *
மறையவனுடனேவந்திருந்தால்இவ் ... ... *
வாறெல்லாம்அறிகுவாயென்று ... *
வானெழுந்தருளும்வாக்குணர்ந்தரசன் ... *
மறையவனோடுருமாறி ... ... ... *
கறையிருளினில்அங்குற்றொளித்திருந்த ... *
காலையில்மணமகன்மாயுங் ... ... ... *
காலம்வந்தொத்ததால்யமபடர்கள் ... ... *
கடுகிவந்தவனுயிர்கவர்தற் ... ... *
கறையும்ஓர்நோயும்உற்றிலன்எதுகா ... *
ரணத்தினில்க்கொல்வதென்றொருவன் ... *
ஆங்குரைசெயமற்றொருவன்காரணமுன் ... *
டாமுறைதாமுரைத்தனனே ... ... (உஈஅ)

யமதூதர்களில்ஒருவனைஒருவன் பார்த்துச்சொல்லியது.

பதம்-மோகனராகம் - அடதாளசாப்பு.

[பல்லவி]

இதற்கென்னநாம்பழிசுமக்காமல்
இவனைக்கொல்வதற்கொருவகைகேளடா

[அநுபல்லவி]

விதப்படுதீவினை-விளைப்பதரிதோ ... அல்ல
விதிமுடிந்தால்வியாதி - வேணுமோஅடா கொல்ல
இதற்

[சரணங்கள்]

(க) செப்பினும்இல்லாமல் - பந்தினும்இல் ... லாமலே
செய்யும்பழியைவை - யகத்தில்ஒருவர் ... மேலே
கற்பிதஞ்செய்துபடைத் - தழிப்போன்கருணை யாலே
காக்கைஏறவும்பனம் - பழம்விழுந்ததுபோ லே
காரணங்கள்மிகவுண்டாக்கி - இந்தப்
பாரினிலேவதனை நீக்கி - நம்மைக்

காட்டிப்பலவிதமாய் - கோட்டிகொள்ளவேவிழுக்
காட்டிப்பாயத்தினுலே - மாட்டிஇழுத்திடுவோம்
இதற்

(உ) கீரைவேர்பிடுங்கவோ - ஏலேலப் ... பாட்டு
கேட்கிருயிதுஒரு - மலேயோநீகை ... தீட்டு
ஆரறிவார்கள்சொல் - நமதுவிளே ... யாட்டு
அம்மிமுடுக்கோஅரைப்-பாள்முடுக்கோ காட்டு
அந்தமாயெவருக்குங்காட்டி - நாரி
கந்தரத்தினில்த்தாலி பூட்டி - முர
சடிக்குமாமணமே - முடிக்கும்போதிலுயிர்
குடிக்குஞ்சூட்சிஒரு - நொடிக்குட்பாரடாநீ
இதற்

அன்று ஆலிலேயில்த் - தங்கிய ... அம்பினே
அசைத்துக்காற்றினுலே - உதிர்துப்பிராமணிதனேக்
கொன்றதுபோல்அதோ-கட்டிநிற்கு ... முனேக்
கொம்பின்பசுவினுலே-கொல்லுவதே ... வினே
கொட்டிமுழக்கும்வேளே நாடு - பசுக்
கட்டுங்கயறறுத்துக் கூடு - கொம்பால்
குற்றிமடித்துஉயிர் - பற்றிப்பிடித்துஆரும்
சுற்றிஅடித்து அழ - யுத்திமுடித்துவிடு
இதற் ஈருரு

---

விருத்தம்

அந்தகன்தூதுவர்உரைத்தவார்த்தையெல்லாம் *
அரனருளாலிவரிருவர்அறிவார்அன்றி ... *
அந்தயிடத்தினில்எவரும்அறியார்ஆல்க்கீழ் ... *
அரிவைஉயிர்இறந்தவிதியதனேநன்ருய் ... *
அந்தணனேஅறிந்தனேயோவென்றுசிந்தை ... *
ஐயமுந்தீர்ந்தேமுழுதும்அறிவோமென்று ... *
அந்தரங்கமாய்மறையோனுடனேமன்னன் ... *
ஆங்குற்ருன்வணிகன்மணப்பாங்குற்ருனே ... (உாசு)

பதம்-முகாரிராகம்-ரூபகதாளசாப்பு

(க) [ கண்ணிகள் ]

வணிகரெல்லாஞ்சூழவே-வந்துமணப்பந்தலில்மொய்த்தார்-அந்த
மணவரையினில்மணப்பெண்ணேயும்மருமகனேயும்வைத்தார்

அணிசேர்சுபமடமாதர்கள் அங்குசோபனம் படித்தார் • மறை
அந்தணர்ஓமம்வளர்த்தேசுபம் - ஆகமப்படிமுடித்தார்

(உ)

மங்கைகண்டத்தில்மங்கலந்தன்னை - மருமகனும் பூட்ட-எங்கும்
மடமடென்னவேமுரசோடதிர் - வாத்தியங்களுமூட்ட
அங்குவாசலில்க்கட்டிநின்றதோர் - ஆவும்நாடி வெறிக்க-இழுத்
தாக்கிரமித்திடவேகழுத்தினில் ஆர்த்ததும்பு தெறிக்க

(௩)

ஒருவர்மேல்ஒருவர்விழுந்தெழுந்தோடிபந்தலுள்ச்சென்றே-ஆரும்
உளறவேமணமகனைபாய்ந்துது- உயிர்ஒழிந்திடக்கொன்றே
மருவுமாமணமகன்தான்பிண - மகனுய் முடிந்தானே-அந்த
மணப்பந்தலும்பிணப்பந்தலாய்- வாடவே மடிந்தானே (௱௫௬)

விருத்தம்.

வியந்தவணிகன்செயல்கண்டந்தணாளன் ... ... *
மிக்கதுயர்ஒழிந்தான்தன்அரண்மனைக்குட் ... ... *
சாந்தமன்னன்வந்தெவர்க்கும்புதுமைஈதைச் ... *
சாற்றிவேடனைமகிழ்ந்துதனம்ஈந்தேவி ... ... *
ஆய்ந்தமறையோனைமறுமனைவிகொள்ளென் ... *
றளவில்நிதிகொடுத்தனுப்பிஅகமகிழ்ந்து ... ... *
சேந்தனைஈன்றவரைநின்றுதுதித்தான்ராஜ ... ... *
சிங்கர்தானெனுங்குலோத்துங்கன்தானே ... (உ௱௰)

சோமசுந்தரேசுவரமூர்த்தியை குலோத்துங்கபாண்டியன்
ஸ்தோத்திரஞ்செய்தது.

பதம்-பந்துவராளிராகம்-ஆதிதாளம்.

[பல்லவி]

ஆண்டடிமைகொண்டபரனே - நின்போல்
ஆரருள்புரிவார்கந் தரனே

[அநுபல்லவி]

நீண்டஅண்டசரா-சரமெங்கினும்பொருந்து
நீதியானபரஞ் - ஜோதியா ... யிருந்து
ஆண்

[சரணங்கள்]

(௧) வேடன்மேல்ப்பழிசொன்ன-வேதியன்மனை யாட்டி
விதியால்இறந்தாளென் - பதற்குவணிகன் வீட்டிற்
ஜாடுங்காலதூத - ராலேசாட்சி ... ... காட்டி
தற்காத்தெனதுசெங்கோல்-தன்னையேநிலை ... நாட்டி
ஆண்

(உ) பூம்பும்நோகாமல்ப்பாம் - படித்தகோனும் நோகாமல்
பண்ணுஞ்செயலேஇந்தப் - பாரில்ப்பொய் ... யாகாமல்
ஆம்படிவேடுவனும் - வீணினில்ச் ... சாகாமல்
அபகீர்த்திபடைத்துநான் - அருந்துயரில் மூழ்காமல்

ஆண்

(௩) அஞ்சும்பிரபஞ்சச்சிடுக் - கறுத்துத்தெளி ... வுநெஞ்சி
லருளும்தேவரீர்க்கித - ரிதோஐயனே ... கெஞ்சி
பஞ்சையாம்எனக்காகப் - பரிந்தீரே ...புகழ்மிஞ்சி
பாரெங்கும்பேரோங்கப் - பாலித்துப்பழிக் கஞ்சி

ஆண், ௱ருஎ,

---

விருத்தம்.

தோத்திரம்உரைததுநாளுந் - துலங்கெழிற்பூசைமானை ... *
வேத்தியம்உச்சவங்கள் - மிகமிகவிரும்பிச்செய்து ... *
கோத்திரப்படிபாராண்டு-குலோத்துங்கபாண்டியன்தொன்னூற்*
சாத்திரந்தேர்ந்துகீர்த்தி- தரித்துவீற்றிருந்திட்டானே (உ௱௰க).

—*—

விருத்தம்.

தெரிபழிக்கஞ்சுலீலை-தினமனமகிழ்ந்துகேட்போர் ... *
துரிதமதொழிந்துவாழ்வார்-தூடருமாபாதகந்தீத் ... *
தரிணமதணிந்தயீச-னுர்செய்தஇருபத்தாறுந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௱கஉ) *

பழியஞ்சின- திருவிளையாடல் - முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் ௰உ, வெண்பா-க-பதம்-௰க ஆ உச.

ஆ பாயிரம்உள்படத் - திருவிளையாடல்-உரு-க்கு-வெண்பா-உ-
கலித்துறை-உ-கொச்சகம்-க,விருத்தம்-உ௱எ, பதம்-௱ருஎ
ஆ கவிதை ௩௱சுசு.

இருபத் தாறுவது

## மகாபாதகந்தீர்த்ததிருவிளையாடல்.

———(:)(*)(:)———

விருத்தம்.

பழியஞ்சியாண்டபின்பு - பகர்குலோத்துங்கபாண்டியன் ... *
செழிவொடுபோராள்நாளில்ச் - செப்புமோரவந்தியென்ன ... *
மொழிநகர்தன்னில்வேத - முப்புரிநூலோன்மைந்தன் ... *
ஒழிவறுகொடியபாவ - உருவம்போல்வளர்ந்துற்றனே (உ௱ம௩)

பதம்-மத்தியமாவதிராகம்-ஆதிதாளம்.

[ கண்ணிகள். ]

(௧) அவந்திஎனும்ஒரு - தவந்திகழுநகர்
அதனில்ஒருமறையோன் ... ... தேவி
நவந்தருரதியும் - உவந்தருளவரு
நளினியின்வடிவுள்ள ... ... ... பாவி

(௨) பெற்றதொருமகன்அ-கிர்த்தியவினைகள்ஒரு
மித்ததுபோல்வளர்ந் ... ... தானே
உற்றபருவம்அதில் - வெற்றிமன்மதன்கணை
தைத்திடமிகத்தளர்ந் ... ... தானே

(௩) தன்னைஅருளியதோர் - அன்னைதனைவிரும்ப
முன்னவளும்இணங்கி ... ... னளே
மின்னிமறைவதெனத் - துன்னுஞ்சுகம்அவதி
பின்னதுவெனஅறி ... ... யாளே

(௪) இருவருமகிழ்வொடு - மருவியேதிரிவதை
அருமறையவனுங்கண் ... ... டானே
கருகிமிகவுமனம் - உருகிஉருகிஊமை
கண்டகனவெனக்கொண் ... ... டானே

—(*)— (௱௫௮)

விருத்தம்.

கரையும்அந்தணன்பின்னோர்நாள்-கண்ணெதிர்காணச்சேயென் *
றுரைபெறுபாவிதந்தை-உயிரினைவதைப்பேன்என்று ... *
விரைவுடன்எழுந்தான்அன்னை-விலக்கினள்அவளைநோக்கிப் *
புரையுறுகொடியபாவம்-பூண்டவன்புகனுவானே (உ௱ம௪)

பதம்-எமுனகலியாணிராகம்-அடதாளசாப்பு.

[ பல்லவி ]

என்னடிபாவம்-இணங்காதென்கோவம்

[ அநுபல்லவி. ]

அன்னைதந்தைஎன்றோது - வதுகாமுகருக்கேது

என்னடி

[ சரணங்கள், ]

(க) வெருட்டுமதன்கணையை - வெல்வதே......வீரியம்
இருட்டினுல்எல்லாம்சரி - என்பதே... காரியம்
என்னடி

(உ) வந்தபகையைவைத்து - வளர்ப்பது...... மோசம்
தந்தைகுருஆரானுல்த்-தானென்னகி... லேசம்
என்னடி

(௩) அடவுடன்இருவோரும்-அனுதினஞ் செழிப்போம்
இடறுகட்டையாமிவன்-எதுக்கு ஒழிப்போம்
என்னடி. ாருக.

---

விருத்தம்.

பாவிஇதுமொழியச்சம்மதித்தாள்அன்று ... ... *
பருத்திடுமெண்வெட்டியினுல்இரவில்த்தந்தை ... *
ஆவிதொலைத்தான்ஈமக்கடனுந்தீர்த்தான் ... ... *
அன்னையுடன்பொன்சிலகொண்டவ்வூர்விட்டுத் ... *
தாவிகடந்தான்காட்டில்வளைந்துசோரர் ... ... *
தனத்தையுந்தாய்தனத்தையுங்கொண்டார்பின்கண்ணீர் *
தூவியுலைந்தான்தந்தைபாவத்தாலே ... ... *
துடித்துதான்பிரமஹத்திபிடித்துத்தானே. (உாயரு)

பதம்-சுருட்டிராகம்- அடதாளசாப்பு.

பல்லவி.

இந்தப்படியேபிரமஹத்தி-பிடித் - திழுத்தலைத்துதேஎங்குஞ்சுற்றி

[ அநுபல்லவி. ]

தந்திடுவாயெந்தன் - பழியைஎன்று கத்தும்
தன்னைவிட்டுநீங்கா - நிழலென்னவே சுற்றும்

இந்தப்

[சரணங்கள்.]

(க) ஆவென்றதட்டுமேலே ... தாவும் - கொலை
யாமோபாவியென்று ... கூவும் - ஐயோ
கோவென்றலறும்முன்னே ... மேவும் - நின்று
கூத்தாடிக்கூத்தாடிப்பார்த்து உலாவும்
கூடும்வழிகாட்டியே - ஓடும்முள்ளுஞ்செடியும்
காடும்அலைந்துதத்தி - வாடும்படிமயக்கும்
இந்தப்

(உ) ஊணுறக்கமில்லாமல் ... அடிக்கும் - நினை
வொன்றுந்தோணுமல்பல் கடிக்கும் - உந்தன்
வாளால்வாங்குவேனென்று ... துடிக்கும்பெரு
வாய்பிளந்தேஅழுதுகண்ணீர்வடிக்கும்
மலைக்கும்படிமனத்தை - கலைக்குங்கருதுவதை
உலைக்கும்பலவிதமாய் - அலைக்கும்அநுதினமும்
இந்தப்

(ங) ஆறுயர்புனலில்ப்புல் ... ... லாது - நல்ல
அறமுள்ளஸ்தலத்தில்ச்செல் ... லாது - அறங்
கூறுவோர்மொழிமுன்னில் ... லாது - நொந்து
குற்றுயிராகவேகுறைக்குங்கொல் லாது
கொட்டிக்கொட்டிஎதிர் - கிட்டிக்கிட்டிவழி
தட்டுக்கெட்டலைப - விட்டுத்தொட்டுவரும்
இந்தப்-ாகூ௰

---

விருத்தம்.

பாதகன்இப்படிப்பிரமஹத்திவாட்டப் ... *
பலநாள்ச்சென்றதுநீங்கும்பருவந்தானோ ... *
நீதகனுமதுரைதனில்வந்தான்ஆங்கு ... *
சிவன்உமையாளுடன்வேடவடிவமாகி ... *
ஆதவன்போல்விளங்கொளிவிமானக்கோயில், ... *
அருகிருந்துசூதாடும்அளவில்இந்தக் ... *
காதகனைக்கண்டரனுர்உமையைநோக்கிக் ... *
காட்டுவார்கரகமலம்நீட்டுவாரே (உாயகூ).

பதம்-பைரவிராகம்-சாப்புதாளம்

[பல்லவி.]

பாவிமதன்கனைபொல்லாதே- இந்தப்- பாதகனைநீபாராய்மாதே

[ அநுபல்லவி ]

ஒவியமேஇந்த - உலகைமயக்கவந்த

பாவி

[ சரணங்கள் ]

(க) ஓசைஇக்குவில்லம்பு ... ... ... ஜாடும் - அரு
வுருவாம்நமைத்தொடாதிவ்-வுலகைப்போராடும்
ஆசைவெட்கந்தோணுமல்ச் ... ... சூடும் - இடம்
அறிந்திடாரைநர - கத்திலே ... ...போடும்

பாவி

(உ) கள்ளுண்டால்அப்போதுதானே... ...வாட்டும் - காமக்
கள்ளிதுநினைத்தாலுங்-கண்டாலு ...மாட்டும்
விள்ளுமெவரையுங்கண் ... ... காட்டும் - தீ
வினைக்கெல்லாம்ஏதுவாய் - மெலிந்திடஆட்டும்

பாவி

(ங) காமமேதனைக்கொல்லும் ... ... கத்தி - அதைக்
கடக்களவராலுண்டு - கலங்குமே ... புத்தி
தாமொருநாளுமுண்டோ ... ... முத்தி - பெற்ற
தாயென்றும்பிள்ளையென்றும்தடுக்காமல்செய்தவெத்திப்

பாவி. ாசுக.

---

விருத்தம்.

கருணைவேடுவவடிவோடிவ்வாறேதும் ... ... *
கடவுள்எதிர்தீயவனுங்கடுகிவந்தான் ... ... *
வரும்அவனைநோக்கிமறையோனேஉந்தன்... ... *
வதனஒளிமாறிநொந்தவகைஏதென்றார்... ... *
ஒருமதலைமெலிவதுபார்த்தன்னைதீம்பால் ... ... *
ஊட்டுதல்போலேஉரைத்துஉளமிரங்கித் ... *
திருவருள்செய்திடப்பாவஞ்சிறிதுதீர்ந்து ... *
தெளிந்திட்டான்மறையவனும்மொழிந்திட்டானேஉகஎ

பதம்-ஆரபிராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி ]

என்சொல்வேன்மேவி - ஏங்கினேன்பாவி

[ அநுபல்லவி ]

புன்சொலால்நாவெந்து-போமேநரகுண்டாமே

என்

[சரணங்கள்.]

(க) நிலத்தில்எவருங்கண்டு - நிந்தனைசெய்ய ... தானே
குலத்தைக்கெடுக்கவந்த - கோடாலிக்காம்பா னேனே
என்

(உ) தக்கவனுமறையோன் - தன்வயிற்றினில்த் ... தானே
இக்குவின்மலர்போல - வேவந்துபிறந் ... தேனே
என்

(ங) தன்னையறியாதசன் - னதமேமதனு ... வேசம்
அன்னைஎன்றுந்தோணுமல் அணைந்தேன்என்மதிமோசம்
என்

(ச) தாயையணைந்தஜாடை-தந்தையறிந்தான் ... என்றே
தீயபகையிதென்று-சினந்துதந்தையைக் கொன்றேன்
என்

(ரு) தாயையும்சோரர்கையில்த் - தானிழந்தேனே காட்டில்
நாய்வாய்ச்சீலையைப்போலே - நானலைந்தேனே நாட்டில்
என்

(சு) பின்னிழற்போல்பற்றி-பிரமஹத்தி ... பிடித்து
இன்னிலமெங்குஞ்சுற்றி - யேஅலைந்தேன் ... துடித்து
என்

(எ) பாரெங்குமலைந்துநொந்தேன்பழி தொலையாமல்த்தானே
ஊரிதைக்கண்டுவந்தேன் - ஒருவரும்அற்ற ... நானே
என், ாகூஉ,

---

விருத்தம்

ஈதவன்உரைத்துச்சிந்தை-எங்கியேநிற்கஇந்தத் ... *
தோதகம்இவ்வூர்அன்றித் - தொலைந்திடாதெனவிரங்கி ... *
ஏதமில்வேடரூபத் - திறைவர்இங்கிவனைநோக்கிப் ... *
பாதகம்ஒழியுமாற்கம் - பணித்திட்டார்தணித்திட்டாரே (உ௰அ)

சோமசுந்தரேசுவரமூர்த்திமகாபாதகனுக்கு
அனுக்கிரகஞ்செய்தது.

பதம்-அசாவேரிராகம்-ஆதிதாளம்.

பல்லவி

பாதகம்ஒழிவாயே - யிப்போதிந்தப்-பதியில்வந்தாயேநீயே

அநுபல்லவி.

ஓதும்உன்பேர்சொன்னோர் - குலமும்நரகில்எய்த
உலகினில்எவர்களும் - நகைசெய்யநீ செய்த
பாதகம்

சரணங்கள்.

(க) இகழாமல்தினம்ஒரு போது - பிட்சை
எடுத்துண்ணுசிவபத்தர் மீது -
அகம்வைத்துப்பணியவ ரோது - மேல்
அதனைச்செய்வாயே அப்போது - பல
ஆதவன்தன்முன்-னேபனிஎனவணு
காதொழிந்திடு- மேதொடர்பழவினை
ஏதுசஞ்சல- மினிபுரைஇகபர
ஸாதகம்பெறு- வதுநிலவரமிது

பாதகம்

(உ) கதிர்உதிக்குமுன்னேபுல்த் தேடு - தினம்
கறவைக்குஊட்டுஅன் போடு -
புதுமையாமிதனை நாடு - கோவில்ப்
புறத்தொட்டித்தீர்த்தத்தில் ஆடு - கண்டு
போற்றிமுப்பொழு -தும்விமலரைஒரு
நூற்றிஎட்டுமு- றைப்படிவலம்வரில்
நாற்றிசைக்கு- ளுதித்துலகெனுமய
லாற்றிசைத்தசி- டுக்கறு உன்துயர்

பாதகம்

(ங) தீராதுநீசெய்த தோஷம் - இது
சென்மாந்தரகர்ம சேஷம் - இந்த
ஊரில்நம்மைக்கண்ட விசேஷம் - இன்று
ஒழிந்ததுஉனக்கிந்தவேஷம் - இனி
உந்தநெடுங்குல - மும்பணியும்பவ
பந்தமொழிந்தப - தந்தருமுந்திய
இந்தவளம்பதி- யின்பமிகும்பதி
சிந்தையிலன்புமி - குந்துமகிழ்ந்திரு

பாதகம் - ராசூங.

விருத்தம்.

இத்தவஞ்செய்திவ்வூரில் - இருபழிஒழியுமென்று ... *
கொத்தவவேடன்கூறக் - கோலவேடிச்சியான ... ... *
மத்தகமுலையாள்தன்ம - ணளரைநோக்கிஐயோ ... *
பித்தரேஇவனுக்கேது - பிழைப்பென்பாள் தழைப்பென்பாளே

சோமசுந்த - ரேசுவரமூர்த்தியைப்பார்த்து (உ௰சு)
மீனம்பிகா மகாதேவி வினவியது.

பதம்-கேதாரகௌளராகம்-ஆதிதாளம்

பல்லவி.

இவன்செய்ததிதுக் - கிரங்கியதேது

அநுபல்லவி.

தவஞ்செய்தவர்க்கும் இந்தத்-தயவுசெய்யீரேமுந்த

இவன்

சரணங்கள்.

(க) நாலெழுகோடி - நரகினும் ... வாடி
காலங்கழித்திட்டாலுங் - கழியாதே ... தேடி

இவன்

(உ) ஆயென்னமோகம் - ஆறுமோ ... லோகம்
தாயைப்புணர்ந்துதந்தை-தனைக்கொன்றதுரோகம்

இவன்

(௩) செய்யாதுசெய்யத் - திகைக்குமே வைய
மையாஇவனுக் - கிது ஆகுமோ ... உய்ய

இவன் - ௱௬௪.



விருத்தம்.

வேயிருபுயத்தாள்சொல்ல - மெய்யறிவுடையோர்சிந்தை ... *
கோயிலாய்க்கொண்டுநின்றுங் - குற்றமும்சமமாய்ப்பார்த்து ... *
மாயிருஞாலந்தன்னில் - மலிந்திடும்உயிர்கட்கெல்லாந் ... *
தாயினும்அன்பரான - தற்பரன்செப்புவாரே (உ௱உ௰)

மீனம்பிகாமகாதேவி வினவியசங்கைக்கி சோமசுந்தரேசுவரமூர்த்தி திருவாய் மலர்ந்தருளியது.

பதம் - தோடிராகம் - ஆதிதாளம்

பல்லவி.

ஏழைஇவனுமே - காத் - திடவேணும்நாமே

அநுபல்லவி.

ஆழமடுவில்வீழ்ந்து - பரதவிப்போரைக் காணும்
அளவில்க்கைதூக்கிவிட் - டாரையும்ஆளவேணும்

ஏழை

சரணங்கள்.

(க) ஆரும்அகுதிக்குத் - தெய்வந்துணைஎன்பர்
அல்லோ - விண்சொல்லோ ... நம்மை
அடுத்தவர்க்குக்கதி - கொடுத்தருளுவது
அரிதோ - அது - பெரிதோ ... இவன்
காரியந்தெரி - யாமதிஇழந்த
கசடனை - முழு - அசடனை யிந்தக்

காசினிகள்எங்குஞ் - சீசீஎனப்பழித்
தேசியிடப்பர - தேசியாய் ... ... ... வந்த
ஏழை

(உ) நலம்இளப்பம்அறி - யாமல்அலையும்அ
நாதை - மிகப் - பேதை ... ... எந்த
நாளிவனுக்கீடேற்ற - மினிநாமல்
லாது - துணை - ஏது ... ... இந்தத்
தலமிதில்வந்தவர் எவர்களையு முடன்
சலிப்பொழித்துரட்சிப்பது நமதுகடன்
சார்பில்லாதவன் - சீர்கல்லா தவன்
நேர்பில்லாதவன் -பேர்பொல்லாதவன்

(௩) அழிக்கும்பழிக்கஞ் - சாநீசரும்பினைத்
தஞ்சத் - துயர் - மிஞ்ச ... ... இவன்
அஞ்சாமல்ச்செய்த - பாதகம்பிடித்
தலைக்க - மனமலைக்க ... ... மிகச்
செழிக்கும்பாம்பின்வாய்த் தேரைபோல்த்தனி
தியங்கிஉயிர்விடுந் - தருணமாச் சினி
தீர்க்கமாய்ப்பழி - தீர்க்கவேணும்இவ்
வூர்க்குநம்மிட - பேர்க்கும்புகழுண்டு

ஏழை.௱சுரு.



விருத்தம்.

தீனரட்சகர்இதுசொல்- லவுந்தீயோரைச் ... *
செவ்வியோராக்குவதும்செவ்வியோரை ... *
ஈனராக்குவதும்அன்பின் - விளையாட்டென்றுள் ... *
இருவரும்பின்வெள்ளியம்-பலத்தில்உற்றார் ... *
மோனஅரன்அருள்ப்படியே-நடந்துமூன்று ... *
முழுமதியில்ப்பவம்ஒழிந்துமறையோன்அன்பாய் *
ஞானநாயகரைவடமொழியாலேற்றி ... ... *
நண்ணுவான்சிவஸ்தோத்திரம்பண்ணுவானே (உஉக)

மகாபாதகன்சோமசுந்தரேசுவரமூர்த்தியை ஸ்தோத்திரஞ்செய்தது
பதம்-தன்னியாசிராகம்-ஆதிதாளம்.

[பல்லவி.]

தீனரட்சக-ஹரஹரமகாதேவா-மகானுபாவா-தீனரட்சக

அநுபல்லவி

மீனலோசனிச - மேதசுந்தரேச

தீன

[சரணங்கள்]

(க) மங்களசுபகர - இங்கிதரூபா - மதுரமிர்துவசன - சதுரபிரதாபா
பங்கஜசரணஙி - ரஞ்சனதீபா - பரமசல்லாபா - ஹரகிரி ... சாபா
தீன

(உ) பாதகமோசன - பார்வதிமோகா - பஸ்மோத்தூளிதவிக்கிரகதேகா
பூதகணுதிப - யோக அனேகா - பூசுரஸ்நேகா - ராஜவைபோகா
தீன

(௩) குரங்கதரகரவாதயிரண்ணிய - குண்டலதரமுகமண்டலகண்ணிய
துரந்தரீககதம்பா ரண்ணிய சோபனபுண்ணிய ரூபலாவண்ணிய
தீன. ௱௬௬.

———○*○———

விருத்தம்.

வேதநெறியோன்துதித்துவீடடைந்தான்பாவமதைவிலக்குந்தீர்த்தம் *
ஏதமுறுநோய்கள்எதைத்தீராதுசொல்வீர்பின்னிவனுக்கீசர் *
பாதகமலங்கெடுத்துப்பாதகமலங்கொடுத்தபரிவுநோக்கி *
ஆதரமாய்மகிழ்ந்து குலோத்துங்கன் முதல்அனைவருங் கொண்டாடி
னரே. ... ... ... ... ... ... (உ௱உஉ)

———○✻○———

விருத்தம்.

துரிதமாபாதகத்தைத்-தொலைத்ததாம்இதனைக்கேட்போர் ... *
புரமெரித்தவர்தாளன்பு-பொருந்தியேவாழ்ந்திருப்பார் ... ... *
விரவுடன்ஒருவன்அங்கம்-வெட்டியஇருபத்தேழாந் ... ... *
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடஉரைசெய்வேனே (உ௱உ௩)

மகாபாதகந்தீர்த்த - திருவிளையாடல் முற்றிற்று.

———

ஆ திருவிருத்தம்-யக-பதம்-௬- ஆ உய.

ஆ பாயிரம் உள்படத் திருவிளையாடல்-உ௬ - க்கு-வெண்பா உ.
கலித்துறை-உ-கொச்சகம்-க- விருத்தம் - உ௱யஅ-பதம்-௱௬௬.

ஆ கவிதை-௩௱அ௬.

இருபத்தேழாவது

## அங்கம்வெட்டின திருவிளையாடல்.



விருத்தம்.

இறைமகாபாதகந்தீர்த்-திட்டபின் குலோத்துங்கன்றன் ... *
நிறைதவறுமல்ச்செங்கோல்-நிறுத்தியாண்டருளுநாளில்... ... *
திறைதருமற்றோர்தேசத்-தினிலிருந்துயர்வாள்விஞ்சைத் ... *
துறைமுறையறிவான்கீர்த்தி-சொலமதுரையில்வாழ்ந்தானே (உஉச

பதம்-நாதநாமக்கிரியைராகம்- ஆதிதாளம்.

கண்ணிகள்.

(க) வாழ்ந்தேபடைத்தொழிலான் - மதுரையில்
வந்தனுதினமுமு - வந்தனைவர்சொல்முதல
வன்றனையடிதொழும் - வந்தனைமறவான்

(உ) தாழ்ந்தேகற்பவர்க்கு - எதிரியைத்
தடுப்பதும்மல்லமர் - கொடுப்பதும்வாள்கையில்
எடுப்பதும்புறந்தர - விடுப்பதும்நன்றாய்

(௩) வரச்செய்துநிதிபெறுவான் - கற்குஞ்ச
மத்தரில்விரகொடு - கற்றபின்பெருமித
முற்றுறைதிறமுள்ள - சித்தனென்றொருவன்

(ச) விருத்தமதாய்நடந்து - குருவுக்கு
மிஞ்சினசீஷனே - னுஞ்சொல்வதாகிய
வஞ்சகனெதிரியாய் - நெஞ்சடமுடனே

(ரு) கூடமொன்றமைத்துக்கொண்டான் - ஆயுதக்
கூட்டமுங்கற்பவர் - நாட்டமுந்தன்சொல்மே
லாட்டமும்பொருளினில்த் - தேட்டமுமானன்

(சூ) தேடியதேசிகன்ஊதி - யத்தையுஞ்
சிக்கியேதான்கொள்ள - மிக்ககுருவினிடஞ்
கற்கவருமவர்க - ளைக்கலைந்திடுவான் (௱கூஎ)

விருத்தம்.

தேசிகன்தன்தொழில்மீதும்மனைவிமீதுஞ் ... ... *
சித்தனுஞ்சித்தனுந்தீயன்என்றும் ... ... *
மாசில்குருமனையில்அவன்இல்லாவேளை ... ... *
வந்துவந்துஅலைத்தரும்பாய்வருந்திப்போவான் ... *
கூசியிடான்பாவிஇவன்தலையெழுத்துக் ... ... *
குறுகியதால்ஒருநாள்வந்தனமேதேனே ... *
நேசியெனைநேசியெனவஞ்சவஞ்ச ... ... *
நெஞ்சினன்மிஞ்சினன்கெஞ்சினானே ... (உ௯உ௫)

பதம் - ஆனந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

என்னடிசிந்தை - இரங்காயோதேனே

[அநுபல்லவி]

மன்மதன்கணைபாலே - மடிவேனோநானே
என்

[சரணங்கள்]

(க) விருத்தனுன்மணவாளன் - ஒருத்தனென்எவலாளன்
வேணுமடிதீர்ப்பாயென் ... ஆவலே
கருத்தில்வஞ்சகம்வையேன்விருத்தம்இனிமேல்ச்செய்யேன்
கட்டளைப்படிக்கேழ்ப்பேன் ... ஏவலே
என்

(உ) கண்ணேகல்லடிமனம் - பெண்ணேஉந்தன்எவ்வனம்
காட்டுக்கெறித்தநிலை ... வாகுதே
வண்ணமதன்அம்பாலே - புண்ணாகியஎன்மேலே
வர்மமோ - தர்மமோ ... நோகுதே
என்

(௩) காமமுற்றன்றுதாரை - மாமதியைச்சேர்ந்ததில்க்
கற்புக்குப்பங்கமுண்டோ ... சொல்லடி
காமனுக்குக்கண்டதெல் - லாமிருகண்ணென்பதே
காதிலுங்கேட்டிராயோ ... புல்லடி
என்

(ச) காலங்கண்டுசெய்வீம்பு - காலைச்சுற்றியபாம்பு
... கடித்தால்ஒழியப்போமோ சேரடி
கோலப்பணிகள்பூட்டி - லீலைத்தொழில்கள்காட்டிக்
... கொடுக்குஞ்சுகத்தைக்கண்டு ... பாரடி
என்
...
(ரு) மலியமகிழ்வுண்டாக்கி - மெலியவுன்பாதந்தூக்கி
... வணங்குவேன்நீஒன்றும்விள் ... ளாதே
சலியாதிரென்னைமேவி - வலியவந்தஸ்ரீதேவி
தன்னைக்காலாலெத் ... ...தள்ளாதே
என் - ௱௬௮.

---

வெண்பா

பதுங்கியபெண்சிங்கத்தைப் பார்த்துக்காரானை *
ஒதுங்கிப்போகாமல் எதிர்ஒடி—மதங்கொள் ... *
கரத்தில்வால்பற்ற அதைக்கண்டுபெண்சிங்கந் *
துரத்தினதொத்தாள் துணிந்து (உஉ௬) *

பதம்-மோகனராகம்-சாப்புதாளம்.

பல்லவி

மூடாநீபோடா - முழுமதிகேடா

அநுபல்லவி,

நாடாதேஇதுநீதே- நடநடஇங்கிராதே
மூடா

(௧) [சரணங்கள்]

வளர்த்தகடாமார்பில்ப் பாய்ந்து - களைத்திடவே செய்துகாய்ந்து
விளைத்தவினைபோலே நேர்ந்து - முளைத்தாயேதுரோகி- அழி
வாயடாஅறி - வாயடாஉரைத்
தாயடாஉனக்குநான் - தாயடாமதியில்லாத
மூடா

(உ) யுத்திகள்இங்கேசெல் லாது- சற்றும்உன்வாழ்வுநில்லாது
பத்தினிஎன்சொல்பொல்லாது - பித்திப்பேற்றுதே - ஆசை
ஒழியடாஎன்ன - மொழியடாஇதைக்
கழியடாஅடடாஇது -பழியடாமானமில்லாத
மூடா

(௩) ஆரைநாடியடாசொன்னுய் - மேரையோசாகப்போறநாய்
கூரையில்ஏறிய தானுய் - காரியமல்லடா - இது

அடமடா- என்ன திடமடா- பாம்புக்
குடமடாநானறிஎன்னைத்- தொடமடிவாயடாசொன்னேன்
மூடா

(ச) சந்திரனும் அதிகார - இந்திரனும்பரதார
சிந்தனையினாலே பார் - நிந்தனையுற்றே - பழி
தாங்கினர் - களை - வாங்கினர் - கனம்
நீங்கினர் - மலம்-ஏங்கினர்-அறியாயோடா
மூடா

(ரு) தீநரகிற்போய்விழுந்தே தானலறுவாய்நீநொந்தே
ஈனமாம்இதுநினைந்தே - ஞானமில்லாமல் - வினை
தேடுறாய் - என்னைநாடுறாய் முனை
போடுறாய்வா- யாடுறாய்ரோசமில்லாத
மூடா - ௱௬௪௬.

---

விருத்தம்.

விண்டத்தைநினையான் முன்சுட்டும்விட்டிடில் ... *
விளக்கில்வீழ்ந்திறப்பதெனப் பிடித்தான்கையைக் *
கண்டத்தையனுஞ்சினந்து வெளியில்த்தள்ளிக் ... *
கைபறித்துக்கதவடைத்தாள் அவன்பின்னுமே... *
பிண்டத்தைஇச்சைவைத்து முகந்தநாய்தான்
பெருக்கித்தேய்ந்திட்ட பழங்கோலால்மாட்ட ... *
லுண்டத்தைஒத்தகன்றான் மின்னாள்கண்ணீர் ... *
ஓடினாள்பரனை நொந்துவாடினாளே (உஉஎ)

பதம்-நீலாம்புரிராகம்-ஆதிதாளம்

[ கண்ணிகள் ]

(க) தெய்வமேஉனைநம்பு - மெய்யுடையோரைவம்பு
செய்வானே - செய்தோன் உய்வானோ
ஐயனேமதுரேச- பொய்யோஉமதுநேச
மற்றேனோ- அக ... ... முற்றேனோ

(உ) இகழ்ந்தாரைவாழவைத்துப்-புகழ்ந்தாரைத்தாழவைத்து
இடலாமோ- துக்கப் ... ... படலாமோ
மகிழ்ந்திவனினைச்ச- அகந்தைகளுமக்குச்சம்
மதமாச்சோ- அன்பு ... ... மிதமாச்சோ

(௩) அடியேன்உமதுதிரு- வடியேகதியென்றிருந்
தடுத்தேனே- செங்கை ... எடுத்தேனே

கொடியோன்இவனென்னிடம்-அடமேசெய்திடஇடம்
கொடுத்தீரே - பேச ... ... ...விடுத்தீரே
(ரு) செய்புந்தொழிலும்நீரே- செய்பவனும்நீரே
தேவேநான் - ஆரை ... ... நோவேனுன்
ஐயாஉமையல்லாதே - அணுவும்அசைந்திடாதே
அடமாமோ - இந்தத் ... திடமாமோ
(சா) கருதும்என்கணவனைக்-குருவென்றடுத்துமுனை
கண்டானே-கற்றுக் ... ... கொண்டானே
அரவைவளர்த்துபாலைச் - சொரியவிஷத்தைப்போலே
ஆனனேஎன்சொல் ... ... ... வேனனே
(எ) வேலிக்கிட்டமுனை-காலில்த்தைத்தாப்போல்வினை
விளைத்தானே - வந்து ... முளைத்தானே
கோலிக்கொண்டேதிரிந்து-கேலிக்கிடமாய்வந்து
குலைத்தானே - என்னைக் ... கலைத்தானே
(அ) குருதாரமென்றுநெஞ்சு - தெரியத்தான்சாகநஞ்சு
குடித்தானே - என்கைப் ... பிடித்தானே
பருவமதனைப்போலே - வருமிவனைக்கண்ணாலே
பாரீரோ - என்னைக் ... ... ... காரீரோ

(௱எ௰)

விருத்தம்.

மங்கைஇந்தவிதமதுரேசரையேநொந்து ... *
மகிழ்நனுக்கும்உரையாமல்இருந்தாள்மாரன் ... *
செங்கையம்பால்நொந்துசித்தனுந்தன்வீட்டில்ச் *
சென்றிருந்தான்அவன்உடலைச்சிதைக்கவெண்ணிக்
கங்கையணிச்சங்கரனார்ஒருநாள்த்தேசி ... *
கன்போலவடிவெடுத்துக்கருத்தில்எதுஞ் ... *
சங்கையுறுமொழிபோலவுரைத்துவஞ்சந் ... *
தழைத்திட்டார்சித்தனைப்போர்க்கழைத்திட்டாரே(உஉஅ)

பதம்-கௌரிபந்துராகம்-அடதாளசாப்பு.

[ பல்லவி ]

சித்தாவீரப்பிர-சித்தாவாளமர் - செய்துபார்ப்போம்வாடா

அநுபல்லவி.

உற்றகிழட்டெருதை - புழைக்கடையில்க்கட்டென்று
உரைக்குங்கிழவனுனென்-பலமுங்கண்டறிசின்று

[ சரணங்கள் ]

(க) கற்றபேர்க்குள்ளே - சமத்தனுனது ... பேச்சு
காதில்கேட்கக்கேட்க - மிகமிகமகிழ் ... வாச்சு
உற்றுன்ஞலெனக்கு - மெத்தகீர்த்தி ... யாச்சு
துன்பிலமெல்லாம்நன்ருய்க் - காட்டியேஒரு மூச்சு
சித்தா

(உ) குருவென்றஞ்சவேண்டாம்-பொருதும்படைகள் தீட்டு
கொடுத்தவித்தைகளெல்லாம்- எடுத்துநன்ருய்ப்பாராட்டு
விருதெல்லாம்புனைந்து - வருவேன்சபதம் ... போட்டு
விளையாட்டுச்சண்டை-வினைச்சண்டையானுலு மூட்டு
சித்தா

(௩) அரிக்கும்என்கைத்தின-வடங்கவிதுவே ... வேளை
ஆரும்அறியஇந்த - ஊரில்வெளியே ... வாளைத்
தரிக்கும்வல்லவர்கண்டு - மகிழவேஇரு ... தோளைத்
தட்டிநேர்ந்துநின்று-வெட்டிக்கொள்ளுவோம் நாளை
சித்தா. ௱எ௰க.

---

விருத்தம்.

சாலவடிவெடுத்தவர்ஈதுரைத்துச்சென்ருர் ... *
சம்மதித்துவரும்இவனைத்தான்வதைக்கக் ... *
காலமிதுவெனமகிழ்ந்துமறுநாள்ச்சித்தன் ... *
கத்திகேடையந்தாங்கிக்களத்தில்வந்தான் ... *
கோலவரிப்புலிபசுவின்தோலைப்போர்த்துக் ... *
கொண்டுவந்தாப்போலெதிர்த்துக்கூர்வாள்ஏந்தி *
ஆலமுண்டவிமலருந்தேசிகனைப்போல ... *
தட்டினுர்அவன்உடலைவெட்டினுரே (உஉ௬)

பதம்-சௌராஷ்டிரராகம்-அடதாளசாப்பு,

பல்லவி.

வேடிக்கைச்சண்டை - செய்துசித்தன்அங்கம்
வெட்டினவிதங்கேளும்

[ அநுபல்லவி ]

வேடிக்கைஒருசிங்கம் - நரியைக்கவ்விக்கவ்வி
விட்டுவிட்டுவிளை-யாடுவதுபோல்த்தவ்வி
வேடிக்

[ சரணங்கள் ]

(க) பற்பலபேர்களும்-அறியக்கொடியரஞ்சப்
பார்வைகற்புநிறை ... ... வேறவே-நெறிக்
கற்பின்மாதவள்தன்-கணவனும்இவன்பகை
கழிந்துதென்றுமனங் ... ... தேறவே
பொற்புயர்மதுரையின் விமலர்நீதிஇதைப்
புகழ்ந்துபுவியில்யாருங் ... கூறவே-ஒரு
அற்பநாயின்வாயிற்-கோலைக்கொடுத்ததுபோல்
அடுத்துக்கடுத்துட்பகை ... மீறவே-இந்த
வேடிக்

(உ) அடரும்இவன்மதுரைப்-பதியில்வசித்தபல
ஞலேகுருவடிவாய் ... ... நாடியே-வந்து
இடசாரிவலசாரி-சுற்றிஎதுத்துமுது
கிட்டோடியும்வசை ... ... பாடியே
தடமார்பினில்ப்பெரு-வாள்வெட்டுவாங்கியுந்
தடுமாறியுமுகம் ... ... வாடியே-வெகு
நடலைசெய்துஇந்தப்-படியாகநாலைந்து
நாழிகைநின்றுபோ ... ... ராடியே-செய்த
வேடிக்

(ங) வெறுத்துக்குருதாரத்தை நினைத்தநெஞ்சைப்பார்த்த
விழியைச்சொன்னநாக்கை ... நாட்டியே-உள்ளம்
கறுத்துக்கேட்டகாதைத்-தொட்டகையைஆருங்
காணவசையுரைத்துக் ... ... காட்டியே
குறித்துக்குறித்துச்சொல்லிச்-சொல்லித்தகுந்ததண்டங்
கொடுத்துக்கூர்வாள்க்கிரை யூட்டியே-வெட்டி
அறுத்துப்பனங்காய்போன்ற-தலையைநாய்நரிகள்
அடித்துக்கொள்ளச்சமர் மூட்டியே-நல்ல
வேடிக்-எஎஉ.

---

விருத்தம்,

சித்தன்அங்கத்தைவெட்டித்தொலைத்தேறார்ந்தோர் *
சீக்கிரத்தில்மறைந்துவிட்டார்குருவென்றெண்ணி *
அத்தலத்தில்நின்றவர்கள்தேடிவந்து ... *
அக்குருவின்மனவிமொழியாலேகூடல்க் ... *
கர்த்தர்விளையாட்டிதெனஅறிந்தெல்லோருங் ... *
காவலனுமகிழ்ந்தேற்றக்கற்பின்பன்னி ... *

சுத்தமுறுதேசிகன் தன்சீடரோடுந் ... ... *
தொழுதுமதுரேசர்தமைத்துதித்திட்டாரே (உ௬ ௰)

சோமசுந்தரேசுவரமூர்த்தியை சித்தனுடைய
குருஸ்தோத்திரஞ்செய்தது.

பதம் பந்துவராளிராகம்-ஆதிதாளம்.

[பல்லவி]

மாமதுராபுரீசா - நட-வரதாபவநாசா

[அநுபல்லவி]

காமதகனவர - கருணாகரஅர—மா

[சரணங்கள்]

(௧) காரவஞ்சகவி-காரபஞ்சனமு-காரவிந்தஉப... ... காரா
ஸாரபேதனஸம்-ஸாரஸாகரவி-சாரமோசனஆ சாரா
மா

(௨) தீரபாப-பரதாரமோகஜன - மாரகாவரஉ... ... ...தாரா
சாரவேதஉபசாரநீதஜெய - வீரதிரிபுரஸம்......ஹாரா
மா

(௩) பாரமேருதனு-தாரணாஉரக-ஆரபூஷணஅ.........கோரா
க்ஷீரசுந்தரச - நீரமங்களகு - பேரவந்திதஒய்... யாரா
மா - ௱௭௨

விருத்தம்.

புகழ்குருநன்மனைவியுடன்சீஷர்போற்றப் ... ... *
பொருந்தியிருந்தான்மகிழ்ந்திப்புதுமைகண்டு ... *
ஜெகமுழுதுமதுரேசர்தமைக்கொண்டாடிச் ... ... *
சிறந்துயர்ந்தகுலோத்துங்கன்மனைவியார்க்குள் ... *
அகமகிழுமாணிக்கமாலைஎன்பாள் ... ... ... *
அருளநந்தகுணபாண்டியனுக்குச்செங்கோல் ... *
தகவருளிவழுதிகுலோத்துங்கன்மேலாந் ... ... *
தற்பதத்தைச்சேர்ந்திட்டான் சார்ந்திட்டானே ()

விருத்தம்.

குருவின்மாமனைவிக்கிச்சைகொண்டவன்அங்கந்தன்னை *
அரியுமிவ்வாடல்கேட்போர் அகமகிழ்வுடனேவாழ்வார் *
எரிவிடநாகஞ்சாக எய்திட்டஇருபத்தெட்டாந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே ()

அங்கம்வெட்டின-திருவிளையாடல்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அ, வெண்பா-க பதம்-எ ஆ ௰௬.

ஆ பாயிரம்உள்படத்-திருவிளையாடல் - உ௰௭-க்கு வெண்பா-௩.
கலித்துறை-உ. கொச்சகம்-க, விருத்தம்-௨௱௨௬, பதம்-௱௭௩.

ஆ கவிதை - ௬௱௫.

இருபத்தெட்டாவது

## நாகமெய்த திருவிளையாடல்.

விருத்தம்.

அங்கம்வெட்டினபின்புமதுரைதன்னில் ... ... ... *
அநந்தகுணபாண்டியன்பாராண்டுசெல்வம் ... ... *
பொங்கஉயர்சிவமதமேமேன்மையாகப் ... ... ... *
பூதியும்ருத்திராட்சமும்பூண்டெவரும்வாழ்க ... *
அங்கரசுசெயும்நாளிற்சமணர்தாமெண் ... ... ... *
ணுயிரவர்மகம்புரிந்தோரரக்கன்றன்னை ... ... ... *
வெங்கணரவெனமதுரையழிக்கவிட்டார் ... ... ... *
மீறித்தான்வரும்நாகஞ்சீறித்தானே ... ... (உ௩௩)

பதம் - சுருட்டிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

நாகம்வந்துதே - பெரியவிஷ - நாகம்வந்துதே

[அநுபல்லவி.]

வேகமுடனேமுழு - மதியைராகுச்சென்று
விழுங்கவருவதென-வேசினமுடன்அன்று
நாகம்

[ச்ரணங்கள்]

(க) விண்டலந்தனை மறைத்தே - படம்விரித்து
விழியால்த்தழல்இறைத்தே
அண்டமதியும்வாட - அருக்கனும்விரைந்தோடக்
கண்டவர்விழி மூடக் - கருடனும்அஞ்சி நாட
நாகம்

(உ) நேருமரமுங் கருகக் - கண்ணெதிராக
நின்றமலையும்உருக
கூர்வாளென மண்டு - கொடியபற்களைக் கண்டு
பார்நடுங்கவெகுண்டு - பகுவாய்பிளந்துகொண்டு
நாகம்

(௩) பூமியதிரப் பேர்ந்து - பாதியுடல்
புதைபடவேஊர்ந்து
பாமரரெனு மட்டிப் - பகைவர்விடவே எட்டி
மாமதுரையைக்கிட்டி - மறலியையும் வெருட்டி
நாகம், ௱௭௪.

விருத்தம்.

உரகம்வந்திடக்கண்டு நகருள்ளோர்கள் ... *
ஓடிமன்னனடிக்கீழ்வீழ்ந்துரைக்கக்கேட்டுப் ... *
புரவலனுஞ்சுந்தரேசுவரர்முன்சென்று
போற்றியிதுபுகன்றனுக்ஞைபெற்றுமீண்டு ... *
வரமதில்சூழ்மேலவாசலின்பால்வந்து ... *
வாய்பிளந்துமாநகரைவிழுங்கச்சீறும் ... *
அரவமெனும்அரக்கனையோர்பிறையம்பால்த்து ... *
ளாக்கினன் அறுத்துயிரைப்போக்கினனே ... (உஙச)

பதம்-மோகனராகம்-சாப்புதாளம்.

பல்லவி.

எய்தான் அரவைப் - பிறையம்பால்க்-கொய்தான் அரவை

[ அநுபல்லவி. ]

மெய்தோயும்நெஞ்ச - மீனவன்பகையஞ்ச
எய்தான்

[ சரணங்கள். ]

(க) அடியில்த்தணிந்து - அரனைப்பணிந்து
வடிவில் லணிந்து - மனது துணிந்து
எய்தான்

(உ) அகமகிழ்ந் துய்ய- அழல்க்கணை எய்ய
பகழியைவெய்ய - பல்லினல்க்கொய்ய
எய்தான்

(ங) அரவ மொழிய - அரசர்மொழியக்
குருதிபொழிய - கோர மழிய
எய்தான், ாஎரு.

---

விருத்தம்.

எய்தபிறையம்பால்அவ்வுரகந்துண்டம் ... *
இரண்டாகிப்புரண்டாலகால்மென்ன ... *
மைவிடத்தைக்கக்கிஉயிரிறக்கஆலம் ... *
மாநகரெங்கணும்பரந்ததால்எல்லோரும் ... *
மெய்மயங்கிஉறங்கினவரொத்தார்மால்போல் ... *
மெலிந்தநந்தகுணபாண்டியனுஞ்சென்றோடி ... *
ஐமுகனர்கனகவிமானத்தைச்சார்ந்து ... *
அடங்கினன்துதிசெய்யத்தொடங்கினனே (உாஙரு)

சோமசுந்தரேசுவரமூர்த்தியை அனந்தகுணபாண்டியன் ஸ்தோத்திரஞ்செய்தது.

பதம்-புன்னாகவராளிராகம்-ரூபகதாளசாப்பு.

[பல்லவி.]

சிவசங்கரசந்திரசேகரா-மதுரேசுவர - தீனரட்சகாதயாபரா

[அநுபல்லவி.]

பவமோசனவரதாயகா - பாகிமீனலோசனைநாயகா

சிவ

[சரணங்கள்.]

(க) ஆலகாலமதனைப் ... பூண்டவா - அமிர்தங்கொடுத்து
அரிதனக்கருள்புரியுந் தாண்டவா
காலனைமுனிந்துதைத்து ... நீண்டவா - சிரஞ்சீவதந்து
காத்துமார்க்கண்டனையும் - ஆண்டவா

சிவ

(உ) மதுரைநகருண்டாக்கிக் கொண்டவா - அழிக்கவந்த
வாரிதித்தனைவற்றக் ... ... ... கண்டவா
முதிருமழையைத்தடுத்து ... நின்றவா - சினந்துவந்த
மும்மதக்கயந்தனையுங் - கொன்றவா

சிவ

(ங) இன்றும்வந்தவிஷத்தைப் போக்குவாய் - கருணைசெய்து
எல்லோரும்பிழைக்கக்கண்ணோக்குவாய்
என்றுமேஉனக்கடிமை ... யாக்குவாய் -இன்னமும் இடர்
ஏதேதுவந்தாலும் ... நீக்குவாய்

சிவ-ாஎசு.

விருத்தம்.

மன்னவன்துதிகண்டீசர் மதியமார்அமுதுதிர்த்தார் ... ... *
அன்னகர்முழுதுஞ்சார்ந்த தானுயிர்பெற்றெல்லோரும் ... *
தன்னகமகிழ்ந்தார்என்றுந் தற்பரர்க்கன்பனாகிப் ... ... *
பின்னந்தத்தென்னர்மன்னன் பேருலகினையாண்டானே ()

விருத்தம்.

அரவெய்தவிளையாட்டீதை ஆர்வமுற்றுவந்துகேட்போர் ... *
பரவவாழ்ந்திடுவார்மாயப் பசுவினைப்பரனாரேறும் ... ... *
எருதினால்மாயச்செய்த இருபத்தோடொன்பதான ... ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே. (உஙஎ)

நாகமெய்ததிருவிளையாடல்-முற்றுப்பெற்றது.

ஆ திருவிருத்தம் - ரு- பதம்-ங- ஆ அ.

ஆ பாயிரம்-உள்படத்-திருவிளையாடல் - உஅக்கு வெண்பா ங.
கலித்துறை-உ-கொச்சகம்-க-விருத்தம்-உஙக-பதம்-ாஎசு.

ஆ கவிதை - சாய்ங.



இருபத்தொன்பதாவது,

## மாயப்பசுவைவதைத்த திருவிளையாடல்.



விருத்தம்.

நாகமெய்திட்டபின்பு நவிலனந்தகுணபாண்டியன் ... *
வாகரசாளும்நாளில் மங்கியசமணர்எல்லாம் ... ... *
காகமதென்னக்கூடிக் கடவுள்கூடலேஅழிக்கத் ... *
தாகமதாகிவேறியோசனைசெய்வார்வினைசெய்வாரே (உகூஅ)

பதம் - சங்கராபரணராகம் அடதாளசாப்பு,

[பல்லவி.]

பண்ணும்யோசனை - எது - இன்னம் - பார்ப்போம்நாம்ஒரு - சூது

[அநுபல்லவி.]

எண்ணுயிரம்பேர் - ஒருமித்துக் ... ... கூடி
எதிர்த்துஞ்ஜெயம்பெற்றோம் - இல்லையோநாடி
பண்ணும்

சரணங்கள்.

(க) ஆஇவர்கண்ணின்முன் - னேயினிநம்மிட
காயமும்வைக்கவோ வேணும் - மானம்
போயும்உயிர்காவலோகாணும் - சொல்லும்
வாயென்னசைவங் ... கொழிக்குதே - தாழ்
வடமும்வெண்ணீறுஞ் ...செழிக்குதே - தெரு
நாயும்நமையே ... ... பழிக்குதே - மனம்
நாணிச்சமணென்பதெல்லாம்விழிக்குதே
பண்ணும்

(உ) மாயமதானஉ-பாயம்எல்லாமிந்தப்
பேயருக்குநகை யாச்சே-எப்போ
தோயும்இவருடபேச்சே-முன்னே
காயுங்காரானையுஞ் ... ... சாக - இப்போ
கட்செவியும்உயிர் ... போகக் - கக்குந்
தீயவிஷம்அமு ... ... தாகத் - திடஞ்
சேர்ந்தெக்களித்தஇவர்மனம்நோக
பண்ணும்

(ங) அந்தமுறும்பசு - வந்துகொன்றுஞ்சி
னந்தனையேகொல்லக்குறியார் - அது

உகூ-வது-மாயப்பசுவை
வதைத்தது.

ஞெந்திடத்துன்பஞ்செய்ததறியார் - நாம்
செந்தழல்மூட்டிநெய் ... ... தூவி - மகஞ்
செய்துபசுவொன்றைக் ... ... கூவி - நாளை
அந்தமதுரையில் ... ... ஏவி - விட்
டழிப்பதுவே காரியமாம் இங்கேமேவி
பண்ணும் ௭௭௭.

—*—

விருத்தம்.

கூடியசமணர்தீங்கு - குறித்துமாமகமேசெய்ய் ... *
நீடியகோட்டாவென்ன - நிசிசரன்ஒருவன்தோன்ற ... *
வாடியசமணர்சிந்தை - மகிழ்ந்தந்தப்பசுவைஏவ ... *
நாடியமதுரையைச்சி - னந்துதான்வந்துதாமே (உ௬௬)

சந்தப்பதம் - தோடிராகம் - ஆதிதாளம்.

வந்தேசெந்தழல்க்குளொருபசுமலைக்குநிகர்வெடுவெடுத்தசினமோடெ
மூந்தேவஞ்சகத்தர்வரவிட - மருப்புமழைமுகில்கிழித்துயரமன
மதத்துஉடல்மயிர் ... சிலிர்த்துவெருவிட
வெறித்துவால்யம ... ... பாசமதாய்வாய்
விண்டேதெண்டிரைக்கடலும்அலை-ஒடுக்கிஅசைவறமுகில்க்குலமுமிது
கண்டேஎண்டிசைக் கிரிகளிலும் - ஒளிக்கயுகமுடிவிடிக் குநிகரென
மிகுத்துநிலமிசை ... குதித்ததிரஅடி
மிதித்துமாமலை ... தூளெனஒட [மூ
மண்பார்தன்தலைக்குளெளிதொடு-சுமக்கும்அரவுடல்நெளிக்கவருபொ
தெங்கேஎன்றடத்திநெடும்எதிர்-துரத்திவெகுமனிதரைக்குடல்கிழிய
வதைத்துமயிடனை நிகர்த்துமதுரையை
அடுத்துதேஅனை ... வோர்களும்நாட (௭௭அ)

கலித்துறை.

ஆசாரநீதிதவறுவழுதிஅநந்தகுண ... ... ... *
ராஜாதிபன்வரும்மாயப்பசுவின்ப - ராக்கிரமத்தை ... *
யேசாரணர்சொல்லவேகோவிலில்ச்சென்றிறைஞ்சிச்சுந்த *
ரேசாஇதற்கென்செய்வேனருள்வீரென்றியம்பினனே (உசு௰)

சோமசுந்தரேசுவரமூர்த்தியை அனந்தகுணபாண்டியன்
ஸ்தோத்திரஞ்செய்துவேண்டியது

பதம் - பைரவிராகம் சாப்புதாளம்.

[கண்ணிகள்.]

(க) சங்கரகாலப - யங்கரசூல
சதாசிவனே - மது ... ... ரேசுவரனே

மங்கையோர்பங்குறை - கங்கைஇளம்பிறை
வானவனே - அரு ... ... ... ளானவனே
(உ) வஞ்சகராய்வந்த - நெஞ்சகருக்கிந்த
வாதேனோ - செய்யுஞ்... ... ... சூதேனோ
அஞ்செழுத்தோதிஇ - றைஞ்சுவோர்சேதி
அறியாரோ - முன் ... ... ... குறியாரோ
(ங) நாகமும்விட்டபை - நாகமும்பட்டதை
நாடாமல் - சற்றும் ... ... வாடாமல்
வேகமுடனமுனே - யாகப்பசுவினே
விட்டாரே - மதி ... ... ... கெட்டாரே
(ச) தன்னைக்கொல்லவந்த-பசுவைக்கொல்லென்னுஞ்சொல்
சாரேனே - பழி ... ... ... ஏரேனே
என்னைக்கொன்றாலும்இவ் - வூரைக்கொல்லாவகை
ஏற்பீரே - இன்று ... ... காப்பீரே-௱௭௯

சோமசுந்தரேசுவரமூர்த்தி அனுக்கிரகத்தினல் நந்திகேசுவரர் மாயப் பசுவைவதைசெய்தது.

---

சந்தவிருத்தம்,

அன்புருவெனுந்திறலநந்தகுணன்இந்தவிதம் ... *
அன்றுரைமொழிந்திடவு-மதுரேசர்... ... *
அங்கெதிருறைந்தவிடைநந்தியைவரும்பசு ... *
வகந்தையொழிஎன்றுவிழி-யருள்கூரச் ... *
சம்புவருள்கொண்டுவிடைநந்தியணிகிங்கிணி ... *
சதங்கையொலிவிண்செவிடு-படவீர ... *
தண்டைகள்சிலம்பிரைய அண்டபகிரண்டமுடி... *
தண்டிவருவெண்கயிலை-யெனஓடி ... *
வம்பர்விடவெம்பகையுறும்பசுவெனுஞ்சருகை ... *
மண்டுசுழல்கொண்டலென-விளையாடி ... *
வந்தஎழில்கண்டுமலரின்கணையினெருந்துயிர் *
மடிந்ததுவிழுந்துபசு-மலையாகப் ... *
பின்பிடபவன்கிரியெனும்படியும்பின்றுரை ... *
பெறும்பழையதன்சிறிய-வடிவாகிப் ... *
பிஞ்சுமதிநஞ்சரவணிந்தவர்முன்வந்தவர் ... *
பிரியங்கொளவுறைந்ததொருவிடைதானே (உசக)

விருத்தம்.

அரனருள்சேர்நந்தியால்பசுவின்துன்பம் ... *
அகன்றுபுகழ்ந்தனைவரும்வீற்றிருந்தார்அப்பால் *

## உகூ-வது-மாயப்பசுவை வதைத்தது.

இரவிகுலராமன்இளையோன்சுக்கிரீபன் ... *
எழுபதுவெள்ளங்கவியோடிலங்கைநோக்கி ... *
உரமுடனேவருகையில்இவ்விடபவெற்பில் *
உறைந்திருந்தான்ஒருநாள்ஆங்குற்றுவாழ்த்திக் *
கரகமுனிமதுரேசர்மகிமைஎல்லாங் ... *
காட்டுவாரிராமன்முன்பாராட்டுவாரே (உசஉ)

அகஸ்தியமகாரிஷி - ஸ்ரீராமஸ்வாமிக்கு - சோமசுந்தரேசுவரமூர்த்தியினது பெருமையைப் புகழ்ந்து சொல்லியது.

பதம்-கலியாணிராகம்-சாப்புதாளம்.

[ பல்லவி. ]

மதுரேசர்புகழ்கேள்வில்வீரா - விஜயம்
மருவுவாய்தசரதகு மாரா

அநுபல்லவி.

அதிகமுள்ள துவா தசாந்த-ஸ்தலமிதனில்ஆதி
அந்தம்நடுவற்றெங்கும் ஆகியபரஞ்ஜோதி
சதிர்பெருகும்இந்திரன் - பழியைமுன்மாற்றினார்
சாபந்தொலைத்துவெள் - ளானையையுந்தேற்றினார்

மது

[ சரணங்கள். ]

(க) மதுரைநகர்தன்னைபுண் ... டாக்கி - உமையை
மலையத்துவசன் மகளாகநோக்கிப் - பின்பு
சதிருடன்மங்கலம் பூட்டிப் - பதஞ்
சலிக்கும்வெள்ளிமன்றில்நடங்காட்டி-அன்று
கதிபெறுகுண்டோதரன் பசிதாகம்-போகவே
கதிக்கும்அன்னக்குழியும் வைகையும்-உண்டாகவே
அதிசயஞ்செய்துமா - மிக்கருள்தழைத் தனர்
அங்கேழுகடலுமா - மனையுமுன்அழைத்தனர்

மது

(உ) உக்கிரபாண்டியனைப்பெற்றெடுத்தார் - வேலும்
உயர்வளையுஞ்செண்டுங்கொடுத்தார் - மேலும்
மைக்கடலும்வேலினால் வற்ற - இந்திரன்
மகுடத்தைவளையினால்அற்றச் - செய்து
மிக்கமகமேருவைச் - செண்டினால் மோதியும்
விரிமறைப்பொருளைவரு - முனிவருக்கோதியும்
தக்கமணிவிற்றோர்வ - ழுதிக்குமுடி சூட்டினார்
சலமுடன்வருணன்விடு - கடலைமுகில்க்கூட்டினார்

மது

(௩) மதுரையைக்கூடலெனநாட்டி - எல்லாம்
வல்லசித்தரெனவுருக்காட்டி - அன்று
முதிர்கல்லானைக்குக்கரும்பீந்து - சமணர்
முடுகிவிடுமத்தகெஜம் மாய்ந்து - வீழப்
புதுமைசெய்துவிருத்த குமரன்பாலனுய் அன்பு
பூண்டுகோல்மாறிநடஞ் - செய்துபழிக்கஞ்சிமுன்பு
கொதிகொள்மாபாதகந் - தீரவே உறுக்கினர்
குருவின்மனைவியைமருவ - வருமவனைநறுக்கினர்
மது

(௪) வருசமணர்விடுநாகம் படவே - வெய்ய
மாயப்பசுவொன்றவர்விடவே - ஐயன்
ஒருநந்தியாலதனைமாய்த்துச் - சமணர்
ஓடவேநாடினர்நேற்று - வென்ற
எருதிந்தரிஷபகிரி - யாய்ச்சமைந்ததுபண்டு
எங்குமில்லைஇம்மகிமை - நீஇவரிடங்கண்டு
தரிசனஞ்செய்தாலரக் - கரைத்தொலைத் தோட்டுவாய்
ஜானகியையுஞ்சேர்ந்து - ஜெயஸ்தம்பம்நாட்டுவாய்
மதுரேசர் - ராஅம.

---

விருத்தம்.

கும்பமுனியுரைகேட்டு மகிழ்ந்துராமன் ... *
கூறுமிளையோன்கவிக் கோன்குரங்குச்சேனை *
யும்பரவிவரமதுராபுரியில்வந்து ... *
உயர்ந்தபொற்றாமரைநீரில் உவந்தேயாடித் *
தம்பமஉறுஞ்சன்னிதிகண் டங்கயற்கட் ... *
டாயையும்ஐயனையும் வலம்புரிந்துபோற்றி *
நம்பரருள்பெற்றதனல் அரக்கரஞ்ச ... *
நாடினன்வென்று முடிசூடினனே ...உாசங

பதம்-சுருட்டிராகம்-சாப்புதாளம்.

பல்லவி.

ராமனிந்தச்சுந்த-ரேசுவரரருள்பெற்று-ராட்சதரைச்செயித்தானே

[ அநுபல்லவி ]

நேமமுள்ளதச - ரதன்தவத்தால் முந்த
நேத்தியாகவேஅ - யோத்திநகரில் வந்த
ராமன்

வதைத்தது.

[ சரணங்கள் ]

(க) பண்ணும்பூசனையாலே - மகிழ்வாகமலர் ... தூற்றிப்
பணிந்துமகிமைப்பஞ்சாட் - சரம்பரிவுடன் ... சாற்றி
எண்ணுங்கருமமெல்லாந் - தவறாமல்நிறை ... வேற்றி
இசைதருவீர்ஐயனே - என்றுநின்று ... போற்றி

ராமன்

(உ) விண்ணிலெழுந்ததிரு - வாக்கினுறுதி ... கொண்டு
விரைந்துசென்றுகடல் - வேந்தனையும்வெ ... குண்டு
தண்ணிறைகடலிலே - மலைகள்நெட்டிபோல்ப்... பண்டு
தானேமிதக்கத்திரு - வணைஇட்டிலங்கை ... கண்டு

ராமன்

(௩) ஈனர்வஞ்சமெல்லாம் - இரவிமுன்பனி ... யாக்கி
எதிர்த்தகும்பகர்னன் - ராவணனையும் ... போக்கி
ஜானகியெனுமலர்த் - தையலைச்சிறை ... நீக்கி
தகும்வீடணனையென்றும் - இலங்கைக்கரசாய் நோக்கி

ராமன்

(௪) தனதுபேரிட்டொரு - பதியும்லிங்கமுங் ... காட்டி
தாழ்ந்துபூசைசெய்து-வீழ்ந்துபழியை ... ஓட்டி
மனைவியுடனேமீண்டு - மதுரேசரைப்பா ... ராட்டி
மகிழ்ந்தயோத்தியில்ச்சென் - றுனேகீர்த்தி நாட்டி

ராமன், ௱அக,

விருத்தம்.

வருமிராகவன்அயோத்தி - மாநகராண்டான்இப்பால் ... *
தருமனந் - தகுணபாண்டியன் - தானருள்மைந்தனுன ... *
ஒருகுலபூஷணன்செங் - கோல்முறையாளவைத்து ... *
அருள்தருமதுரைவாழும் - அரன்அடிஅடைந்திட்டானே (உ௪௪)

விருத்தம்.

அருகர்முன்விடுத்தமாய - ஆவினைமாயச்செய்த ... ... *
தருமமாம்லீலைகேட்போர் - தற்பரனருளால்வாழ்வார் ... *
இரசிதசபையார்மெய்க்காட் - டிட்டதோர்முப்பதான ... *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடஉரைசெய்வேனே (உ௱௪௫)

மாயப்பசுவைவதைத்த - திருவிளையாடல்முற்றிற்று.



ஆ திருவிருத்தம்-எ-கலித்துறை-க-பதம்-௫- ஆ யிஈ
ஆ பாயிரம் உள்படத் திருவிளையாடல்-உகூ-க்கு-வெண்பா-௩
கலித்துறை-௩-கொச்சகம்-க-விருத்தம்-உ௱௩ஆ-பதம்-கஅக.
ஆ கவிதை - ௪௱உ௬.



முப்பதாவது

## மெய்க்காட்டிட்ட திருவிளையாடல்.

விருத்தம்.

வருபசுவாம் அசுரனையேவதைத்தபின்பு ... *
மகிழ்ந்துகுலபூஷணபாண்டியன்பாராள ... *
ஒருசேதிராயன்வனவேடர்கோமான் ... *
உறுபகைகண்டேசேனைத்தலைவன்வானத் ... *
தருவைநிகர்சுந்தரசாமந்தனென்போன் ... *
தனைநோக்கிமதிகுலபூஷணனும்பாண்டியன் ... *
அருநிதிவேண்டியதுசெம்பொன்அறைதிறந்து ... *
அள்ளென்பான்சேனைஇன்னங்கொள்ளென்பானே ()

பதம் - பியாகடைராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

எவளவுநிதிவேணும் அள்ளு - சேனை
இன்னம்எடுத்தெழுதிக் கொள்ளு

[ அநுபல்லவி. ]

சவுந்தரசாமந்தா - கேளடாநீ தட்டாது
தாரணிதன்னில்ஆ - வில்லாப்படைவெட்டாது
எவளவு

[ சரணங்கள். ]

(க) பண்டுள்ளவரைத்தொகை சேரு - பிணிப்
பட்டோர்விருத்தர்களைப் பாரு
கண்டெனிடத்தில்ச்சொல்லு-அவரைவேலைகொள்ளாதே
கணக்கின்படியேநிதி - கொடுத்துவாநீ தள்ளாதே
எவளவு

(உ) காமுகரைவையாதே தள்ளு - ரோசக்
காறராகப்பார்த்துக்கொள்ளு
காமசம்பண்ணாதே - ஆள்க்கட்டே அரிது
ஜனசேகரமில்லான்-தனவலுவோபெரிது
எவளவு

(௩) எதிரிநமையேவெல்லான்கண்டு - சுந்த
ரேசுவரர்துணைநமக் குண்டு
அதைவிடுசின்னப்பாம் - பெனினும் பெரியதடி
யல்லவோதேடவேணும்- உனக்குத்தோணினபடி
எவளவு ௩அ௨,

விருத்தம்.

என்றேகுலபூஷணன்கூற இசைந்தேசுந்தரேசர்முன்பு ... *
நின்றேபணிந்துஇறைவனெண்ணம் நீக்குவீர்இன்நிதியனைத்தும் *
இன்றேஉமக்கும்அடியார்க்கு மேயென்றிரந்துசாமந்தன் ... *
சென்றேஅரசன்பொன்னறையைத் திறந்தான்புரிந்தான்அறந்தானே,

பதம் - குறிஞ்சிராகம் - சாப்புதாளம். [(உசஎ)

[கண்ணிகள்.]

(க) அறைதிறந்துசெம்பொனள்ளினன் - மிகத்துள்ளினன்-அரன்
ஆலயத்தைஅன்று நோக்கினன் - நவமாக்கினன்
நிறையுமண்டபங்கள் நீட்டினன் - புகழ் நாட்டினன் - உயர்
சித்திலப்பணிகள் சாற்றினன்-கண்டுபோற்றினன்

(உ) அளவில்லாதசெம்பொன்னகைகளும் - துகில்வகைகளும்-அழ
காகச்செய்து அலங்காரித்தான் - மனம்பூரித்தான்
வளரும்நந்தவனச்சோலையும் - நிழல்ச் சாலையும் - தாக
மாற்றுந்தண்ணீர்ப்பந்தல் - மடங்களும் மலர்த்தடங்களும்

(௩) சமைத்துமேலவரைக்கூவுவான் - நிதி தூவுவான் - சிவ
சமயத்தன்பர்களைபூசிப்பான் - மிகநேசிப்பான்
அமைத்தபொன்னைஎல்லாந்திண்ணமாய்- இந்தவண்ணமாய்ச்சில
வாக்கியேஅறத்தில்ப்போட்டான்-மன்னன்கேட்டான் ()

விருத்தம்.

இன்னவகைதெரிந்தமன்னனிடத்துஞ்சென்று ... *
எத்தேசத்தவர்க்குமெய்போல்எழுதிஒலை ... *
தன்னைவிட்டான்மதியாறுசென்றுஞ்சேனை ... *
தனைக்காணான்மன்னனிவன்தனைஅழைத்துச் ... *
சொன்னவண்ணநாளையமைபடையைஎன்றான் ... *
துணிந்தொப்பிச்சாமந்தன்சுந்தரேசர் ... *
முன்னர்சென்றுநின்றுபணிந்தையனேஎன் ... *
மொழிஎன்பான்இதற்கென்னவழிஎன்பானே (உசஅ)

சோமசுந்தரேசுவரமூர்த்தியை சுந்தரஸாமந்தன்
ஸ்தோத்திரஞ்செய்துபிரார்த்தித்தது.

பதம் - காம்போதிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

ஐயனேஉமை - நம்பும்அடியேனை - ஆதரித்திடுவீரே

[அநுபல்லவி]

செய்யநிதியையுங்கொண் - டென்னையும்பணிகொண்டீர்
சேனைக்கென்னவகை - செய்வதினிமேல்க் கண்டீர்
ஐயனே

[ சரணங்கள். ]

(க) வாளுற்றமீனவன் - மெச்சலுலமுன் ... ... னாலே
வரைந்துவிட்டேன்சேனை - வருமென்றுநிசம்போலே
நாளைத்தவணைவைத்து - வந்தேன்இனிஎன் ... னாலே
நடப்பதென்னபாரமும் - பழியுந்தேவரீர் ... மேலே
நான்முகன்வானவர்-கோன்பணிந்திடும்
மாநதிமாமதி- யேயணிந் ... திடும்
ஐயனே

(உ) கொடியத்தண்டனைசெய்து - முடிமன்னவன் வஞ்சம்
குறித்தேனென்றுஎன்னை வெறித்தாலும்அஞ்சேனெஞ்சம்
அடியேன்உரைபொய்யாகி-விடில்உமக்கே கொஞ்சம்
அதற்கஞ்சினேன்உமது-பதத்துணையே ... தஞ்சம்
அடியவர்களுமன-மகிழ்வொடு ... தேற
முடிநிருபனெதிரென்- மொழிநிறைவேற
ஐயனே

(ந) குழவிமதியணிந்த - பரனேஎனைத் ... ... தொண்டு
கொண்டுமெதுலீலையைக்-குவலயத்தோர் ... கண்டு
மொழியஎன்னுரையைமெய்-யாக்குவீரருள் கொண்டு
முன்னவனே முன்னின்றால்-முடியாப்பொருளே துண்டு
மோனமுனிவர்சுரர்-மூவர்களோடும்
மீனவளுமகிழ-வேவிளை யாடும்
ஐயனே- ராஅச,

—o—

விருத்தம்,

சுந்தரசாமந்தன்இவை வேண்டிநிற்கஉந்தன் ... *
சொல்படியேபெருஞ்சேனை சூழ்ந்துவரநாளை ... *
வந்தருள்வோமென்றுவிண்சொல்க் கூறக்கேட்டுள்ள *
மகிழ்ந்துசென்றுமறுநாள் மன்னவன்முன்புவந்தான்
நந்திமுதல்க்கணங்களைவீ ரர்களாக்கிமதுரை ... *
நாதருமானிடவீரராய்வரச்சாமந்தன் ... *
அந்தமுள்ளதென்னஉன் சேனைவீரர்கள்வந் ... *
தாரென்பான்கைக்கொள்ளிவர்தான் பாரென்பானே,

பதம்-மத்தியமாவதிராகம்-சாப்புதாளம்,

கண்ணிகள்.

(க) நிம்பமலர்த்தாராய்- பெருகிவ-ரும்படையைப்பாராய்- இவர்
உம்பரினும்பிலத்தோர்-புவிமகி-ழும்பல மாநிலத்தோர்

(௨) கூர்ச்சரர்நாக ரிகர் பெரும்பகை- தீர்க்கும்விதேகரிவர்-அவர்
ஆர்க்கும்பெரியசிங்கர்-கண்டோருடல்-வேர்க்குமரியவங்கர்
(௩) வண்டமலே யாளர்-இவர்ஜெயங் கொண்டகொலேவாளர்-அவர்
அண்டினவர்க்குநல்லார்-யமனேயுந் தண்டனேசெய்யவல்லார்
(௪) கொங்கர்குருநாடர் - இவர்கள்க- லிங்கர்கருநாடர் - அவர்
வங்களர்சிங்களர்கள்- இவர்கள்-கொங்கணர்-தெக்கணர்கள்
(௫) குந்தளர்கேகயர்கள்- அவர்கள்பு-ளிந்திடும்வாகையர்கள்-அவர்
சொந்தநன்னுடரையா நமக்குள்ள - செந்தமிழ்நாடரையா



(௱அரு)

விருத்தம்.

இப்படிமெய்காட்டவரிசைகள் செய்தானப்போ ... *
தேசேதிராய னிறந்தானென்றுதூதர் ... *
செப்பமகிழ்ந்திவரை யவரவரூர்க்கேவென்று ... *
தென்னவன்சொல்லச்சாமந்தன்அனுப்புவான்போல் *
நிற்பவீரர்களெல்லாம் அக்கணத்தில்மறைந்தார் ... *
நீதிமன்னன்அதிசயித்துச் சுந்தரசாமந்தன் ... *
சொற்பழுதுறுமல்மதுரேசர் செய்தாரென்றே ... *
துதித்துச்சாமந்தனுடன் சுகமுறவாழ்ந்தனனே (உருய)

---

விருத்தம்.

விரைவினில்மெய்க்காட்டிட்ட - விதமிதுகேட்ப்போர்கொன்றைச் *
சரமணிபவர்பதத்தில்ச் - சார்ந்துவாழ்ந்திருப்பார்வெள்ளிக் ... *
கிரியரனுலவாச்செம்பொற் - கிழியருள்முப்பத்தோராந் ... *
திருவிளேயாடல்தன்னேத் - தெரிந்திடஉரைசெய்வேனே (உருக)
மெய்க்காட்டிட்டதிருவிளேயாடல் - முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்- சு- பதம்- ச-ஆ ய.
ஆ பாயிரம்-உள்படத்-திருவிளேயாடல்- ௩யக்கு-வெண்பா-௩.
கலித்துறை-௩ கொச்சகம்-க-விருத்தம்-உசச-பதம்-௱அரு
ஆ கவிதை - சஙசு.



முப்பத்தொன்றாவது

## உலவாக்கிழியருளிய திருவிளையாடல்.

விருத்தம்.

பரிந்துமெய்க்காட்டிட்டபின்பு பகைவர்அஞ்சப் ... *
படைதாங்குங்குலபூஷ ணன்றன்செங்கோல் *
புரிந்துசிவசிந்தனையே மேலாய்வேள்விப் ... *
பூசுரரைப்போற்றாமல் இகழ்ந்தான்மாரி *
சொரிந்துசெழியாமலுயர் தென்னாடேங்கத் ... *
துதிக்குமீனவனிரங்கிச் செம்பொற்கஞ்சம் *
விரிந்துமலிதடமூழ்கிச் சுந்தரேசர் ... *
விரைமலர்த்தாள்பூண்டுதான் வேண்டுவானே (உருஉ)

சோமசுந்தரேசுவர மூர்த்தியை குலபூஷணபாண்டியன்
ஸ்தோத்திரஞ்செய்து பிரார்த்தித்தது
பதம்-துசாவந்திராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

சாமிமதுரேசா - இதென்னபர - தாபங்கயிலைவாசா

[ அநுபல்லவி ]

ஆமுலகேங்குவ - துமக்குக்கண் காட்சியோ
அடியேன்அரசாள - வதிலென்னதாட்சியோ
சாமி

[ சரணங்கள். ]

(க) உமதுபணிவிடை தானே -செய்யும் அடியோர்
உரைக்கும்ஏவலாள் நானே
அமரும்உமைத்துதிப்போர்க் - கஞ்சுமாபத்துண்டோ
எமதையனேசிந்தை - இரங்காதென்ன கண்டோ
சாமி

(உ) உயிர்க்குயிர்நீ ரல்லவோ - அவ்வுயிர்பசித்
துலைகுவதென்ன சொல்லவோ
கையில்பெரும்பொருள்களும் கழிந்ததேஅறத்தாலே
புயல்சொரிமழையற்றால் பொருளுண்டோபுவிமேலே
சாமி

(ங) தருமமுறைகள் வாட - எவரும்மனந்
தயங்கிவேறிடந் தேட
நிருமலனேஎந்தன் - நெஞ்சமும்நோகுமோ
பெருமரத்தைச்சுற்றிய-வள்ளியும்சாகுமோ
சாமி, ராஅகு.

விருத்தம்.

சித்தமெலிந்துரைத்தமன்னன்செய்தகுற்றந் ... *
தெரிந்துமதுரேசர்அருள்செய்யாதாலே ... *
மெத்தநொந்துமன்னனரண்மனையில்வந்து ... *
மெய்நோகத்தரைமீதில்விழிதுயின்றான் ... *
அத்தர்அவன்பேரன்புக்கிரங்கிநோக்கி ... *
அக்கணமேசொப்பனத்தில்அழகதான ... *
சித்தர்உருவாகிஎழுந்தருளிச்சோபந் ... *
தேற்றுவார்வாய்மலர்ந்துசாற்றுவாரே (உடுரு)

பதம்-சௌராஷ்டிரராகம்-ஆதிதாளம்

பல்லவி.

மறையோரைஇகழ்ந்தத்தாலே-இந்த-வறுமைவந்ததுன்புவிமேலே

அநுபல்லவி,

இறைவாகேள்இந்த-உலகில்மானிடச் ... ஜாதி
எவருந்தொழக்கண்கண்ட-தெய்வமாகிய ஆதி
மறை

[ சரணங்கள் ]

(க) மறையேநமதுமெய் - விழிமொழிகோவணம்
வாகனம்ஓசைநூ ... ... புரமே - நாம்
உறையும்பீடமுமாம் - பாதுகையாகவும்
உகந்திடுமிதுநில ... ... வரமே
அறையும்நம்ஆணையாம் ... சத்தி ... வடி
வாம்அறிவைநிலைநி ... ... றுத்தி - எங்கும்
நிறையுமெவர்க்கும்போக ... முத்தி - தரும்
நெடியசெங்கோலுமா - மிதனையோதும்பத்தி
மறை

(உ) அந்தமறைமொழிவை - உறுதியாகநம்பி
அம்புவிமேல்க்கலி ... நோயே - மிகச்
சிந்தயாகாதிகள் - செய்துநம்மிடஞ்சிந்தை
செலுத்துவார்கள்அறி ... ... வாயே
இந்தமறையோர்செய்யு ... மகமே - மழைக்
கேதுவாம்எவர்க்குஞ் ... சுகமே - மற்ற
எந்தஅறமும்இவ ... ... ரகமே - மகிழ்ந்
திடில்ப்பலந்தருமல்லாலேதுவையகமே
மறை

(௬) மும்மைப்புவனங்களும் வாழும்படிக்குதித்திய
முத்தீவளர்ப்பரிவர் ... முறையே - இவரை
நம்மைப்போல்நினைத்துத் தொண்டுபுரிந்துபோற்றி
நானுவறஞ்செய்வாய் ... இறையே
உண்மைசொன்னேம்கலி ... ... நீங்கு - நிதி
உலவாக்கிழிஇந்தா ... ... வாங்கு - இனிச்
செம்மைசெய்துலகத்தைத் ... தாங்கு - ஏதுஞ்
செய்வதறிந்துசெங்கோல்செலுத்துவதுவேபாங்கு
மறை, ௱அஎ.

---

விருத்தம்.

கனவில்இதுமொழிந்து முடிப்பீந்துசென்றார் ... *
காவலன்கண்விழித்துத் தன்கனவேமெய்யாய்த்... *
தனமுடிப்பைக்கண்டுபூசித் தவிழ்த்துச் .... ... *
சதுர்மறையோர் சிவனடியார்மற்றோர்யார்க்குந்... *
தினமுதவிவிமலர்கோயிலையும் பொன்னாய்ச் ... *
செய்துசெம்பொன்குறையாத முடிப்பால்மேலோர் *
மனமகிழமகமலிய மாரிபெய்ய ... ... ... *
மன்னன்அளகேச னெனவாழ்ந்திட்டானே (உ௫௪)

---

விருத்தம்.

புரவலன்றனக்குநீங்காப் பொற்கிழிகொடுத்தகங்கா *
தரர்புகழ்இதனைக்கேட்போர் தாழ்வறவாழ்வார்மின்னர் *
கரமணிவளையல்விற்ற கடவுள்முப்பத்திரண்டாந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே(உ௫௫)
உலவாக்கிழியருளிய திருவிளையாடல் - முற்றிற்று.

———(*)———

ஆ திருவிருத்தம் ௪ பதம், உ ஆ ௬.
ஆ பாயிரம்உள்படத் திருவிளையாடல் ௬௧க்கு வெண்பா ௬,
கலித்துறை ௬ கொச்சகம் க விருத்தம் உ௱௪அ பதம் ௱அஎ.

ஆக கவிதை ௪௱௪௨.



முப்பத்திரண்டாவது

## வளையல்விற்ற திருவிளையாடல்.

விருத்தம்.

உலவாக்கிழியீந்தருளியபின் - உயர்ந்தகுலபூஷணன்உலகஞ் ... *
சொலவாண்டிருந்தான்அதற்குமுன்னாள்துதிக்குந்தாருகாவனத்தில்
நிலவார்சடையார்முனிவர்மின்னார்நிகழுங்கற்பையறிந்திடச்செவ் *
விலவார்இதளாரிடம்பிச்சை-எடுத்தார்மையல்கொடுத்தாரே (உருசு)

பதம் - அடாணாராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

பிட்சைபிட்சையென்றுவந்தார்

[ அநுபல்லவி. ]

பட்சமுடனேஒதி - ரட்சிக்கும்பரஞ்ஜோதி

பிட்சை

[ சரணங்கள். ]

(க) மறையைக்கோவணமாகத்தொட்டு - மேனி
நிறையவெண்ணீற்றுப்பூச் சிட்டு - மறை
உறையுங்கிண்கிணித்தாளில்ப்-பாதுகைதனை ... மாட்டி
உகந்தையமெடுக்கும்பாத் - திரத்தையுங்கையில் காட்டி

பிட்சை

(உ) மாமதுரசங்கீதம் படித்து - பிரி
யாமலர்க்கையுடுக்கை அடித்து - சிலைக்
காமனெனச்சிறந்த - கட்டழகுமி ... ரண்டு
காலில்ச்சிலம்பொலிக்குஞ் - ஜாலவடிவுங்கொண்டு

பிட்சை

(ங) ஒய்யாரமாய்நடந்து சென்று - கண்ட
தையலரெல்லாஞ்சூழ்ந்துநின்று - மிக
மையல்வலைக்குள்ச்சிக்கி - மயங்கிடவே உலாவி
வலுமையானகல்லும் - கரைந்துருகவேகூவி

பிட்சை, ௱அஅ.

---

விருத்தம்.

ஐயமென்றகுரல்க்கேட்டுமுனிவர்மாதர் ... ... *
அடங்கலும்வந்தையமுங்கைவளையும்ஐயன் ... *
கையணியுங்கலத்தில்விழக்கருத்தும்நாணுங் ... *
கனகமணிமேகலைநாணுங்கழலநோக்கி ... ... *

ஐயரிக்கண்ணார்களபக்கொங்கைமீது ... *
அவரவர்கண்மலரம்பும்அனங்கனேவும் ... *
வெய்யமலர்அம்புமிகச்சொரியவாடி ... *
மீறினார்விரகமொழிகூறினாரே ... (உ௫எ)

தாருகாவனத்தில் பிட்சாடனம்செய்யவந்த சோமசுந்தரேசுவர மூர்த்தியினது திருவடிவைக்கண்டு ரிஷிமாதர்கள் காமவிகாரங்கொண்டுசொல்லியதும் சுந்தரேசுவர மூர்த்தி யெதிர்சொல்லியதும்,

பதம்-மோகனராகம்-ஆதிதாளம்.

[ கண்ணிகள், ]

(க) மையல்தந்திங்கேவந்த - ஐயநாங்களணிந்த
வளையைத்தாருமென்றார் ... மின்னார் - அடி
தையலரேஅந்தோ - வளையுங்கள்கழுத்தினில்த்
தானேஇருக்குதென்று ... சொன்னார்

(உ) சித்தமிரங்கும்நாங்கள்-மெத்தமெலிந்தோம்எங்கள்
சேலையருளுமென்றார் ... மின்னார் - அடி
வித்தாரக்காறிநீங்கள் - எத்துநீர்சேலையுங்கள்
விழியினில்ப்பாருமென்று ... சொன்னார்

(௩) தீராமயல்தந்தீர் - அதுதீரஇனிக்குந்
தேனிதள்தாருமென்றார் ... மின்னார் - அடி
கூரார்விழிமானீர் - பாரீர்தேனிதளுங்கள்
கூந்தலில்உளதென்று ... சொன்னார்

(௪) ஆறுதெங்கள்சித்தந் - தேறுதொருமுத்தம்
ஆகிலுந்தாருமென்றார் ... மின்னார் - அடி
மாறுமனுரைக்கு - மாதர்காள்முத்தமுங்கள்
வாய்க்குள்தந்தமேஎன்று ... சொன்னார்

(௫) திடமோஎன்னஇது - அடமோகாணுமது
சிந்தைகல்லோவென்றார் ... மின்னார் - அடி
தடமாமலர்ச்செங்கை - மடவீருங்கள்கொங்கை
தானடிகல்லென்று ... சொன்னார்

(௬) நாடுகிறீர்அபாயந் - தேடுகிறீர்ஞாயம்
நடுவில்லையோவென்றார் ... மின்னார் - அடி
ஜாடும்விழியால்ப்போ - ராடுவீருங்களுக்குத்
தான்நடுவில்லைஎன்று ... சொன்னார்

(எ) உற்றிங்கேவந்துநின்றீர் - மற்றெங்கள்க்கென்னஒரு
உத்தரஞ்சொல்லுமென்றார் ... மின்னார் - அடி

சிற்றிடையீர்தெற்கைப்பின் வைத்துப்பார்த்தீரானுல்முன்
தெரியும்உத்தரமென்று ... சொன்னர்

(அ) காமனெனவந்தோது - நேமமுடனேவது
கங்கைசுமந்தீரென்ருர் ... மின்னர் - அடி
சோமமுகத்தீர்பிட்சை - தாமெடுக்கவேகங்கை
சுமந்துவந்தோமென்று ... சொன்னர்

(கூ) ஏதுபோலிருந்த - தாதரவுடனேயன்
இசைத்தசெப்பென்றிட்டார் ... மின்னர் - அடி
போதணிகுழலீர்நா - மோதுசெப்புங்கள்கொங்கை
போலேஇருக்குதென்று ... சொன்னர்

(௰) சுந்தரமாமந்தக் - கந்தரங்கறுத்ததே
தோவென்றுரைத்திட்டார் .... மின்னர் - அடி
மந்தரக்கொங்கையீர் - கந்தரங்கறுத்தது
மழைபெய்யத்தானென்று ... சொன்னர்

(௰க) ஐயன்விழியில்த்தங்கள் மெய்யுருவைக்கண்டெங்க
ளக்கண்ணில்வைத்தீரென்ருர் ... மின்னர் - அடி
வெய்யகண்ணில்நம்மைப்போல்ச் செய்யஉருவங்கொண்டீர்
விழித்துப்பாருமென்று ... சொன்னர்

(௰உ) மேவாவிடில்எங்கள் - பழையவடிவந்தந்து
விடையுந்தாருமென்ருர் .... மின்னர் - அடி
காவியனையவிழிப் - பாவையரேவிடை
கடலிலுறங்குமென்று ... சொன்னர்

(௰௩) பூந்துகிலும்உடுத்தி - வளையும்இட்டாகிலும்
போவதுதர்மமென்ருர் ... மின்னர் - அடி
ஏந்தியமலேமுலே - ஏந்திழையீர்நாளை
யேவந்திடுவோமென்று ... சொன்னர்



(௱அகூ)

விருத்தம்.

எனமொழிந்துசென்ருர் பின்முனிவர்கூடல் ❋
இறையெனத்தோணுமல்சிறையழிந்தீர்நீங்கள் ❋
கனவணிகர்மகளீராய்ச்சுந்தரேசர் ❋
கருணையால்இச்சாபங்கழிப்பீரென்று ... ❋
சினமுடனேசபித்திடமங்கையர்கள்எல்லாம் ❋
தென்மதுரைதனில்வணிகர்வயிற்றில்த்தோன்றி ❋

வனமுலையோங்கியபருவமுற்றார் அங்கு ... *
மதுரேசர்வளைவணிகராய்வந்தாரே. (எருஅ)

பதம்-நாதநாமக்கிரியைராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி. ]

வணிகராய்வந்தார்-வளைவிற்கும்-வணிகராய்வந்தார்.

[ அநுபல்லவி ]

பணிபுனைநேசர்-அணிமதுரேசர்
வணி

சரணங்கள்.

(க) கருணையுடனொருமான் - கைப்பிடித்ததை ... நீக்கி
வருவணிகர்கள்பல - மான்கைபிடிக்க ... நோக்கி
வணி

(உ) அடியார்சாற்றிய - ஆரம்போல ... ... ஓங்கி
தொடிசேர்புயத்தினிற்சொர்னவளைகள் தாங்கி
வணி

(ங) தாபமயல்கொடுத்துத் - தாபதரால் ... அன்று
சாபநுதலார்கிட்ட - சாபமொழிக்க ... வென்று
வணி, எகூம,

---

விருத்தம்.

வணிகர்வடிவாகிவளையோவளையோவென்றே தென்மதுரைதன்னில்
அணிவணிகர்வீதியில்வந்தார் அந்தவணிகர்மகளாகிவந்த ... *
பணிமுலையாரெல்லோரும் கருணைமழைபெய முழங்கும்பருவமான
மணிமுகிலைநாடிவருமயில்களெனப்பெருகுவார்வருகுவாரே உருகூ

சோமசுந்தரேசுவரமூர்த்தி மதுராபுரியில் செட்டிப்பெண்களுக்கு
வளையிட்டது.

பதம்-பந்துவராளிராகம்-சாப்புதாளம்

[ கண்ணிகள். ]

(க) வளையென்றவரைவந்து - வளைவார்-நுதல் - வளைவார் - பல
மயில்கள்போல்விளங்கு - மாலையார்-குழல்-மாலையார்
விளையும்ஆசையுடன் வந்தார் - வந்து - வந்தார் - வளை
விற்கும்வாணிபரைக்கண்டார் - மொழி - கண்டார்

(உ) மையலானுடைப்பு மொழிவார் - பல - மொழிவார் - முலை
மலைசுமந்துமருங்கெஞ்சுவார் - நின்று - கெஞ்சுவார்
எய்யும்வேள்கணையில் வாடுவார் - உற - வாடுவார் - வளை
எனக்குனக்கெனக்கைநீட்டினர் - பல - னீட்டினர்

(௩) தேவியல்லதுபொன் ளுடா - ரையும் - நாடார் - சாபந்
தீர்க்கவென்றிவரைத்தொட்டே - கரந் தொட்டே
மேவுங்கையில்வளை ஏற்றினர் - ஒரு - ஏற்றினர்-அந்த
மின்னனார்மயலுமாற்றினர் - சாப-மாற்றினர் (௱சுஎக)

---

விருத்தம்

மங்கையர்தமக்குவளை திருத்தியபின் ... *
வளைவிலைவாங்கவேநாளை ... *
வருதுமென்றகன்றார்வானமின்னதுபோல் ... *
மாதரும்யாவருங்காண ... ... *
வெங்கயஞ்சுமந்தமணிவிமானத்துள் ... *
விளங்கொளியுருவெனத்தோன்ற ... *
விலைவளைகொணர்ந்தவணிகர்நம்மதுரை ... *
விமலரென்றெவர்களுமகிழ்ந்தார் ... *
அங்கயற்கண்ணார் அரன்தொடப்பெற்ற ... *
அருளினால்அனைவருங்கர்ப்பம் ... *
ஆகியாங்களவில்மைந்தரைப்பெற்றார் ... *
அந்தமாமைந்தர்கள்எல்லாம் ... *
கங்கைஅன்றுதவுமுருகவேள்என்னக் ... *
கதித்தனர்வணிகர்மாதர்களுங் ... *
கனிவொடுசிலநாள்க்கழித்தரன்பதத்தைக் ... *
கண்டனர்கொண்டனர்கதியே ... (உசுஎ)

---

விருத்தம்.

வரிவிழிமடவார்பூணும்-வளைவிற்றதிதனைக்கேட்போர் ... *
பரிபவமொழிந்துவாழ்வார்-பகரட்டமாசித்திப்பே ... *
றரிவையரறுவர்க்கீசர் - அருளுமுப்பத்துமூன்றுந் ... *
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடவுரைசெய்வேனே (உ௱சுக)
வளைவிற்ற திருவிளையாடல் - முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - சு. பதம் - ௪. ஆக ௰
ஆக பாயிரம்உள்படத் - திருவிளையாடல்-௩௨-க்கு வெண்பா - ௩-
கலித்துறை-௩ கொச்சகம் - க. விருத்தம்-உ௱௫௪. பதம்-௱சு௰க.
ஆக கவிதை-௪௱௫௰உ.

முப்பத்துமூன்ருவது.

# அஷ்டமாஸித்தியுபதேசித்த திருவிளையாடல்.

———(:)(*)(:)———

விருத்தம்.

வளையல்விற்றபின்புகுலபூஷணன்தென் ... *
மதுரைநகராண்டிருந்தான் அதற்குமுன்னாள் ... *
தளையெனுமாமயலறுநால்முனியைத்தேற்றிச் ... *
சம்புவடவால்நிழலில்வீற்றிருந்தார் ... ... *
களையறுசூர்ப்பகைவர்தனைவளர்த்தகார்த்தி ... *
கைப்பெண்கள்அறுவர்தவவேடம்பூண்டு ... *
விளைமகிழ்வாய்அவ்விடத்தில்வந்துகண்டு ... ... *
விமலரடிபணிந்துநின்றுவேண்டுவாரே (உகூஉ)

சோமசுந்தரேசுவரமூர்த்தியை வடவால்நிழலில்
கார்த்திகைப்பெண்கள்கண்டு
ஸ்தோத்திரஞ்செய்து பிரார்த்தித்தது.

பதம் - செஞ்சுருட்டிராகம் - ரூபகசாப்புதாளம்.

[பல்லவி.]

ஆதியேஅரனே - பரஞ் - ஜோதியேபரனே

[அநுபல்லவி.]

பாதிமதியும்நதியுமணிந்தபரா - பரனேகலாதரனே
ஆதியே

[சரணங்கள்.]

(க) சூலபாணியனே - அநு - கூலவேணியனே - பரி
சுத்தனே - ஜெக - கர்த்தனே - வளர்
அத்தனே - உயர்-நித்தியாநித்தியனே
ஆதியே

(உ) தேவரீர்பதமே - தொழும் - ஏவலேநிதமே - செய்யத்
தேடினேம் - தவஞ் - சூடினேம் - புகழ்
பாடினேம் - இன்று- நாடினேம் - ஐயா
ஆதியே

(ங) சிலமேதொடுத்தோம் - வெகு-காலமேஅடுத்தோம்- அஷ்ட
சித்திவித்தைம - கத்துவத்தொழில்
பெற்றிடக்கிர்பை-வைத்தருள்செய்வீர்
ஆதியே. ௱கூஉ.

## ௩௩-வது-அஷ்டமாசித்தி உபதேசித்தது.

### விருத்தம்.

வெண்டரளநகையாரை நோக்கிப்பாங்காம் ... *
விமலிதனைக்காட்டி எண்சித்தியையும்ஏவல் ... *
கொண்டவளாமிவளன்பால்ப்பெறுவீரென்றார் ... *
கோதையர்கள் அதைமறந்தார்விமலர்கண்டு ... *
மண்டலத்தில் அக்ஞானப்பாறையாகி ... ... *
மதிகெடுவீர்எனச்சபித்தார்மாதரஞ்சித் ... *
தெண்டனிட்டுச்சாபமிதுதொலேவதென்னாத் ... *
தீருமென்பார்கடைக்கண்ணருள்பாருமென்பாரே (ரகூஉ)

பதம் - எதுகுலகாம்போதிராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

இனிமேல்எங்கட்குப்புத்தி - என்ன - எப்போதுசாபநிவர்த்தி

[அநுபல்லவி.]

கனிமேல்இச்சைகொண்டு - மரமேறவும் ... ஆச்சு
கைக்கெட்டியதுதுறட் - டிக்கெட்டாமற் போச்சு

இனி

[சரணங்கள்]

(க) பேதைமைஎன்பது - மாதருக்கணி ... கலம்
ஆதலால்உமதருள் - அல்லால்வருமோநலம்
ஏதுசெய்வோம்கல்லாய் - எண்ணியதெல்லாம்பாழே
நீதிபரனேநாங்கள் - நெடுநாள்நம்பின ... ஏழை

இனி

(உ) விதியையனுசரிக்கு - மதியென்பதெங்கள்மட்டே
துதிபெருகுவிரத - முங்கெட்டேசுகமுங்கெட்டே
மதியற்றுமதுமொழி - மறந்ததுகொடுந் ... தீது
கெதியற்றிலவுகாத்த - கிளிபோல்ப்போகலா காது

இனி

(௩) சிந்தையின்துயரெல்லாந் - தீர்ந்துபலன்கைமேலே
வந்துதென்றுமன - மகிழ்ந்தோமேஒருக் ... காலே.
அந்தரர்தொழும்உம்மை - அடுத்துக்கவலேயற்றோம்
சந்தேகமில்லேஇனிச் - சலியாவடிவும்பெற் றோம்

இனி. ரகூ௩,

விருத்தம்.

பகருமாதருக்கிரங்கிப்பாண்டியன்தென்னாட்டில்ப் ... *
பட்டமங்கைஆலடியில்ப்பாறையாய்க்கிடப்பீர் ... *
புகலும்ஆயிரவருஷம்சென்றபின்புசாபம் ... *
போக்கிவைப்போமெனவுரைத்தார் பூவையருங்கேட்டு
அகமெலிவாய்ப்பட்டமங்கைஆலடியில்ப்பாறை ... *
யாய்க்கிடந்தார்ஆயிரமாண்டதுஒழிந்தபின்பு ... *
ஜெகமகிழுமதுரேசர்வந்தறுவர்சாபந் ... *
தீர்த்தருளினர்அஷ்டசித்தியுமுத்தியுமே. (உ௬௪)

சோமசுந்தரேசுவரமூர்த்திகார்த்திகைப்பெண்களுக்கு
அஷ்டமாசித்தியுபதேசித்தது.

பதம்-கல்யாணிராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி ]

அஷ்டமாசித்திஇதுகேளும் - மகிழ்ந்- தறிவீரேநாளும்

[ அநுபல்லவி ]

இஷ்டமாகவே-நமைத்துதியோதி-இருக்குமாதர்களேஅணிமாவாதி
அஷ்ட

[ சரணங்கள் ]

(க) அகிலவுயிர்க்குயிராய்ப்- பரமகாட்டை
யணுவாயுறைவதணிமா ... ... வென்னும்
மகிமாவென்பது-அண்டத்துள்ளும்பிறம்பும்
மருவிநிறைவதுவா ... ... ... மன்னும்
தருமலைபோலிருந்- தணுவெனக்கன ... மற்ற
தனுவெடுப்பது-லகிமாஅணுப்போ ... லுற்ற
பகருடல்மலைஎனக் - கனத்திடவேநண்ணில்
பாரம்பொருந்துவது - கரிமாவாமண்ணில்
அஷ்ட

(உ) அரியபிலம்புகுந்தும்- அயனுலகினில்ச்சென்றும்
அவ்வயன்உலகத்தை ... ... ... ... ... நீங்கி
மருவும்பிலம்புகுந்தும் - திரிதல்பிராத்தியென்ன
மாமறையுரைத்திடும் ... ... ... ... ... ஓங்கி
பரகாயத்தில்நண்ணல்-விண்ணிலுலாவல் ஆவல்
பட்டபோகமெல்லாந்தா- னிருக்குமிடத்தில்மேவல்
இரவியெனத்தன்மேனி- யொளியால்முப்போதும்
எப்பொருளும்அறிதல்- பிரகாமியம் ... ஓதும்
அஷ்ட

## ௬௬-வது-அஷ்டமாஸித்தி உபதேசித்தது.

(௬) முத்தொழிலும்புரிந்து-பச்சைப்பரிஇரவி
முதல்க்கோள்ஒன்பதும்பணி செய்ய
வெற்றிபெறுவதூஉ சத்துவம்அசுரர்புள்
விலங்குபூதர்முதலாய் ... ... வைய
கத்தில்எவர்களுந்தன்-வசமாகவே கொள்ளுங்
கனதையைவசித்துவ -மென்றுமாமறைவிள்ளும்
நித்தியமுணர்ந்தவர் - நினையார்இதைச் சற்றும்
நிதமும்இதுஅவரை-நீங்காநிழல்ப்போல்ச்சுற்றும்

அஷ்ட. ௱௬௪.

---

விருத்தம்.

கன்னியர்க்கட்டசித்தி கரதலாமலகம்போல ... *
அன்னிலையுரைத்துக்கூடல் அழகர்தென்மதுரைசார்ந்தார்
பின்னிவரிமயவல்லி பேரருளாலெண்சித்தி ... *
தன்னியல்புணர்ந்துவெள்ளிச் சயிலத்தில்ச்சார்ந்திட்டாரே.()

---

விருத்தம்.

மரைமுகமாதர்க்கஷ்ட மாசித்தியுரைத்தலீலை ... *
சிரமசைத்துவந்துகேட்போர்தீவினையொழிந்துவாழ்வார்
ஒருவிடையிலச்சினையிட் டெருமுப்பத்துநான்காந் *
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடஉரைசெய்வேனே ()

அஷ்டமாசித்தியுபதேசித்ததிருவிளையாடல் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ரு- பதம்-௬-ஆ-அ.

ஆ பாயிரம் உள்படத்-திருவிளையாடல்-௬௬- க்கு-வெண்பா-௬.

கலித்துறை-௬-கொச்சகம்-க-விருத்தம்-உருசு- பதம்-௱௬௪

ஆ கவிதை- ௪சுய.

முப்பத்துநான்காவது

## விடையிலச்சினையிட்ட திருவிளையாடல்.



விருத்தம்.

அட்டமாசித்தியுரைத்திட்டபின்னாள் ... *
அவனிபுகழ்காஞ்சிநகராள்வோன்ஈசர்க் *
கிட்டமாமெய்யடியான்காடுவெட்டி ... *
யெனுஞ்சோழன்மதுரைநகர்இதனைக்காணத் *
தொட்டஅன்பாய்ப்பிறர்நாட்டில்வரவும்அஞ்சித் *
துயர்படுநாள்ஒருநாள்நம்சுந்தரேசர் ... *
வட்டமலர்த்தாளென்றுகாண்பேனென்று ... *
வருந்துவான்மனத்துயரம்பொருந்துவானே, (உசுஎ)

பதம்-தோடிராகம்-சாப்புதாளம்,

பல்லவி.

என்றுகாண்பேனோ - தரிசித்து-இன்பம்பூண்பேனோ

[ அநுபல்லவி. ]

அன்றயன்மாலுக்கும் - காணாத ஈசரை
அங்கயல்க்கண்ணா - யகியாள்பிராணேசரை
என்று

[ சரணங்கள். ]

(க) எண்ணியும்ஆறாதே-தினந்துதித் - திருந்துந்தேறாதே-என்னிரு
கண்ணிமைமூடாதே-பசிக்கன்னம்-கருதித்தேடாதே
தண்ணீர்க்குமிழிபோல்த்-தானேச......ரீரம்
கண்ணுள்ளபோதல்லோ - காட்சிஇன்னேரம்
என்று [ணா

(உ) மதியென்செய்வேனோ-என்னாள்-மனமகிழ்ந்துஉய்வேனோ-கரு
நிதியின்மேல்நினவே-விழிதுயில் - நேரமுங்கனவே
மதுரையறியார் - கழுதைப் பிறப்பே
விதியென்செய்யுமோ - விமலர்சிறப்பே
என்று [கும்

(ங) அடிமைகொண்டவரே-மனத்துயர்-அதுவுங்கண்டவரே-தரிசிக்
படிகண்பாரா ரோ - எனையவர்-பதியில்ச்சேராரோ

கடவுளர்அரு - ளல்லாது கிட்டுமோ
முடவனுக்குக்-கொம்புத்தே னெட்டுமோ
என்று, ாகூடு.

---

விருத்தம்.

அரசன்இப்படி மதுரைமேல்க்கருத்தாய் ... *
அன்றிரவில்விழிதுயிலும் அளவில்ஈசர் ... *
பரவுசித்தரென்னஎழுந் தருளியேசொப் *
பனத்தில்வந்துதென்மதுரை பதிக்கிப்போதே *
வரவெனில்உன்னுருமாற்றி ஒருவனாகி ... *
வா்வென்றூர்விழித்தந்தப் படியப்போதே *
நரபதிதன்னகர்விட்டு மதுரைநோக்கி ... *
நடக்கின்றான்பவவேலை கடக்கின்றானே (உகூஅ)

பதம் - பரசுராகம் - சாப்புதாளம்
பல்லவி.

நடந்தானேசோழன் - பிறவிக்கடல் - கடந்தானேசோழன்
அநுபல்லவி

திடந்தரும்ஈச்ரன்பால் - இரவில்ஒருவனாக
சிறக்குங்காஞ்சிநகர் - விட்டுமதுரைக்கேக
நடந்தானே

[ சரணங்கள் ]

(க) காடுஞ்செடியும்உயர் - மேடுமலையும் ... நீக்கி
நா்டும்நகரும்நன்னீர் - ஓடும்நதியும் நோக்கி
நடந்தானே

(உ) காரிருளினில்எங்கள் - நாரிபாகரை ... வேண்டி
பாரில்மகிழ்ந்திடுங்கா - வேரிநதியுந் தாண்டி
நடந்தானே

(ந) விண்டலம்புகழ்பாண்டி - மண்டலந் தனில்வந்து
அண்டர்பிரானையுள்ளங்-கொண்டதுணையுகந்து
நடந்தானே-ாகூகூ-

---

விருத்தம்.

நடந்தனன்மதுரைகண்டு நண்ணுமுன்னற்றினத்தில் ... *
தொடர்ந்துராமேசுரத்தைத் தொழவிரைந்தேகுவார்முன் *

கிடந்திடுபாம்பனென்னக் கிளர்ந்திடும்வைகைபொங்கி ... *
அடர்ந்தெதிர்வருவதைக்கண் டாங்குகின்றேங்குவானே (உசுசு)

பதம் - அடாணாராகம் - ரூபகசாப்புதாளம்

[பல்லவி]

நானேதுசெய்வேனினிமேல் - ஐயனேஉம்மை
நம்பினவர்க்கொரு துன்பம்அணுகுமோ

[அநுபல்லவி]

மானேயணியும் - மதுராபுரி
வாசரேஆள்சுந்த - ரேசரேநேசரே
நானேது

சரணங்கள்

(க) ஆண்டவனேஅந்தப் - பாண்டியனேடிந்த
ஆருங் ... கூடுதே - விண்ணில்த்
தாண்டியேநீட்டின - விரல்கள்அறும்படி
தானே ... ஓடுதே
நீண்டசமுத்திர - மேரைதவ்றுமல்
நிற்கும்நிலைபைக்-கெடுக்குமென்றேபயம்
பூண்டிதைக்கண்டுபின் - வாங்கிஒதுங்கியே
போகவருகுதே - வேகவதிஇதே
நானேது

(உ) பேர்த்துமரங்களை - வேரொடும்பாரொடும்
பிணைந்து ... வருகுதே - இங்கே
பார்க்கப்பார்க்கவோர் - கணத்துக்குக்கணம்
பரந்து ... பெருகுதே
ஆர்க்குங்கலத்தினில் - அன்னத்தைஇட்டுக்கை
யைப்பிடித்தாற்போலே செய்பலாமோசாமி
தீர்த்தக்கரையினில் - பாவியைப்போலவே
தியங்கியேமன - மயங்கிநோகவே
நானேது

(ங) விடியுந்தருண - மாகுதேஅந்த
மீனவன்காணு ... வானே - கண்டு
அடியும்பிடியும் - என்றுசொல்ல
அகப்பட்டுக்கொள்ளு ... வேனே

படியிலுமது - பதந்தொழுமுன்னே
பானகத்துரும் - பாய்த்தடுத்துதே
அடியேனைநடு - நிசியில்த்தனியாய்
அழைத்துவந்துநட்டாற்றில் கைவிட்டீரே
நானேது-ாகூஎ.

---

விருத்தம்.

ஏங்கும்அவ்வரசன்முன்னே - ஈசரோர்சித்தராகி ... *
தீங்கறுவைகைநன்னீர் - செலும்வழிவிட்டொதுங்கி ... *
நீங்கநற்கோட்டைவாசல் - நெடுங்கதவுகள்திறக்க ... *
ஆங்கரன்சென்றூர்பின்சென் - றரசனுந்தரிசித்தானே (உஎ0)

பதம்- சுருட்டிராகம்-ஆதிதாளம்

பல்லவி.

கண்டான்தெரிசித்து - மனமகிட்சி - கொண்டானேசோழன்

[அநுபல்லவி.]

வண்டார்சோலைகள் - சூழ்செழுமதிபுனை
மாமதில்சூழ்திரு - மதுராபுரிதனை
கண்டான்

[சரணங்கள்]

(க) அந்தமாமலர் - வாவியுந் ... ... தருவும்
அளகாபுரியென - வேவளர் ... ... திருவும்
சந்திரசூரியன் - புகுவழிபோல் ... ... மருவுஞ்
சாளரமனைகளுஞ் - சூழ்கடைத் ... தெருவும்
கண்டான்

(உ) பொற்கோவிலுட் -புகுந்தேதுதி ... ... பாடி
பொற்றாமரைப் - பொய்கையதனில் ... ஆடி
நிற்காதிளங்கன்று - தாய்முகந்தனைத் ... தேடி
நேசமுற்றதுவென - ஆசையதா ... ... யோடி
கண்டான்

(ங) எண்டிசையும்எண்கயந் - தாங்கியே... ... சமையும்
இந்திரவிமானத்துள் - அந்தமதா ... யமையும்
அண்டர்நாதர்சுந்த - ரேசுவரர் ... தமையும்
அங்கயல்க்கண்ணு - யகியாம் ... உமையையும்
கண்டான்.ாகூஅ.

கொச்சகம்

கண்டுமனமகிழக் - காட்டியேஅன்றடிமை ... *
கொண்டுசித்தசாமியருள்- கூர்ந்தார்குறைதீர்ந்தே ... *
வண்டுலவுபூந்தார்-வனமெறிந்தசோழன்அன்பாய்த் ... *
தொண்டுகொண்டசுந்தரர்முன்-தோத்திரங்கள்செய்வானே ()

காடுவெட்டிச்சோழராஜன் சோமசுந்தரேசுவரமூர்த்தியை
ஸ்தோத்திரஞ் செய்தது.

பதம்-பந்துவராளிராகம்-சாப்புதாளம்

[பல்லவி.]

ஜென்மசாபல்லியமானேன்நானே - மகா
தேவதேவாஇன்று தானே

அநுபல்லவி.

என்மனத்துயர்போக - இருகண்குளிர நாடிப்
பொன்மலர்த்திருவடி - புனைந்தேனேதவந்தேடி
ஜென்ம

சரணங்கள்.

(க) எண்ணியவெண்ணத்தை - இடரின்றிநிறை வேற்றி
பண்ணியல்மறைதேடும் - பரனேதுயர் ... மாற்றி
புண்ணியர்க்கன்றுவேதப்-பொருளுரைதனைத் தேற்றி
தண்ணிலவணிந்தசுந் - தரவிடங்கரே ... போற்றி
ஜென்ம

(உ) எவ்வுடலெடுத்தேனோ - எண்ணில்பிறவி ... தோறும்
இவ்வுடலெல்லாம்பாவம் - அறம்பொருட்டாக மீறும்
தெவ்வுடல்பொடிசெய்த- திருவடிக்கன் ... பூறும்
இவ்வுடலிதுவொன்றே - எனக்குடலான ... வாறும்
ஜென்ம

(ந) சகலசராசரந்தா - ணுகிமுத்தொழில் ... ... ... விரி
பகவனுகியபரா - பரப்பொருளே ... ... ... கிரி
மகள்மனேகரனே மாமதுரா ... ... ... புரி
புகவெனையழைத்தாண்ட-போதேமெய்ப்பொருள் தெரி
ஜென்ம. ௱கூகூ.

---

விருத்தம்.

இதமுளசோழன்துதிக்கவரங்கள்நல்கி ... *
இவ்வழுதிகாணுமுன்செல்லென்றுநம்மை ... *
நிதமறவாயென்றுதிருநீறுசாத்தி ... *
நீர்வைகைவடகரைமட்டனுப்பிமீண்டு ... *

கதவையடைத்ததில்ரிஷபமுத்ரைவைத்துக் ... *
கடவுள்சென்றூர்விடிந்ததனைக்காப்போர்கண்டு... *
இததிசெயமெனக்குலபூடணபாண்டியன்கேட் ... *
டெவர்செயலோவெனப்பலயோசனைசெய்வானே ()

பதம்-எதுகுலகாம்போதிராகம்-ஆதிதாளம்,

[பல்லவி]

அதிசயமிதுவென்னசூதே வந்த-தாரோஎவரோ இப்போதே

[அநுபல்லவி.]

பதிஇதிலிந்தமாறு-பாடுசெய்தவாறு

அதி

[சரணங்கள்.]

(க) வடிவாய்விளங்கிய மற்ற - மூன்று
வாசலிலும்இரவில்வைத்த - கயல்க்
கொடிமுத்திரையிருக்க-வடவாசலி ... லிட்ட
குறியையழித்துவிடைக்-கொடிமுத்திரைவைத்திட்ட

அதிசெயம்

(உ) சேரனோசோழனோ எவர்களோ - இந்த
ஊரைப்பகைத்திட்டசமணர்களோ - இன்று
காரிருளில்வந்து - கதவைத்திறக்குஞ் ... சத்தி
பாரில்எவர்க்குண்டுஇப்- படிச்செய்ததென்னயுத்தி

அதிசெயம்

(௩) வில்லுங்காவலாளர் மீதே - வஞ்சம்
எள்ளளவுஞ்சொல்லலாகாதே - காணக்
கள்ளன்பெரிதோகாப்பான் - பெரிதோபுவிமீதே
உள்ளதில்லாமலும் - ஊரழிந்துபோ ... காதே

அதிசெயம்,உா,

விருத்தம்.

வாளரசன்இவைதெளியாக்கவலையுற்றான் ... *
வள்ளலவன்கனவில்வந்துவனமெறிந்த ... *
சோளனுக்காய்நடந்ததெல்லாம்உரைத்தார்கேட்டுச் *
சுந்தரர்லீலையைஉலகில்த்துலக்கிநசர் ... *
தாளதனைச்சுமந்துசிலநாளிருந்து ... ... *
தன்மகன்ராஜேந்திரன்இத்தரணிதன்னை ... *
ஆளவைத்துமகிழ்குலபூடணபாண்டியன்பொன் ... *
அமரருலகாள்பதத்தைஅடைந்திட்டானே (உஎ௬)

---

விருத்தம்.

புரிசையின்கதவில்ஆர்க்கும் - புதுமையாயிடபமாமுத் ... *
திரைஇடுலீலைஈது - செழிப்புடன்கேட்போர்வாழ்வார் ... *
வரிசையாய்த்தண்ணீர்ப்பந்தல் - வைத்தமுப்பத்தைந்தாநற் *
றிருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடவுரைசெய்வேனே ... *

விடையிலச்சினையிட்ட திருவிளையாடல் - முற்றிற்று,

---

ஆ திருவிருத்தம்-எ கொச்சகம்-க பதம்-௬ ஆ ௰௪.

---

ஆ பாயிரம்உள்படத் திருவிளையாடல்-௩௪க்கு வெண்பா-௩.

கலித்துறை-௩ கொச்சகம்-உ விருத்தம்-உ௱௬ பதம்-உ௱,

ஆ கவிதை - ௪௱எ௪,



முப்பத்தைந்தாவது

## தண்ணீர்ப் பந்தல் வைத்த திருவிளையாடல்.



விருத்தம்.

விடையிலச்சினையிட்டபின்புயர் வேம்பணிந்தராஜேந்திரன் *
அடையலர்க்கிடியேறெனப்புவி யாளும்நாள்வனம்வெட்டியென் *
றுடையபேர்பெறுசோழனன்குற வாடியேமதுரேசரைப் ... *
படைகள்சூழவந்துவந்துபொன்னடி பணிவனேபுகழணிவனே ()

பதம் - மங்களகௌசிகைராகம் - சாப்புதாளம்.

[ கண்ணிகள். ]

(க) வனமெறிந்த ... ... சோளன் - ராஜேந்திர
வழுதிஎன்னும்நிம்ப- மலர்த்தோளன்
தனையுறவாய்க் ... கொண்டு - சேனையுடன்
தான்வந்துமதுரே - சரைக் கண்டு
(உ) பாதம்பணிந்து ... வருவான் - தனக்கென்றும்
பாண்டியன்தன்னுறவு-வேண்டியதால்
மாதுதன்மகள் ... தனையே - கொடுத்திட
மனந்துணிந்தான் அந்தவினைவினையே
(ஈ) ராஜேந்திரன் ... சொந்தத் - தம்பிஎன்னும்
ராஜசிங்கன் அறிந்தே ... முந்த
ஆசையுடனே ... போனன் - சோழனுக்
கன்பாயமருமகனென ... வானன்
(ச) மற்றந்தச்சோழ ... னன்று - துரைத்தனம்
மருமகனேபெறவேணும் மென்று
கற்றிடும்ராஜேந் ... ... திரன் - மேல்முகங்
கடுந்தானைபடைஎடுத் தானே (உ௱க)

---

விருத்தம்.

சேனையோடெழுந்துசோழன்தென்னவன்வளர்தென்கூடல் ... *
ஆனையோசனைரெண்டென்ன அடுத்தனன்அதனைக்கேட்டு ... *
மீனையேகொடியாய்க்கொண்ட வேந்தனும்அஞ்சிக்கூடற் ... *
கோனையேபணிந்துமுன்பு குறுகுவான்மறுகுவானே. (உ௱சு)

பதம்-மோகனராகம்-அடதாளசாப்பு.

[ பல்லவி ]

வந்துசோழன்எதிர்த்தானே-சம்மதமோ தேவரீர்க்குத்தானே

அநுபல்லவி.

சொந்தஎந்தம்பிக்கும்-எனக்கும்பகையுன் டாகி
தோளிலிருந்துசெவி - யில்க்கடித்தாப்போல்நோக்கி
வந்து

[ சரணங்கள் ]

(க) இரவில்த்தனியனுய்வந்-தவன்உமதரு ... ளாலே
எப்போதும்வரப்போக - ஒப்பினேன்அதனாலே
விரல்புகஇடம்விட்டால் - தலைநுழைப்பது போலே
மீறிமிகவிருது - கூறிக்கொண்டென் ... மேலே
வந்து

(உ) மதியால்யானைதன்-தலையில்க்குப்பையைத்தா ... னே
வாரிப்போட்டுக்கொள்ளு-வதுபோல்இவனைநானே
எதிரிதேடிவாரா - வழிக்குவழிவைத் தேனே
எவர்மேல்க்குறைஇனி-என்செய்வேன்பெருமானே
வந்து

(ரு) அறத்துக்குள்ளாய்நின்றீர் அன்றுஇன்றிவன்வெய்ய
அகத்துக்குள்ளாகியும் - அடம்செய்வதோ ஐய
திறத்தஉமதடிமைத் - திறம்பூண்டானேன் ... செய்ய
சிரித்துப்புரமெரித்த - தேவதேவா ... பைய
வந்து-உாஉ



விருத்தம்.

நொந்தமன்னனுக்கிரங்கி நோக்கியேசண்டைசெய்ய ... *
வந்தவச்சோழன்தன்னை வளைந்துநீவெலச்செல்லென்று ... *
அந்தரத்தெழுந்ததோர்சொல் அகமகிழ்ந்தேராஜேந்திரன் ... *
தந்தளத்துடனேபோரில்சார்ந்திட்டான்நேர்ந்திட்டானே (உஎஎ)

பதம்-மத்தியமாவதிராகம்-சாப்புதாளம்,

[ பல்லவி, ]

ராஜேந்திரனுக்கும்வனமலிந்தசோழனுக்கும்நடந்ததே சண்டை

அநுபல்லவி.

ஓசைக்கடலாஞ்சோழன் - சேனைக்குத்தென்னன்சேனை
ஒன்றனந்தமாய்த்தோண-நின்றரனருளால்த்தானே
ராஜேந்

[ சரணங்கள் ]

(க) கரிகள்மேற்கரிகளும் - பரிகள்மேல்ப்பரிகளும்
காலாள்மேல்க்காலாளும் - தேராள்மேல்த்தேராளும்
கைகலந்து நெருக்கினர் - கனத்தசினஞ்
செய்துமுனைபெருக்கினர் - மிகுத்ததழல்
சொரியும்படையும்நிழல் - விரியும்குடையும்போகச்
சூரரும்சுத்தரண - வீரருமெதிராக
ராஜேந்

(உ) வளைந்தசிலைகள்தொட்டு - விளைந்தகணைகள்விட்டு
வாசியுங்கரியுந்தேரும் - பேசியசேவகராரும்
மண்டைவிண்டுமுண்டமாகினர் - சிலர்கைகால்கள்
கண்டகண்டதுண்ட மாகினர் - சல்லடைக்கண்போல்
துளைபட்டுச்சிலர்மாயக் - களைபட்டுச்சிலரோயத்
தொல்லுலகம்நடுங்க - வல்லவரும் ஒடுங்க
ராஜேந்

(ரு) செத்தபிணங்களைப்போரி - லுற்றநிணங்களைவாரி
தெள்ளுதிரைமோதிரெத்த - வெள்ளமைக்கடலைமுற்ற
செம்பருந்துகழு காடவே - காளிகூளிகள்
கும்புகும்பாய்க் குதிபோடவே - இப்படியாக
வெற்றிதோர்வைஇல்லாமலே- ஒத்துநின்றுவிண்ணின்மேலே
வெய்யவனிரதம்விட்டு - மையமதில்வரமட்டும்
ராஜேந். உளங,

---

விருத்தம்,

மானணிதடந்தேர்வெய்யோன் - மையத்தில்வந்துகாயத் ... *
தானமர்நிழல்கள்தேடித் - தயங்கியேமயங்கிவாடி ... *
சேனைகளலையும்போது - தென்னவன்படைக்குள்ஈசர் ... *
வானமர்தண்ணீர்ப்பந்தல் - வைத்திரட்சித்திட்டாரே ... (உஎஅ)

சோமசுந்தரேசுவரமூர்த்தி பாண்டியன்சேனைக்குத்
தண்ணீர்ப்பந்தல்வைத்தது,

பதம் - சௌராஷ்டிரராகம் - சாப்புதாளம்,

[ பல்லவி. ]

தண்ணீர்ப்பந்தலிட்டார் - சுந்தரேசுவரர் - தண்ணீர்ப்பந்தலிட்டார்

[ அநுபல்லவி. ]

கண்ணியவிடத்தையுண் - டண்டருக்கா யன்று
கருணையுடன்அமிர்தந் - தந்ததுபோல்நின்று
தண்ணீர்ப்

[ சரணங்கள ]

(க) வரமருளும்நுதல்ப்புண்- டரமும்செவிப்புறத்தில்
மருவும்மலரணியும் - ஒருபதகிண்கிணியும்
அரையதள்வாசமும் - உரைமந்த ... காசமும்
ஆகக்கடமுந்தாங்கி - வாகுற்றமறையோங்கி
அரும்பந்தலென வாக - அதற்குள்மேவிப்
பெருந்துன்பமதுபோக - நாவுலர்ந்திட்டு
நெருங்கின்றவெகு தாக - மொழிந்திடநீர்
தருந்துங்கமணி மேக - மெனவேநின்று
ஒருவர்க்கொருவ ராகி - இருவர்க்கிருவ ராகி
உற்றும்அனேகராகி -- மற்றுமைபாக ராகி
மருவுங்கரு ணாலயர் - திருவும்அறமு முயர்
மதுரையம்பதி நாதர் - பொதுவாயருளுநீதர்
தண்ணீர்ப்

(உ.) பள்ளக்கடலையுற்ற - வெள்ளப்புனலும் வற்ற
பாரும்பிளக்கநாகத் - தாருந்தன்னுடல்வேக
புள்ளும்மிருகமும்நேரும் - விள்ளுந்தழலைச்சேரும்
புழுவென்னக்கதிஜயும் - அழுகண்ணீரற்றுவாயும்
புலர்ந்துதுயர்பெருகவே - தண்ணீர்தண்ணீரென்
றலைந்தெவருங் கருகவே - மரமுந்தீய்ந்து
பிலங்கொள்கல்லுமுருகவே - மிகுந்ததாபம்
நிலங்களெங்கும்பெருகவே - செங்நெருப்பெரி
கொள்ளியைக்கீழும்மேலும் - அள்ளிச்சொரிந்தாப்போலும்
கொதிக்கப்பூமியிலடி - மிதிக்கஒண்ணுதபடி
துள்ளித்தாமரைஇலைக் குள்ளுறைநீர்போலலே
துயரமொழித்துயோகச் - செயமீனவனுக்காக
தண்ணீர்ப்

(ங) தேனணிமலர்த்தொடை - மீனவன்படைக்கிடை
திவ்வியமலர்வாச - மெவ்வுலகினும்வீச
தானமர்புனல்சொரி - சேனைகள்படும்பரி
தாபமொழியஉண்டு - பூபன்மகிழப்பண்டு

தாங்கியகளை யாறி - வாகனங்களில்
ஓங்கியேமகிழ்ந் தேறி - கைகளில்ப்படை
வாங்கியேமனந் தேறி - சோழன்சேனையை
வேங்கைப்புலிபோல்ச்சீறி - துரத்திக்கொன்று
மீனவன்படைநாடி - ஆனசோழனைத்தேடி
வெருவும்படியேபோக - மருகனுந்தானுமாக
மானமாய்விற்கக்கண்டு - சேனைவீரர்கைக்கொண்டு
வந்துதென்னன்முன்விடச் - சந்தோஷமாய்க்கண்டிட
தண்ணீர்ப். உாச

---

விருத்தம்

தந்தநீரால்ச்செழித்து வென்றுசோழன் ... *
தனைமருகனெடுங்கொணர்ந்து தென்னன்கூடல்ச் ... *
சுந்தரர்முன்விட்டுஜெயன் அருளேதென்னச் ... *
சொற்றருமமறிந்தவனீ யலையோஇன்று ... *
உந்தனிச்சைப்படிசெய்யெனும் விண்சொல்க்கேட்டு *
உயர்சேனைநிதியொடு சோழனையனுப்பிச் ... *
சொந்தஇளையவன்றனக்குஞ் செல்வமீந்து ... *
துதிபெற்றுராஜேந்திரன் பதியுற்றுனே (உஎகூ)

---

விருத்தம்

பரிமளமுலவுதண்ணீர்ப் - பந்தல்வைத்திட்டலீலை ... *
தருவெனஉதவிக்கேட்போர் - சகலமும்பெற்றுவாழ்வார் ... *
இரசவாதஞ்செய்திட்ட - எழில்பெறுமுப்பத்தாறுந் ... *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடஉரைசெய்வேனே (உஅ௰)

—*—

தண்ணீர்ப்பந்தல்வைத்த திருவிளையாடல்
முற்றிற்று.



ஆ திருவிருத்தம் - கூ பதம் - ச ஆ ௰.

—❀*❀—

ஆ பாயிரம்உள்படத் - திருவிளையாடல் ௫௫-க்கு வெண்பா-௫ கலித்துறை-௫ கொச்சகம்-உ விருத்தம்-உாஎஉ பதம்-உாச ஆ கவிதை-௬ாஅச.





முப்பத்தாருவது

## இரசவாதஞ்செய்த திருவிளையாடல்.



விருத்தம்.

அருந்துதண்ணீர்ப்பந்தல் வைத்துஆண்டபின்பு ... *
அரசபுரந்தரன்புவியாண் டருள்நாள்வைகை ... *
மருங்குசராசரமெல்லாம் லிங்காகார ... ... *
வடிவெனவிண்ணிரவி மதிவலஞ்செய்தேகும் ... *
பெரும்பதிபூவணமெனு மூர்தனில்விண்கோமான் ... *
பேரிரவிபூசித்த பரனைஅவ்வூர் ... ... ... *
வரும்பருவவிலைமகள் பொன்னனைஎன்பாள்தான் ... *
வணங்கினுள்பத்திபுரிந் திணங்கினளே (உ அக)

பதம் - பந்துவராளிராகம் - ஆதிதாளம்.

பல்லவி.

பொன்னனையாளெனுமாது - பத்தி - புரிந்தாள்பூவண்ணர்மீது

அநுபல்லவி.

அன்னைதமர்நிதிகள் - அனித்தியமென வெண்ணி
தன்னையுணர்ந்தூசர் - தாளிணைபூசை பண்ணி
பொன்னனை

[ சரணங்கள் ]

(க) தினமாதருடன் கூடித் - திருந்தியேபுன ... லாடி
அனகர்சன்னதிநாடி - அருச்சித்துஅருள் தேடி
பொன்னனை

(உ) நியமமற்றுமுடித்து - நின்றுதாளம் ... பிடித்து
நயகீதங்கள்படித்து - நடனங்களும் நடித்து
பொன்னனை

(ங) பின்புமனைக்கடுத்துப் - பெருந்தருமந் தொடுத்து
அன்பாய்அன்னங்கொடுத்து - ஆர்க்கும்பசிதடுத்து
பொன்னனை - உ௱௫.



விருத்தம்.

மாதவள்தன் அன்பெவருங் காணவேபூ ... ... *
வணத்தீசர்அருள்புரிந்தார் அதனால்மங்கை ... *
நாதர்பூவணர்உருவைப் பொன்னால்செய்து ... *
நாடியேதொழநினைத்தாள் நாளுந்தேடும் ... *

காதலுமிதிஅன்றன்றேஅன்னமீயக் ... ... *
காண்பதல்லால்மீதியில்லைஎன்செய்வோமென் ... *
ஞேதருபொன்முடிப்பொருதென்னவனுக்கீந்த ... *
ஒருவரைத்தன்னுள்ளத்தில்உன்னுவாளே (உஅஉ)

பொன்னனையாள் சோமசுந்தரேசுவரமூர்த்தியை
ஸ்தோத்திரஞ்செய்து பிரார்த்தித்தது.

பதம்-அசாவேரிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

வந்துகாத்தென்மேல்க் - கிருபைபுரிந்திடவேணும்
மதுராபுரிநாயகா

அநுபல்லவி.

சந்ததமும்புகழ்ந்தே - இந்திரன்எண்டிசையோர்
தானவர்மாலயன் - மோனமெய் ... மாதவர்
வானவர்தேடிய - தீனதயாபர
வந்து

சரணங்கள்.

(க) எண்ணிநாடி நாடி - வாடி
எந்தவிதஞ்ஜென - னந்தொலையும்வழி
என்றுபலகோடி - நினைவோடி
அண்ணலேமனமுழன்று வெண்ணெயிருக்கநெய்யென்று
அலைவதுஎனென - நிலவரமாய்மன
மலைவதுதீரநின் - மலரடிதேடினேன்
வந்து

(உ) அனித்தியமாம் சரீரம் - விகாரம்
அளவறுகிருமி - மலசலமுளவயி
றதைவளர்ப்பதேநேரம் - வீண்பாரம்
நினைத்திடிலோஅசுத்தம் - நீக்கியருள்வீர்சித்தம்
நேசமதாயம - பாசமென்மீதினில்
வீசவிடாமல்உ - மாஸகராகவே
வந்து

(ங) குலபூஷணன்முன்சென்று - அன்று
குறையறநிதிதரு - நிறையருள்பெருகிய
கோலங்கொண் டின்று - முன்னின்று
மலையெனுந்துயர்நைய - மகிழ்ந்துநான்பணிசெய்ய
வடிவுளஉம திணை - அடிமலரதுதுணை
அடியவரொடுமெனை- அடிமைகொள்ளுவீர்முன்னே
வந்து - உஅசு.

வெண்பா.

இப்படிபுண்ணடிகிதம் - எண்ணியெண்ணியேவேண்டும் ... *
மைப்படியுங்கண்ணுள்மகிழவே - மெய்ப்படிவ ... ... *
கித்தராய்க்கூடல்வளர் - நீதர்கருணையுடன் ... ... *
சித்தராய்வந்தார்சிறந்து ... ... ... ... ... *

பதம்-புன்னாகவராளிராகம்-ஆதிதாளம்,

பல்லவி.

சித்தரெனவடிவெடுத்துவந்தார்.

அநுபல்லவி.

பத்தர்க்கருள் ... புரியும் - கித்தர்பொன்மலைதரு
பச்சைமயிலைச்சேரும் - இச்சைஉள்ளவரொரு

சித்த

சரணங்கள்

(க) இட்டநீறணிமெய்யும்- கட்டங்கந்தொட்ட...கையும்
இலங்குகோவணமிசை - துலங்கவேதுகி...லசை
திட்டமுடனேயோகப் - பட்டைஇடைமே...லாகத்
தெரியஇறுக்கிக்கட்டிப் - பரிவுடன்நடந் தெட்டி

சித்த

(உ) கையிலணிவிபூதிப் - பையும்பவளச் ... ஜோதிக்
காடெனவேஜடையும் - நாடும்விழிக் கடையும்
மெய்யாம்அடியார்கண்டு - உய்யவேஅருள்கொண்டு
வேசையளாசையாலே- கூசிவருவார் போலே

சித்த

(ங) மதுராபுரிநாதர் - முதலாகிய ... ... ... நீதர்
வந்தன்னம்உண்ணக்கூடும்-அந்தஅடியா ரோடும்
சதுர்மாமறைபகர் - பதிபூவண ... ... ... நகர்
தன்னிலன்புடனடிப் - பொன்னனைமனை... தேடி

சித்த - ஊாஎ.

---

விருத்தம்.

சித்தர்வந்துபொன்னனையாள்தன்னகத்தில்ச் ... *
சென்றுவெளிப்புறம்பொருபக்கத்திருந்தார் ... *
அத்தர்அடியார்கள்அன்னம்உண்டுசென்றார் ... *
அருந்தாமலிவரிருக்கஅடிமைமாதர் ... *
இத்தலைவர்தமைநோக்கிஅன்னமுன்னை ... *
எழுந்தருளுமென்னஉங்கள்சைவவேடச் ... *

சிற்றடியாள் தனையழைப்புமென்றார் மாதர் ... *
செல்லுவார்பொன்னனைமுன்சொல்லுவாரே (௨௮௪)

பதம்-மோகனராகம்-சாப்புதாளம்.
[ கண்ணிகள் ]

(௧) அம்மம்மாகேளும்பொன் - னனைத்தாயே - மாலும்
அயனுங்காணாரைக்காண - வினைத்தாயே
இம்மதிசெய்தடியார்க் ... கிடும்அன்னமே - அந்த
ஈசரைக்கொண்டுவந்து விடும்அன்னமே

(௨) வந்தபெரியோரெல்லாம்-அன்னம்-உண்டு -சென்றார்
மற்றிங்கொருவர்சித்த - ருருக்கொண்டு
சுந்தரேசுவரர்போலு ... ... லாவினார் - இந்தச்
சோதிமனைப்புறத்தில் ... மேவினார்

(௩) கண்டுநாங்கள்தரிசித் ... ... தோமே - உந்தன்
கருணையாலேகதிபெற் ... ... றோமே
வண்டுலாவுபூவுடன் ... ... ... கூடி - நாரும்
மணம்பெற்றதுபோலானோமே ...நாடி

(௪) அன்னம்உண்ணவாருமென் றழைத்தோம் - அவர்
அருள்விழிப்பார்வையினால்த்தழைத்தோம்
உன்னைஅழைக்கச்சொன்னா ...... ரேனோ -உந்தன்
உள்ளம்மகிழச்செய்யத் ......... தானோ (௨௱௮)

---

விருத்தம்.

வளைத்தசிலைநுதலார்சொல்க்கேட்டுமங்கை ... *
வந்துஉபசரித்திறைஞ்சிவடிவைநோக்கி ... *
கிளைத்தவருள்த்தேவரீர்க்கேற்கும்ஏவல் ... *
கேட்கும்அடியாள்மனைக்குள் வருகவென்று ... *
முளைத்தமணிநகைஉள்ளமகிழஐயன் ... *
மொய்குழலைநோக்கிஉந்தன்வடிவமேனி ... *
இளைத்தவகையேதெனப்பொன்னனைகைகூப்பி ... *
எடுத்திட்டாள்பணிந்துசொல்லத் தொடுத்திட்டாளே,

சித்தரூபியாகவந்தசோமசுந்தரேசுவரமூர்த்தியைப்பொன்னனையாள் தெரிசித்துச்சொல்வது,

பதம்-காம்போதிராகம்-ஆதிதாளம்.
[ பல்லவி ]

இளைத்தேதன்னன் னையனே-உய்யநேசம்வைத்
தென்னையாண்டருள் துய்யனே

[அநுபல்லவி]

கனைக்கேதபெருந்துன்ப - மானஅலைஎழுந்து
கத்தும்பிறவிக்கருங் - கடலிலேவிழுந்து
இனைக்

[சரணங்கள்]

(க) பூவணேசர்திரு - வுருவைச்செய்து ... ... தினம்
பூசித்துப்பவமற - வேணுமென்று ... ... கனம்
மேவியகருமுடிந் - திருக்குததற்குத் ... ... தனம்
வேணுமேஏழைஎன்-செய்வேனிதனல் ... மனம்
இனைத்

(உ) தினமுந்தேடுநிதி - உங்களுக்குப ... ... ...சாரம்
செய்துகொடுக்கும்அன்னச்-செலவுக்காகுதின்னேரம்
அனமிடவும்அரனார் - உருவைச்செய்துசிங் காரம்
ஆக்கித்தொழவுங்காண்-பேனுவேன்றே சரீரம்
இனைத்

(ந) நானெளியவள்பண்டு - செய்ததவத்தி ... ... னாலே
நல்வரவாகவந்தீர் - அடியவரைமண் ... ... மேலே
கானொருநாளும்அரன் - கவரவிடார்அன் ... பாலே
தற்பரன்நீரேகேளும்கைப்பொருளில்லா ... தாலே
இனைக்-உ௱கூ,

---

விருத்தம்.

அரமகளாம்பொன்னனைஇவ்வா றமுதமெனஓதியமொழியை ... *
வரமருளவந்தசித்தர் மகிழ்ந்துகேட்டுவாய்மலர்ந்து ... *
திரமதானசிவதருமந் - தேடத்துணிந்தாய்தெளிந்தின்றே ... *
பரமசிவனார் உருவுங்காண் பாயென்பார்நீஎன்பாரே (உஅகூ)

பதம்-சங்கராபரணராகம்-சாப்புதாளம்,

[பல்லவி]

சிவசிந்தனைமறவாமாதே-பரன் - திருவுருவங்காண்பாயிப்போதே

[அநுபல்லவி.]

அவமுந்தியசெல்வம் - இளமைநீர்க்குமிழி
ஆயுளனித்தியம்- ஆமென்னும்மறைமொழி
சிவ

[சரணங்கள்]

(க) அதிகநல்லறம்நித்தியம் - அதிலுமேசிவதர்மம்
அதிகமாகுமென்று ... நினைந்தாய் - நல்ல
மதியினாலேசிவ - பத்தியும்சிவபத்தர்
வணக்கமுமேமிகப் ... புனைந்தாய் - பர
கதிதேடுவதுதான் ... வெற்றி - மற்றக்
கருமமெல்லாமயல் ... பற்றி - மெத்த
அதிகமானதுயர் ... சுற்றிக் - கொண்டு
அலையும்பிறவிக்குவித் - தாகும்அதையகற்றி
சிவ

(உ) தனதுகருமமிதில் - மெய்வருந்தினால்க்கூலி
தருந்தெய்வமென்னவே ... பணிந்தாய் - என்றும்
உனதுபேருக்கேற்கக் - கனகத்தாலேஅரன்
உருக்காணவேமனந் ... துணிந்தாய் - பாபம்
வனம்உறைந்திடத்தர்மம் ... விளைத்தாய் - அன்ன
வலையில்யாவரையும் ... வளைத்தாய் - தினம்
தனந்தேடுவதைவிட் ... டிளைத்தாய் - பழி
தழைக்கும்பறைச்சேரியில் வில்வம்போல் முளைத்தாய்
சிவ

(௩) விள்ளும்அனந்தசென்மந் - தவஞ்செய்தவர்சிவ
வேடமெடுப்பர்புவி ... மீதே - அவர்
எள்ளென்னுமுன்எண்ணெய் - தந்துபணியும்உந்தன்
இதயங்களிக்கும் - இப் போதே - இங்கு
வெள்ளிபித்தளைதராச் ... செம்பு - ஈயம்
வெண்கலம்நாகம்இ ... ரும்பு - வீட்டில்
உள்ளதைக்கொடுவாவென் ... முன்பு - இனி
உன்னெண்ணம்நிறைவேறும்உறுதியாகநம்பு

சிவ உாய.

---

விருத்தம்.

இத்தயவோடுரைத்தபடி கலன்களெல்லாம் ... *
எடுத்துவந்தாள் அதில்நீறை இறைத்துஜயன் ... *
வைத்தனல்மூட்டிரவு விடிந்தபின்பொன்னாகும் ... *
வரனுரைச்செய்யென்றார்நீ ரிரவிருந்து ... *

சித்தமகிழ்ந்தண்டிதையு முடித்துத்தந்து ... *
செல்லுமென்றுளதற் கிசையாதடிநாம்கூடல்ச் ... *
சித்தரெனமறைந்தார்கண் டிவரேகூடல்ச் ... *
சிவனென்றுபொன்னனையாள் தியங்குவாளே (உஅஎ)

பதம்-பியாகடைராகம் - ஆதிதாளம்

[ பல்லவி ]

மறைந்ததென்ன செயலோ - தென்னன்
மகள்மேல்க்கொண்டமயலோ

[ அநுபல்லவி ]

உறைந்திங்கிருந்தநேசர் - உயர்ந்ததென்மதுரேசர்
மறைந்த

[ சரணங்கள் ]

(க) வேசைமார்கள்நேசமே - போலவே
பேசுவார்கள்மோசமே - வங்கணஞ்செய்தால்
தேசுள்ளமேருவுஞ் - செலவாய்விடு மென்று
யோசனையோயென்னமோ - அறியேன் இன்று
மறைந்த

(உ) இட்டன்னம்ஊட்டேனே - பின்புவாய்
விட்டிதுகேட் டேனே - வாதமீதுரைத்
திட்டபடியேசெய்யத் - தெரிந்தாலும்புவி மீதே
தொட்டுக்காட்டாதவித்தை - சொட்டுப்போட்டால்வராதே
மறைந்த

(ங) உற்றதைக்கனிபோலே - கண்டேனே
கத்தியேதினி மேலே- வினைத்தபடி
பெற்றதைக்கொண்டுதானே - பிறியப்படவேணுமீதே
மற்றென்னபட்டாலும் - வாராதுவா ... ராதே

மறைந்த-உாயிக.

---

விருத்தம்.

கருதிஇவைபின்தெளிவாகி - கலன்களெல்லாம்புடம்வைத்துச் ... *
சுருதிஇறைவர்அருள்ப்படியே - சொர்னமாகவிடிந்துகண்டாள் ... *
பொருதிச்செய்தகருவிலந்தப் - பொன்னேஉருக்கிவார்த்துவெகு... *
பருதிபோலஅரன்வடிவைப் - பார்த்தாள்வதனம்பூத்தாளே (உஅஅ)

# ரு௯-வது-இரசவாதஞ்செய்தது.

பதம் - நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

பூவணேசர்திருவடிவைக்கண்டு - மனம் - பூரித்தாள்மின்னாள்.

[ அநுபல்லவி ]

ஆவலினால்பல - கோடிதவம் ... உற்று

அடியார்க்கடியவள் - ஆகியேஅருள்பெற்று

பூவணேசர்

சரணங்கள்.

(க) வளர்ந்தவின்னில்வாய் - பிளந்தசாதகம்

மலிந்தமழைத்துளிகொண்டாற் ... போல்

மருண்டுகோடையில் - வெருண்டமானதிர்

மலர்ந்தவாவியைக்கண்டாற் ... போல்

இளந்தருணிமதன் - வளர்ந்தபொழுதுமுன்

னிழந்தபதிஇதனுண்டாற் ... ... போல்

ஏழைகுறைமொழிந்து - தாழும்பொழுதுகண்டு

இரங்கிஇருபன்அருள் - புரிந்துநின்றாற் ... போல்

பூவணேசர்

(உ) கந்தமாமலர் - முல்லைமலைமேலிரு

கண்ணீர்முகில்எனவே ... ... தூற்றி

காற்றடிக்கத்தாழை - பூத்ததுவெனவே

கண்டேனெனக்குறை ... ... மாற்றி

ஐந்துவிரல்நகமும் - ஐயன்கன்னமதில்

அழுந்தமுத்திரையெனச் ... ... சாற்றி

அள்ளிமுத்தமிட்டுக் - கொண்டுமகிழ்ந்தனங்கள்

அழகியசுந்தர - மேஎன்று ... ... போற்றி

பூவணேசர்

(௩) தீங்காம்பிறவிநோய் - தீர்க்குமருந்துஇன்று

சிக்கித்தென்றுமகிழ்வொடு ... ... நாடி

சிந்தைகளன்னைத்திறை - வேற்றிபசித்தர்தம்

செயலேவிளைத்துவினைத்தே ... ... வாடி

நீங்காமகிழ்வொடும்பிர - திஷ்டைசெய்துபூசை
செய்வேத்தியங்களுமிகத் ... ... தேடி
நிலமும்உயர்ந்தவிண்டலமுமகிழ்ந்திடவே
நித்தியோச்ஸவமுடன் -வைத்துக்கொண் ... டாடி

பூவணேசர்-உாயஉ.

——○○——

விருத்தம்.

பூவணர்தம்உருவைப்பொன்னனையாள்வைத்து ... *
பூசித்துச்சிலநாளில்முத்திசேர்ந்தாள் ... ... *
பாவைநாயகர்கன்னத்தில்ப்பதிக்கப் ... ... *
படுகுறியுங்காரணப்பேர்க்குறியுங்கொண்டு ... *
தேவளர்பொன்னிறமாறிக்கலியுகத்தில்ச் ... ... *
செனித்தவர்க்குத்தகுந்தவடிவாய்விளங்கி ... *
ஆவலொடுபூவணநன்னகரில்யாரும் ... ... *
அறுதினமுந்துதிக்கவிளையாடினரே ... (உ௪௬)

---

விருத்தம்.

இருளிணைக்குழலிக்காக - இரசவாதஞ்செய்தின்பங் ... *
தருமிந்தலீலைகேட்போர் - தமக்கிணைஇலராய்வாழ்வார் ... *
மருவலச்சோழன்றன்னை - மடுவில்வீட்டியமுப்பானேழ் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திட உரைசெய்வேனே ...(உ௪௭)

---

இரசவாதஞ்செய்த திருவிளையாடல் - முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௬. வெண்பா-௧. பதம்-௮, ஆ ௰௮.

ஆ பாயிரம்உள்படத் - திருவிளையாடல்- ௩௬-க்கு - வெண்பா-௪.

கொச்சகம்-உ.கலித்துறை-௩. விருத்தம்-உா௮௰௧. பதம்-ா௰உ.

ஆ கவிதை - ௫௱உ.



முப்பத்தேழாவது

## சோழனைமடுவில்வீட்டிய திருவிளையாடல்.

விருத்தம்.

பொன்னனையாளுக் கிரசவாதஞ்செய்து ... ... *
புரந்தபின்னாள்அரசபுரந் தரனுந்தென்னர் ... ... *
மன்னனையேதன்பதத்தில்க் கொண்டாரன்னான் ... *
மகன்மகனும்நாலுதலை முறைக்கும்அப்பால் ... *
மின்னனையகூர்வேல வங்கிஷபதாக ... ... *
மீனவன்பாராண்டொழிந்தான் அவன்பெற்றிட்ட ... *
தென்னனையமெய்ச் சுந்தரேசபாத ... ... *
சேகரபாண்டியன் செங்கோல் செலுத்தினனே (உகக)

பதம் - மத்தியமாவதிராகம்-ரூபகசாப்புதாளம்

பல்லவி.

சுந்தரேசபாதசேகரன் - தொல்லுலகாண்டான்

[ அநுபல்லவி ]

அந்தரேசனுலகுமேங்க - அவனிஎங்குந்தவமுற்றோங்க
சுந்த

(க) [ சரணங்கள் ]

சொன்னநான்மறைமுடிக்கும்நீளும் சுந்தரேசரேபுவியையாளும்
மன்னராமென்றுவணங்கிமீளும்வச்சிரபாணியும்மெச்சவேநாளும்
(உ) சுந்த

தானுஞ்சேனையும்உண்டமீதித் - தனமெல்லாமதுரேசர்க் கோதி
ஆனதிருப்பணிகளுஞ்ஜோதி - அணிபணிகளுஞ்செய்து நீதி
(ங) சுந்த

தேரொருபத்துநூறுதின்கரி-தெளிவதாகியஆயிரம் ... பரி
வீரர்பதினாயிரவரோபெரி - விளங்குவேல்கொண்டுமதுரைநகரில்

சுந்த - உாடுங.

—O—

விருத்தம்.

பத்தியினில்மிகுந்தவனேசுந்தரேச ... ... *
பாதசேகரனென்னப்பாராள்நாளில்ச் ... *

சுற்றிய திண்சேனைஇளக்கரத்தைக்கண்டு ... *
சோழனுயிரம்பரிக்கோர்வீரனென்பான் ... *
வெற்றிபெறநினைந்துவஞ்சிமாலைசூடி ... *
வெகுதளத்தோடும்மதுரைநோக்கிவந்தான் ... *
சத்தியமீனவன்அறிந்துசுந்தரேசர் ... *
சன்னிதியில்ச்சென்றுநின்றுசாற்றுவானே (உசுஉ)

பதம் - எதுகுலகாம்போதிராகம் - சாப்புதாளம்.

[பல்லவி.]

பகைத்துச்சோழன்எழுந்தானே - எந்தன்
படைஇளக்கரங்கண்டு தானே

அநுபல்லவி.

நகைத்தவன்மிகமதங்கொண்டான்உசரஎறி
னவன்நகரவிழுவான் அதுநிலவர மீறி

பகைத்துச்

[சரணங்கள்.]

(க) ஆயிரம்பரிக்கொரு - சேவகன்அவனுடன்
அமர்செய்வது ... தொல்லையாம் - மிகக்
காயும்படைகளுடன் - சேனைகள்வருவது
கணக்குவழக் ... கில்லையாம் - வந்து
மாயும்விதியோஇந்த- மதுரையைச்செயிபானே
காயும்புலியிருக்குங் - காடழியுமோ ஏனே

பகைத்துச்

(உ.) தேவரீர்சலுகைகொண்டு - அடியேன்செங்கோல்
செலுத்துவதறி ... யாமல் - எந்தன்
கோவேஉமதருட் - கடலில்ப்பிறந்தமதி
குலமென்றுங்குறி ... யாமல் - மன
தாவலாலேஏனே - யாரோபோலேயெண்ணி
தேவைக்காறனுக்குச் - சிறுமதினனநண்ணி

பகைத்துச்

(ங) திறத்தவச்சிராங்கியே - வெண்ணீறுமதன்பர்
சேகரமேபெருஞ் ... சேனை - நல்ல
அறத்தையேபெரிய - வாளெனக்கொண்டும
தடித்துணைதனைநம்பி ... னேனை - மிக
வெறித்துவந்தேகிடங்கில் - வேழம்போல்வீழ் வானே
பறித்தென்செங்கோல்கொண்டிப் - பதியினில் வாழ்வேனே

பகைத்துச் - உாயஎ.

விருத்தம்.

காவிரிநாடன்செய்தி - கௌரியன்உரைக்கநீயே ... *
பூவிரிவாகைசூடப் - பொருதுவோமென்னவிண்சொல்த் *
தேவிதன்பாகரன்பால்ச் - செவியினில்க்கேட்டுத்தென்னன் *
மேவியபடைகளோடும் - வெல்லுவான்செல்லுவானே (உகூ௯)

பதம் - கலியாணிராகம் - சாப்புதாளம்.

[ கண்ணிகள். ]

(க) சீறியசோழன் - படைக்கடலித்தென்னன்
சேனையோராறெனப் ... போச்சுதே - சோழன்
சேனக்குத்தென்னவன் - சேனைகடலெனச்
சிவன்அருளாலேஉண் ... டாச்சுதே
மீறியசோழன் - முன்வேடுவனென்ன
விமலருருக்கொண்டு ... குதித்தார் - கரு
மேனியுந்தந்தக் - குழையும்முத்தாரமும்
வேலும்விளங்கவந் ... துதித்தார்

(உ) கார்நிறமாகிய - வெட்சிபொருந்துங்
கலாபக்கருங்கொண்டை ... தோணவே - பெருங்
காற்றெனும்வாசியில்க் கூற்றென்னவேவரக்
காவிரிநாடனுங் ... காணவே
ஆரடாநான் - ஆயிரம்பரிக்கோர்சே
வகன்வந்தேனென்று ... எதிர்க்கவே - அள
வற்றபரிக்கொரு - சேவகனுனை
எற்றிமதத்தை ... யுதிர்க்கவே

(௩) வந்தேனெனக்கனல் - சிந்தவேவேலை
வலதுகரத்தில்ச் ... சுழட்டினர் - சோழ
மண்டலத்தாரெல்லாங் - கண்டலறிக்கொண்டு
வாய்குளறிப்பல்லுக் ... கிட்டினர்
அந்தவளவனும் - அந்தகனுக்கிவன்
அந்தகனென்றஞ்சி ... ஓடினன் - எங்கள்
ஐயன்அதைக்கண்டு - பையமறைந்தனர்
அப்போதுமீனவன் ... கூடினன்

(௪) கூடியதென்னனை - ஓடியசோழன்
குலைந்துதிரும்பியே ... பார்த்தான் - அந்தக்

கூற்றனைக்காணோமே - பார்த்திங்கதென்னனே
கூடிவந்தானென்ன ... ஆர்த்தான்
ஓடுவோரைக்கண்டால்க் - கூடுவோருக்குத்தொக்
கோவெனச்சோழனவி ... ரட்டினான் - தொடர்ந்
தோடியதென்னனும் - வாடித்திரும்பியே
ஒய்ந்துமதுரையைக் ... கிட்டினான்
(௫) மாமதுரைக்கரு - கேவரஅங்கோர்
மலர்மடுவில்த்தென்னன் ... விழுந்தான் - பின்
வளவனும்வீழ்க - அரனருளாலே
மகிழ்வொடுதென்னவன் ... எழுந்தான்
ஆழுயர்சோழன்அம் - மாமடுவுக்குள்
அழுந்திமறைந்துயிர் ... விண்டான் - அவன்
ஆனைதுகில்பணி - சேனைபடைக
ளவளவையுந்தென்னன் கொண்டான் (௨௪௫)

---

விருத்தம்.

கிடங்கதில்ச்சோழன்மாண்டான் - கிடைத்தபூணுடைசேனை *
அடங்கலுங்கொண்டுதென்னன்-அழகுள்ளமணிபொன்னுடை *
விடங்கமழ்கண்டர்கீந்தவ் - விமலர்தங்கருணையான ... *
தடங்கடல்புகுந்துவற்றாத் தண்ணதிஎனவாழ்ந்தானே (௨௯௪)

விருத்தம்.

சுரநதியணிந்தஈசர் - சோழனைமடுவில்வீட்டிச் ... *
செருவொழித்ததிதுகேட்போர் - சிவனருள்சேர்ந்துவாழ்வார் *
அரிசியதுலவாக்கோட்டை - அருளியமுப்பத்தெட்டாந் *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடவுரைசெய்வேனே (௨௯௫)

---

சோழனைமடுவில்வீட்டிய - திருவிளையாடல் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௫ பதம் - ௩ ஆ அ.

ஆ பாயிரம் உள்படத்திருவிளையாடல் ௩எ-க்கு வெண்பா-௪.

கொச்சகம்-௨ கலித்துறை-௩ விருத்தம்-௨அ௬ பதம்-௨௪௫.

---

ஆக கவிதை-௫௭௰.



முப்பத்தெட்டாவது

## உலவாக்கோட்டை அருளிய திருவிளையாடல்.

———(:)(*)(:)———

விருத்தம்.

எதிர்த்தசோழனைமடுவில்வீட்டிச்சுந்த ... *
ரேசபாதசேகரனையாண்டபின்னாள்த் ... *
துதித்தவனேஅரசாளும்நாளில்கூடல்த் ... *
தொன்னகரில்ஒருமேழித்தொழிலான்அன்பு *
பதித்தஅடியார்க்கினியானென்னும்பேரான் ... *
பாரிதர்மசீலைஎன்பாளுடனென்னாளுங் ... *
கதித்தசெல்வமிகுந்தறமாம்பயிர்க்குபிராங் ... *
கருத்தினன்சிவனடியார்க்கருத்தினனே ... (உசுசு)

பதம்-தோடிராகம்-ஆதிதாளம்.

பல்லவி

அடியார்க்கினியானைப்போலே- அன்னம்
ஆர்கொடுப்பார்புவிமேலே

அநுபல்லவி

வடிவாளரசற்குக் - கொடுக்குங்கடமைபோக
மற்றதெல்லாஞ்சிவபத்தர்தங்களுக் காக

அடியார்க்

[ சரணங்கள் ]

(க) அருந்ததிக்கிணையான - இல்லாளல்லறஞ் ... செய்யப்
பொருந்தும்அருள்போல்நடந் தென்றும்நற்சுவைபெய்ய
திருந்துநால்வகைப்பாக முஞ்செய்துபரி ... மாற
வருந்தொண்டர்க்கிடுஞ்செல்வ - மணல்க்கேணிபோலூற

அடியார்க்

(உ) அந்தமில்லாச்சிவன் - அடியார்கண்டு ... ...கண்டு
எந்தநாளும்எந்த - வேளையும்உண்டு ... ...உண்டு
சந்தோஷமாகஉப- சரித்துபசரித் தூட்டி
வந்தபேர்க்கன்னமும்- வருவார்க்குலையுமூட்டி

அடியார்க்

(ந.) வருந்திவருந்திவழி - மறித்தழைத்தெங்குந் ... தேடி
அருந்தவாருமென்று - ஆவலாயுற ... ,,, வாடி

மருந்தோடாகிலும்விருந் - தோடுண்ணென்பதுகண்டு
விருந்தில்லாவிடிலன்ன - மருந்தாவிரதங் ... கொண்டு
அடியார்க். உ௰சு.

---

விருத்தம்

உழுதொழிலான்இவைபுரியவிவன்றன்கீர்த்தி .... *
உலகரியவேண்டியரன்செயலினாலே ... *
பழுதறுநெல்விளைவுங்கைநிதியுங்குன்றப் ... *
பலகடன்வாங்கியும் அன்னதானநேமம் ... *
வழுவுதலன்றிச்செய்தான்கடன்தந்தோரும் ... *
மாறினார்தானுமனைவியும்உண்ணாமல் ... *
அழுதகண்ணீரோடுயிரைவிடநினைந்து ... *
அன்றுமதுரேசர்முன்செல்வான்சொவல்லானே (உகூஎ)

பதம்-ஆனந்தபைரவிராகம்-ஆதிதாளம்.

பல்லவி

ஏதுக்கிவ்வளவுவேதனையே- தேவ- நீர்செய்யலாமோசோதனையே

அநுபல்லவி

பாதிமதியணிந்த - பரனேஎன்மனநோமோ
யேதுபூவிற்றகடையில்ப்புல்விற்றிடலாமோ
ஏதுக்

சரணங்கள்

(க) தேருமலே குறுக்கியே - நாளுக்குநாள்ச்சா
ணேறமுழஞ்சறுக்கியே
மாறுவிளைவுந்தேடி-வைத்தநிதியு மங்க
வேறுருங்கடன்தரு - விகிதமுமற்றொதுங்க
ஏதுக்

(உ) கருத்தினிற்றெளிவேனோ - வருவிருந்துக்
கருத்தாமல்ஒளிவேனோ
பருத்தபசியாளர்யென் - பாடறிந்திடு வாரோ
எருத்தினேவுகாக்கைக்-கென்தெரிந்திடுமேரோ
ஏதுக்

(ங) கடன்கொடுப்போரையாகிலும் - காட்டுவீர்காட்டா
விடிலெனதுயிர்போகிலும்
அடியவர்புசியாமல் - அமுதுண்ணமனந் தேறேன்
மடிவேன்மனைவியுடன்- மற்றினிவெளி... யேறேன்
ஏதுக்- உ௰எ.

அருளியது.

விருத்தம்

மேழியான்மனைவியொடும்உயிர்விடுவேனென்ன ... *
விண்மொழிடன்மனையிலரிசிக்கோட்டைஒன்று *
ஊழிநாளினுங்குறையாதிருக்கவைத்தோஞ்செல்லென் *
றுரைக்கமகிழ்ந்தேகியதைக் கண்டுபூசித்து ... *
ஆழிசூழ்புவிமகிழவேஉலவாக்கோட்டை ... *
அரிசியால்அரனடியார்க் கனங்குறையாதீந்து ... *
வாழியார்மனைவியொடுங் கிளைகளெல்லாஞ்செழிக்க *
மகிழ்ந்துநாள்க்கழித்தீசர் மலரடிசேர்ந்தானே. ( )

---

விருத்தம்.

ஒருமுதலுலவாக்கோட்டை யுதவியோரடியான்றன்னல் ... *
குரவொழித்ததிதுகேட்போர் குளிர்ந்துவாழ்குவரோர்செட்டி *
மருகன்முன்மாகனுக வந்தமுப்பத்தொன்பானுந் ... *
திருவிளையாடல்தன்னைத்- தெரிந்திடஉரைசெய்வேனே (உ௯௯)

---

உலவாக்கோட்டையருளியதிருவிளையாடல்-முற்றிற்று,

---

ஆ திருவிருத்தம்-௪-பதம்-உ-ஆ௬.



ஆ பாயிரம்உள்படத் திருவிளையாடல் - ௬அக்கு- வெண்பா-௪.

கொச்சகம்-உ-கலித்துறை-௬-விருத்தம்-உ௯௰-பதம்-௨௰௭,

ஆ கவிதை - ௩௰௬





முப்பத்தொன்பதாவது.

## மாமனுகவந்துவழைக்குரைத்த திருவிளையாடல்.

———(*)———

### விருத்தம்.

அதிசயவுலவாக்கோட்டைஅருளியபின்னுள்கூடல்ப் ... *
பதியினில்ச்சுந்தரேசபாதசேகரன்பாராள்நாள் ... *
நிதிமலிதனதனென்னும்நிறைதனவணிகனின்ப ... *
மதிமுகச்சுசீலைஎன்னுமனைவியாளொடுவாழ்ந்தானே. ()

பதம் - மத்தியமாவதிராகம் - ரூபகசாப்புதாளம்.

[ கண்ணிகள் ]

(௧) தனதனென்றொரு - வணிகன்மதுரை
தன்னில்உறைந் ... திட்டோன் - வெகு
கனதையான - இனமுந்தனமுங்
கனமும்நிறைந் ... திட்டோன்

(உ) கதிதருமக - வற்றுவாடிக்
கவலைதொடுத் ... திட்டான் - பின்பு
சதிர்பெருகுந்தன் - தங்கைமகனைத்
தான்தத்தெடுத் ... திட்டான்

(௩) தத்துமகிழும் - நாளில்ஒருநாள்
சலம ... ... தாகவே - உற
வுற்றதங்கையை - தனபதிபகைத்
தோங்கி ... நோகவே

(௪) மகவில்லாமல் - வரிசைகெட்ட
மலடனீ ... என்றுள் - பின்பு
இகபரம்என் - னுனக்குண்டாச்சே
என்னவா ... ... யென்றுள்

(௫) இதுசொல்லஎன்சா - னுடம்புமோர்சா
னென்னக் ... குறுகினன் - என்ன
மதிசெய்தோமென்று - மனைவியோடு
மனது ... ... மறுகினன்

(௬) எவர்க்குமண்பிள்ளை - என்னினும்தன்பிள்ளை
என்பதித ... மென்றான் - நாம்
தவமுற்றுமேலைக்காயினும்பெறத்
தக்கதெனச் ... சென்றான் (உகஅ)

—*—

விருத்தம்.

தாரமோடெழுந்துசெல்வந் - தனைமருகனுக்கேஈந்து ... *
திரமாதவமேசெய்யச் - சென்றனன்வரவுதாழ்ப்ப ... *
ஊரதில்உள்ளஞாதி - யோர்அவன்தங்கைதன்னை ... *
ஆரடிநிதிக்கிநீயென் - றகற்றினர்இகழ்த்தினரே (௩௱க)

பதம் - பியாகடைராகம் - சாப்புதாளம்

பல்லவி.

நீயாரடிஇந்த - நிதியும்ஸ்திதியுங்கொள்ள
நிலையாதடிபோடி

[அநுபல்லவி.]

தாயாதிகள்நாங்கள் - இருக்கிறோமலை போலே
சற்றும்எண்ணமலேது - முற்றுறாய்மேலமேலே
நீயாரடி

[ சரணங்கள் ]

(க) ஒருதொழுமாடுநாங்கள் - ஒருவன்காணியைக் ... கட்டி
ஒருவனெடுத்துக்கொள்வோம் - உனக்குவருமோ கிட்டி
அருமைஅண்ணனைச்சேர்ந்த - மனைவியுடன்வி ... ரட்டி
ஆதிக்கங்கொள்ளவோபே - ராசைகொண்டாய் கெட்டி
நீயாரடி

(உ) குட்டிச்சுவர்முட்டவெள் - ளெழுத்தோநீயே ... சொல்லு
கோத்திரம்உனக்கொன்றங்-களுக்கொன்று ஏன்மல்லு
வெட்டிப்பெலியிடுவோம் - மட்டுக்குமட்டாய் ... நில்லு
விற்றுப்போட்டமாட்டுக்கு - ஆர்போடுவார் ... புல்லு
நீயாரடி

(௩) உந்தன்மகனுக்கண்ணன் - நிதிதரக்கண்ட ... தாரு
ஒருவனுகிஞாதி - அறிவானேசாட்சி ... கோரு
மைந்தன்பெறப்போனவன் - வந்தால்அப்போது நேரு
வாராதிருந்தாலெங்கட் - கோராங்காணியாய்ச் சேரும்
நீயார்டி - உகசு.

விருத்தம்.

உரத்தினல்ஞாதிமார்கள் - ஒருமித்துவழக்குப்பேசி ... *
வரத்தினல்உயர்மன்மாடாள் - மணிநிதியாவுங்கொண்டு ... *
துரத்தினர்மகனேடிந்தத் - தோகையாள்ஏங்கியேங்கி ... *
அரற்றினள்சுந்தரேசர் - அடியில்வீழ்ந்தாள்தாழ்ந்தாளே(௩௭௨)

பதம் - நீலாம்புரிராகம் - ஆதிதாளம்

[ கண்ணிகள். ]

(க) தெய்வமேநானென்ன - செய்குவேன்எனக்கொரு
திக்குத்திசையுங்காண்கி ... லேனே
ஐயாஎனக்குநீரே - மெய்யானதுணையென்று
அறிக்கைசெய்திடவந்தே ... னனே

(உ) எந்தன்தமயனுக்கு - மைந்தன்இல்லாமையாலே
என்மகன்தனைக்கொடுத் ... தேனே
சிந்தையில்ச்சினத்தாலே - நிந்தனையாகச்சொல்லி
தேசாந்தரத்தில்விடுத் ... தேனே

(௩) அகத்தால்அல்லவோகெட்டேன்-பகைத்தாலும்பாதையிற்கண்
டண்ணாவென்றேயழைப்பா ... ரிலையோ
இகத்தில்எங்கென்றுகாண்பேன்-முகத்தைகண்டாறவென்றால்
எந்தத்தேசமோஎந்தத் ... தொலையோ

(ச) தந்தையுந்தாயும்நீரே - எந்தன்மகனுக்கன்னான்
தந்தையாரும்அறி ... வாரே
எந்தனுக்கில்லையென்றே - தந்தசெல்வத்தைஎல்லாம்
எடுத்துக்கொண்டார்தாயாதி ... மாரே

(ரு) ஒருத்திநான்இவன்எனக் - கொருமகன்சிறுபாலன்
ஒருவருந்துணைகாணேன் ... நேரே
திருத்தமாயெங்கும்நிறை - சிவனேநின்திருவுள்ளந்
தெரியாதுண்டோரட்சிப் ... பீரே-௨௨ய.

---

விருத்தம்.

விழுந்தவள்தன்வழக்கொழிப்பாரருளால்கொஞ்சம் *
விழிதுயின்றாள்அவள்கனவில்விமலர்சென்று *
அழுந்தடங்கண்ணாய்நாளை அவரைஎல்லாம் ... *
அரசன்மேல்ஆணையிட்டு மன்றிலேற்று ... *

## ருகூ-வது-மாமனுகவந்து வழக்குரைத்தது.

எழுந்தருளுநாமேஉன்வழக்கைத்தீர்ப்போம் *
என்றுரைத்தார்விழித்துமகிழ்வொடுமற்ருநாள்த் *
தொழுந்தடங்கைகுவித்தரனைப்பணிந்துசென்று *
தொடுத்திட்டாள்சினத்தவரைத்தடுத்திட்டாளே (ருாரு)

பதம் - செஞ்சுருட்டிராகம் - ஆதிதாளம்

[ பல்லவி. ]

வழக்குரைப்பீரே - வலுத்தவர்நீரே

[ அநுபல்லவி. ]

உழக்குக்குள்க்கிழக்குமேற் - கோநகைப்பாரே

வழக்கு

[ சரணங்கள். ]

(க) எண்ணுமலாரோ - வென்றுரைப் ... பீரோ
அண்ணனென்மகனுக்கீந் - ததையாருமறி யாரோ
வழக்கு

(உ) ஆடவர்நீரே - யாகில்இவ் ... ஆரே
கூடும்சபையில்த்தலை - குனியாமல்எந்தன் னேரே
வழக்கு

(ரு) அடுப்பனல்மூட்டி - அடந்தனைக் ... காட்டி
எடுத்தடிவைக்கக்கூடா - திறைவன்மேலாணை நாட்டி

வழக்கு- உஉக.

---

விருத்தம்.

எனவுமறித்திடஇவளுக்கிவளவென்ன ... *
வென்றடித்துத்தள்ளிவிட்டார்எழுந்துமங்கை ... *
மனவலியால்மகனெடும்ஞாயஸ்தலத்தில் ... *
வந்துமுறைஇட்டாள்கேட்டவர்கள்விட்ட ... *
சினமிகுசேவகரால்மற்றவரையெல்லாஞ் ... *
சிக்கிரத்தில்த்தடுத்தங்கேகொணர்ந்தபோது ... *
தனபதிபோல்எழுந்துசுந்தரேசர்சேவை ... *
தருகின்ருர்சபைநோக்கிவருகின்ருரே (ருாச)

சோமசுந்தரேசுவரமூர்த்தி செட்டிபிள்ளைக்கு மாமன்போல்
ரூபங்கொண்டுவந்து வழக்குதீர்த்துவிட்டது

பதம் - அடாணாராகம் - ஆதிதாளம்

[ பல்லவி. ]

வந்தார்தனபதியெனத் - தரிசனம் - தந்தாரே ஈசர்.

[ அநுபல்லவி. ]

செந்தாமரைமுக - மண்டலமிசைந் ... திடச்
செவியில்விளங்கிஇரு ... குண்டலமசைந்திட
வந்தார்

[ சரணங்கள். ]

(க) அங்கதந்தோளிலிட் - டாரமார்பில்மின்ன
அணிவிரல்மோதிரக்கை ... வீசி
அதிகெறுவிதமுள்ள - ரிஷபமெனநடந்து
அடர்ந்தவணிகரெல்லாமனங் ... கூசி
தங்கஇவ்வூரரச - னில்லாநகரோதெய்வந்
தானுமில்லையோதர்மஙிறை ... வாசி
தவறிவிட்டுதோவனு - வேவழக்கோஏழை
தங்கக்கூடாதோவென்று - சங்கம்நடுங்கப் ... பேசி
வந்தார்

(உ) பரதவித்துமருக - னுடுதங்கைபணிந்திடப்
பரிந்தெடுத்தணைத்துக்கண் - ணீர் தூற்றி
பாலன்பணிகளையும் பறித்துக்கொண்டாரோஇனிப்
பாரென்றுகண்துடைத்தே ... தேற்றி
இரவுபகலலைந்து - கள்ளங்கபடாய்வட்டி
இட்டுவாங்காமல்த்தேடித் - தொகை ... ஏற்றி
இருந்தஎன்பொருள்போமோ - இந்தவழக்கைமேலோ
ரிவரால்த்தீர்த்தருள்வீர் - சிவனேஎன்று போற்றி
வந்தார்

(ங) இனமன்னர்கோல்மறுநூல்தர்மத்தட்டும்நாக்
கேமுனையறந்தரா - சில்த் ... தூக்கி
இவைசொல்லுமெனச்சவை - யோரிருமொழியுங்கேட்
டிழுக்குஞாதிகள்வழக்கென ... நோக்கி
தனபதிஇவரல்ல - வெனஎதிரிகள்சொல்லத்
தருமடையாளஞ்சொல்லிஐயம் ... நீக்கி
தருமஅம்மான்காணிக்கு மருமானேஎனச்செய்து
தாயாதிகள்ஒளிந் - தோயப்பயமுண் ... டாக்கி
வந்தார் - உஉஉ.

## ௩௫-வது-மாமனுகவந்து வழக்குரைத்தது.

விருத்தம்.

வந்துபுக்திலிகித சாட்சிகளிஞலிம் ... *
மருகனுக்கேகாணியெனவெழுதிசுந்து ... *
இந்துவணிபவர்மறைந்தார்பலருங்கான ... *
இவர்நமையாள்மதுரேசர்என்றறிந்து ... *
வந்துசிறுவனைப்புகழ்ந்துவரிசைநல்கி ... *
வரன்கோவில்அலங்கரித்துச்சிலநாள்வாழ்ந்து *
சிந்துவளேஉலகைமகனுளப்பாத ... *
சேகரபாண்டியன்சிவன்சேவடிசேர்ந்தானே (௩௭௫)

---

விருத்தம்.

இரதிவேடனைஎரித்தோர் - இனியமாதுலனுய்ச்செட்டி *
மருகனையாண்டலீலை - வழுத்தக்கேட்பவர்கள்வாழ்வார் *
வரகுணன்சிவலோகத்தை - மருவக்காட்டியதோர்நாற்பான் *
திருவிளையாடல்தன்னைத் - தெரிந்திடஉரைசெய்வேனே (௩௭௬)

மாமனுகவந்துவழக்குரைத்த திருவிளையாடல் முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - எ பதம்-௫ ஆக ௰௨.

ஆக பாயிரம்உள்படத் திருவிளையாடல் ௩௬க்கு வெண்பா-௪.

கலித்துறை-௩ கொச்சகம்-௨ விருத்தம்-௨௱௬௭ பதம்-௨௨௨.

ஆக கவிதை - ௫௱௨௮.





நாற்பதாவது

## வரகுணனுக்குச்சிவலோகங்காட்டிய திருவிளையாடல்.

விருத்தம்.

மாமனெனவந்துவழக்குரைத்துச்செட்டி ... *
மருகனையேயாண்டபின்புபாதசேகரன்சே ... *
யாமதிபன்வரகுணன்எண்பகுதியான ... *
அரன்மதுரேசரைமனம்வாய்மெய்யோத்தேற்றி *
காமனைவென்றழகாயிந்திரன்போல்வெற்றி ... *
கலந்திரவிபோல்விளங்கிமூவரைப்போ ... *
லேமருவியுலகாளும்நாளில்ஒருநாள் ... *
ஏகினன்மாமிருகவேட்டைக்கேயன்பாகினனே (௩௱எ)

பதம் - ஆரபிராகம் - சாப்புதாளம்.

[கண்ணிகள்.]

(௧) வேட்டையதாடவென்றேரதத்தினில் - மேவிஉலாவி ... னனே
கூட்டப்படைகளெல்லாம்விரசொடு - கோலவேசாலவேதான்

(௨) காட்டில்மிர்கத்தையெல்லாம்- வளைத்தெதிர்கண்டான்வில்க்கொ
[ண்டானே
நீட்டுங்கையானைசிங்கம்புலிகளும் - நேர்ந்ததுமாய்ந் ததுவே

(௩) வாட்டமுடன்கறடிவராகங்கள் - வந்துயிர்சிந் ... தியதே
கோட்டுக்கலையினங்கள்கால்க்கதி - கூடியேஓ ... டியதே

(௪) ஒட்டமுறுங்கதிரோன்குடதிசை - யுற்றிருள்பற்றிய தால்
மேட்டிமையாய்ப்பரிமேல்நகர்க்கு-விரும்பித்திரும்பினனே ()

---

விருத்தம்.

பரியுலவிவரும்வழியில் - ஒருமறையோன் அயர்ந்தே *
படுத்துறங்கப்பரிமிதித்து - மடித்ததிதையறியான் *
விரியிருளில்வரகுணன்தன் - னரண்மனைவந்துற்றான் *
விடிந்தவுடன்கண்டாங்கு - மடிந்தவனைஎடுத்தே *

சயி-வது-வரகுணனுக்குச்
சிவலோகங் காட்டியது.

தெரியமன்னன்வாசலில்வைத் - துரியவர்களுரைக்கத் *
தென்னவன்தன்பரிமிதித்த - தென்னவெண்ணிப்பிணத்தை
எரியிலிடுகடன்முடிப்பித் - தரியவறம்புரிந்தான் ... *
எத்தனைசெய்தும்அவனைச் - சுற்றியதத்தியதே (கூ௱அ)

பதம் - சௌராஷ்டகராகம் - ஆதிதாளம்.

[பல்லவி]

வரகுணபாண்டியனைப்பிரமகத்திபிடித்து - வாட்டியதாட்டியே

[அநுபல்லவி.]

அருமறையவர்சொல்லால் - விரதஞ்செய்துநூலாய்ந்தும்
அரசுசுற்றியும்தினம் - சுரபிக்குப்புல் லீந்தும்
வரகுண

[சரணங்கள்.]

(க) ஓமமும்பஞ்சகௌவிய - உதகம்நுகர்வும் ... தான
மாமுறையுஞ்சாம்பலி - லாகுதிபோலே ... யான
தேமலிந்திடநெய்யை - இட்டஎரிபோ ... லீன
மாமதியைஉண்டாக்கி - வளைத்துக்கொண்டு ஞான
வரகுண

(உ) எங்குஞ்பெருமூச்சுவிட் - டெறியும்எதிர் ... நகைக்கும்
ஓங்குமலைபோலவே - உயர்ந்துவருந் ... திகைக்கும்
பாங்குமுன்னும்பின்னும் பற்றும் எரிக்கும் புகைக்கும்
நீங்கும்பழிதாவென்று - நெருங்குமிகப் ... பகைக்கும்
வரகுண

(௩) மாசுறுஞ்செழுங்கதிர் - மணிபோலொளி குறுக்கி
தேசறுபாம்பின்வாய்ச் - செழுமதிபோல்ச் சிறுக்கி
வீசுகையானையுண்ட - விளங்கனிபோல் நொறுக்கி
ஏசிமதிமயக்கி - யேவிடேனென் றுறுக்கி
வரகுண, உஉச.

---

விருத்தம்.

வாடியேபழியினாலே - வரகுணன்வருந்தநூலோர் *
கூடியேபழிமேலாகக் - கொள்ளுமுன்வெள்ளிமன்றில் *
ஆடியேநின்றார்செம்பொன் - அடிமலர்முடியில்ச்சூடி *
நாடியேஉறுதியாக - நலமுறநம்பென்பாரே (கூ௱கூ)

பதம்-கலியாணிராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி. ]

மதுரேசரேகே-தியென் றுநம்பினால்ஒரு-வழிவிடுவாருனக்கே

அநுபல்லவி

பதினாலுலகுக்கும் - ஆதியான ... இந்தப்
பதியிலொழியாதுமற்-றெதிலொழிந்திடும் அந்த

மது

[ சரணங்கள் ]

(க) பாருள்ளியாதெள்ளிய - ராயினும் ... ஊழ்வினை
பையநுழைந்திடும் - பொய்யல்லவே ... உனை
நேரெவரெவரையும் - அவரவர்பழ ... வினை
நீங்காதனுபவித்துத் - தொலைக்கவேணுமே நினை

மது

(உ) ஆரைவிட்டுதுஹத்தி - ராமனைச்சுற்றிக் ... கொண்டு
அலைக்கத்தேவையூரில்த்-தொலைக்கவில்லையோபண்டு
தீராதில்லைத்தீரும் - காலம்இடங்கள் ... உண்டு
தினம்ஆயிரத்தெட்டுப் - பிரதக்ஷணஞ்செய்துகண்டு

மது

(௩) பார்த்தின்னமொன்றுகே - ளிப்படிவலஞ் ... சுற்றிப்
பத்துநாள்விரதம் - பிடித்துப்பணிந்து ... பத்திக்
காத்திரெப்படியும்ரட் சிப்பார்சொன்னேமே ... யுத்தி
கலஉமித்தின்றல்ஒரு - அவல்த்தட்டாதா வெற்றி

மது. உஉரு.

—*—

விருத்தம்.

ஓதியேஉயர்ந்தோர்சொன்ன-உரைப்படிகோயிற்கேகி ... *
நீதியோர்மன்னன்கூடல்-நிமலரைவலம்புரிந்து ... *
ஆதியேஅரனேஎங்கள்-அங்கயற்கண்ணளுக்கோர் ... *
பாதியேவருத்துதிந்தப்-பழிஎன்பான்ஒழிஎன்பானே ... (௩௭௰)

சோமசுந்தரேசுவரமூர்த்தியைவரகுணபாண்டியன்
ஸ்தோத்திரஞ்செய்து பிரார்த்தித்தது.

பதம் - உசேனிராகம் - சாப்புதாளம்,

பல்லவி.

பரனேசோமசுந் - தரனேஇந்தப் - பழியாலழிவேனோபரனே

அநுபல்லவி

புரமேஎரியெழ - நகைசெய்ததென்மதுரா
புரிநாயகாவர - ஹரிசாயகா ... பரா

பரனே

## சம-வது-வரகுணனுக்குச்
## சிவலோகங்காட்டியது.

[ சரணங்கள் ]

(௧) கண்ணுயிரன்பழி ... தீர்த்தீர் - அண்டங்
காத்திடவேஅருள் பார்த்தீர்
பண்ணுதகொடும்பாபம்-பண்ணுமறையோன்உய்ய
எண்ணியஇரக்கமும்-எனக்கில்லையோ ... ஐய

பரனே

(௨) என்செயலால்லொன்றும் ... இல்லையே - தெரிந்
திட்டால்வருமோஇந்தக் கொலையே
நெஞ்சையொளித்தொரு - வஞ்சகமில்லையே னே
அஞ்சினவரைக்கெஞ்ச - அடிப்பதும்அறந்தானே

பரனே

(௩) வீணுகக்கருகு ... வேனே - தீயில்
வெண்ணெயெனஉருகுவேனே
வாளுலைவாங்கிஎன்னை-வாட்டுதையோ ... நித்தம்
தோணுதிருந்தாலிது-தொலைப்பதாரென்னசித்தம்

பரனே

(௪) தலமிதைநினைத்தபேர் ... தானே - பாவந்
தணிவார்கள்தினம்வசித் தேனே
கொலையேதெனக்குமது - கோபுரங்கண்டும் பாபம்
தொலையாததிதுவென்ன-சூதென்மேலென்னகோபம்

---

விருத்தம்.

அஞ்சிடஉரைத்திடக்கண்டுஇறைவகேளடிக்கோர் *
அசுவமேதப்பலனும் நம்மைவலம்புரிந்தால் *
நெஞ்சிலினிப்பயமொழியின்-னஞ்சிலநாள்த்தணிக்கில் *
நீநமைநாம்பூசிக்கும் - மருதூரில்வருவாய் ... *
மிஞ்சியபேறருள்வோமுன் - பழிநீங்குமென்றே ... *
விண்ணுரைக்கக்கேட்டுமகிழ்ந்-தான்சிலநாளச்சென்று
வஞ்சிபுனைந்தேசோழன்-வரத்துரத்திச்சென்று ... *
மருதூரில்மருதீசர்-மலரடிகண்டானே ... (௩௱௰௧)

திருவிடைமருதூரில்வரகுணபாண்டியன்பிர்ம்மஅத்திநீங்கி
மருதீசுவரரைக்கண்டு தெரிசனம்செய்தது.

பதம்-பைரவிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

மருதீசரைக்கண் ... டானே - வரகுணபாண்டியன்
மனதில்மகிட்சிகொண்டானே

[அநுபல்லவி.]

ஒருசோழனையும்அத் - தியையுந்துரத்திவென்று
ஓடிவந்துபூசத் - துறையில்மூழ்கிச் ... சென்று
மரு

சரணங்கள்.

(க) பொற்கோவிலை ... நாடி - கீழ்வாசலால்ப்
போம்போதுளம்வாடி
துக்கமுடனேபின்னே - தொடர்ந்தபிர்மஹத்தி
நிற்கவொழிந்துபயம் - நீங்கியேவலஞ் சுற்றி
மரு

(உ) மருதில்ச்சிறந்த தேனை - இருகண்ணெனும்
வாயுண்ணுந்தானே
பருகித்தழல்வாய்வெண்ணெய்ப்-பாவைபோலவேயொத்து
உருகிச்செயல்மறந்து - உடல்பரவச ... முற்று
மரு

(ஙு) நிருமலகிரி வாசா - பரமானந்த
நிர்த்தனமதுரேசா
புரதகனமருதூர்ப் - புண்ணியரவெனத்துதித்துச்
சுரபதியெனப்பழி - தொலைந்துமிகக் களித்து
மரு, உஉஎ.

---

விருத்தம்.

தோத்திரஞ்செய்தேபரனர்-கருணைமொழிகேட்டுத் *
தொழுதுமேல்வாசல்க்கோ-புரந்திருப்பணிகளும் *
நேத்திபெறச்செய்துசில-நாளிருந்துபின்பு ... *
நெடுமதுரைக்கேகியுல-காளும்வரகுணன்றான் ... *
போற்றிமதுரேசர்தமைச் சிவனிரவில்ப்பணிந்தே ... *
புகலுமதுசிவலோகங்-காணவிச்சித்தேனென் ... *
றேற்றிடஅவ்வுலகதைஇவ்-வுலகிலழைத்தே ... *
ஈசருள்புரியநந்தி-ஈசருங்காட்டுவாரே (ஙாஎஉ)

## ௬௰-வது-வரகுணனுக்குச் சிவலோகங்காட்டியது.

நந்திகேசுவரர்வரகுணபாண்டியனுக்குச் சிவலோகத்தினுள்ள பெருமைகளைக்காட்டியது.

பதம்-அசாவேரிராகம்-சாப்புதாளம்.

[கண்ணிகள்,]

(க) வேதமுடியுணர்போதவரகுண
மீனவனேவாராய்-சிவலோக-மானதிதுபாராய்-பலபல
காதமணக்கும்நா - றுயிரமெல்லிதட்க்
கஞ்சமலர்பாராய்-நீர்ஓடைநி-றைஞ்சமலர்பாராய்

(உ) நண்ணியஓடை - பொருந்தும்அமிர்த
நதித்திரையைப்பாராய்-விளங்கும்அதில்க்கரையைப்பாராய்-[மடவியர்
பண்ணிசைவண்டிசை - நாரதர்யாழிசை
பருகுவதைப்பாராய் - இரும்பும்-உருகுவதைப்பாராய்

(௩) மலிபொன்மலர்த்தட-மீறும்அமிர்தத்தண்
வாவிதனைப்பாராய் - மரகதக்- காவிதனைப்பாராய்-மிகஎழில்
பலுகியரம்பைய - ரோடுறைதேவர்
பதங்களையும்பாராய் - அவர்க-ளிதங்களையும்பாராய்

(௪) உகந்தஅமிர்த-அகழும்பொற்கோட்டை
யுரங்களையும்பாராய்-மணிக்கோ-புரங்களையும்பாராய்-உயர்ந்த
சுகந்தருமாளிகை - சூளிகையின்மணிச்
ஜோதிகளைப்பாராய்-மலர்த்தெரு-வீதிகளைப்பாராய்

(ரு) ஐம்புலனுக்கும்-விருந்தெனவேசெய்யும்
ஆடல்களைப்பாராய்-சிலசில-பாடல்களைப்பாராய்-இந்தஉல
கம்புகழும்நல்-லறுசுவையூண்களும்
கந்தங்களும்பாராய்-திவ்வியசு - கந்தங்களும்பாராய்

(௬) சேரும்உருத்திரர் மாதருடன்வாழ் [ந்திடு
திடங்களையும்பாராய்-இருக்கும்- இடங்களையும்பாராய் - சிற
பார்புகழ்மாலயன் இந்திரன்முதலோர்
பதிகளையும்பாராய் நிறைந்த நிதிகளையும்பாராய்

(௭) மிகுந்தசரிதையி னல்சிவபத்தி
விவேகம்பெற்றோர்பாராய் இவர்கள்சா லோகம்பெற்றோர்
[பாராய்-பரனைத

தருந்தகிரியைப்படி-பூசித்தநேசப்பிர
தாபம்பெற்றோர்பாராய் - இவர்கள்சா - லோகம்பெற்றோர்
[ பாராய்
(அ) சாரும்நல்யோக - சமாதியினால்மனஸ்
தாபம்அற்றோர்பாராய் - இவர்கள்சா - ரூபமுற்றோர்பாராய்
[ தெளிந்தறி
வாருமெய்ஞ்ஞானவா - ளாலேபிறப்பறுத்
தச்சமற்றோர்பாராய் - இவர்கள்சா யுச்சியமுற்றோர்பாராய்
(கூ) நீறணிந்தைந்தெழுத் தோதியரனன்பில்
நின்றோரிவர்பாராய் பழவினை வென்றோரிவர்பாராய் - தின
[ ம்அன்பு
தேறிமெய்யன்பரே ஈசரென்றெண்ணிச்
சிறந்தோரிவர்பாராய் பிறவி மறந்தோரிவர்பாராய்.
(ய) தானந்தவஞ்சாம கானஞ்செய்வோர்க்கிடந்
தாபித்தவர்பாராய் இவர்மிகச் சோபித்தவர்பாராய் என்
[ றென்றுமெய்ஞ்
ஞானமொடுசுந்த ரேசரைப்பூசித்த
நற்றவரிவர்பாராய்-உந்தன்குலக்-கொத்தவரிவர்பாராய் ()

---

விருத்தம்.

ஒன்றுகைப்பிரம்பால்நந்தி உகந்தஇவ்வடவேகாட்டி ... *
நின்றரனடியார்கூட்டம் நெருங்கியேதொழவிலக்கிச் ... *
சென்றுமைபாகர்வாழுந் திருவிருப்பதனில்ச்சேர்ந்தார் ... *
கொன்றைவேணியரைத்தென்னர்குருசில்த்தான்தெரிசித்தானே. ()

சிவலோகத்தில்வரகுணபாண்டியன்பரமசிவனைத்தரிசித்தது.

பதம்-கேதாரகௌளராகம்-ஆதிதாளம்

[ பல்லவி. ]

சிவலோகத்தினில்வரகுணபாண்டியன் - சேவித்துநின்றானே

[ அநுபல்லவி ]

பவலோகம்புகும் - வழிமறித்துத் தழைத்த
பரனார்மதுரா - புரியில்வர ... வழைத்த
சிவ

[ சரணங்கள் ]

(க) சூலந்தரித்துவக்கிர - தந்தமிலங்கவாசல்
தோறுங்காவலாளர் ..., காக்க - கையில்த்

சஉ-வது-வரகுணனுக்குச்
சிவலோகங்காட்டியது.

துலங்கும்வாளெறிதண்டு - கொண்டுபூதகணங்கள்
துஷ்டர்கள்நடுங்கவே ... பார்க்க
மேலவர்தானவ - ரியக்கர்கந்திருவர்
வித்தியாதரர்வர ... மேற்க
மிகுந்தமுனிவர்சித்தர் - யோகியர்சிவசிவ
வென்றுநின்றுதொழ - நன்றுள்ள மாற்க
சிவ

(உ) அண்டர்நாயகர்முன் - இந்திரன்முதலானோர்கள்
அவரவர்துயர்சொல்லிக் ... கொள்ள - அங்கு
அனைவரையும்விலக்கி - மாலயன் இருபாலும்
அகலநின்றுகருமம் ... விள்ள
விண்டலம்புகழானை - முகன்குகன்வீரபத்திரன்
விசையப்பணிகள்கொண்டு ... துள்ள
மெல்லியர்கள்நடிக்கத் - தும்புருநாரதர்
வீணையொலிமுழங்கக் - காணும்புதுமையுள்ள
சிவ

(௩) மறைகளாகமங்கள் - இருமருங்கிலுமிரு
வடிவுகொண்டுதுதிக்கக் ... கோடி - ஒளி
வானிரவிகளென்ன-விளங்குஞ்சிம்மாசனத்தில்
மலைமடந்தையுடனே ... கூடி
உறையுங்கங்கைதிங்கள் - மழுமான்புலிஅதள்
உடையிலங்கப்பணிகள் ... சூடி
உகந்தகடைக்கண்ணருள்-செகந்தனிலெவ்வுயிர்க்கும்
உதவியாதரித்திடும்-முதல்வர்தமையே ... நாடி
சிவ. ௩௨உ௯

———

விருத்தம்

நந்திடாச்சிவலோகந் தன்னில்மூவர் ... *
நாயகரைக்கண்டடங்கா மகிட்சிகொண்டு ... *
சிந்தைமறந்தேபுகழ்ந்து நிற்கும்போது *
சிவலோகம்பண்டுபோல் மதுரையாகி ... *
சுந்தரேசரு மீனம்பிகையுந்தோண ... *
துதித்துப்பூசித்து மகிழ்ந்திருந்தான்தென்னன் *
அந்திவண்ணர்விளையாட்டி தென்னக்கூறும் ... *
அகஸ்தியர்முன்பல முனிவர்நிகழ்த்துவாரே (௩௩௰௪)

பதம் - எமுனகலியாணிராகம் - சாப்புதாளம்

பல்லவி

மாமதுரையில்த்தீரா - தேமருதூரிலிந்த
வரகுணன்பழிதீர்ந்ததேதையா

அநுபல்லவி

சோமசுந்தரேசுவரர் - கயல்கண்ணுளொடுஞானச்
சுருதிபுகழமேவுந் - துவாதசாந்த மான

மாமது

சரணங்கள்

(க) வாசவன்பழிபெற்று ... தேசமெங்குஞ்சுற்றி
வந்தெல்லைமிதிக்குமுன் ... அந்தபிர்ம்மஹத்தி
வீசுங்கதிரைக்கண்டு ... கூசியேயிருளொத்தி
விலகுவதெனஓடப் ... பலனுதவியவெற்றி

மாமது

(உ) அண்டர்கோனயிரா ... வதம்ஓர்முனியால்ப்பெற்ற
அவதியானசாபம் ... அதையும்ஒழித்துமெத்தப்
பண்டொருமறையோனுக் கெங்கும்ஒழியாதுற்ற
பாதகந்தன்னையும் ... பரிவுடனேதொலைத்த

மாமது

(௩) அறமுயர்ந்தவன்மநு முறையொடுசெங்கோலே
அணிந்தவரசன்றன்அஞ் ... ஞானவசத்தினலே
பெறவந்தனுபவிக்கும் ... குறையிதுபுவிமேலே
பிழைக்கடைமருந்தில்வீ-ரியமிராதென்றல்ப்போலே

மாமதுரை - ௩௩௰,

---

விருத்தம்.

அகவன்போடருந்தவரிந்தமொழி ... *
பகரும்பொழுதன்றுபரன்கதைசண் ... *
முகவன்சொல முழுதுமுணர்ந்துதவர் ... *
திகழுங்குறுமுனி யுரைசெய்குவரே ... (௩௰௫)

பதம்-முகாரிராகம்-ஆதிதாளம்

[ பல்லவி ]

வரகுணபாண்டியன் பழியே - இடை
மருதூரினில்தீர்ந்த ... வழியே

சம-வது-வரகுணனுக்குச்
சிவலோகங்காட்டியது

அநுபல்லவி
பரனைப்பரவிராளும் - பணிமுனிவரேகேளும்
வரகுண

சரணங்கள்

(க) எங்கும்புகழுங்கயல்க் ... கண்ணிமருவுஞ்சுந்த
ரேசர்லீலைசெய்து ... நேசமுடனேமுந்த
தங்கும்பதியிலன்னிய ... ஸ்த்தலத்தில்செய்துவந்த
சார்பழிஒழியும்அவ் ... வூரில்செய்ததாமிந்த
வரகுண

(உ) ஏதவ்வூரில்ச்செய்த ... பழியவ்வூரில்முடி
வில்லையென்றுரைத்தது ... இறையவாதிருவடிப்
போதுபுனையுந்தொண்டர் ... தீதஞ்சாதபடி
புரிவரென்றதனாலே ... விரிகதிர்மணிமுடி
வரகுண

(ங) எஞ்சிடாமலந்த ... மதுராபுரியில்த்தீது
யெவர்செய்தாலும்அது ... யெங்குமொழிந்திடாது
வஞ்சகமில்லையே ... அஞ்ஞானவசத்தாலிது
வந்ததென்றேயருள் ... புரிந்தார்அரனப்போது
வரகுண ௩௩௰க

---

விருத்தம்.

பொழிலுயர்வெற்பனீதுபுகன்றிடமகிழ்ந்தார்சீற்றோர் ... *
மொழிபெறுமதுரையன்றுமுதலின்றுவரையில்மேலாய் ... *
செழிவொடுஸ்த்தலங்கட்கெல்லாஞ்சிகாமணியாய்ஞாலத்தில் *
அழிவறுசிவலோகம்என்றகிலங்கள்போற்றித்தன்றே (௩௱௰௬)

விருத்தம்.

திரளுறுவரகுணற்குச்-சிவலோகங்காட்டும்லீலை ... *
நரலைசூழ்உலகில்க்கேட்போர்-நலங்கொள்வார்எமநாதன் ... *
விரளவேவிமலர்அன்று-விறகுதாங்கியநாற்பானோர் ... *
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடஉரைசெய்வேனே (௩௱௰௭)

வரகுணனுக்குச்சிவலோகங்காட்டிய
திருவிளையாடல்முற்றுப்பெற்றது,

ஆ திருவிருத்தம்-௰க. பதம்-௬ ஆ உ௰.

ஆ பாயிரம்உள்படத் - திருவிளையாடல்-ச௰-க்கு-வெண்பா-ச.
கொச்சகம்-உ கலித்துறை-ங. விருத்தம்-௩௱அ. பதம்-உ௱௩க.

ஆ கவிதை-௫௱சஅ-



நாற்பத்தொன்றாவது

## விறகுவிற்றதிருவிளையாடல்.



விருத்தம்.

எழில்கொள்வரகுணனுக்குச்-சிவலோகங்காட் ... *
டியபின்புவரகுணன்பாராளும்நாளில் ... *
மொழியும்வடதேசத்திலிருந்துவீணை ... *
முதிரேமநாதனென்பான்ஒருவன்வந்து ... *
பொழியிசையால்வரகுணன்முன்வரிசைபெற்றுப் ... *
புகல்மதுரைதனில்விடுதியுற்றுயாழ்நூல் ... *
வழியறிந்தோர்தனக்கெதிரிஇல்லைஎன்றே ... *
மதமுற்றான்அதிககறுவிதமுற்றானே (கூ௱௫௮)

பதம்-பந்துவராளிராகம்-ஆதிதாளம்,

[ பல்லவி. ]

எதிரில்லைஎனக்கண்டு - அதிகறுவிதங்கொண்டு
இருந்தானேஏமநாதன்

[அநுபல்லவி]

மதுரவீணையினால்-விருதுபெற்றுல ... ... ... கெங்கும்
மகிழ்வரகுணன்முன்பும் - வரிசைபெற்றதாலிங்கும்
எதிரில்லை

[ சரணங்கள் ]

(க) வீரசங்கிலிபகல்ப்-பந்தங்குடைமேல்ச்சல்லி
விளங்கவீதிஎங்குந் ... ... தோற்றுவான்
மின்னும்பொன்மணிமயச்-சிம்மலலாடம்வைத்த
வெற்றிவீணைதோளில்ச் ... ... சாற்றுவான்
ஆரும்அதிசயித்து மனமுருகியேசூழ
அவர்செவிக்கிசையமு ... ... தூற்றுவான்
அவனியில்வீணைகற்ற வல்லவரெல்லாம்வந்து
அடியேபணிந்திடும் படியேயே மாற்றுவான்
எதிரில்லை

(உ) கற்குஞ்சிஷர்கூட்டம் மனைகள்பலமடங்கள்
கடைத்தெருக்களில்க்கும்பு ... ... கூட்டுவார்

கனகவீணையொளி பளபளென்றுமின்னக்
கையில்க்கொண்டுதந்தி ... ... மீட்டுவார்
அற்புதமிதுவென்று-எவரும்புகழ்ந்துகொள்ள
அதிகமானநயங் ... ... காட்டுவார்
ஆரும்வீணைகற்ற-பேரிங்குண்டோவென்று
ஆராய்ந்தேவசை நேராய் ... நாட்டுவார்
எதிரில்லை

(௩) கூறுஞ்சகலகலா-வல்லவனும்வர
குணபாண்டியனுங்கொண் ... ... டாடியே
கோலமகுடமுடி-யசைத்துச்சபாசென்று
கொடுத்தபணியணிகள் ... ... சூடியே
தேறும்இசைத்தொழிலோர் எவருமொளித்தொளித்துச்
சிந்தைநாணமுற்று ... ... ... வாடியே
திருட்டுநரியைக்கண்ட-ஆடுபோலேமுழிக்கத்
தேசதேசமெங்கு-மேசென்று ... பாடியே
எதிரில்லை - ௩௩௨.

---

விருத்தம்.

வருமிவன்றன்செருக்கறிந்து தென்னர்மன்னன் ... *
வாசல்வித்துவான்பாண பத்திரனென்போனை ... *
அருகழைத்துஇவனை வெல்லுவாயோவென்ன ... *
அரசேஉன்னபி மானத்தாலும்ஈசர் ... *
திருவருளாலும்வெல்வே னென்று ... *
சென்றெதிரிதிறம்நோக்கிச்-சிந்தைவாடி ... *
உருவிலியைவென்ற மதுரேசர்முன்சென் ... *
றுருகுவான்மிகத்துயரம் பெருகுவானே (௩௩௰௬)

ஸோமசுந்த ரேசுவரமூர்த்தியை பாணபத்திரன்
ஸ்தோத்திரஞ்செய்து பிரார்த்தித்தது.

பதம்-ஆனந்தபைரவிராகம் - ஆதிதாளம்

பல்லவி

ஐயனேஅடியே- னுக்குமதுணை- அல்லால்வேறில்லையே
[ அநுபல்லவி ]
மெய்யனேஎன- திசைத்தொழில்களைத் ... தானே
வென்றிடவேயோரெதி - ரிவந்துமுளைத்தானே
ஐயனே

சரணங்கள்.

(௧) அரசன்முன்னே ... நானே - இவனைத்தானே
அகலவெல்வேனென்றேனே
உரைசெய்தபடிவெல்லா - விடிலென்கனதைபோச்சே
உமக்குமன்னனுக்குமிவ் - வூருக்குமல்லோ எச்சே
ஐயனே

(௨) பங்கம்வரலா ... காதே ... இப்போதே
பார்க்கில்இப்பதிமீதே
எங்கும்அவன்தன்சிஷர் ... இசையேமிஞ்சுதே
ஏமநாதன்திறம் ... ஏதோமனம்அஞ்சுதே
ஐயனே

(௩) விருதுதருவீர்நாளை - அவ்வேளை
வென்றஉமதுதாளை
கருதும்அவருக்கொரு - கவலைஇல்லையே அந்தக்
கறடியோடுமல்லுக் - கட்டுவதா ரெந்தன்
ஐயனே. ௨௩௩.

---

விருத்தம்.

துதியார்பாணபத்திரனிது சொல்லிவேண்டிமனைபுகவே *
நிதியார்மதுரைவாசர்சிந்தை நெகிழ்ந்துஅன்றேநிகழ்பகலில் *
நதியார்கொன்றைச்சுமைநீக்கி நகரில்விறகாளனவடிவாய் *
மதியார்முடியில்விறகது சுமந்தார்தெருவில்வந்தாரே (௩0௨௰)

ஸோமசுந்தரேசுவரமூர்த்தி மதுராபுரி பட்டணவீதியில்
விறகுசுமந்து கொண்டுவந்தது.

பதம்-சாவேரிராகம்-ஆதிதாளம்.

பல்லவி

விறகுகொண்டுவந்தார்

அநுபல்லவி.

மறைபுகழ்ந்திடும்ஆதி - மதுரையில்வளர்ஜோதி
விறகு

[ சரணங்கள் ]

(௧) அழுக்கடைந்தகோ-வணமும்பின்புறத்
தரைஞாளில் அரிவாளுங் ... ... காட்டி
அடியில்த்தேய்ந்தமிதியடிதொட்டுச்சிறுகிளாக்
காய்க்கொத்தணிந்துதொங்குஞ் செவி... யாட்டி
முழுக்கமெய்யெலும்பு - தெரியவற்றிஇளைத்து
முதிர்ந்தகிழவனென்னஉடல் ... நீட்டி

முன்னுள்ப்பொல்லம் - பொற்றியசுரைக்குடுக்கை
மூட்டியவீணையுந் - தோளில் ... மாட்டி
விறகு
(௨) தினமும்விறகுகட்டுச் - சுமந்துபங்கிபறிந்து
தேய்ந்ததென உச்சியில்ச்சி ... ... வப்பேறி
திருமுகத்தினிலுமெய் - யினிலும்வேர்வைசிந்தச்
செல்லும்வழிகள்தோறு ... ... மேகூறி
கனமுள்ளவிறகினை - வழிதனில்ச்சுமைதாங்கிக்
கல்லிருப்பதில்ச்சாத்தி ... ... வேசாறி
கண்டபுனல்களெல்லாம்-உண்டுஉண்டுசென்று
காணும்நிழற்கொதுங்கி - ஆணிநின்றிளப் பாறி
விறகு
(௩) கண்டபேரிரங்க - உஃசுஉஃசென்றிரு
கையினாலுந்தலைமேல்த் ... ... தூக்கி
களைத்துக்களைத்துக்கயல் - கண்ணியுங்கங்கையும்
கண்டுநகைத்திடாமலே ... ... நீக்கி
கொண்டவிறகின்விலை - யேதென்றுகேட்பவர்க்குக்
கொள்ளாவிலைசொல்லியே ... ... போக்கிக்
கோநகரெங்குஞ்சுற்றி விறகோவிறகொவென்று
கூறிஏமநாதன்றனை ... ... நோக்கி
விறகு. ௨௩௪.

---

விருத்தம்
விறகுகொண்டுஏமநாதன் மனைவாசல்ச்சார் ... *
வேளையில்ஆதவன்மறைந்தான்விறகையங்குசாத்தி *
இறைவர்புறத்திண்ணைதனில்இருந்துமெள்ளப்பாட ... *
எழுந்தேமநாதன்வந்துஆரென்றான்இவ்வூர் ... *
உறைபாணபத்திரன்பாற் கற்றவரனேகர் ... *
உண்டதில்யானொருவனெனைக்கிழவனெனஇகழ்ந்தான் *
விறகெடுத்துவயிறுவளர்க்கின்றேனென்றனர்முன் ... *
விளம்பிசைஇன்னஞ்சொல்லெனவீணையிற்பாடுவரே (௩௨௧)
ஸோமசுந்தரேசுவர மூர்த்தியேமநாதன் முன்பாக வீணைவாசித்தது.
பதம் - ஆகிரிராகம் - அடதாளசாப்பு,
[ பல்லவி, ]
வீணாகானஞ்செய்தார் - சுந்தரேசுவரர் - வீணாகானஞ்செய்தார்

அநுபல்லவி.

காணுமறைகளுங் - கண்டுபிரமிக்கத் ... தாரு
காவனத்தில்ச்செய்சாம - கானமென்னவேநேரு
வீணை

[ சரணங்கள். ]

(௧) வீணைதோளில்க் ... காட்டிச்- செம்பவள
விரலால்த்தந்திகள் ... மீட்டி - இசைந்தசுதி
கோணாமலே ... கூட்டி - மெய்யிசைக்
குற்றங்கொள்ளாமலேநாட்டி - மற்றெவருக்குங்
தோணாமலேகண்டத் - தொனியுந்தந்தியும் ஒன்றாய்த்
தொனிக்கச்சித்திரம்போலிருந் - தினிக்கவேமிகநன்றாய்ச்
சேணுடர்சொலுஞ்சப்த்த - ஸ்வரத்தில்ப்பல்லிசைநாடி
தீதாரும்உரையாத - சாதாரிராகம் ... பாடி
வீணை

(௨) சங்கீதத் ... தொனியும் - கவித்தொனியும்
தவறாமல்ச் ... கனியும் - ரசம்பெருக
இங்கிதயாழ் ... முனியும் -வீணையைக்கையில்
எடுக்காமல்த்தலைகுனியும் - படியேஇசை
தங்கும்விஞ்சையர்க்கெல்லாங் - தங்கள்கைவீணைசோர
தையலர்களெல்லாரும் - மையல்வலையில்ச் சேர
எங்கும்உள்ளமுனிவர் - தேவர்கள் மூவரும்
எவரும்இசைவலைக்குள்க் - கவியவேமயல்தரும்
வீணை

(௩) பறவைகள்பல ... கோடி - மிர்கங்கள்தங்கள்
பகைமறந்தே - கூடி - நெருங்கிநிற்க
உறையுங்கடலும் ஓடி - வரும்அருவி
யுடநதிகளும் நாடி - ஒலியடங்கி
இசையாழிதுகேட் - டசையாமலே நிற்க
இற்றமரங்களுந் - துளிர்த்துத்தழைத்துமிக்க
நறைமலர்சொரியவே - கீதாமிர்தந் தூற்றி
நாடும்ஏமநாதன் - ஓடும்படியே தோற்றி
வீணை - ௨௩௫.

---

விருத்தம்.

நாதனார்கீதங்கேட்டு - நற்கடற்றுயில்வோனின்பச் ... *
சீதவார்கடலில்வாழச் - செழுமலருற்றோன்ஈசர் ... *

பாதமாமலரினுற்ற - படிபுறப்புலன்களைந்துங் ... *
காததாயெவரும்உள்ளங்-கனிந்திடக்கவிசொல்வாரே(௩௨௨)

பதம் - காபிராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி. ]

என்வஞ்சமனதில்வாழ் ... பவரே - எந்தன்

[ அநுபல்லவி ]

முன்அஞ்சலஞ்சலென்று முழுதும்ஆள்பவரே

(௧) மலரோனுமறியாத ... தேவே - இந்த
மதுரையில் அரசாள வந்தருள்கோவே
என்

(௨) பாடல்மறையறியாப் ... ... பொருளே - இந்தக்
கூடல்க்கோயில்தன்னில்க் - குடிகொண்டவருளே
என்

(௩) நீலவண்ணனறியா ... நிதியே - இந்த
ஆலவாயிலென்றும் - அமர்ந்தபூபதியே
என், ௨௩௬.

---

விருத்தம்.

இந்தஇசைகாட்டிவிறகுடன்மறைந்தார் ... *
இவன்குருவின்திறமேதோஎன்றுஅஞ்சி ... *
அந்தயிடத்தொருவர்சென்றதொருவர்காணு ... *
தனைவருடன்வடதிசையான்அகன்றுபோனன் ... *
சுந்தரநாயகரிதெல்லாங்கனவில்வந்து ... *
சொலக்கேட்டுவிடிந்தெழுந்துபாணபத்திரன் ... *
பந்தமொழித்திடுமதுரேசுவரர்முன்சென்று ... *
பணிந்துபணிந்தெழுந்துநின்றுபகருவானே (௩௨௩)

பதம் - புன்னுகவராளிராகம் - ஆதிதாளம்,

[ பல்லவி. ]

இதுவோவேண்டினேன் அய்யனே - விறகுசுமந்
திடலாமோ ... துய்யனே

அநுபல்லவி.

விதியோநாயினுங்கடை ... யாகியஎனக்காக
வேதமுடியில்நின்று ... விளையாடுமெய்நோக
இது

[ சரணங்கள் ]

(௧) பாரவன ... மிதிக்கவோ - விறகெடுத்து
ஆரமுடியில் ... வைக்கவோ
பாரில்அடாதசொல் - பகரவோநன்று ... நன்று
ஏராதிதுகுற்றம் - என்னால்விளைந்த ... தின்று
இது

(௨.) ஏனிதுநிறை ... யல்லவே - அடியார்க்கெளி
யானென்றெவருஞ் - சொல்லவே
தானிந்தவிளையாடல் - தகுமென்றுதொடுத்ததோ
ஆனந்தத்திருவுரு - அதற்கிது அடுத்ததோ
இது

(௩.) மறைமா ... லயனறியாப் - பரஞ்சுடர்
விறகாளாக ... நெறியா
சிறியேனுக்கா ளென்று - தேவரீர்சொல்ல லாமோ
இறையேநரிக்குச்சிங்கம்-ஏவல்செய்திடப்போமோ
இதுவோ, உ௩எ

---

விருத்தம்.

பரிந்துயிவ்வாறுபாணபத்திரன்தொழுதுதென்னன் ... *
இருந்திடுஞ்சவையைநோக்கிஎகுமுன்தென்னன்சொல்லால் *
விரைந்துசென்றேமநாதன் விடுதியில்த்தூதர்தேடத் ... *
தெரிந்தவர்அவனுக்கானசெயலுரைசெய்குவாரே ... (௩உச)

பதம்-அசாவேரிராகம்-ஆதிதாளம்,

[ பல்லவி. ]

ஏமநாதன்செய்தியைக் கேளும் - விருதுபெற்ற
ஏமநாதன் செய்தியைக்கேளும்

அநுபல்லவி

சோமசுந்தரேசுவரர் ... அருளுற்ற
துரைவரகுணனிடம் ... வரிசைகள்பெற்ற
ஏம

[ சரணங்கள் ]

(௧) ஆரோஒருவிறகு ... காற- னுயர்பத்திரன்
அடிமையென்றுமதுர ... மூற-வீணைகானத்தில்த்
தோராமலேசங்கீத ... மீற-வடதிசையான்
துடிப்பெல்லாம் அடங்கியேமாற- இந்தஊரேழு
பாரோரும் புகழ்ந்திடஇசைத்திட்டான்
பார்த்துத்தலைகுனிந்து மிகப்பயப்பட்டான்

ஏராதுதன்னிசை ... யெனமதிகெட்டான்
இருந்தஇடத்துக்குஞ் சொல்லாமல்ப்போய்விட்டான்
ஏம

(உ.) பாதியிரவென்றும் ... அஞ்சாமல் - இங்கேநமது
பாணபத்திரர்முன் ... கெஞ்சாமல் - விருதிழந்து
ஓதும்அவமான ... மிஞ்சாமல் - தப்பிக்கொள்ளஉளர்
ஒடுங்கியபின்புகண் - டுஞ்சாமல் - கொடைபெற்றது
போதுமினிப்பொழுது ... விடிந்திடில்ச்சின்னம்
புகலுவர்தனையென ... இகழ்வுறுமுன்னம்
காதலொழிந்து ... பிழைத்தோமெனமுன்னங்
கால்பிள்ளையாருக்கென் றோடினான்இன்னம்
ஏம

(௩.) உடுத்ததுயிலையும் ... எடாமல்ப் - பதறிவெற்றி
யுற்றவீணையையுந் ... தொடாமல்- இருந்தமனைக்
கடுத்தவர்க்கும்பொலம் ... விடாமல் - மன்னவன்சவை
யதனில்இனிவரப் ... படாமல் - தேசாதிபர்கள்
கொடுத்தபணியணியுஞ் ... சிவிகையுங்கொடையுங்
கொற்றவிருதுகளு ... மற்றுள்ளபடையும்
எடுத்திடமதியற்று ... வரகுணன்விடையும்
ஏராமல்ஓடிவிட் ... டான்மதமடையும்
ஏம-உ௩அ.



விருத்தம்.

பகரயிதுகேட்டவர்வந்துரைத்தார்பாண்டியன்முன் *
பாணபத்திரனும்வந்து தொழப்பார்த்துநேற்று *
அகமதில்ச்சென்றென்செய்தா யென்றானன்றீசர் *
அடியிணையைத்தொழுததுவும் அவர்கனவில்வந்து *
புகல்மொழியும்சொன்னான்முன் கேட்டதும்பின்னுரையும்
பொருந்தியதாலிதுமதுரேசுவரர்விளையாட்டென்று *
மகிழ்மதுரேசரைப்பணிந்து பாணபத்திரற்கு *
வரிசைமிகச்செய்துதென்னன்வாழ்த்துவன்சாற்றுவனே

பதம்-பூர்வகல்யாணிராகம்-ஆதிதாளம். (௩உ௫)

பல்லவி.

நானும்உமக்கடிமை ... தானே - எந்த
நாளுமேவல்செய்கு ... வேனே

[ அநுபல்லவி. ]

வானும்புகழும்பாண ... பத்திரரேவாரும்
வளரும்என்னுடும்என் னகரும்என்னினத்தாரும்
நானு

[ சரணங்கள். ]

(௧) என்றுங்கற்றவர்களே ... வல்லோ - ரவர்
சென்றுழியெல்லாஞ் ... சிறப்பல்லோ
நன்றுநன்றுமது ... பத்திஉமக்கிப்போது
நாதரடிமையென்றபோதே இப்புவிமீது
நானு

(௨) சிங்கம்போனவழி ... வாலும் - கூடச்
செல்லும்ஐயாஅது ... போலும்
சங்கரர்ஆள்ச்செய்யும்போதே விண்ணில்வாழும்
சதமகன்அயன்மால்இத் தரணிகள்ஈரேழும்
நானு

(௩) இந்தமனுவெனக்குத் ... தருவீர் - மது
ரேசரையேபாடி ... வருவீர்
அந்தவழக்கினிமே லெந்தனுக்குத்தகாதே
அறிந்தறிந்துசெய்தழு தழுதுபடலாகாதே
நானு-௨௱௩௯.

---

விருத்தம்.

வரகுணபாண்டியனிந்த வகைபுகழ்ந்தன்றுதொட்டு *
அரனையேபாடச்சொல்லி அனுப்பினான்பாணபத்திரன்
நரபதியிடத்திற்பெற்ற நன்னிதிஆடையெல்லாம் *
இரவலர்க்கீந்துவீட்டில் ஏகியேமகிழ்ந்திட்டானே ௩௨௬.

விருத்தம்.

தெருவினில்விறகெடுத்தசெயல்இதுகேட்போர்செம்பொன் ... *
அரியணையரசராய்வாழ் வாருயர்பத்திரற்கீ ... ... *
சுரர்திருமுகங்கொடுத்த துதிகொள்நாற்பத்திரண்டாந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௩௨௭)

விறகுவிற்றதிருவிளையாடல் - முற்றிற்று

—*—

ஆ திருவிருத்தம்-௰-பதம்-அ ஆ-௰அ
ஆ பாயிரம்உள்பட-திருவிளையாடல்-சக-க்கு-வெண்பா-ச.
கலித்துறை-௩-கொச்சகம்-௨-விருத்தம்-௩௱௰அ-பதம்-௨௱௩௯,
ஆ கவிதை-௫௱௬௬.



நாற்பத்திரண்டாவது

## திருமுகங்கொடுத்த திருவிளையாடல்.



விருத்தம்.

விறகுவிற்று ஆண்டபின்பு அன்றுதொட்டு ... *
மீனவன்முன்செல்லாமல் பாணபத்திரன் *
இறைவரையேமுப்போதும் வணங்கிப்பாடி ... *
இறைஞ்சும்நியமம்பூண்டான் என்றுங்கண்டு *
மறைபுகழுமதுரேசர் அவன்மனைக்கோர் ... *
வாட்டமும்வாராமல் அவன்பாடிப்போமுன் *
அறையுமன்னன்அறையி லுள்ளபொருட்கோர்கள்வர் *
ஆகுவர்கவர்ந்து கவர்ந்தீகுவாரே (௬௨அ)

பதம் - சாவேரிராகம் - ஆதிதாளம்

பல்லவி

வரகுணபாண்டியன் - பொன்னறையிலெடுத்து
மகிழ்ந்துதினமுங் கொடுத்தார்

அநுபல்லவி

கருதும்அன்பும்இசையும் - பாடலுமிகுந்தேற்றிக்
கனியும்பாணபத் - திரன்மகிழ்ந்திடத் தேற்றி
வரகுண

[ சரணங்கள் ]

(க) கண்டுகண்டிரங்கிச்சிலநாள்க் கனகக் ... காசு
கானம்கேட்டுமகிழ்ந் - தேபலநாள்த் ... தேசு
கொண்டபலபணியின் - வகைசிலநாள் ... வீசு
கோலச்சாமரைபொற் - காம்புகனகத் தூசு
வரகுண

(உ) சிலநாள்நவமணி - வருக்கமும்ஒளி ... சூழும்
செம்பொற்றுயிலணையின் - தகடும்சிறந்து வாழும்
கலனறைக்காவலர் - அறியாமலே ... ஆளும்
கடவுள்தானேஒரு - கள்வனாகியே ... நாளும்
வரகுண

(௩) கொடுத்திடும்பொருள்களை - எவரும்அறியா துலைக்
கொடுந்தழலில்உருக் - கியும்சிதைத்தும் ... விலைப்
படுத்திஇரவலர்க்கும் - ஈந்துண்ணவே ... கலைப்
பருமாமதியணி - பெருமான்உயர் ... சிலை
வரகுண - உசாய.

---

விருத்தம்.

ஈவவன்மகிழ்ந்துபாடி இருந்தனன்சிலநாள்ச்சென்று ... *
கோவவன்றனக்கேஒன்றுங் கொடாத்தினுல்க்கலியில்மூழ்கி *
மேவவன்சுற்றத்தோடு மெலிந்திடக்கண்டிரங்கித் ... *
தேவவன்கனவில்வந்தோர் சித்தராய்ச்செப்புவாரே (௩௨௬)

சோமசுந்தரேசுவரமூற்தி பாணபத்திரருக்கு
சொர்பனத்தில்வந்து திருவாய்மலர்ந்தருளித்
திருமுகம் கொடுத்தது.

பதம் - சௌராஷ்டிரராகம் - சாப்புதாளம்

பல்லவி.

கேளாய்பாணபத்திரனே - உன் - கிலேசநமக்கேமித்திரனே

அநுபல்லவி.

நாளாய்வரகுணன் - பொன்னறையில்க்கவர்ந்தோம்
நானுவிதப்பொருள் - தானும்உனக்குத்தந்தோம்
கேளாய்

[ சரணங்கள் ]

(௧) கரும்புருசியென்றுவே - ருடனேகெல்ல லாகாது
காட்டானையுண்டவிளாங் கனிபோலவேஇப் போது
பரும்பொன்னறையைச்செய்தோம்இனிஇத்தொழில்ஆகாது
பலநாளைக்களவொரு - நாள்வெளிவரும் தீது
கேளாய்

(௨) திறத்தகாவல்மிக - இருக்கஇக் ... களவதி
செயமென்றுபலசங்கை - செய்துதென் னரபதி
பெறத்தகாததண்டங் - கொடுத்துஙிறை ... யும்ஙிதி
பேரறைகாத்திருப் - போரைச்செய்வான் அவதி
கேளாய்

(௩) ஆகையினுல்ஒன்று - கேள்முறைப்படிசெங் ... கோல்
அரசுபுரியஞ்சேரன்-அறஞ்செய்தென்றுமேஉன்போல்
ஏகமனதாய்நம்மைப் - பணிபவனவன் ... தன்பால்
ஏகிந்தாதிருமுகம் - எதிராருனக் ... கினிமேல்
கேளாய் - உசாயக.

விருத்தம்.

வந்திதுமொழிந்துமாதவரகன்று ... ... *
மறைக்குரைசெய்திருவாக்கால் ... ... *
மதிமலிபுரிசையெனுமொருகவிதை ... ... *
வகுத்துமேவரைந்துகைக்கொடுத்தார் ... ... *
தந்திடவிடிந்துமகிட்சிகொண்டெழுந்து ... ... *
தருமதுரேசரைப்பணிந்து ... ... *
சலுதியில்வனமும்மலைகளுங்கடந்து ... ... *
தழைத்திடுஞ்சேரனூர்க்குற்றான் ... ... *
முந்தியேவிமல்ர்சேரர்கோன்கனவில் ... ... *
முன்சென்றுபத்திரன்வரவை ... ... *
மொழிந்துநன்னிதிஈந்தனுப்பெனமறைந்தார் ... *
முகமலர்ந்தெழுந்துபத்திரனை ... ... *
நந்தினஞ்சூழ்நன்னகரினில்த்தேடி ... ... *
நால்வகைச்சேனையோடெதிர்ந்து ... ... *
நரபதிவணங்கித்திருமுகமதனை ... ... *
நாடினன்முடியில்சூடினனே ... (௩௩௰)

பதம் - சுருட்டிராகம் - ஆதிதாளம்

பல்லவி

திருமுகத்தைக்கண்டானே - கண்டு - சேரன்சிரசில்க்கொண்டானே

அநுபல்லவி

வருமதியணிமது - ரேசரைப் ... பாடி.
வாழும்பாணபத்திரனைக்கொண்டாடி.
திரு

[ சரணங்கள் ]

(௧) பணிந்துசிரசிலிரு - கரங்கள்குவித்துத்துதி
பாடியாடிநின் - றேமெய்புள ... கித்து
வணங்கிஇருகரமும் - நீட்டிவாங்கியிரு
மலர்க்கண்களிலொற்றியேபிரிய ... முற்று
திரு

(௨) திகழ்மதுராபுரிச் - சிவன்யாமெழுதிய
செய்திசேரனெதிர்கண்டிட ... நேசித்து
தகும்உனைப்போல்நமக் - கன்பன்பாணபத்திரன்
தனக்குநிதிதந்தனுப்பென்றதை ... வாசித்து
திரு

(௩) மனமகிட்சியடங் - காமல்ப்பொங்கிப்பொங்கி
வரமதகயமதிலுரைவலஞ் ... சுற்றி
கனமுரசொலிசெய்ய - வனிதையர்நடமிடக்
கனகமனைதனில்க் - கொண்டேகிமிகு ... வெற்றி

திரு - ௨௪௨.

——○○——

விருத்தம்.

திருமுகத்தைக்கண்டுள்ளமகிட்சிகொண்டு ... *
சேரர்கோன்பாணபத்திரனைப்போற்றி ... *
இருநிதியம்வேணதள்ளியள்ளியீந்து ... *
ஏழடிவந்தனுப்பிச்சென்றிருந்தானிப்பால் ... *
மருவுதிருமதுரைநகர்தன்னில்வந்து ... *
வரகுணபாண்டியன்முதலோர்மனம்பூரிக்க ... *
திருமலரைப்பணிந்துகொண்டுபாணபத்திரன் ... *
நிதம்இரப்போர்க்கீந்துண்டுநிலைபெற்றானே (௩௩௰௧)

விருத்தம்

திருமுகங்கொடுத்தலீலைச்சிறப்பிதுகேட்போர்செல்வப் ... *
பெரியவராகிவாழ்வார்பின்புபத்திரனுக்கீசர் ... *
பருதிபோல்ப்பலகையிட்டுப்பணிகொள்நாற்பத்துமூன்றாந் ... *
திருவிளையாடல்தன்னைத்தெரிந்திடஉரைசெய்வேனே (௩௩௨)

திருமுகங்கொடுத்த திருவிளையாடல்

முற்றிற்று.

——◇※◇——

ஆ திருவிருத்தம் - ரு - பதம் - ௩ - ஆ அ.

ஆ பாயிரம் உள்படத் திருவிளையாடல் - ௪௨-க்கு வெண்பா-௪.

கலித்துறை-௩. கொச்சகம்-௨ விருத்தம்-௩௱௨௩ பதம்-௨௪௨

ஆ கவிதை-ருா௭௪.





நாப்பத்திமூன்றாவது.

## பலகையிட்ட திருவிளையாடல்.



விருத்தம்.

திருமுகமீந்தாண்டபின்புபாணபத்திரன் ... *
தினமுமதுரேசர்முன்புகானஞ்செய்து ... *
அருள்பெறுவானவனொருநாள்அர்த்தசாமம் ... *
அதற்குவருபோதரனார்விளையாட்டாலே ... *
கருமுகில்மாமழைபொழியமண்ணும்விண்ணும் ... *
கடந்தவர்செய்சோதனையுங்கடந்துதோண ... *
இருளில்க்காலால்வழிதேடிக்கொண்டேகி ... *
ஈசர்பதஞ்சூடினன்பாடினனே. ... (௩௩௩)

பதம் - பியாகடைராகம் - ஆதிதாளம்.

பல்லவி.

ஆணோபெண்தானோ - அலியோசொல்லிவரே

அநுபல்லவி.

வாணுதலேமதுரை - வாசரானவரே

ஆணோ

சரணங்கள்

(க) ஐயமென்றுவந்தார் ... அம்புலிச்சண்டைகண்டேன்
மையணிகுழலுமோர் மருங்கில்க்கண்டையங்கொண்டேன்

ஆணோ

(உ) அடவுள்ளபாடல்கேட் ... டணைந்திடநேசித்தேன்
உடல்விதம்இரண்டுகண் டொல்கியேயோசித்தேன்

ஆணோ

(௩) மோகித்தேன்முலைதொட்டார் ... முபங்கிச்சேருவேனனே
ஆகத்திலொருபெண்கண் ... டஞ்சிநின்றுவிட்டேனே

ஆணோ - உசங.

[ வெண்பா. ]

அன்றுஇந்தப்பாடல்கேட்டையனருள்புரிந்து ... *
என்றுமிந்தப்பலகையின்மீது-நின்று ... *
நயம்பெற்றபாடல்நவிலென்றுவிண்ணில் ... *
இயம்பிப்பலகையிட்டாரே (௩௩௪)

பதம்-தோடிராகம்-சாப்புதாளம்,

[பல்லவி.]

பாணப்பத்திரன்பத்திக் ... கிரங்கியிதன்மேல்நின்று
பாடென்றுபலகையிட்டார்

[அநுபல்லவி]

காணத்தேடும்அரு ... மறைக்கும்எட்டாதநேசர்
கருதும்அன்பரைத்தேடி ... வரும்எங்கள்மதுரேசர்
பாண

[ சரணங்கள் ]

(க) மாசில்லாதபெரு - நேசமுள்ளஅடியார்
மகிமையைப்பார் ... ... மேலே - பல
தேசமெங்கும்அறிய - வேசெய்யவேணுமென்ற
திருவிளையாட் ... ... டாலே
வீசியபெருங்காற்று மண்டு - முயர
விண்முகிலும்இரைந்து கொண்டு - மிக
ஓசைமழைபொழிந் ... திருண்டு - விண்மண்
ஒன்றுந்தோணுயிரவில்ச்சென்றுபணியக்கண்டு
பாண

(உ) கிள்ளிக்கிட்டநிற்போர் - தெரியாதயிருட்டென்றுங்
கிலேசமற்றே ... களித்து - தள்ளித்
தள்ளிஇரேசீறி... வரும்பெருங்காற்றுக்குந்
தறுகாமல்த்தத் ... ... தளித்து
அள்ளிச்சொரியுங்கற்கள்போலே ...மெய்யில்
அடருமழையுமொருக் ... காலே - வரு
வெள்ளப்புனலிழுக்க ... மேலே - மின்னி
விழும்இடிகளுக்குமே-வெருவாமல்வந்ததாலே
பாண

(௩) மெய்யும்நனைந்தணிந்த , துகிலும்நனைந்துதிரு
மேனியும்விடவி ... ... டெங்க - இரு

கையின்விரல்கள்மர - வலிகொள்ளத்தந்திபுங்
கண்டமுங்தொனி ... ... ... மங்க
ஐயன்பள்ளியறைக் ... ... கேக-முன்னே
அடுத்துமனத் துயரம்போக - நல்ல
செய்யுளுரைத்திருகால்...நோகப்- பெருஞ்
சேற்றில்நின்றதால்ஐயன் - திருவுள்ளத்திலன்பாக

பாண-௨சச.

---

விருத்தம்.

பலகைமீதினில்நின்றுபாடென்றஅரனர் ... *
பணிக்கஞ்சியதில்நின்றுபாடிப்பத்திரனும் ... *
நிலவணிவார்அருள்பலகையுடன்வெளியில்வந்தான் *
நெடியவான்மழையொழியஅகத்தில்ச்சென்றிருந்தான்
அலர்கதிரோனுதித்தபின்புவரகுணபாண்டியன்கேட் *
டப்பலகைமீதினில்ப்பத்திரனைவைத்துப்போற்றி *
பலபொருளுமீந்தனுப்பிச்சிலநாட்பாராண்டு ... *
பரவும்வரகுணபாண்டியன்பரன்பதமுற்றுனே (௲௲௫)

விருத்தம்.

துருவமாம்பலகையிட்ட சோதிதன்விளையாட்டீது ... *
தெருளுறக்கேட்போரென்றுந் தேவராய்வாழ்வார்மாதர்... *
இருவர்களிசைவாதேவென் றிட்டநாற்பத்துநான்காந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௲௲௬)



பலகையிட்ட திருவிளையாடல்-முற்றுபெற்றது.

---

ஆ திருவிருத்தம்-௲-வெண்பா-க-பதம் ௨-ஆ கூ.

ஆ பாயிரம்உள்படத் திருவிளையாடல் - சூ௲-க்கு-வெண்பா -௫
கொச்சகம்-௨-கலித்துறை-௲-விருத்தம்-௲ா௨கூ-பதம்-௨ாசச
ஆ கவிதை - ௫ாஅ௰.

நாற்பத்துநான்காவது

## இசைவாதுவென்றதிருவிளையாடல்.

விருத்தம்.

பலகையிட்டாண்டபின்புபரனுருவாகியீசர் ... *
உலகையுற்றுறைந்துவாழும்உயர்வரகுணன்தன்சேயன் *
அலகையோடாடும்யீசரடியிணைபணிந்துமேவார் ... *
விலகயில்ராஜராஜமீனவன்பாராண்டானே (௩௩௭)

தரு-ஆரபிராகம்- ரூபகதாளசாப்பு.

[ கண்ணிகள் ]

(௧) ராஜராஜத்தென்னன்- என்னும்மன்னன் - செங்கோல்
நடத்தியேமுடிபூண்டான்-படி ... யாண்டான்
வாசமாமுலையாரைச் - சிலபேரைச்சொந்த
மரபில்த்தேடிமணந்தான் - செய்து ... புணர்ந்தான்

(௨) வைப்பின்மாதர்சில-ரைப்பலமல- ரைப்புணர்
வண்டெனத்தினம்சேர்வான்- மையல் தீர்வான்
இப்பிறைநுதலாரி- லொருநாரி- வீணை
இசையறிந்திடுந்தொழிலாள்- மிக ... எழிலாள்

(௩) பாணபத்திரன்மனையாள்-திருவனையாள்- தனைப்
பகைத்துவீணைவினையால்- வந்த ... முனையால்
நாணச்செய்திடவேணும்- என்றுதோணும் - படி
நரபதிக்குரைத்திட்டாள் - கரைத் ... திட்டாள்

(௨௪௫)

கலித்துறை.

மித்திரங்தேவிங்கலாதிலேவேறென வேதன்சென்னி ... *
வைத்திரங்தேவிண்ணை யாள்மதுரேசரைவந்தனைசெய் *
பத்திரன்தேவிதன் மேல்ராஜராஜனைப் பார்த்தவன்சே *
ரத்திரங்தேவினைக் கண்முகத்தாளி தறைகுவளே (௩௩௮)

பதம்-காம்போதிராகம்-சாப்புதாளம்

பல்லவி.

இந்தப்பாணபத்திரன்- பெண்டியிவள்க்கு,த்தானென்னகெர்வமன்னவா

[அநுபல்லவி]

சொந்தமென்றெனக்காய்ச்-சொல்லாமல் - நடுச்சொல்லையா
தொல்லுலகினில்வீணை ... வல்லவர்க - ளில்லையா

இந்த

[ சரணங்கள் ]

(க) கற்றதுகையளவு ... கல்லாதுலகிலினம்
கலைமகளோதுகிறு ... ளென்பாரேதினம்
இத்தரைக்குள்மெத்தப் ... படித்தவளென்றுமனம்
எக்களிக்குருள்சாமி ... இதுவோபெரியதனம்

இந்த

(உ) ஆலைஇல்லாஊருக் ... ... கிலுப்பைப்பூச்சக்கரை
அதுபோலிவளிவ்வூருக் ... கல்லால்வைகைச்சுரை
கால்வைத்தால்த்தெரியும் ... மேலுமிவள்சொக்கரை
கைக்குள்த்தரித்தவளாம் ... எய்க்கிருளிலைஉரை

இந்த

(௩) கிரைக்கடைக்குமெதிர்க் கடைவேணுமென்றேது
கின்றதுபொய்யல்லக் ... கேளும்இப்புவிமீது
ஆரையுமதியாத ... இவளையடக்கவாதுக்
கானயெதிரிஇங்கே - அழைக்கவேணும்இப்போது

இந்த-உசசு.

விருத்தம்.

மதிமுகத்தாளிவையுரைக்கராஜராஜன் ... *
மனதிசைந்துவிரைவுடனேஇலங்கைத்தேசம் ... *
அதிலிருந்தோர்வீணைவல்லாள்தனையழைத்து ... *
அன்றுபத்திரன்தேவியையும்அழைத்துப்பாட ... *
முதிர்பகையுண்டாக்கிவிட்டான்இலங்கைமாதும் ... *
மொழிந்தபத்திரன்மாதும்மன்னன்முன்னே ... *
எதிரெதிரேயிருந்தொருவர்க்கொருவர்சொல்லி ... *
ஏசுவார்இசைவாதுபேசுவாரே ... ... (௩௩௬)

தரு-மோகனராகம்-ஆதிதாளம்.

[ கண்ணிகள். ]

(க) பாணபத்திரன்தேவி - யென்றுகேட்டிருந்தேன்
பார்க்கவந்தேனடி ... மானே
காணப்பட்டுதேயுன் - கைவீணையினால்மெத்தக்
கற்றவளென்றறிந் ... தேனே

(உ) அறியவல்லமையில்லா - திருந்தால்இலங்கையைவிட்
டடியெடுத்தேவரு ... வாயோ
எறிதிரைக்கடல்சூழும் - புவிக்கெல்லாந்தெரியுமே
என்சமத்தறிவதும் ... ... நீயோ

(௩) அறியும்எந்தன்சமத்தும் - உந்தன்சமத்துமிங்கே
அரைநொடியில்த்தெரியும்... ... ஆர்க்கும்
பொறிமூடியதனைல்ப்போ - லேபேசிக்கொண்டதால்ப்
பூதலத்தினில்எவர்க் ... ... கோர்க்கும்

(௪) ஏர்க்கும்என்னதுதொழில்- எவரும்அறிவார்அந்த
இலங்கையில்இருக்கும்உன் ... வித்தை
பார்க்கவேணும்என்று -பலரும்இச்சையேகொண்டார்
பாராட்டடிஉன் ... ... சமத்தை

(ரு) எத்தனை குணம்குற்றம் - எவர்தெய்வம்வீணைக்கி
இசைப்பதெவ்வுயிருடல் ... ... இசையே
பெற்றதெவ்வளவிது - சொல்லியென்னுடன்பாடிப்
பேசலால்உனக்கு ... வசையே

(௬) வசையும்கல்விகற்ற - பெருமையும்பலர்கண்டு
மையல்கொள்ளும்அழகும் உனக்கே
இசையுமன்னவன்சவை - மெய்க்கப்பேசவேண்டாம்
இவளவுவருமோசொல் ... எனக்கே

(எ) எனக்குனக்கென்றவர் - தெதிர்த்துக்கேட்டதற்கு
ஏதோஅமத்துகி ... றுயே
சினத்துக்காடுமேடும் - சுற்றுதேநான்சொன்ன
சேதிக்கிவதில்ச்சொல்லு ... வாயே

(அ) வாயுனக்கோடக்கோ - லுக்குமிலையாதுவீண்
வார்த்தைக்கிஆளல்ல ... நானே
ஆயுங்கல்வியின்-திறம்அறிந்துகேட்பவர்க்கு
அஞ்சாமல்வகைசொல்லு ... வேனே
(உசஎ)

விருத்தம்.

என்றிவர்ஒன்றுக்கொன்றுவாதாட ... *
இறைவனும்விலக்குவான்போல ... *
இருவரும்வீணைகானம்செய்திடுவீர் ... *
இருவரில்எவர்கள்தோற்றாலும் ... *
வென்றவர்க்கடிமையாகுவீர்என்றான் ... *
மெல்லியரிருவருமிசைந்து ... *
வீணைகைக்கொண்டுபாடினர்மதுரை ... *
மெல்லியையாவரும்புகழ்ந்தார் ... *
அன்றெனஅரசன்இலங்கைமாதேவென் ... *
றவளெனநோக்கமதறிந்து ... *
அனைவரும்ஆம்ஆம்என்றனர்நானே ... *
ஆகட்டுமெனமன்னன்எழுந்தான் ... *
சென்றனளிலங்கையாள்தென்னன்மோகச் ... *
சேயிழைமகிழ்ந்தனள்பத்திரன் - ... *
தேவியாள்மெலிந்துமதுரைநாயகர்முன் ... *
செல்லுவள்பணிந்துசொல்லுவளே ...(௩சம)

பாணபத்திரர்தேவி சுந்தரேசுவரமூர்த்தியை பிரார்த்தித்தது.

பதம் - சங்கராபரணராகம் - சாப்புதாளம்,

[ பல்லவி. ]

அருள்செய்யவேணும் - இவ்வேளை - உம்மை
அடுத்தவள்நான்மிக- ஏழை

[ அநுபல்லவி ]

நிருபனுகிமது ... ராபுரிதனைக்காத்து
நீதிபுரிந்தநீரே - ஆதரவெனைப்பார்த்து
அருள்

[ சரணங்கள் ]

(க) மன்றிலிருந்துவழக் ... கோரம் - சொல்ல
மன்னவன்துணிந்தான்என் ... னேரம் - இது
அன்றிந்தஉரைபட்ச ... பாரம் - என்று
ஆருரைப்பாரையா - உமக்கேஇதுபாரம்
அருள்

(௨) நானையும்இவ்வுரை ... தானே - அந்த
நாரிக்கேவல்செய்யென் ... பானே - அவள்க்கு
ஆளாகிப்பணிவேனோ ... நானே - அரசு
ஆண்டஊரில்க்கூலிக்கறுப்பாரோ - பெருமானே

அருள்

(௩) ஓதும்சவையும்அவள் ... பங்கே - ஆனல்
உறவார்இனியெனக் ... கங்கே - ராஜ
நீதியில்லைச்சொல்வ ... தெங்கே - தெய்வ
நீதியாகிலும்உண் - டென்றுவந்தேன் இங்கே

அருள், உசவ

---

விருத்தம்.

இவ்வாறுமெலிந்துரைக்கஉனக்குவெற்றிநாளை ... *
யேதருவோஞ்செல்லெனவிண்வாக்குரைக்கமகிழ்ந்து *
மைவார்பூங்குழலாள்சென்றாள்மறுநாளழைத்து ... *
மன்னவன்தன்சவையிலிருவர்கள்பாட்டுங்கேட்டு *
ஒவ்வாதுஇலங்கைமின்னாள்க்கிவள்பாடலென்றே ... *
உரைத்தான்தென்னவன்அதுபோல்யாவர்களுமுரைத்தார்
செவ்வாம்பல்வாய்திறந்துபத்திரன்தன்தேவி ... *
தென்னவனைப்பார்த்துஇதுசெப்புவள்ஒப்புவளே ()

பதம் - பரசுராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி ]

மன்னாநீயே - ஏனோவாரா - வழக்குரைத்தாயே

[ அநுபல்லவி ]

தென்னாஇந்தவர்மம் - செய்வதுவோதர்மம்

மன்னா

சரணங்கள்.

(௧) நடுச்சொல்ல ... வேணும் - செங்கோல்கோர்ணி
னல்எங்கும் ... கோணும்- மன்னவர்க்கிது
அடுக்கல்லக் ... காணும் - சவையில்உள்ளோர்
அனைவர்க்குந் தோணும்

மன்னா

(௨) அறைவதும் ... ஒன்றே - எருமைக்கிவெள்
ளாடேற்ற மென்றே - செங்கோல்செய்யும்
நிறைபோல ... நின்றே - நல்லஞாயம்
நிகழ்த்தாய் நன்றே -

மன்னா

(௩) மதுரேசர் ... முன்னே - இருந்துஇசை
வாதுகேள் ... பின்னே - வென்றதவள்தோற்
றதிவமிளன் ... றென்னே - எவருரைத்திட்
டாலுமெய் சொன்னேன்
மன்னு, உசக.

---

விருத்தம்.

பத்திரன்தன்தேவிசொன்னபடி இசைந்துமறுநாள் *
பாண்டியன்யாவருஞ்சூழ வெள்ளியம்பலேசர் ... *
உற்றுறைமண்டபத்தினில்வந்திருந்தான்பின்னிலங்கை*
ஒண்டொடியும்பத்திரன்தன் தேவியும்வந்திருந்தார் *
அத்தர்சுந்தரேசருமோர் கவிஞன்போல்வடிவாய் ... *
ஆங்குவந்துற்றிருந்தார் அப்போதுகையில்வீணை *
பற்றியிருந்திலங்கைமின்முன் பாடப்பத்திரன்றன் ... *
பத்தினிபின்பரனருளைப் பாடினள்தேடினளே ௩சஉ

பதம் - குறிஞ்சிராகம் - திரிபுடைதாளம்.

பல்லவி

ஏனையாடமக்கிந்த ... நீதி - சொல்லி
எசுவோர்க்கென்சொல்வேன்...சேதி

[ அநுபல்லவி. ]

மேனகர்புகழும்உல் - லாசரே - மதுரை
மீனலோசனைபிரா- ணேசரே சாமி
ஏனையா

[ சரணங்கள் ]

(க) அயன்மாலரிமேல் ... அன்புதொடுத்தீர் - மலரைப்பாம்
பணையைவெள்ளானையைக்... கொடுத்தீர் - இன்பம்
உயர்வானபதம்பெற ... விடுத்தீர் - நல்ல
யோட்டில்லீரேன்பிட்சை ... எடுத்தீர் - சாமி
ஏனையா

(உ) தேனார்மொழிவிழியார் நேரே - மயலாய்ச்
செல்லாதவர்கதிசேர் ... வாரே - என்று
நானுமறையுரைத்தீர் ... நீரே - பாதி
நாரிதன்னுருவாகி ... னீரே - சாமி
ஏனையா

(௩) உறைஉயிர்களையெல்லாம் ... பெற்றீர் - கதியை
உதவிஎங்கும்நிறையக் ... கற்றீர் - மிக்க

பிறைக்கிதேடுவார்போல் உற்றீர் - யோக
பிலெகொண்டவடிவுமெ ... டுத்தீர் - சாமி
ஏனையா - உறுமி.

---

விருத்தம்.

பாடலும்கீதமும் வழுவாமல்ப் ... *
பைந்தொடிபாடினுள் தென்னன் ... *
பண்டுபோல்இலங்கை மங்கையைப்புகழும் ... *
படிக்கிவாயெடுத்தவன் மறந்து ... *
ஏடவிழ்நந்தல்ப்பத்திரன் தேவி ... *
யேயிசைவல்லவள் என்று ... *
எவருமேபுகழ இலங்கையாள்தோளில் ... *
ஏற்றிவைத்தான் அதையாரும் ... *
நாடஅற்புதம்அற்புதம் இதுவென்று ... *
நவின்றரன்மின்னென மறைந்தார் ... *
ராஜராஜனுங்கண்டஞ்சி யேமதுரை ... *
நாயகர்செயலெனப் புகழ்ந்து ... *
ஆடல்சேர்பாணபத்திரன் தேவிக் ... *
களவறுவரிசைசெய் தனுப்பி ... *
அனுதினமதுரேசரைப் பணிந்துலகை ... *
ஆண்டனன்அன்பு பூண்டனனே ... (௩௪௧)

---

விருத்தம்.

தெரிவையர்கள்இசைவாதுசெயித்ததாம் இதனைக்கேட்போர்...*
சரிதையேமுதலாம்பேறு தான்பெற்றுவாழ்வார்ஈசர் ... *
குருளைகள்தனக்குமுன்பால் கொடுத்தநாற்பத்தைந்தாகுந் *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௩௪௪)

---

இசைவாதுவென்ற திருவிளையாடல் - முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-௭-கலித்துறை-௧-பதம்-௬-ஆ ௰௪.
ஆ பாயிரம் உள்படத்-திருவிளையாடல்-௪௪க்கு-வெண்பா ௫
கலித்துறை-௪-கொச்சகம்-௨-விருத்தம்-௩௱௩௩-பதம்-௨௫௰
ஆ கவிதை-௫௱௬௪.



நாற்பத்தைந்தாவது

## பன்றிக்குட்டிகளுக்கு முலைகொடுத்த திருவிளையாடல்.

விருத்தம்.

இசைவாதுவென்றபின்பிராஜராஜத்தென்னன் இருக்குநாளில், திசையோது குருவிருந்ததுறையெனும் ஓரூர்தன்னில்த் தினமும்வாழ்வோன், நசைமேவுசுகலையுடன் சுகலனெனும் வேளாளன் நண்பதாய் மண், மிசையேயீராறு மைந்தர்தமைப் பெற்று வளர்த்தன்பு மிகுந் திட்டானே. ... ... ... (௩௪௫)

பதம் - மத்தியமாவதிராகம் - ஆதிதாளம்.

[ கண்ணிகள். ]

(க) குசகிரிச்சுகலையும் - சுகலனுமைந்தர்பெற்றுக்
கொண்டாரே - துயர் - விண்டாரே
உசரமக்கள்மெய்தீண்டில் - உடல்க்கின்பமெனப்பெற்ற
உருக்கத்தினால்ச் - செல்வப் - பெருக்கத்தினல்

(உ) செல்வத்தில்ப்பெருஞ்செல்வம் - கல்விச்செல்வம்என்பது
தேருமல் - ஒன்றுங் கூருமல்
வில்வித்தைசெய்யும்வேட - ரொடுவேடராய்வளர்ந்து
விட்டாரே - இறந் திட்டாரே

(௩) அன்னைதந்தையாற்றுத் - தறிதலையாய்மூட
ராளுரே - காட்டில்ப் போளுரே
துன்னும்வேடுவரொடு - கூடிக்கொலைசெய்திடத்
துணிந்தாரே - பழி அணிந்தாரே (உ௫௧)

விருத்தம்.

சுகலன்மைந்தர்குருவிருந்ததுறையெனும்ஊர்க்கருகே
சூழ்வனத்தில்த்தவமுறுதேசிகன் தவத்தைக்கொலைத்தார்
புகல்குருஆங்கிவரைமுனிந்தீராறுபேரும் ... *
புன்பன்றியாய்ப்பிறப்பீரெனச்சபித்துப்பின்பு *
சுகமுறுவீர்பரனலென்றருள்புரிந்தார்அந்தச் ... *
சொல்படியேஅவ்வனத்தில்ச்சூகரங்கள்க்கரசாய் *
மகிழ்பன்றிபுணரும்பெண்பன்றிவயிற்றுதித்தே ... *
வளரஅங்குவேட்டைக்குவந்தான் தென்னவனே. (௩௪௬)

பதம் - சாவேரிராகம் - ஆதிதாளம்

பல்லவி

வேட்டையாடநாடினன்-ராஜராஜன்-மிருகங்களை எல்லாஞ்சாடினன்

அநுபல்லவி

காட்டில்த்தூதுவர்கள் - நீட்டிமிர்கத்தடிகள்
காட்டிவழியறிந்து - கூட்டிமின்னேநடக்க
வேட்டை

[ சரணங்கள் ]

(௧) ஈட்டியும்புனைகம்பும் - நீட்டியமுனையம்பும்
இணைத்தவாளும்வில்லும் - பணைத்ததோளும்சொல்லும்
காட்டியபடைகளும் நீட்டியகுடைகளும்
கரியுந்தேருஞ்செல்லும் பரியுஞ்சூழவெல்லும்
வேட்டை

(௨) வனத்தைக்கலைக்கநாய்கள் சினத்துக்குலைக்களங்கும்
வலையைக்கட்டிவரும் கலையைஎட்டிப்பிடித்து
சனத்தைப்பெருக்கிமுய லினத்தைநெருக்கிக்கையில்த்
தரித்துவிடுங்கணையால் எரித்துஉயிர்குடித்து
வேட்டை

(௩) ஆனைகதறநாவிப் பூனைசிதறப்புலி
அஞ்சஎங்கெங்கும்ஒலி மிஞ்சக்கரடிதுஞ்ச
சேனைதொடரப்புள்ளி மானையடரப்பெருஞ்
சிங்கமடங்கயாளி அங்கம்ஒடுங்கிக்கெஞ்ச
வேட்டை-உ௫உ.

---

விருத்தம்.

வழுதிஇந்தவேட்டைசெய்யத்தேசிகன்சாபத்தால் ... *
வருபன்றிக்குட்டிகட்குத்தந்தையெனும்பன்றி ... *
எழும்இனத்தோடெதிர்த்துமன்னன்சேனைகளை அழிக்க *
இறைவன்முனிந்தேபன்றிஇனத்தைஎல்லாம்கொன்று *
பழுதுசெய்தான்அப்பொழுதுபன்றிவேந்தனைப்பெண் *
பன்றிபார்த்தினிநாமென்செய்வோம்நம்மினங்கள் *
முழுதும்இறந்துதுநமையுங்கொல்வான்மீளென்ன ... *
மொழிந்தபெண்பன்றியைப்பார்த் தாண்பன்றிமொழிந்
[ திடுமே. (௩௪௭)

## சூ-வது-பன்றிக்குட்டிகளுக்கு முலைப்பால்கொடுத்தது.

பெண்பன்றியைப்பார்த்து ஆண்பன்றிசொல்லியது.

பதம் - தன்னியாசிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

என்னபேதைமதிசொன்ஞய் - போபோ-இனிமேல்ச்சொல்லாதே

[ அநுபல்லவி. ]

அன்னமேபெண்புத்தி பேதைமைஎன்ன...கற்றும்
அன்றெழுதும்எழுத்தை-அழிப்பாஞேஅயன்சற்றும்
என்ன

[ சரணங்கள். ]

(க) சிங்கம்ரெண்டும்நிற்கும்-துறையில்ப்பன்றிஒன்று
சென்றுநீருண்டு ... போமே
அங்கொருபன்றிநின்ருல்ச் - சிங்கம்ரெண்டாயினும்
அஞ்சும்அக்குலம் ... நாமே - இரை
தங்கும்இடத்தில்ச் ... சூழ்வோம் - எதிர்த்திடில்
தணல்மேலும் ... வீழ்வோம் - மனதஞ்சி
நங்கையேஎன் ... தாழ்வோம் - சொல்லிவன்
நாட்டுக்கரசன்நாம் - காட்டுக்கரசாய்வாழ்வோம்
என்ன

(உ) மூக்குநேரினில் - மலைஎதிர்ப்படினும்
முறிப்பதுகுல ... விருது
கார்க்கக்கடவுளுண்டு - மல்கலங்கினும்மனம்
கலங்குவரோ ... கருது - திடமுடன்
ஆர்க்கும்நான்அடங் ... கேனே- பிறங்கொடுத்
தணுமுனேமடங் ... கேனே-வெல்லாமல்
தோற்கினும்முடங் ... கேனே - வந்துநின்று
தொடுத்தபோரிலினித்-தோற்பெனத்துடங்கேனே
என்ன

(௩) அன்றுவராகம்பொற் - கண்ணனைப்பிளந்தாப்போல்
அடிக்கிறேன்நான் ... இவனை
நின்றுவெல்வேன் அல்லால்-மடிவேன்பிறங்கொடேன்
நிகரோமீனவ ... னே - நில்லு
இன்றுஎனைத் ... தடாதே - பிள்ளைகள்
இருக்குப்பயப்ப ... டாதே - என்றைக்கும்

பொன்றுவதுவி ... டாதே - இறந்திடில்ப்
பொய்யுடம்புபோமல்லாமல்ப் - புகழுடம்புகெடாதே
என்ன-உருங.

---

விருத்தம்.

எனஅரசிவ்வாறுரைத்து இணைப்பெண்பன்றிதனைநிறுத்தி *
தானன்றரனார்பதந்தேடும் தனியேனம்போல்ப்பார்பிளந்து ... *
வானமறையமண்குவித்து வாய்விட்டதட்டிவந்தெதிர்க்க *
மீனவனுங்கண்டம்புமழைவிளைத்தான்வரிவில்வளைத்தானே ௩௪அ

பதம்-சௌராஷ்டிரராகம் - ரூபகதாளசாப்பு.

[ கண்ணிகள் ]

(க) விண்கண்டஞ்சவருமொருபன்றி
வீரம்தன்னைக் ... கண்டான் - கண்டு
மெச்சிமகிழ்ந்திராஜராஜமீனவன்
வில்க் ... கொண்டான்

(உ) கண்கண்டிடுமுன்-வழுதிசொரிந்த
கணைகள்எங்கேயோ ... போச்சே - அது
கடிக்கும்புல்லென - வாயால்வாலால்க்
காலால்த்தூசி ... யாச்சே

(௩) கண்டுவழுதி - சினந்துபெரிய
கரியில்த்தாவி ... னானே - ஆனைக்
கையில்இருப்பு - முசலம்கொடுத்துக்
கடுகிஏவி ... னானே

(௪) மண்டுகோப - முடனேபன்றி
மதகரித்துதிக் ... கரத்தை - இள
வாழைத்தண்டு - போலநறுக்கி
வாங்கித்தேஅதி ... ஊரத்தை

(௫) தேரில்த்தாவிச் - சக்கரமொன்றைத்
தென்னன்விட்டான் ... அறுக்க - வரும்
தீயசக்கரம் - தன்னைவிலக்கித்
தேரைப்பன்றி ... நொறுக்க

(௬) வீரன்பரியில் - ஏறிவேலை
விடவேசுழட்டி ... மதித்தான் - வேலை
விடுமுன்பன்றி - பரியைவதைக்க
மீனவன்கீழே ... குதித்தான்

(௭) குதித்துமண்டை - பிளக்கத்தண்டு
கொண்டுமோட்டி ... னனே - அந்தக்
கோலமதலங் - கோலமாகக்
கொன்றுவாட்டி ... னனே

(௮) எதிர்த்தபன்றி - இறந்துதேபின்
இமயவர்மலர் ... சொரிய - அங்கே
இந்தபன்றிகந் - திருவனுய்த்தே
ரேறினனே ... தெரிய (௨௫௪)

---

விருத்தம்.

இனத்தேனவரசிறக்கப்பெண் பன்றியும்சென் ... *
றெதிர்த்திறந்துகந்திருவ வடிவானகணவன் ... *
தனைச்சேர்ந்துகந்திருவமாதாய்விமானங் ... *
தனிலேறிவிண்ணடைந்தார்பன்றியின்சரீரம் ... *
வனத்தேனமலையாச்சுதென்றதின்காரணமும் ... *
வழுத்தினர்அகஸ்தியர்பின்குட்டிகளீராறும் ... *
புனத்தேங்கியேவாடமதுரேசர் அதின்தாய் ... *
போலடுத்திட்டார்இரங்கிப்பால்கொடுத்திட்டாரே(௰௪௬)

பதம் - பந்துவராளிராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி, ]

பன்றிகுட்டிகளுக்கு - தாய்போலேவந்து
பால்கொடுத்தாண்டாரே

அநுபல்லவி.

அன்றுமதுரேசர்அங் - கயல்க்கண்ணுளொடு கூடி
அவ்விடத்தினில்வினை - யாடும்போது நாடி
பன்றி

[ சரணங்கள். ]

(௧) மாயனன்றுதமது - பாதந்தேடக்கொண்ட
வடிவம்போலத் ... தோண

மாதவத்தேசிக - னுரைதவருமலே
வையகந்தனி ... ... லாண
ஆயுமறைகளெல்லாம் - சகலஉயிர்க்கும்அன்னை
அரனேஎன்பது ... ... ... காண
அண்டருமுனிவரும் - மண்டலமனிதரும்
ஆரும்முத்தொழில்புரி - வோரும்மகிட்சி பூண

பன்றி

(௨) தாயைப்பார்த்துப்பார்த்துக் - காணுமலேபர
தவித்துத்தவித்துத் ... ... தேடும்
சலித்துக்குழந்தைப்பசி - கொள்ளித்தேள்க்கொட்டிய
தகமைஎனத்தள் ... ... ளாடும்
காயும்கடுவெயிலா - லேயுஞ்சோர்ந்துபொறுக்
காமலேகளை ... ... போடும்
காட்டில்இப்படிப்பண்டு - செய்ததீவினையாலே
கருத்துமிகவேநொந்து - பெருத்ததுயரில்வாடும்

பன்றி

(௩) ஓடியேஎதிர்வரத் - தாயென்றுகண்டுவாயும்
உணர்ந்துவயிறும் - ... ஒட்டியே
உலைந்தஉடல்பூரித்து - உன்னிஉன்னிக்குதித்து
உயரத்தாவி ... எட்டியே
கோடிமுனிவர்தேவர் - தேடியுங்கிடையாத
கொங்கைகள்தனில் ... முட்டியே
குடிக்கமெஞ்ஞானப்பால் - கொடுத்துநல்லறிவு
கொண்டுமனிதரைப்போல் - நின்றிடவேகிட்டியே

பன்றி - உருடு.



விருத்தம்

பாலருளீசர்பன்றியுருவமாறி ... *
பாவைகயல்க்கண்ணியொடுமதுரைசார்ந்தார் ... *
கோலமதின்குட்டிகள்தன்முகங்கள்மட்டும் ... *
கோலமாய்க்குறையெல்லாம்மனிதர்போலாய் ... *

## ௪௫-வது-பன்றிக்குட்டிகளுக்கு முலைப்பால் கொடுத்தது.

சீலமழகறிவுபிலம்குணம்நற்கல்வி ... *
சேர்ந்துஈராறுசெங்கதிர்கள்போல ... *
ஞாலமகிழ்பன்றிமலைதன்னில்மேவி ... *
நற்றவஞ்செய்திருந்தார்அன்னளில்த்தானே (௩௫௰)



### விருத்தம்.

இருளிதன்குட்டிக்கேபாலீந்ததாமீதுகேட்போர் ... *
பருவரலொழிந்துவாழ்வார்பன்றிக்குட்டிகளேயேமந் ... *
திரியெனவாக்கியன்புசெய்தநாற்பத்தாறுகுந் ... *
திருவிளையாடல்தன்னைத்தெரிந்திடஉரைசெய்வேனே (௩௫௧)



பன்றிக்குட்டிகளுக்கு முலைகொடுத்த திருவிளையாடல் முற்றுப்பெற்றது.



ஆ திருவிருத்தம் - ௭ - பதம் - ௫ - ஆ ௧௨

ஆ பாயிரம் உள்படத்திருவிளையாடல்-௪௫-க்கு வெண்பா-௫ கலித்துறை-௪ கொச்சகம்-௨ விருத்தம்-௩௱௪௰ பதம்-௨௫௫.

ஆ கவிதை - ௬௱௬.



நாற்பத்தாறுவது

## பன்றிக்குட்டிகளை மந்திரியாக்கிய-திருவிளையாடல்.

விருத்தம்

பன்றிக்குட்டிகளுக்குமுலைகொடுத்துச்சென்றபின்பு * பாரோர்போற்றும்
வென்றித்தென்னவன்மலையத்துவசன் அருள்கயல்க்கண்ணாள் மேன்மையான
கொன்றைச்செஞ்சடைமதுரேசரைநோக்கிஇப்பன்றிக்... * குட்டிகட்கு
இன்றிக்கருணைபுரிந்ததேதென்னஓதென்ன ... * இயம்புவாரே (௩௬௨)

மீனம்பிகா மகாதேவிகேட்டசங்கைக்கிஸோமசுந்தரேசுவரமூர்த்தி திருவாய்மலர்ந்தருளியது.

பதம்-சுருட்டிராகம்- ஆதிதாளம்.

[பல்லவி.]

பசுபதியாமே - பாரினில்நாமே

[ அநுபல்லவி ]

சசிகுலந்தனில்அவ தரித்தசெந்தேனே
பசுபதி

[ சரணங்கள். ]

(க) சகலவேதபுராணங்கள்- எல்லாம் ... நமையே
சர்வஜீவதயாபர-னென்னுமே ... உமையே
புகலும்உயிர்கட்கெல்லாம் - பொதுநாம்கண்ணிமையே
போலக்காப்போம்நமக் - கதுவேதலைச் சுமையே
பசுபதி

(உ.) கருப்புள்முட்டையும்கல்லுள்த் - தேரையும் வாடாதே
கருதிஆட்டுக்குமுடம் - பார்ப்பவன்போல்த்தேடாதே
விருப்பமற்றால்மூவர்-தொழிலும்கை கூடாதே
மீகாமனில்லாத - மரக்கலமும் ... ஓடாதே
பசுபதி

(௩.) தாயும்தந்தையும்அற்று - பசியாலும்வெயி ... லாலும்
தவிக்கும்பன்றிக்குட்டி - களைஆதரித்துப் ... பாலும்

மந்திரியாக்கியது.

ஆயுமறிவும்கொடுத் - தோம்மனிதரைப் போலும்
ஆக்கினேம்மந்திரிக-ளாக்குவோம்இனி ... மேலும்

பசுபதி-௨௫௬.

விருத்தம்

மானிடமேந்தியபரனர்இவ்வாரேதி ... *
வழுதிகனவினில்வந்துவராகமைந்தர் ... *
கானிடமேவியதுரைத்துஅவரையுந்தன் ... *
கருத்திசைந்தமந்திரியாய்க்கைக்கொள்ளென்ருர் *
கோனிடமேவியஅமைச்சராலழைக்கக் ... *
கோலமைந்தர்தென்மதுராபுரியில்வந்து ... *
வானிடமேவியகீர்த்திராஜராஜ ... *
வழுதிமனமகிழ்மந்திரிமாரானரே (௩௫௩)

பதம்-பைரவிராகம்- ஆதிதாளம்.

பல்லவி.

வராகமைந்தர்பன் - னிருவரும்பாண்டியன்-மந்திரிமாரானர்

அநுபல்லவி

சராசரங்க - ளெங்கினும்நிலை கொண்ட
தற்பரனர் - தருமுலைப்பா லுண்ட

வராக

[ சரணங்கள். ]

(௧) பரசொடுவெண்பொடியே - அணிந்திடும்
பரனர்அருள்ப்படியே
அரசர்க்கதிபன்அனுப் - பியஅமைச்சர்கள்சென்று
அழைத்துக்கொண்டுவர- மதுரையில்வந்தன்று

வராக

(௨) மேதினிஎங்கும் மதிக்க - அரனர்
விளையாடலைத்துதிக்க
தீதில்லாவழுதி - தரும்வரிசைகள் ... பெற்று
சேல்விழிமாதரை - மாலுடன்மணம்உற்று

வராக

(௩) மன்னன்குறித்தநோதி - குடிபடை
மகிழஅமைச்சாநீதி
தன்னில்ஏதுந் - தவறுமலிவர்க ... ளிட
தந்திரமுன்னுமில்லைப் பின்னுமில்லைஎன்றிட

வராக-௨௫௭.

விருத்தம்.

மந்திரிமாராய்மன்னர் மன்னனுக்குயிர்போல்ராச்சிய *
தந்திரம்நடத்திவாழ்ந்து தான்சிலநாள்ச்சென்றப்பால் *
ஐந்திருதிசையும்போற்ற அமைச்சரும்அரசன்றானும் *
நந்திருவினையுந்தீர்ந்துநாதனுர்பதம்பெற்றாரே (௩௫௪)

---

விருத்தம்.

அரியின்குட்டிகளைமந்திரி யாக்கியதிதுகேட்போர்கள் *
சுரிகைமன்னவராய்வாழ்வார் சுகமுறுவலியானனை ... *
குருவிக்கேயுபதேசம்முன்கூறிய நாற்பத்தேழாந் *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே ()

---

பன்றிகுட்டிகளைமந்திரியாக்கிய திருவிளையாடல்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-௪-பதம்-௨- ஆ ௬.

ஆ பாயிரம்உள்படத் திருவிளையாடல் - ௪௬-க்கு-வெண்பா-௫ கொச்சகம்-௨-கலித்துறை-௪-விருத்தம்-௩௱௪௪-பதம்-௨௱௫௭ ஆக கவிதை - ௬௱௰௨.





நாற்பத்தேழாவது

## கரிக்குருவிக்குபதேசித்ததிருவிளையாடல்.

———(:)(*)(:)———

விருத்தம்.

பன்றிக்குட்டிகளைமந்திரியாக்கியருளியபின் ... *
பார்த்திபர்கோன் அருள் சுகுணபாண்டியன்பாராள *
நன்றற்றகாகமுதல்ப் பறவையெல்லாம்கொத்த *
நடுங்கிஒருகருக்குருவி நகர்வனங்களெங்கும் ... *
சென்றெய்த்தோர்வழிச்சாலை மரக்கொம்பிலிருக்கத் *
தெளிதவத்தோன்ஒருவன் யாத்திரைபோய்வந்தங்கே *
அன்றத்தருவினிழலிலிருந்து சிலர்தமக்கு ... *
அருள்மதுரைஸ்தல விசேடத்தைச்சொல்லுவனே ௩௫௬

பதம் - பிலகரிராகம் - ஆதிதாளம்

பல்லவி.

மதுரைஸ்தலம்போலில்லைக் காணும் - கண்டு
மகிழ்ந்தவர்க்கென்னதவம் வேணும்

[ அநுபல்லவி. ]

எதுவும்மறுமையினில் - முத்திதந்திடும்இது
இகத்தில்முத்திதந்திடு - மகுத்துவமிகுந்தது
மதுரை

[ சரணங்கள். ]

(க) தீர்த்தமூர்த்திஸ்தல மூன்றும் - தானே
சிறந்ததுஎவர்க்கிதுதோன்றும்
யாத்திரைபோயெந்த - ஸ்தலங்களுங்கண்டுசுற்றி
யவர்அறிவார்அருந் - தவர்அறிவார் வெற்றி
மதுரை

(உ) கண்டதைஇணைசொல்லப்போமா - சக்
கரையுமாவுஞ்சரி யாமா
மண்டலத்தில்த்தெரிசித் - தவருக்குக்கரதலா
மலகம்போலிகத்தில் - நலமருள்மறுவிலா
மதுரை

(௩) இரந்துண்டாகிலும்அவ் ... வூரில் - வசித்
திருப்பவர்க்கிணையுண்டோபாரில்
வருந்தும்பலவியாதி - அக்கினிமே லிருந்து
மாதவஞ்செய்யினுந் - தீராதிதுவேமருந்து
மதுரை - உருஅ

---

விருத்தம்.

கனமதுரைப்புகழுரைக்கக் கொம்பில்மேவும் ... *
கருக்குருவிதானுங்கேட் டறிவுண்டாகிச் ... *
சன்னம்வந்தவாறும் அதைத்தீர்க்கும்வாறுந் ... *
தானினைந்தேஎழுந்து தென்மதுரைக்கேகி ... *
கனகவனசத்தடத்தில் மூன்றுநாள்முக் ... *
காலமுமூழ்கிப்பரனைத் தொழுதேநிற்க ... *
அனநடையம்பிகைஇதன்வாறென்னவென்று ... *
அரனுரைக்கேட்க உமைக்கதுசொல்வாரே (௩௫௭)

மீனம்பிகாமகாதேவி கேட்டசங்கைக்கி ஸோமசுந்தரேசுவரமூர்த்தி
கரிக்குருவியின் வரலாறு கூறியது.

பதம் - தோடிராகம் - ஆதிதாளம்

பல்லவி.

பெண்ணேஎனதுஇரு - கண்ணேமலயத்துவசன்
பெருமையாகவேபெறும்-அருமையாகியதுரைப் (பெண்)

அநுபல்லவி.

பண்ணேரினிமைபொழி - தண்ணேர்மதுரமொழிப்
பருவமயிலேஎழில் - பெருகுஞ்செங்கயல்விழிப்
பெண்ணே

[ சரணங்கள். ]

(க) புண்ணியஞ்செய்கிறோமென்று - எண்ணியும்பாவஞ்செய்திடப்
போவார்கள்தெய்வத்தையும் - நோவார்கள் அவரவர்
புண்ணியமேசுக மாகும் - பாபமேதுக்கம்
நண்ணும்இதற்ககம்நோகும் - மதியிதென
மண்ணுலகில்க்காணமென்றால் - உண்ணவாய்திறந்துகடி
வாளமென்றால்வாயைமூடும் - வேளைவிடுவாரோநீகேள்
பெண்ணே

(உ) ஓதும்உயர்புண்ணியமும் - தீதுள்ளபாவமுஞ்செய்த
ஒருவன்வந்தித்தக்கருக் - குருவியதாய்ப்பிறந்து

வாதுசெய்துபறவை எல்லாம் - விரட்டிக்கொத்த
வன்தலையில்ப்புண்ணுடுபொல்லாத் - துயர்மிகுந்த
வேதனையதாயெங்கெங்கு - மேதிரிந்தலைந்துமிக
வெம்பிஒருசாலைமரக் - கொம்பில்வந்திருந்ததுகேள்
பெண்ணே

(௩) பண்டுசெய்ததவவுரு - என்றிடஎழுந்துஒரு
பத்தனங்குவந்துசிலர்க் - கித்தலமகிமைபல
கொண்டுநம்மைப்புகழ்ந்திடவேஅதெல்லாம்இந்தக்
குருவிச்செவியில்ப்படவே - மெய்ஞ்ஞானநிலை
கண்டறிவுகொண்டெழுந்து - தொண்டுசெய்துநம்மைவந்து
காத்ததுஇனித்துயரந் - தீர்த்திரட்சித்திடுவோம்கேள்
பெண்ணே - ௨௫௯.

---*---

விருத்தம்.

நேசித்துமையாள்க்கிதுஉரைத்துநிமலர்கருணைமழைமாரி *
வீசிக்குருவிதனக்கன்று மிர்த்திஞ்ஜெயமந்திரத்தைஉப ... *
தேசித்திடவேசிற்றறிவுதீர்ந்துதெளிந்துசிலவரங்கள் ... *
யாசித்துயர்ந்தகருக்குருவியதுதான்துதிசெய்ததுதானே (௩௫௪)

ஸோமசுந்தரேசுவரமூர்த்தியைகரிக்குருவி
ஸ்தோத்திரஞ்செய்துவரம்பெற்றது.

பதம் - எதுகுலகாம்போதிராகம் - ஆதிதாளம்.

பல்லவி.

மதுராபுரிநாயகா - மீனலோசனி-மகிழும்பத்ததாயகா

அநுபல்லவி.

துதியாரெனினும்எளி - யார்கள்தீவினைமாற்றித்
துணையடியருளும் - கருணைவடிவேபோற்றி
மது

[ சரணங்கள். ]

(௧) அன்றுநல்லறஞ்செய்து - இகத்தில்த்தேவரீர் ஓது
அரியமந்திரம்பெற்றேன் - பரத்தில்த்துயர மேது
இன்றுமும்மையுஞ்சிறந் - தேனெனுமிப் போது
இன்னமோர்குறைதீர்க்க - வேணும்இப்புவி மீது
மது

(௨) பறவைகளென்னைப்புண் - செய்துதுரத்திக் கொல்ல
படுத்தியபாடது-தொடுத்தடங்குமோ சொல்ல

திறமுடனானும்அப்படியதுகளை ... வெல்லச்
செய்வீர்செய்தவர்க்குச்செய் - வதுசெத்தபின்பல்ல
மது

(௩) ஐயாநீரருளுமக் - திரத்தைஎப்போதும் பத்தி
யாயோதிநானுமென்-னினமும்வலிமை முத்தி
எய்யாமற்புள்ளெல்லாம் - அஞ்சஅருள்வீர்வெற்றி
எளியேனைவலியானென் - றிடச்செய்வீருலக த்தில்
மது-உசுய.



விருத்தம்

இக்குருவிஇதுவேண்டப் பறவைகளைவெல்லும் ... *
இகலும்தெய்வதம்இருடிசந்தம்உடன்ஒசை *
மிக்கமூன்றுமூன்றெழுத்துபதேசித்தார் ... *
விறல்க்குருவிபெற்றுத்தன்குலமும்தன்னைப்போல் *
முக்கணனர்அருளால்எக்குருவியையும்வென்று *
மொழிவலியானெனவாழ்ந்துமுத்திசேர்ந்ததுஓர் *
தக்கவன்வாழ்ந்திடவேதன்கிளைவாழும்பரன்தாள் ... *
தாழாதாரெளியவர்தாழ்ந்தவர்வலியார்தானே (௩௫௯)

---

விருத்தம்.

உரமுறவலியானுக்கன் றுபதேசித்ததிதுகேட்போர் ... *
இரிதலங்கொழிந்துவாழ்வார் ஈசனார்கருணைசெய்து ... *
குருகுக்குச்சிறந்தமுத்திகொடுத்திட்டநாற்பத்தெட்டாந் *
திருவிளையாடல்தன்னைத்தெரிந்திடஉரைசெய்வேனே. ()

---

கரிக்குருவிக்குபதேசித்த-திருவிளையாடல்-முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம்-ரு-பதம்-௩- ஆக-அ
ஆக பாயிரம் உள்படத்-திருவிளையாடல்-சஎ-க்கு-வெண்பா-ரு.
கலித்துறை-ச-கொச்சகம்-உ-விருத்தம்-௩௱சகூ-பதம்-உசுய,
ஆக கவிதை-சு௱உய.

நாற்பத்தெட்டாவது.

## நாரைக்கு முத்திகொடுத்த திருவிளையாடல்.

விருத்தம்.

கருக்குருவிதனக்குபதேசித்தீசர் ... *
கதிகொடுத்தபின்னுள்வைகைக்கித்தென்பால் ... *
இருக்குமுயர்பெருவாவிதனிலோர்நாரை ... *
இரைதேடிப்பசிநீங்கியேவாழ்நாளில் ... *
பெருக்குநீர்வற்றிஎங்குமழையில்லாதால் ... *
பேர்ந்ததைவிட்டெழுந்துயர்கான்மலையின்மீது ... *
தருக்கள்சூழ்ந்தொருகூப்பிடெல்லையுள்ள ... *
தடவாவியொன்றுகண்டுதெரித்துதாமே ... (௩௬௧)

பதம் - மோகனராகம் - ஆதிதாளம்.

பல்லவி

கண்டுதேநாரை

[ அநுபல்லவி. ]

மண்டுமுனிவருறை - வனத்தினேரே
கண்டு

[ சரணங்கள் ]

(௧) கீர்த்திபெறுஞ்சத்தியமுனி - வீற்றிருக்கும் ... இடத்தை
நேத்தியுள்ளஒருஅதோ - தீர்த்தமெனுந் ... தடத்தை
கண்டு

(௨) சுத்தியுள்ளதீர்த்தத்தைச் - சுற்றியுள்ள ... துறையும்
பத்தியுள்ளமடங்களும் - பற்றியுள்ள ... துறையும்
கண்டு

(௩) மெய்த்தவமுனிவர்கள் - சலத்தில்உறைந் ... தாட
மொய்த்துவெகுமீனவர் - புயத்தில்விளை ... யாட
கண்டு. உ௬௰௧.

விருத்தம்.

வாவிதோய்முனிவரைமீனினங்கள்தீண்ட ... *
மாதவமென்செய்ததுவோஇதைநாம்உண்டால் *
பாவியாமெனப்பசியைவெறுத்துற்றங்கே ... *
பரன்விளையாடலைமுனிவோர்படித்தார்கேட்டு *
மேவியநாரைக்கறிவுமிகுந்துசென்று ... *
விளம்புகூடலில்பொற்றாமரைநீராடி ... *
தேவியொருபாகர்சுந்தரேசர்முன்பு ... *
சென்றுதான்தியானிக்கும்நின்றுதானே. (௩௬௨)

நாரைசோமசுந்தரேசுவரமூர்த்தியைதெரிசித்து
ஸ்தோத்திரஞ்செய்தது.
பதம்-சுருட்டிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

சந்திரசேகரா - அரசிவசங்கர - சம்போகிரிவாசா

[ அநுபல்லவி. ]

மந்திரவேதசுரவந்தித - சரணாரவிந்தமாமதுரேசா
சந்திர

[ சரணங்கள் ]

(௧) பத்தஜனப்பிரியபாலலோசன - பாண்டியதேச பூபா
நித்தியநிர்மலநிராமயநிற்குண - நியமாகிரி சாபா
சந்திர

(௨) சாமவேதசங்கீதவினோதா - சற்ஜனபரி ... பாலா
சோமசுந்தராகாமபுரதகன - துற்ஜனபர காலா
சந்திர

(௩) ராஜேசுவரிமீனலோசனிபாப- விநாசனிபிரா ணேசா
பாசபவதுரிதமோசனவாசவ - பூசிதகை ... லாசா
சந்திர. ௨௬௨.

விருத்தம்.

பண்ணியதியானமிந்தப்படிநாள்மூவைந்துசெய்து ... *
பசியால்வெம்பி
தண்ணியல்பொற்றாமரையில்மீனையுண்ணாநினைந்ததுபின் *
தான்தெளிந்து
புண்ணியதீர்த்தத்தில்வாழ்உயிர்கொன்றுபசிதொலைக்கப் *
போமோஐயோ
எண்ணியஇம்மடப்பிறவிஎன்றொழியுமெனநாரை ... *
ஏங்குந்தானே. (௩௬௩)

நாரைஜன-னத்தைக்குறித்துத்துக்கமுற்றுக்கூறியது.
பதம்-புன்னாகவராளிராகம் - ரூபகசாப்புதாளம்.

[ பல்லவி. ]

என்றுதானிந்தப்பிறவி - தொலைந்-திடுமோகர்த்தாவே (வெள்ளி)

[ அநுபல்லவி. ]

மன்றிலேநின்றுநடமாடிய - மதுராபுரிக்கோவே
என்று

[ சரணங்கள். ]

(௧) சிவபூசைசெய்திடும்வேளையில்க்கரடிவந்தாப் போலே-சிவ
சிந்தனைசெய்யும்போதெல்லாமிந்த நிந்தனை உடலாலே

கவலைவந்துகூட மனம் காடுமேடெங்குமோடத்
தவம்கலையபவம்குலைய பாவங்கழியாததுற்வழிகாட்டினுல்

என்று

(உ) கனமாம்பசிதாகமென்று களைத்தால்த்தவமேது ஊணன்
கருமம்இழந்தானென்பரே பெருமாநிலமீது
எனவேணும்விவேகம் இந்த-ஈனமாகியதேகம்
இனியாகிலுஞ்சௌனியாவழியினைத்தேடாமல்த்தனைப்பேணி

என்று [ணுல்

(௩) தெளிவும்தெளியாமாயையும்தேவரீர்செயல்தானே என்மே
திருவுள்ளமிரங்காவிடில்ச் செய்குவதென்னநானே [ல்த்
எளியேன்முகம்பாரும்இன்றுஎன்கிலேசத்தைத்தீரும்-பிழைத்
திடத்தேடிக்கும்பிடத்தேவரீர் இடத்தேவந்துங்கடைத்தேறும

என்று-உ௬௩. [ல்

விருத்தம்.

துயருடன்இந்தவண்ணம்- துதிசெய்துதொழுதுநிற்க ... *
நயனமூன்றுடையநாதர் - நாரையின்முன்புதோன்றி ... *
உயர்வரம்என்னவேணும் - உரையெனப்பிறவிதீரத் ... *
தயவுசெய்திடுவீரென்று- சாற்றியேபோற்றித்தாங்கே(௩௬௪)

நாரைதனக்குமுன்பிறத்தியட்சமாயெழுந்தருளிய

ஸோமசுந்தரேசுவரமூர்த்தியைதெரிசித்துவரம்பெற்றது.

பதம்- பந்துவராளிராகம் - ஆதிதாளம்.

பல்லவி.

தரவேணும்இந்தவரமே- இது- தானென்றும்நிலவரமே

அநுபல்லவி

அரவேஅணியாய்- அணிசுந் ... தரனே
அங்கயல்விழியுமை- பங்குறை பரனே

தர

[சரணங்கள்.]

(க) அலைநீர்க்குமிழியாம் ... ... தேகம்-நிலை
அற்றதுஇதுவோசந் ... ... தேகம்-வீசு
வலையதானபெரு ... ... மோகம்-இதை
மாற்றவேணும்உம்மைப் - போற்றும்விவேகம்

தர

(உ) அறிவில்லாதமுழு ... ... மூடம்-உம
தரும்புகழ்கேட்டளி ... ... சேடம் -இந்த
நெறிகண்டேன்எனக்கிவ் ... ... வேடம்-இன்று
நீக்கவேணும்பவந்தீர்க்குஞ் ... சந்தோடம்

தர

(௩) பட்டதென்னசொல்வேன் ... சாட்டை-இல்லாப்
பம்பரமாமிந்தக் ... கூட்டை- நம்பிக்
கட்டினேனேபெருங் ... கோட்டை- இதைக்
கழித்துச்சனனமதைஒழித்தொரு வீட்டை
தர
(௪) நாளைவராதுவி ... வேகம்- அஞ்
ஞானவிசாரம்அ ... னேகம்- இது
வேளைஇவ்வுலகா ... மோகம்- தனை
விலகிவிட்டே - நலமுளசிவ ... லோகம்
தர
(௫) குளிர்பொற்றாமரையில்ச் ... சென்று-பல
குருகினங்களுயிர் ... கொன்று-இங்கே
எளிதாய்ப்பழிசெய்யுந் ... தின்று-மீ
னினங்களில்லாமல்ச்செய்திடுவீர் இன்று
தர- உ௬௪.

---

விருத்தம்.

பெறுவரமீதெனஈசர் அருளிச்சென்றார் ... *
பின்னரைசிவலோகஞ் சேர்ந்துமுக்கண் ... *
உறுபுயம்நான்கொடு விமானத்திலேறி ... *
உம்பர்தொழ நந்திகணத்துற்றுதப்பால் ... *
நறுமலற்பொற்றாமரையும் அன்றுதொட்டின் ... *
னுளறுதிமீன்முதலெவ்வுயிரும் நீங்கி ... *
மறுவொழியவளர்சுகுண பாண்டியனும்பின் ... *
மகிழ்ந்துபுகழ்ந்திடச்சுவற்கமருவினனே (௩௬௫)

விருத்தம்.

குரல்கொள்நாரைக்குமுத்தி - கொடுத்ததாமிதுகேட்போர்கள் *
திரிதருபிறவிதீர்ந்து- தெளிவொடுவாழ்வார்மாம ... *
துரைதிருவாலவாயாந்-துதிகொள்நாற்பத்தொன்பானுந் ... *
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடஉரைசெய்வேனே (௩௬௬)

நாரைக்குமுத்திகொடுத்த - திருவிளையாடல்முற்றும்.

ஆக திருவிருத்தம்-௬ பதம்-௪ ஆக ௰,

ஆக கூடல்காண்டம் ௧-க்கு திருவிளையாடல்-௩௰

ஆக காண்டம் ௨-க்கு பாயிரம்உள்படத் திருவிளையாடல்-௪௮-க்கு

வெண்பா-௫ கொச்சகம்-௨ கலித்துறை-௪ விருத்தம்-௩௫௫.

பதம்-௨௬௪ ஆக கவிதை-௬௩௰,



நாற்பத்தொன்பதாவது.

'திருவாலவாய்க்காண்டம்.

---*---

## திருவாலவாயான திருவிளையாடல்

விருத்தம்.

நாரைக்கேமுத்திகொடுத்திட்டபின்னாள் ... *
நவில்சுகுணனருள்சித்திரவிரதனதி ... *
நேரைச்சேர்ந்திடும்அதுலகீர்த்திஎன்ன ... *
நிகழ்பாண்டியன்வரையிருபத்திரண்டுதென்னர் *
பாரைக்காத்தனர்கள்மகன்மகனாய்வாழ்ந்து ... *
பகரதுலகீர்த்திமைந்தன்பாரேழ்போற்றும் ... *
பேரைச்சேர்கீர்த்திபூஷணனும்பாண்டியன் ... *
பிரபலமாய்ப்புவியாண்டுபேர்பெற்றனே (௩௬௭)

பதம்-சுருட்டிராகம் - ரூபகசாப்புதாளம்.

[ கண்ணிகள். ]

(௧) கீர்த்திபூஷணபாண்டியன்செங்கோல்கிளைத்துவாழும்போது- [பொங்கிக்
கிளம்பிநாலுகடலும்ஒன்றாய்க் - கிட்டிஉலக...மீது
நாற்றிசைப்புவிகாக்குமலைகள் -நாகங்கள்புகர்...முகங்கள்-உயர்
நான்குசோலைஎழுதீவொடு -நவிலுமற்ற...செகங்கள்

(௨) எதுவும்பிரளயகாலமதனால் - ஈரதாகி ... அழிய - சுந்த
ரேசமூர்த்திஇடத்தில்அடங்கிஎந்தஉயிரும் ஒழிய
மதுரையீசரிடகனகவி-மானம்பொற்ற ... மறையும் - இந்த
வரதர்விளையாடலினுண்டாகி-வளர்ந்தநாலுவரையும்

(௩) அழிந்திடாமலிருந்தநீசர் - அருளினால்மலர்...மேலே - மறை
அயனுண்டாகிஉலகுண்டாக்கி - ஞானெனப்போதும்போலே
மொழிந்தமுச்சுடர்மரபில்த்தமிழ்ச்சொல்மும்மன்னரையும் [தந்தான்-அந்த
மூவரில்வங்கிஷசேகரனென்ன-மொழியும்பாண்டியன்வந்தான்
(௨௬௫)

விருத்தம்.

வங்கிஷசேகரன்மதுரைதன்னில்ஈசர் ... *
மதில்சூழ்கோவிலைச்சூழச்சிறிதாயோரூர் ... *
அங்கிசையஉண்டாக்கிஇருந்துவாழ்ந்தான் ... *
அனைவர்களுமிகப்பலுகியதனால்ஆங்கு ... *
தங்கியிருந்திடஇடமில்லாதால்அவ்வூர் ... *
தனைப்பெரிதாய்உண்டாக்குதற்குஎல்லை ... *
இங்கிதற்கெவ்வளவோவென்றறியாதாலே ... *
எழுந்துமதுரேசர்முன்சென்றியம்புவானே. (௩௬அ)

பதம் - கேதாரகௌளராகம்- ஆதிதாளம்,

பல்லவி.

இந்தமதுராபுரிக்குத் ... தானே - எல்லை
எந்தமட்டுள்ளதோ ... அறியேனே

[அநுபல்லவி.]

சுந்தரிகயல்க்கண்ணு - யகிமருவும்பதியே
சோமசுந்தரேசு - வரதயா - நிதியே
இந்த

[சரணங்கள்.]

(௧) எழுகடல்களுங்கரை - புரண்டுதிரண்டு ... பொங்கும்
ஏகோதகமாகி - யேஉலகெங் ... கெங்கும்
அழியும்பிரளயத்திலும் - ஒழியாமலே ... விளங்கும்
அந்தவிமானத்தி - லுறைந்தபரனே ... தங்கும்
இந்த

(௨) ஏதாகிலுமனம் - இடஞ்சலானலு ... மனே
இடஞ்சலாகாதென் - றிடும்பழமொழி ... யினை
மேதினியுரைத்திடு - மேபதிஇது ... தனை
விஸ்தாரமதாக்க - உற்றதென்யோ ... சனை
இந்த

(௩) திருந்தும்இடம்பொருளே - வலில்ஒன்றுங்குறை...யாது
திருநகர்இதில்வசித் - திருப்பவர்தமக் ... கேது
வருந்தவும்ஒருகுறை - யுண்டோவென்ன ... ஓது
மாமறைமொழிபிச - காமல்ச்செய்வீர்இப் ... போது
இந்த - உசுக,

விருத்தம்.

புரமிதற்குஎல்லைகாட்டென்றுதென்னன் ... *
புகழுவரன்சித்தர்வடிவாகிவந்து ... *
கரமதில்வாழ்நாககங்கணத்தைநோக்கிக் ... *
காவலனுக்கெல்லைதனைக்காட்டென்றோத ... *
உரகம்அரன்பதந்துதித்துத்தனதுபேர்கொண் ... *
டுயர்மதுரைவிளங்கவரம்பெற்றெழுந்து ... *
நிருபன்கண்டகமுகங்கண்களிக்கமெய்யை ... *
நீட்டித்தாம்நகர்க்கெல்லைகாட்டித்தாமே (௩௬௧)

பதம் - சங்கராபரணராகம் - ஆதிதாளம்.

[பல்லவி.]

மதுராபுரிக்கெல்லைஎன்றே - நாகம் - வளைந்துகாட்டக்கண்டாரன்றே

[ அநுபல்லவி. ]

கதிரார்முடிமணிக் - கடவுளர்தினம்பணி

மதுரா

[ சரணங்கள் ]

(௧) துதித்தரன்கைவிட் டெழுந்து - ம
துரைநகர்க்குக்கீழ்பால் - வந்து
மதிச்சடைக்கடவுள்தன் - விளையாடலைநாட்டி
மாநிலமகிழ்ந்திட - வளர்ந்துவாலை நீட்டி

மதுரா

(௨) மாநகர்தனைவலஞ் சுற்றிக் - கொண்டு
வந்துவாலைவாயில்ப்பற்றி
தானிதற்குள்ப்பட்ட - தெல்லாந்துவாத ... சாந்த
ஸ்தலமென்றுறைக்கமதி குலமன்னவர்கள்சேர்ந்த

மதுரா

(௩) எவருங்காணநாக ... முன்பு - போல்
ஈசர்கங்கணமாச்சுப்பின்பு
அவனிபுகழ்அரனார் - திருவிருப்பினில்ச்செல்ல
ஆலவாய்நகரி - தாமென்றுருஞ் ... சொல்ல

மதுரா, ௨௬௭.

விருத்தம்.

வந்தெல்லை தனை நாகங்காட்டக்கண்டு ... *
வங்கிஷசேகரபாண்டியன் மனம்பூரித்துக் ... *
கந்தரஞ்சேர் பூவணந்தென்பரங்குன்றேட ... *
கம்இடபகிரிநான்கும்நான்குவாசல்க் ... *
கந்தமுறுமெல்லையாய்நகரைமுன்போல் ... *
ஆக்கியாவரும்வாழ்கச்செங்கோல்செய்து ... *
சிந்தைமகிழ்ந்திருந்தான்அன்னகருங்கோட்டைத் *
திருமதிலுந்திருவாலவாயென்றூரே ... (௩௭0)

---

விருத்தம்.

திரவியமிகுந்தகூடல் திருவாலவாயதான ... *
பிரமைதீர்லீலைகேட்போர் பிறங்கியேவாழ்வார்மாற்றூர் *
அருகவேசுந்தரப்பேரம்பெய்த வன்பதான ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௩௭௧)

திருவாலவாயான திருவிளையாடல் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௫ பதம்-௩ ஆ அ.

ஆ பாயிரம்-உள்படத்-திருவிளையாடல்-௪௬க்கு வெண்பா-௫

கலித்துறை-௪ கொச்சகம்-௨ விருத்தம்-௩௪௬0 பதம்-௨௬௭

ஆக கவிதை-௬௩அ.





ஐம்பதாவது

## சுந்தரப்பேரம்பெய்ததிருவிளையாடல்.



விருத்தம்.

திருவாலவாயானபின்பு வங்கிஷ ... *
சேகரபாண்டியன்செங்கோல் செலுத்தும்நாளில் *
மருவாரைவெல்லும் விக்கிரமச்சோழன் ... *
வளர்பாண்டிநாட்டில்நிரை கவர்ந்துகொண்டு... *
பெருவாசிதேர்கரி காலாள்கள்சூழப் ... *
பிடித்தவில்லொடுவந்தான் அதுகண்டஞ்சி ... *
இருவானமதிசூடுஞ் சுந்தரேசர்க் ... *
கெதிர்சென்றுபணிந்துதென்னன் இயம்புவானே (௩௭௨)

பதம்- செஞ்சுருட்டிராகம்- ஆதிதாளம்

பல்லவி.

என்செய்குவேனே - ஈசனேநானே

அநுபல்லவி.

அஞ்சலென்றருள்செய்வீர் - அஞ்சினேன்அடியேனே

என்

[ சரணங்கள். ]

(க) மைக்கடல்போல்எழுந்து - மிக்கபடைகள்சூழ
உக்கிரமுடன்வந்தானே - விக்கிரமச்சோழன்தானே

என்

(உ) காயும்புலிபோல்வரு - தீயவன்தனைவெல்ல
வேயுயர்சேனைஈதே - ஆயுதமும்போராதே

என்

(௩) அசுவபதிகெஜபதி - நரபதியுடன்வந்தான்
பசுபதியானநீரே- விஜயம்தந்திடுவீரே

என் - உ௬அ.

---

விருத்தம்.

வங்கிஷசேகரன்இவ்வா றுரைசெய்யநீபோய்ப் ... *
பொங்கியசோழனேடும் போர்புரிநாமேவந்து ... *
இங்குனக்கேதான்வாகை ஈகுவோமெனவிண்ணேத ... *
வெங்கதிர்க்குலத்தானேடும் விதுகுலனெதிர்த்திட்டானே (௩௭௩) .

பதம்-மத்தியமாவதிராகம்-ரூபகசாப்புதாளம்
[ கண்ணிகள். ]

(௧) வருவிக்கிரமச்சோழன்மிகக் ... காய்ந்தான்- எதிர்
வந்துவங்கிஷசேகரனும் ... பாய்ந்தான்
இருவோர்படையும் ஒன்றுக்கொன் றெதிர்த்தே- சமர்
இட்டார்மிகக்கொட்டுமுர ... சதிர்த்தே
(௨) கதிரொடுமதியெதுத்தாப் ... போலே-தென்னன்
காவேரிநன்னுடன்றன்முன் ... னுலே
அதிகோபமுடன்நின்றுபோ ... ராட - சோ
ழன்சேனைசூருவளிபோல்ச் ... சாட
(௩) தென்னன்படைபஞ்செனவே ... பறிந்து - பல
திசையெங்கினும்ஒடஇது வறிந்து
முன்னும்தண்ணீர்ப்பந்தல்வைத்தா ண்டவரே- கையில்
முனைவாளியுஞ்சாபமும்பூ ... ண்டவரே
(௪) வேடன்வடிவாகித்தள ... பதியாய்- வந்து
விறல்வாளிசொரிந்திடவே ... நதியாய்
ஒடும்உதிரங்கடல்பாய்ந்த ... துவே- அம்
பொன்றுக்குயிர்நூறுகமாய்ந் ததுவே (௨௬௬)

---

விருத்தம்.

வாளியொன்றுக்கொரு நூறுநூறுவீரர் ... *
மாளஇவ்வலிமையேதென் றனுமானத்தால்ச்... *
சோழனக்கணையைப் பார்த்ததிலெழுத்து ... *
சுந்தரரென்றிருந்ததால் தென்னனுக்கு ... *
வாழுமதுரேசர்துணை யானுர்என்று ... *
மனதஞ்சிஒடினுன் துணையதாகிச் ... *
சூழவரும்துருக்கர் முதலோர்இதாமோ ... *
சொல்லென்பார்சோழனையே நில்லென்பாரே ௩௭௬

பதம்- துசாவந்திராகம்- ஆதிதாளம்
பல்லவி.

நில்லுபோகாதேசோழ ... மன்ன -நாங்கள்
நிற்கநெஞ்சஞ்சுரு ... யென்ன
அநுபல்லவி

வல்லமைஇதுஉந்தன் ... கீர்த்தியைவிளக்குமோ
மழைக்காலிருட்டிலும் ... மந்திகொம்பிழக்குமோ
நில்லு

[ சரணங்கள். ]

(௧) சூரியகுலத்தைக் ... கெடுக்காதே - நீதி
சோழற்குவசை ... கொடுக்காதே - தென்னன்
போரில்ஓடத் ... தொடுக்காதே - பெரும்
புலிக்குப்பிறந்துபூனையாயுடம்பெடுக்காதே
நில்லு

(௨) மாதர்பஞ்சுகொட்டும் ... வில்லோ - கையில்
வைத்தாயேஉண்பதும் ... புல்லோ - உயிர்
வீதல்என்றுமுண்டுமெய் ... கல்லோஇது
வீட்டிலிருக்குமனையாட்டிக்கும்நகைப்பல்லோ
நில்லு

(௩) வெட்டிச்செயம்புரிந்தா ... லாச்சு - இல்லா
விடில்வீரசொற்கமே ... வாச்சு - துந்தன்
மட்டில்நிற்குமோஇந்த ... ஏச்சு - துணை
வந்தஎங்களுக்கல்லோநிந்தனைஎன்ன-பேச்சு
நில்லு உஎ௰.

---*---

விருத்தம்.

நில்லென்னத்துருக்கரொட்டியர்களாரும் ... *
நேர்ந்துதென்னன்சேனைதனைநெருக்கக்கண்டு *
வில்லென்னப்பொன்மலையைவளைத்தார்க்கிதோர் *
விளையாட்டல்லால்எதிரோவில்வளைத்துக் ... *
கொல்லென்னவந்தகல்நெஞ்சர்எய்த ... *
கூரம்பெல்லாம்ஓரம்பாலேபோக்கிச் ... *
செல்லென்னக்கொடியகணைமாரிபெய்யத் ... *
தேய்ந்திட்டார்எல்லவரும்மாய்ந்திட்டாரே (௩எ௫)

பதம் - பைரவிராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி. ]

மாய்ந்தார்கணைமழையால் - அங்கங்கே - சாய்ந்தார்ஓய்ந்தாரே

[ அநுபல்லவி. ]

போர்ந்தவிமலர் ... வந்தேவிளையாடப்
பூச்சியெனும்படைகள்மேல்ச்சரஞ்சாட

[ சரணங்கள். ]

(௧) பத்துவாளியாலே நூற்றுப் - பத்துவெம்பரிகள் ... போக
பத்துவாளியாலே நூற்றுப் - பத்துவெங்கரிகள் சாக

பத்துவாளியாலேநூற்றுப் - பத்துத்தேரதுது ... ளாக
பத்துவாளியாலேநூற்றுப் - பத்துவீரர்அற்று ... வீழ்க
மாய்ந்தார்

(உ) நூறுகணையாலேநூறு - நூறுஅயங்கள் ... மடிய
நூறுகணையாலேநூறு - நூறுகயங்கள் ... பொடிய
நூறுகணையாலேநூறு - நூறுதேர்கள் ... ஒடிய
நூறுகணையாலேநூறு - நூறுபேர்கள் ... முடிய
மாய்ந்தார்

(௩) ஆயிரம்அம்பினாலேநூ - றாயிரம்பகடு ... மாய
ஆயிரம்அம்பினாலேநூ - றாயிரம்சகடு ... ஓய
ஆயிரம்அம்பினாலேநூ - றாயிரம்துரங்கம் ... தீய
ஆயிரம்அம்பினாலேநூ - றாயிரம்பேரங்கம் ... வீய
மாய்ந்தார் - உஎ௯க.



விருத்தம்.

மாண்டனர்புள்ளினங்கள்பேய்கவந்தமாட ... *
மற்றொழிந்தபேர்களுடன்புறங்கொடுத்து ... *
மீண்டனன்சோழனும்வேடனாகிவென்ற ... *
விமலருமேமறைந்தார்தென்னவனும்வெற்றி ... *
பூண்டசங்கமொலித்துத்தென்மதுரைசார்ந்து ... *
புகழ்தந்தபரன்நாமம்வரைந்தஅம்பும் ... *
நீண்டவில்லும்பொற்பணியுஞ்செய்துசாத்தி ... *
நிமலர்பதம்பூசித்துநிதம்வாழ்ந்தானே (௩௭௬)

---

விருத்தம்.

அரிகெடச்சுந்தரப்பே - ரம்பெய்தலீலாது ... ... *
சரளமாய்க்கேட்போர்என்றுஞ்-சத்துருவறவாழ்வார்கள் ... *
அருள்சங்கப்பலகையோங்க-அளித்தஐம்பத்தொன்றான ... *
திருவிளையாடல்தன்னைத்-தெரிந்திடஉரைசெய்வேனே(௩௭௭)

சுந்தரப்பேரம்பெய்த - திருவிளையாடல் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௬ பதம்-௪ ஆக ௰.

ஆக பாயிரம்உள்படத் திருவிளையாடல்-௫௧-க்கு வெண்பா-௫.

கொச்சகம்-௨ கலித்துறை-௪ விருத்தம்-௩௭௬ பதம்-உ௭௯க.

ஆக கவிதை - ௬௪௮.



ஐம்பத்தொன்றுவது

## சங்கப்பலகைதந்த திருவிளையாடல்.



விருத்தம்.

சுந்தரப்பேரம்பெய்தபின்புபெரும்புவியைச் ... *
சுமந்தாளும்வங்கிஷசேகரபாண்டியன்நாளில் ... *
முந்தஅயன்காசியில்ஈரைந்தசுவமேதம் ... *
முடித்துநீராடச்செல்போதுகலைவாணி ... *
பிந்தஇருமாதரொடுமூழ்கினன்வாணி ... *
பின்சென்றுமுனிந்துரைத்தாள்பிந்திநீயின்றும் ... *
எந்தனையேசினந்ததினல்அநேகநரஜன்மம் ... *
எடுப்பாயென்றிடவாணிஏங்குவள்நீங்குவளே. (கூஎஅ)

பிர்ம்மதேவர்கொடுத்தசாபத்தினல் ஸரஸ்வதிதேவி
துயரமுற்றுக் கூறியது.

பதம் - ஆனந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

உம்மைப்பிரிந்துசகிப்பேனே - நர - உடல்எடுத்துயிர்வகிப்பேனே

[ அநுபல்லவி ]

செம்மையோஅம்மியொரு - நாடும்குழவியொரு
தேசமுமாய்மனக்கி - லேசமுமாய்சுவாமி
உம்மைப்

சரணங்கள்.

(க) உயிரைவிட்டுடல்வாழுமோ - இப்படிஎனக்
குவ்விதிவந்துசூழுமோ
துயரநரஜெனனச் - சுழலில்விழுகமனம்
துணிவேனேதுயர் - அணிவேனேசாமி
உம்மைப்

(உ) பெண்மதியால்நான் தானே - தவறுசெய்து
பிழைமோசம்போனேனே
விண்ணுலகைவிட்டின்று மண்ணுலகினில்ச்சென்று
மீள்வேனேமிகத் தாழ்வேனேசுவாமி
உம்மைப்

(௩) எனதுறவு கசந்துதோ - கொடியமொழி
இதுசொல்லநாவிசைந்துதோ
வினவும்தனதுகைதன் விழியைக்குத்தினதாலென்
வெறுப்பாரோகையை அறுப்பாரோசுவாமி
உம்மைப் - ௨எ௨.

கொச்சகம்,

வாணுதலாள்வாணியிந்த - வாருமதிவதனம் ... *
கோணுதலாய்ஓதியது - கோகனகன்சிந்தைதனில் ... *
தோணுதலால்வாணி - துயர்நீங்கவெம்பிறவி ... *
ஆணுதலாகாதவழி - ஆராய்ந்துகூறுவனே (௩எ௩)

ஸரஸ்வதிதேவியைசங்கப்புலவர்களாக அவதரிக்கும்படி
பிரம்மதேவர்அருளியது.

பதம் - மோகனராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

அவதரிப்பதுவே அறைகுவன்இதுவே

[ அநுபல்லவி. ]

கவலையேன்விளையவந் ததுசாவி ... போகாது
கண்ணுக்குவந்ததுபுரு வத்தோடாமிப்போது
அவதரிப்

[ சரணங்கள். ]

(௧) ஆனஉன்மெய்புயிர் - அட்சரம்ஐம்பத் ... தொன்று
அதில்ஆகாரமுதல்ஹவ் - வீருகவே ... நின்று
தானமர்நாற்பத்தெட் - டட்சரங்களுஞ் ... சென்று
தரணியில்நாற்பத்தெண் - புலவராகவே ... இன்று
அவதரிப்

(௨) அகரமுதலாம்ஐம்பத்தோரெழுத்துக்கும் ... ஆதி
ஆயட்சரங்கள்தோறும்அமர்ந்துஅவ்வதன் ... நீதி
நிகழும்இயக்கம்தோன்றச் செயல்தரும்பரஞ் ... சோதி
நிருமலர்மதுரேசர் அருளினல்புவி ... மீதில்
அவதரிப்

(௩) ஆதியெனுமதுரே சருமோர்புலவ ... ராக
அருளுடன்திருவுரு வெடுத்துவந்து ... விவேக
மோதிஆறெட்டுப்பே ருடன்ஏழுபுல ... ராக
உயர்சங்கபீடத்தில் உறைந்தாள்வர்துயர் ... போகே
அவதரிப் - ௨எ௩.

விருத்தம்.

விரைமலரோன்உரைப்படிஆறெட்டெழுத்தும் ... *
வெவ்வேறாய்ப்பிறந்தாறெண்புலவராகி ... *
அரனைஅர்ச்சிப்பவராய்த்தேசதேசம் ... *
அதில்ச்சென்றுகல்வியால்வென்றுவென்று ... *
பொருனைநாடுற்றுத்தென்மதுரைசார்ந்தார் ... *
புகழுமதுரேசருமோர்புலவராகி ... *
வருமவர்முன்னின்றுசுந்தரலிங்கத்தை ... *
வணங்குமெனப்பலருமிதுவழுத்துவாரே. (௩அ௰)

சங்கப்புலவர்கள் தங்கள்முன் ஒருபுலவராக வெழுந்தருளி வந்த சோமசுந்தரேசுவரமூர்த்தியைஸ்தோத்திரஞ்செய்துகூறியது.

பதம் - மத்தியமாவதிராகம் - சாப்புதாளம்.

பல்லவி.

துணைசெய்தருளவந்தீரே - உயர் -சோமசுந்தரேசர்நீரே

அநுபல்லவி.

குணமுகந்தபிறவித் - துயரமதனை ... விண்டோம்
கும்பிடப்போனதெய்வம் - எதிர்வந்ததின்று கண்டோம்.
துணை

சரணங்கள்

(௧) வேதன்விதித்தவிதி ... யாலே - ஜக
மீதில்ச்சுழல்த்துரும்பு போலே
ஏதும்பலனில்லாம - லேதிரிந்து ... உலர்ந்தோம்
இங்கிரவியைக்கண்ட ... பங்கயம்போல்மலர்ந்தோம்
துணை

(௨) இகபரசாதகம் ... இங்கே - அல்லால்
எங்கட்குப்புகலிடம் எங்கே
சுகுணமுடன்கனிவாய் - திறந்துசுப ... வசனம்
சொல்லிஅழைத்தீரேஅதல்லோதிவ்விய ..., சகுனம்
துணை

(௩) கருணைவடிவாய்வந்துதழைத்தீர் ... கூடல்க்
கடவுளைத்தரிசிக்கஅழைத்தீர்
தருகரும்புண்ணக்கூலி - கேட்பவரெவர் ... தாமே
தலையால்நடந்துவந்து தரிசனஞ்செய் ... வோமே
துணை - ௨எ௪.

விருத்தம்.

அறைந்தவரை அழைத்தேகிஇந்திரவிமானத்துள் ... *
அமர்ந்தவரைத்தொழச்செய்துபுலவராமீசர் ... *
மறைந்தனர்எல்லவரும்விம்மிதராய்வெவ்வேறு ... *
வண்டமிழால்ஸ்துதித்துப்பின்வழுதியிடஞ்சென்றார் *
நிறைந்தஇவர்கல்வியும்நல்லொழுக்கமுங்கண்டரசன் ... *
நிமலர்மதுரேசர்கோவிலில்வடமேல்ப்புறத்தில் ... *
உறைந்தருளுமெனச்சங்கமண்டபமொன்றமைத்து ... *
உயர்வரிசைசெய்துவைத்தான்உற்றார்கற்றாரே (௩அக)

பதம்-சாரங்கராகம் - சாப்புதாளம்,

பல்லவி
இருந்தாரேசங்கத்தார்-மதுரைதனில்

அநுபல்லவி
திருந்தார்பணிவங்கிஷசேகரன்மகிழ்ந்திட
இருந்

[ சரணங்கள் ]

(க) வங்கர்சேரர் சோளர் - சிங்களர் வங்காளர்
அங்கர்முதலோர்புகழ்-சங்கமண்டபத் தினில்
இருந்

(உ) பூதலந்தனில்த் தமி - ழோதும்புலவர்கள்எப்
போதும்வந்துவந்து - வாதுசெய்திளைத்தோட
இருந்

(௩.) வாசவன்தொழும்மீன - லோசனி மருவும்பிரா
ணேசர்கருணைபடைத் - தேசெந்தமிழ்கள் ஓதி
இருந்-உளடு.

---

விருத்தம்.

கலைமாதின்வடிவானோர்இருக்கும்நாளில்க் ... *
கவிஞர்பலர்வந்துவந்துவாதுசெய்வோர் ... *
தொலையாதவரைநிறுக்குங்கோல்போலாகச் ... *
சொல்பலகையொன்றருள்வீர்என்றுவேண்ட ... *
நிலையானஈசர்ஒருபுலவர்போல்முன் ... *
னின்றுங்கள்க்கிணையானோர்க்கிடங்கொடுக்கும் ... *

இலையாகில்இடங்கொடாததிலென்னாளும் ... *
இருப்பீரென்றொருபலகை ஈந்திட்டாரே (உ௬௨)

பதம்-பைரவிராகம்-சாப்புதாளம்

பல்லவி,

சங்கப்பலகை ... கொடுத்தார் - எண்ணாறுபேர்கள்
தங்களைஆளத் தொடுத்தார்

அநுபல்லவி

திங்கள்கங்கையணிந்த - தென்மதுராபுரீசர்
சங்க

சரணங்கள்

(க) அந்தமுடன்இருசாண் ... சதுரத்தில்எழில்சேரும்
மந்திரத்திலும்பெரிதாய் ... மருவும்எண்ணாறுவோரும்
வந்துமுறைமுறை ... இருந்திடமுழமிடம்
தந்துதந்துமிக ... வளர்ந்திடுமெனஒரு
சங்க

(உ) நாமகள்திருவுரு ... நாவலரானதாலே
பாமகள்உறையும்வெண் ... டாமரைமலர்போலே
நேமமுனிவர்பணி ... மாமதுரையில்வளர்
காமதகனரான ... சோமசுந்தரரொரு
சங்க

(௩) மேலுறைபுலவர்கள் ... விரும்பவேஎக்காலும்
சாலவளர்ந்துதேயுஞ் ... சந்திரமண்டலம்போலும்
சீலமிகுந்தபெரு ... நூலறிந்தவர்களை
ஞாலமீதிலளக்கும் ... கோலென்னக்குறித்தொரு
சங்க-உ௭௩.

---

விருத்தம்

பலகைதனைவாங்கிப்பூசித்துக்கீரன் ... *
பகர்கபிலன்முதலானோர்ஏறியேறி ... *
உலவமுழமுழம்வளர்ந்துஇடங்கொடுக்க ... *
உறைந்திருந்தார்பின்மதுரேசுவரருமாங்கோர் *
புலவரெனவந்துபெருஞ்சங்கமென்றும் ... *
புகழேறஅடியவர்கள்புகழ்ந்திடேற ... *

இலகுமலர்வாணி மகிழ்ந்தபன்னுவேற ... *
ஏழில்ச்சங்கப் பீடத்திலேறினுரே (௩அ௩)

பதம்-அசாவேரிராகம்-ஆதிதாளம்

பல்லவி.

ஏறினர்சங்கபீடத்தில்- சங்கத்தார்- ஏழேழுபேரென்னவே

அநுபல்லவி

ஆறுலாவும்ஜடாதரர் தமைச்சூழ்ந்து
ஆயுளபுலவர்களே யுயர்பலமணி
யாயுறையவேநடு- நாயகமணியென
ஏறினர்

[ சரணங்கள் ]

(௧) பொருந்தும்ஆறெண்பேர் பாடலுமேஒன்று
போலிருந்தத் ... ... தாலே- மலைத்
திருந்துளனதுன- தென்றுமயங்கும்போ
தேயோர்புலவர் ... ... போலே- வடிவாய்
பரிந்துவந்துமுன்னின்றே- அவரவர்
பாடலாகுமி தென்றே உரைத்திடத்
தெரிந்து புலவர்கள் விரிந்தபலகையில்
இருந்துதினம் அருள் புரிந்திடுவிரென்ன
ஏறினர்

(௨) விந்தமாமலர் மேலுறைஆரணன்
வேதவாக்குப் ... ... பலிக்க- மிகச்
சந்ததமிசை மிகுந்ததமிழ்வெற்றிச்
சங்கமெங்கும் ... ... ஒலிக்க- புகழ்
தந்துநடுவி லுறைந்து-பொற்பூவும்வா
சனையும்போலநிறைந்து-உயர்ந்திடு
செந்தமிழெனுமது-ரந்தருபுலவர்கள்
சிந்துவெனவிமலர்- மந்தரமலையென
ஏறினர்

(௩) மங்காததமிழ்நாடே-இதுமதுரையே
மதுரைஎன்று ... ... கூற-மதுரையில்
இங்கேழேழுபுல வோர்க்குவின்புலவரும்
ஈடில்லைஎனத் ... ... தேறப்-புவிஎங்கும்
பொங்குதமிழைவிளக்க-கலைமகள்
புகழையுலகில்வளர்க்கப்-பலகையில்த்

தங்குகவிஞர்கள் - விளங்கமதியருளி
அங்கயல்விழியுமை- பங்கர்கருணையுடன்
ஏறினர். ௨௭௬.

---

விருத்தம்.

நதியணிந்தவிமலருடன்உயர்சங்கத்தார் ... *
நாற்பத்தொன்பதுபேர்நாவலர்களென்ன ... *
முதியதமிழ்விளங்கத்தென்மதுரைமேவும் ... *
முதல்வர்சங்கப்பலகைமீதிருந்தார் ... *
மதிகுலவங்கிஷசேகரன்தன்சேயாம் ... *
வங்கிஷசூடாமணிக்குமகுடஞ்சூட்டிப் ... *
பதியிலரசாளவைத்துக்கொடியபாசப் ... *
பகைதீர்ந்துமகிழ்ந்துசிவபதமுற்றானே (௩௮௪)

விருத்தம்.

பருணிதற்கன்றுசங்கப் பலகைதந்ததிதுகேட்போர் ... *
புரிமுகக்கோயில்கூடல் புனிதரன்புற்றுவாழ்வார் ... *
கிரிசன்முன் தருமிக்குப்பொற் கிழிஅருள்ஐம்பத்தீராந் ... *
திருவிளையாடல்தன்னைத்தெரிந்திடஉரைசெய்வேனே (௩௮௫)

சங்கப்பலகைதந்த திருவிளையாடல்

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம்-௭ கொச்சகம்-௧ பதம்-௬ ஆக ௰௪.

ஆகபாயிரம்உள்படத் திருவிளையாடல் ௫௧-க்கு வெண்பா-௫ கலித்துறை-௪ கொச்சகம்-௩ விருத்தம்-௩௭௭௩ பதம்-௨௭௭௭ ஆக கவிதை-௪௭௪௰௨.





ஐம்பத்திரண்டாவது

# தருமிக்குப்பொற்கிழிகொடுத்த திருவிளையாடல்.



விருத்தம்.

சங்கப்பலகைதந்தபின்னுள்ச்சலதிசூழும்புவியாளுந் ... *
துங்கக்கனகமுடிவங்கிஷசூடாமணித்தென்னவன்கீர்த்தி ... *
பொங்கத்தரணிஎங்கெங்கும் - போற்றிச்சாற்றுந்தென்கூடல்த் *
திங்கட்சடையார்தமக்கமைத்தான்-தினந்தான்மலர்நந்தனந்தானே.

வங்கிஷசூடாமணிபாண்டியன்மதுராபுரியில் (௩அ௬)

நந்தவனமுண்டாக்கியது.

பதம் - எமுனகலியாணிராகம் - ரூபகசாப்புதாளம்.

[ பல்லவி. ]

அலங்காரநந்தனவனமுண்டாக்கினன் - தர்ம்மம்நோக்கினன்
அதிமாதவர் - துதிசேருயர் - மதுராபுரி - யதிலேஒரு

[ அநுபல்லவி. ]

நலம்பெருருமண்டலங்கள்புகல - நாடுவோர்பழவினைகள்அகல
நத்திப்பர - முத்திச்சிவ - பத்திப்பயிர் - விர்த்திக்கவே
அலங்கார

[ சரணங்கள். ]

(௧) ஆரம்மிகுந்தமர் - தாரமகரவீரம்
அலர்மாதவி-பலபாதிரி-சிலகூவிளை-நலமாகவே
சேருங்கொன்றைபுன்னை - கோங்குமலரோங்கு
செழிவோடு- தளிர்த்துப்பல- தழைசாகை- கிளைத்துப்புகழ்
தாரணிஎங்கும் - வாசனைசுற்ற
தருசெந்தேனுண்டுவண்டுகள்மொய்த்த
தண்மலர்சொரிந்திடஎப்போதும்-விண்மகிழ்ந்ததிசயிக்கஓதும்
அலங்கார

(௨) அந்தமாஞ்சு - கந்தங்கள்மிகுந்த
அந்திமல்லிகை-சிந்துகந்தமு-கந்தமுல்லைசிவந் -தியுங்கன
நந்திமலர்மலி - யுந்திகழ்செருந்தி
நற்கரந்தை-மிகுத்ததும்பை மருக்கொழுந்துசிறப்புயர்ந்திடு
விந்தம்நீலம்மதுகரம்வளை - விரிமலர்குமுதஞ்செங்குவளை
மெத்தவேமலிந்துவளந்தேற-வைத்தோர்சண்பகவனமுமீற
அலங்கார

## ௫௨-வது-தருமிக்குப்பொற்கிழி கொடுத்தது.

(௩) பொன்னுபரணங்கொள். மின்னார் அழகென்ன
பூத்துச்சண்பகமலர்ந்திரு - நாற்றிக்கும்புகமணந்தரு
வர்ணச்செழுமலர் துன்னமன்னர்மன்னன்
வங்கிஷசூடாமணிவரோதயன்எங்குமேதொழுநயகுணலயன்
தன்னகமகிழ்வுடனேஎடுத்துதண்ணருமலராய்ந்துதொடுத்து
சாற்றிமதுரேசுவரரைப்பூசிக்கநேற்றியாகவிண்ணிலமும்வாசிக்க
அலங் - ௨௭௮.



விருத்தம்.

உசந்தநந்தனவனத்தில்ச்சண்பகமாமலர்கொய் ... *
துகந்தமதுரேசர்திருமெய்யிலலங்கரித்து ... *
இசைந்தகோலங்கண்டுசண்பகசுந்தரதா ... *
மெனப்பணிந்தானிதுவிளங்கிற்றென்னுளுமீனத் ... *
துசந்தகுவங்கிஷசூடாமணிஇந்தநெறியால்த் ... *
துலங்குசண்பகமாறனெனத்துதிக்கவாழ்ந்து ... *
வசந்தருடுவேனில்வரமாதருடனொருநாள் ... *
மணிக்காந்தமண்டபத்தில்மகிழ்ந்துமேவினனே (௩௮௭)

சண்பகமாறனென்னும் பேர்பெற்றவங்கிஷசூடாமணி
பாண்டியன்தன்அந்தப்புரத்தில் சந்திரகாந்த
மேடையில்தனதுதேவிமார்களுடன்
லீலாவினோதமாகயிருந்தது

பதம் - கலியாணிராகம் - ரூபகதாளம்.

[பல்லவி.]

மணிமேடையில்மேவினன் - சண்பக
மாறன்மாதரோடுகு லாவினன்

[அநுபல்லவி.]

தணியாப்பெருங் கோடைதீரநிழல்
தந்துதந்துதென்றல்வந்துவந்துலவு
மணி

[சரணங்கள்.]

(௧) வளர்வானமதின் மீதுதாவிவெகு ஜோதிமேவுவெண்ணி
லாவுலாவிவர வேளழில் ... சேர்ந்த
வெளிவேனிலது காந்துதாபமிகு சாந்தமாகஎளிர்
சேர்ந்தநீருவி பாய்ந்திடு ... காந்த
மணி

(௨) செழிவொடுதி - ருந்துபைங்கிளிபொ - ருந்துசெந்தளிர்வி
ருந்துருந்துகுயில்கூ - வியே ... வாழும்
பொழிமாமதுர - முண்டுவெழிசைகள் - கொண்டுபாடிவரி
வண்டுலாவுமலர்த் - தண்டலை ... சூழும்
மணி

(௩) நலமாதர்கள்ம - ணுளரோடுமுயர் - கேளிகூரமத
வேளுலாவுதிரு - நாளது ... துன்ன
பலமாமலரின் - வாசம்வீசவேஉல- லாசமாகவெகு
நேசமோடுமெத - ராஜராஜ ... னென்ன
மணி-உஎகூ



விருத்தம்

ஒகைதருமாதருடனிருக்கும்போதாங்கே ... *
ஒருவாசம்வந்துததுமணிவிகுழல்வாச ... *
மாகஇருந்ததுகூந்தல்க்கேற்கையோசேர்க்கை ... *
வாசமோயிக்கருத்தையறிந்துகவிசொல்வோர்க் *
கிகுவேனுயிரம்பொன்னென்றுகிழிக்கட்டி ... *
யேசங்கமண்டபத்தில்த்தூக்கினான்தென்னன் *
வாகுசங்கத்தாருமுரைத்தாரில்லைமதுரை ... *
வாசர்முன்புதருமியென்னுமறையோன்வேண்டுவனே()

தருமியென்னும்பிற்மசாரிப்பிராமணன் ஸோமசுந்தரேசுவர
மூர்த்தியைபிரார்த்தித்தது
பதம்-முகாரிராகம்-ஆதிதாளம்.

[பல்லவி.]

தருணமீதையா-மாமதுரேசா-தருணமீதையா

[ அநுபல்லவி ]

கருணைசெய்தென்னுள்ள - கவலைதீர்த்தாள்க்கொள்ள
தருண

[ சரணங்கள். ]

(௧) தந்தைதாயற்றபரதேசி - நான்
வந்துதேவரீரைப்-பூசித்
தெந்தன்காணிபெற-என்செய்வேன்பிர்ம ... ... சாரி
அந்தமாயொருகன்னிகையைக்கொள்ளக்கிருபை ... பாரீர்
தருண

௫உ-வது-தருமிக்குப்பொற்கிழி
கொடுத்தது.

(உ) மிக்கவழுதிமனம்- நாடி - பொருள்
தக்குமொருகவிதைபாடி
பொற்கிழியைஅறுத்துப்- பொருள்தாரும்பெருமானே
கைக்குள்வெண்ணெயிருக்க நெய்க்கழுவேனே நானே
தருண

(௩) போற்றியுமதுஅருள்கொண்டு - கவி
சாற்றிவருவோர்களும் உண்டு
பார்த்திந்தநிதியைக்கைப் - பற்றிக்கொண்டால் வராது
காற்றுள்ளபோதுதானே- தூற்றிக்கொள்வாரிப்போது
தருணம், உ௮௰.

விருத்தம்

இத்தருமிவேண்டவரன்கொங்குதேர்வாழ்க்கை ... *
யின்தமிழ்பாடிக்கொடுத்தார்தருமியதைவாங்கி *
கற்றநாவலரால்த்தென்னனுக்கறிக்கையிட்டான் *
கருதியதொத்திருந்ததினால்நிதியைக்கைக்கொள்ளென்
றுத்தரவுகொடுத்தான்தென்னவன்தருமிவந்து ... *
உகந்தபொற்கிழியறுக்கும்போதுநக்கீரன் ... *
குற்றமிக்கவிதைநில்லெனவிலக்கக்கவியைக் ... *
கொண்டுபோய்த்தருமிஅரன்முன்வைத்தோதுவனே*

சுந்தரேசுவரமூர்த்தி கொடுத்தகவியை நக்கீரர்குற்றமென்று தள்ள
அப்போது தருமிவந்துசுவாமிஇடத்தில்முறையிட்டது
பதம்-காபிராகம்-ஆதிதாளம். (௩௮௬)

பல்லவி.

இகழுமிக்கவிதந்ததேனோ- ஏழை - என்றிரங்கியதிதுதானோ

[அநுபல்லவி.]

அகமகிழ்ந்திடக்கைமேல்க் - கிடைத்தபொன்னிதுபோச்சே
ஐயோவென்றெண்ணவில்லை - அவமதித்திட ... லாச்சே
இகழும்

[சரணங்கள்.]

(க) இக்கவிதையைத்தென்னன் ... ஒப்பினன் - நிதி
எடுத்துக்கொண்டுபோவெனச் செப்பினன்
பொற்கிழியைத்தொட்டேனப் - போதுகிணறுவெட்ட
பூதம்புறப்பட்டாப்போல்நக் - கீரன்வந் ... ததட்ட
இகழும்

(௨) குற்றமிக்கவிில்லு ... ... யில்லென்றான் - விதி
கொள்ளவென்றால்நீவதில்ச் சொல்லென்றான்
மற்றென்செய்வேன்விட்டி-யைப்பிடித்துக் கொண்டு
மழைபெய்யென்றால்பெய்யு மாஇதெல்லாங்கண்டு
இகழும்

(௩) ஏர்வையாகுமுமது ... கவியில் - அற்பன்
இவன்குற்றஞ்சொன்னாலிந்தப் புவியில்
ஆர்தானுமைமதிப் - பாருமக்கே ஏச்சு
ஆனையேறியுஞ்சப் - பாணியாச்சென்பேச்சு
இகழும், உஅக,

---

விருத்தம்.

வருந்தருமிஇவைவருந்தியுரைக்கக்கேட்டு ... *
மதுரேசர்ஒருகவிஞன்வடிவுபோலப் ... *
பொருந்தியுர்கனகமணிக்குடைநிழற்றப் ... *
புகல்விருதுபலசூழச்சென்றுசங்கத் ... *
திருந்தகவிவல்லோர்முன்னின்றுநாடி ... *
என்கவிக்குகுற்றமுரைத்தவராரென்ன ... *
அருந்தமிழ்நற்கீரனஞ்சாமல்நானென் ... *
றடுத்திட்டான்எதிர்சொல்லித்தடுத்திட்டானே (௩கூ௰)

நற்கீரருக்குமுன் ஓர்புலவராகி யெழுந்தருளி ஸோமசுந்தரேசுவர மூர்த்திதர்க்கமுற்றது

பதம்-மோகனராகப்-ரூபகசாப்புதாளம்,

[ கண்ணிகள் ]

(க) ஆர்காணும்என்கவியில்குற்றம் - அறைந்தது சொல்லுவீரே
ஐந்திலக்கணச்செந்தமிழ்தனை - அறிந்தசங்கத் ... தாரே
நீர்தானேஇக்கவியுரைத்தது - நேராகவந் ... தீரே
நிலம்புகழும்நற்கீரன்நான்தான்-நிகழ்த்தினேன்அறி வீரே

(௨) குற்றமிதிற்சொற்குற்றமோபொருள்க்-குற்றமோஎன்னதீது
கூறுங்காணும்கண்ணின்குற்றம்-இமைக்குந்தோன் றிடாது
மற்றென்றுமில்லைமயி-ருக்கேற்கைவாசனையுண் ... டென்று
வகுத்ததேகுற்றம்அதைத்தள்ளிச்சேற்கைவாசனைஎன்றால்நன்று

(௩) வாசமேற்கைமயிற்கில்லையென்று - வகுத்திட்டஉரை நிலையா
வளர்பதுமினிமயிற்குமேற்கை-வாசனையுண்டா ... இலையா

தேசுள்ளபதுமினிக்கும்பன்னீர்- செழுமலர்ச்சவ் ... வாது
சேற்கைவாசனையல்லாதுமயிர்க்-கேற்கைவாசனை ... ஏது
(௪) ஏதுந்தாழ்வில்லாதவிண்ணி-லிருக்கும்அரம்பை மார்க்கும்
ஏற்கைவாசங்கூந்தலுக்குண்டோ-இல்லையோசொல்லும்யார்க்கும்
ஓதுங்கற்பகவாசமாமலர் -உயர்ந்தகூந்தல் ... மீது
உகந்தசேற்கையல்லாதேற்கை-உண்டென்றிடத் ... தகாது
(௫) உவந்துநீர்தொழுங்காளத்தீச- ரொடுமருவி ... உறையும்
உமைஞானப்பூங்கோதைக்கேற்கை-உண்டோஇல்லையோஅறையும்
ஜெகந்தருதாயெனினுமுள்ள-சேதியேசொல்ல ... வேணும்
சேற்கைவாசனையல்லாதுமயிர்க் - கேற்கையேஇல்லைக் காணும்
(௬) இல்லையென்றுசொல்லஅரனு-ரென்றுதெரிய ... நேரே
எரிகொள்நெற்றிக்கண்ணைக்கொஞ்சந்தெரியக்காட்டி னாரே
நில்லுஞ்சடைப்புரட்டேன் - புரட்டுகுறீரது ... நன்று
நெத்திக்கண்ணைக்காட்டினாலும்- குற்றம்குற்றந்தானென்றான்

விருத்தம்.

குற்றமுமதுடம்பெல்லாங் கண்ணதாகி ... *
குலிசன்போல்நின்றாலும் உமதுபாடல் ... *
நற்றமிழன்றெனத்தன துசினமேமேலாய் ... *
நாட்டியேஉரைத்தா னப்போதுஈசர் ... *
மத்தகக்கண்ணழல்வந்து பாயவெம்பி ... *
மற்றதுபொறுதவன்போல் மலர்ந்தபொற்கஞ் ... *
சத்தடத்தில்விழுந்தழுந்தினான் நற்கீரன் ... *
தற்பரனுமறைந்திருக்கை சார்ந்திட்டாரே (௩௬௧)

விருத்தம்.

தருமிபொற்கிழிகைக்கொள்ளத் தந்திடும்லீலைஈது ... *
நிரலதாய்க்கேழ்போர்முத்தி லீலைகொள்வார்கீரன்றன்னை ... *
கரையதிலேற்றியாண்ட கடவுளம்பத்துமூன்றாந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௩௬௨)

தருமிக்குப்பொற்கிழிகொடுத்த - திருவிளையாடல்முற்றிற்று

---

ஆ திருவிருத்தம் - ௭ பதம் - ௫ ஆ ௰௨.
ஆ பாயிரம்உள்படத் - திருவிளையாடல் ௫௨ க்கு வெண்பா - ௫.
கொச்சகம்-௩-கலித்துறை-௪-விருத்தம்-௩௱௮௰-பதம்-௨௱௮௨
ஆ கவிதை-௯௱௪.



ஐம்பத்து மூன்றாவது

## நற்கீரனைக்கரையேற்றிய திருவிளையாடல்.

விருத்தம்.

தருமிக்குப்பொற்கிழிய தளித்தபின்பு ... *
தற்பரனார்பொறிக்கண்ணாற் பொற்கஞ்சத்தில் ... *
மருவிக்கீரன்வருந்த ஞானமில்லார் ... *
வன்கல்விமன்னனில்லாக் குடியும்போலத் ... *
திருநற்கீரன்இவனில்லாத சங்கம் ... *
சிறக்குமோஎனக்கவி வல்லோர்களெல்லாம் ... *
ஒருமிக்கச்சூழ்ந்திருந்து கொண்டுநெஞ்சம் ... *
உருகியேயோசனை செய்தோதுவாரே (கூகூகூ)

பதம் - உசேனிராகம் - சாப்புதாளம்,

பல்லவி.

இதுமதுரேச ... ரல்லாது - துயர்
எவர்தீர்ப்பார்புவி மீது

[ அநுபல்லவி. ]

மதியுள்ளநற்கீரன் ... செய்பிழையோபெரிது
மாற்றிடவென்றால்மும் ... மூர்த்திகட்குமரிது
இது

[ சரணங்கள். ]

(க) அரியசொற்பொருள்வடி- ... வாயருமறையோது
மமலரிந்தமது ... ரேசருடனேவாது
பெருகியதிதுயிக்தத் ... தருமிபால்வந்ததீது
பிர்மசாரிஓடம் ... கவிழ்த்தகதைபார்சுது
இது

(உ) நீரிலழுந்துமிவன் ... பிழைப்பதற்புதம்பாரும்
நிமலர்தம்திருவுள்ளந் ... திரும்பவேணுமேவாரும்
காருமென்றுசரண் ... புகுந்திடுவோமெல்லோரும்
கருணைசெய்தாள்வர்நட் ..., டதைஅறிப்பரோஆரும்
இது

(௩) மலைபேர்த்தவன்கையை ... வீணையாக்கிக்கொண்டு
வருந்திப்பாடவவன் ... செய்ததீங்கும்கண்டு
கொலைசெய்வாளும்தேரும் ... கொடுக்கவில்லையாபண்டு
கோபமுள்ளஇடத்தில்த் ... தான்பிரியமுமுண்டு

இது - உ௮௩.

---

விருத்தம்.

பரணனோர்கபிலன்முதல்ப்புலவரெல்லாங்கூடியிது ... *
பகர்ந்துநாகா
பரணனேகதிஎன்றுசன்னிதிமுன்சென்றுபசு ... *
பதியேகங்கா
தரணனேகயல்க்கண்ணாள்தன்மனோகரனேசங் ... *
கத்தையாள்வி
தரணனேகாசரணஞ்சரணமென்றுஞ்சரணமென்றுஞ் *
சாற்றுவாரே. (௩௬௪)

நற்கீரற்காக சங்கப்புலவர்கள் ஸோமசுந்தரேசுவர
மூர்த்தியை ஸ்தோத்திரஞ்செய்து
பிரார்த்தித்தது.

பதம் - துசாவந்திராகம் - ஆதிதாளம்.

பல்லவி.

கருணைசெய்துபிழை ... பொறுக்கவேணும்
காருங்கிருபை ... பாரும்

அநுபல்லவி.

வருணனுக்கருள்செய் ... தாண்டதன்மதுரை
வாசமேசுந்தரேசரே ... நீரே
கருணை

[ சரணங்கள். ]

(௧) தாமரைக்கிரவி ... போலவேஜெகந்
தனிலுள்ளோர்க்குத்தந்தை ... தாயுமாயுகந்
தேமருவிநன்மை ... தின்மைசெய்வோர்க்கிகம்
இன்பந்துன்பமாக் ... குவதுமதருளகம்
இருளும்ஒளிவுமன ... மருளுந்தெளிவுங்கன
அருளுஞ்சினமுஞ்சொல்லும் - பொருளுமாகியநீரே
கருணை

(௨) கற்றமாமதத்தி ... னாலெதுத்ததட்டிக்
காய்ந்துகீரன்தேவ ... ரீர்கவியைத்தட்டிக்
குற்றமென்னநெற்றிக் ... கண்ணினாலேசுட்டீர்
கோலப்பொற்றாமரை ... நீரில்விழவிட்டீர்

கோவேமூவர்கள் ... தேவேமேவிய
சேவேறிவருகர்த் ... தாவேநீரே

கருணை

(௩) கருதிப்பெற்றதகப் ... பனுக்கோகற்றவித்தை
காட்டுவார்களற்பக் ... கவியேகெறுவத்தை
மருவுவானிவனோ ... பொருளோசிறுசெத்தை
மலைவிழில்மண்கட்டி ... தாங்குமோசினத்தை
மாற்றுமெங்கள்மனத்தைத் - தேற்றும்தினமுமும்மைப்
போற்றுங்கீரனைக்கரை ... ஏற்றும்ஜயனேநீரே

கருணை- உஅசு.

---

விருத்தம்.

பாவலர்வேண்டவும்உமையாளுடனேசெம்பொற் ... *
பங்கயவாவியினருகேகவிஞர்சூழத் ... *
தேவர்தொழும்பரனார்வந்தருள்க்கண்செய்தார் ... *
தெண்ணீரில்க்கிடந்தநற்கீரன்செழித்து ... *
மேவவைம்பொறிபுலன்கள்கரணமெல்லாம் ... *
விமலராயானந்தவெள்ளத்தாழ்ந்து ... *
பாவவுடல்அகலஅன்பேவடிவமாகிப் ... *
பாடுவான்பரன்கருணைதேடுவானே (௩௯௫)

நற்கீரர் ஸோமசுந்தரேசுவரமூர்த்தியை
ஸ்தோத்திரஞ்செய்தது.

பதம் - நீலாம்புரிராகம் - ரூபகசாப்புதாளம்

பல்லவி.

பேதைநானின்றுநேரே - செய்த - தீதெல்லாம்பொறுத்தீரே

அநுபல்லவி.

மாதயாநிதியாதலாலெதிர் - வந்தீர்உயிர்தந்தீர்

பேதை

[ சரணங்கள். ]

(௧) அன்னைஞானப்பூங்கோதையார்-கூந்தலுக்குங்குற்றந் தானே
அறைந்தேன்மெத்தக்கசடன்சுத்த - அசடன்அடி யேனே
சொன்னநாவுரைபொல்லாதெந்தன்- துணிவைஎன்னசொல்லப்பரஞ்
சோதியேபுவிக்- காதியேசொல்ல-ஞதியேபிழை- யோதியே

பேதை

(௨) மெத்தவேசினஞ்செய்தால் - தாங்குவேனோஎளி யேனே
விளம்புமீசயைப்பிடித்தால்க்கால் - வேறுகைவேறுதானே

எத்தனைகற்றேன்சிறியேன்நான் - எட்டென்றுவிரண்டறியேன்-ஐக
ஙீசரேகயி - லாசரேஉமை - நேசரேகூடல் - வாசரே
பேதை

(௩) அத்தனேநீர் காலால்முடிந் - ததைக்கையினால்அவிழ்க்க
ஆராலுண்டுநீரேயருளியபாடலைத் ... தவிழ்க்க
பத்தனனிதடாதுசெய்து - பட்டேனையா ... படாது - கண்
பார்த்து - அருள்பூத்து - துயர்தீர்த்து - என்றுங்காத்து
பேதை - உ௮௫.

——○○——

விருத்தம்.

மாதயாநிதிஅடியேன்செய்ததீங்கு ... *
மாற்றியேஅருள்புரியுந்திருக்காளத்திக் ... *
காதையார்குழையினுரைக்காளத்தி ... *
கயிலையென்னஎடுத்தஉறைமாறிமாறி ... *
ஓதையார்நேரிசைவெண்பாவந்தாதி ... *
உரைக்கமகிழ்ந்தேபொற்கஞ்சத்தின்தீர ...
மீதையானனர்தூக்கிவிடநக்கீரன் ... *
விமலர்புகழ்தனைவிரித்துவிளம்புவானே. (௩௯௬)

இதுவும்நற்கீரர்ஸ்தோத்திரம்.

பதம் - பூபாளராகம் - ஆதிதாளம்.

[கண்ணிகள்]

(க) அரகரசிவசம்போ - சங்கரமகாதேவா
அனுக்கிரகஞ்செய்தென்னைக்கரை ... ஏற்றி
வரமுத்தியிலழுந்த - ஸ்திரபுத்தியதுதந்த
மதுராபுரிநாயகா ... போற்றி

(உ) தக்கன்மகமழித்த - உக்கிரவடிவேதண்டி
தன்னைஅடிமைகொண்டகிருபை ... வடிவே
மைக்கிரியெனஎமன் - மண்ணில்விழஉதைத்து
மார்க்கண்டனைரட்சித்தமறை ... முடிவே

(௩) திக்கெங்குநடுங்கவே - ஆலகாலமென்னச்
சீறிவந்தசலந்தர ... னுடலை
சக்கரத்தாலொழிந் - திடச்செய்துமாயனைத்
தற்காத்தகருணைக் ... கடலே

(௪) அரிதன்கண்ணைத்தாமரை - மலரெனக்கொய்து
அர்ச்சனைசெய்திடவே ... தோற்றி

பெரியசக்கரமும் - கமலக்கண்ணனென்னும்
பேருங்கொடுத்தகிருபா ... மூர்த்தி

(௫) மாலயன்அடிமுடி - தேடிஅலையத்தனல்
மலைபோலேநின்றதற் ... ஜோதியே
சாலஅவ்விருவரும் - வேண்டிப்பூஜைசெய்ய
தானெதிர்நின்ற அ ... நாதியே

(௬) மகிழ்சைவமதம்விட்டு - மறுமதந்தனைத்தொட்டு
வருமுப்புரமெரித்தபசு ... பதியே
அகமதனைஎரித்துத் - துதிசெய்ரதிக்காக
அனங்கனுக்கியதயா ... நிதியே

(௭) விரித்துமுதல்வன்நானே - என்றஅயன்தலையை
விரல்நகத்தால்க்கொய்த ... மூலமே
சிரித்துவந்தவந்த - தலையெல்லாந்திருகித்
திருகிச்சிகைக்கணிந்த ... கோலமே

(௮) சிலந்திக்குமுடிசூட்டி - நெய்யுண்ணுமெலிநாக்கால்
தீபத்திரியைத்தூண்டிய ... தாலே
பிலந்தருமூவுல - காண்டுசிரஞ்சீவியும்
பெற்றிடவருள்செய்தீர்புவி ... மேலே

(௯) வெள்ளிவெற்பெடுத்தவன் - தோள்கள்முறியச்சிறு
விரலையூன்றிமலைமேல் ... மிதித்தீர்
கொள்ளுமவன்முன்னங் கைநரம்பிசையினால்க்
கூர்வாள்கொடுத்தருளவே ... மதித்தீர்

(௰) ஆனைபன்றிபுலி - அரிமான்மீன்குறள்
ஆமையுடையவலியடங்க ... வென்றீர்
வானரம்பணிநாரை - எறும்புகழுகுதேரை
வலியான்அலவன்கோழிக்கருளி ... நின்றீர்

(௰௧) பேதைஎளியேனறி - யாதமதியால்ச்செய்த
பிழைக்குத்தக்கதண்டஞ் ... செய்தீர்
ஓதுமென்புன்கவி - கேட்டெடன்வாட்டமற
உகந்தகருணைமழை ... பெய்தீர் (௨௮௬)

விருத்தம்.

பரவிநக்கீரன்கவுரியையுந் துதித்துத்தேவ ... *
பாணியோடேழிசையேழ் கூற்றிருக்கையுஞ்சாற்ற ... *
உரைவலருந்தனித்தனியே துதித்திறைஞ்சமுன்போ ... *
லுயர்கீரன்சங்கபீடத் திருக்கவருளி ... *
அரனுமரைந்துயர்கோவிற் புகுந்தார்சங்கத்தார் ... *
அனைவரும்பொற்கிழியறுத்தந்தணனுக்கீந்திருந்தார் ... *
புரவலன்சண்பக பாண்டியனும்வரிசைசெய்து ... *
புகழ்ந்தனுப்பிவிமலரடி போற்றிவாழ்ந்தனனே (௩கூஎ)



விருத்தம்.

உரவுநக்கீரன்தன்னை உயர்கரையேற்றுலீலை ... *
சருவமுங்கேட்டோர்என்றும் தழைப்பர்நக்கீரனுக்குத் ... *
திரவிடவிலக்கணம்போ தித்தஐம்பத்துநான்காந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௩கூஅ)

——o*o——

நற்கீரனைக் கரையேற்றிய திருவிளையாடல்
முற்றிற்று.

——*——

ஆ திருவிருத்தம்- சு-பதம்-ச- ஆடி.

ஆ பாயிரம் உள்படத் திருவிளையாடல் - ருக-க்கு வெண்பா-ரு.

கலித்துறை-ச கொச்சகம்-௩ விருத்தம்-௩ாஅசு பதம்-உஅசு.

ஆ கவிதை - சுஅச.



*✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕*

ஐம்பத்தினாலாவது

## நற்கீரனுக்கு இலக்கணம் உபதேசித்ததிருவிளையாடல்.



விருத்தம்.

நக்கீரனைக்கரையேற்றியபின் அரனருளால் ... *
நாவலர்க்குநடுவிருந்த நற்கீரன்தனைமுன் ... *
இக்கிரமொழிபாகர் விழித்தழலில்வேகா ... *
இன்பமருள்பொற்கஞ்சத்தினி லன்பாய்த்தினமும் *
முக்காலமூழ்கிஅர னடிபணிந்துவந்தான் ... *
முதல்வரருள்புரிந்தவனுக் கிலக்கணம்போதிக்கு *
மிக்காராரெனநினைக்க - அதுவறிந்துபுருவ ... *
வல்லிகூரங்கயற்கன் வல்லிகூறுவளே (௩௯௯)

பதம்-சௌராஷ்டிரராகம்- ஆதிதாளம்,

[ கண்ணிகள். ]

(க) ஆதிசிவனேகிருபா ... மூர்த்தி - மது
ராபுரிநாயகனே ... போற்றி
அடியாள்விண்ணப்பம் ... ஒன்று - கேளும்
அரிஅயன்முதல்யாரும் அன்று

(உ) ஓதும்வெள்ளிமலை .... மீது -கண்டு
உமதடிதொழவந்த ... போது
உயர்ந்துதையாதென்மேற் பூமி - உமக்
கொப்பாமொருவரை சுவாமி

(௩) அங்கனுப்பினல்நேராய் நிற்கும் - என்ன
அண்டருரைக்கஉமக் கொக்கும்
அதிபிலவானகத் ... தியனே - என்று;
அனுப்பிவைத்தீரேஎன் னையனே

(௪) தங்கியம்முனிவளர் ... நாடு - பெருந்
தமிழ்நாடெனஅறி ... வோடு

தரிக்குமாமனித ... ... ராய்ந்து - தமிழ்த்
தலைவராகவர ... மீந்து

(ரு) அருளுமென்றுனந்தப் ... படியே - தமி
ழருளிநீர்பின்னுந்திரு ... வடியே
அடியேன்காண்பதெங் கென்றுன் - மது
ரையில்க்காண்பாயென்றீர் சென்றுன்

(சு) பெருமையுடன்பொதிகை மேவி - தமிழ்
பெருக்கினனவனைக் ... கூவி
பிரியமுள்ளகீரனுக்கு ... நேரே - தமிழ்
பீடுறஉரைக்கச்சொல் ... வீரே (உஅஎ)

---

விருத்தம்.

செல்விஇதுபுகலஅகஸ்தியரைஈசர் ... *
சிந்தித்தார்அவர்மனைவியோடும்வந்து ... *
பல்விதம்போற்றிக்கருணைப்பரனுர்சொன்ன ... *
படியேகீரனுக்குஇலக்கணம்போதித்து ... *
நல்வரங்கள்பெற்றகன்றுர்பின்புநாரி ... *
நக்கீரன்றனக்குநீர்போதியாமல்ச் ... *
சொல்முனியாற்போதித்தவாறேதென்ன ... *
சுந்தரேசுவரர்மகிழ்ந்துசொல்லுவாரே (சா)

மத்தியமாவதிராகம் - ஆதிதாளம்

பல்லவி

உபதேசித்திடவேணும்-உனக்- குரைத்தாலல்லவோதோணும்

[அநுபல்லவி.]

அபசரிதமதாக - நடக்கு மூடருக்கு
ஆரும்உரையார்மன - தறிந்தசீடருக்கு
உப

[ சரணங்கள் ]

(க) வணங்கிநடப்போர்விதி கொடுப்பார் - மன
மற்சரமில்லாம ... லடுப்போர்
இணங்கிக்கிரினசிற்றுக்-கடவார்வினை வொன்றுய்
இர்தயபரிசுத்தமுள் - ளவர் இவர்கட்குநன்றும்
உப

(௨) இளைத்தகீரன்இவன் ... தானே - நம்மோ
டெதுத்துமற்சரஞ் செய்தானே
உளத்திலதைமறந்தோ - மாகிலுங்கேள்பண்டு
உடைந்தசங்கூத - வராதேநல்லினங்கண்டு
உப

(௩) ஆதலினாலேநாம் தானே- உரைப்
பதுதகாதுசெந்தேனே
ஓதுந்தமிழ்க்குரிய - மலையமுனியைப் ... பார்த்து
உரைத்திடச்சொன்னோம்பெண்-ணேசிற்றறிவுதீர்த்து
உப- உஅஅ

——*——

விருத்தம்.

கடுத்தழைகந்தரிதுகூறக்கௌரிகேட்டுக் ... *
கருத்துமகிழ்ந்தாள்நன்னூல்கற்றநக்கீரன்முன் ... *
தொடுத்தகவியதுவெல்லாங்குற்றமெனக்கண்டு ... *
தோணுதசிற்றறிவாற்சுந்தரர்தம்கவியை ... *
விடுத்திகழ்ந்தவனையாண்டுநல்லறிவுதந்த ... *
விமலர்க்கென்செய்வேனென்றுருகிப்பின்மகிழ்ந்து *
அடுத்தகவிஞருக்கெல்லாந்தான்கற்றநூலை ... *
அறைந்திருந்தான்பரனைமறவாக்கீரன்தானே (௬௱௧)

——————

விருத்தம்.

இருசுவாய்க்கீரனுக்கு இலக்கணமுபதேசித்த ... *
புரிவிதுகேட்போர்இன்பம் பொருந்துவார்சங்கத்தார்கள் ... *
அருகுறுகலகந்தீர்த்த ஐம்பத்தைந்தென்னுமையன் ... *
திருவிளையாடல்தன்னைத்தெரிந்திடஉரைசெய்வேனே (௬௱௨)

——*——

கீரனுக்கு இலக்கணமுபதேசித்த - திருவிளையாடல் முற்றும்.

——*——

ஆ திருவிருத்தம்-௪ பதம்-௨ ஆ-௬.
ஆ பாயிரம் உள்படத் - திருவிளையாடல் ருசு-க்கு வெண்பா-ரு
கலித்துறை-௪ கொச்சகம்-௩ விருத்தம்-௬௱௯ பதம்-௨௱அ௮
ஆ கவிதை- ௬௱௯.




ஐம்பத்தைந்தாவது

## சங்கத்தார் கலகந்தீர்த்த திருவிளையாடல்

விருத்தம்.

கீரனுக்குஇலக்கணம்போதித்த பின்னாள்என்னாறு ... *
கேள்வியோரும்
சீரணிச்செந்தமிழ்வேறு வேறுசெய்துபெருமைசொல்லிச்*
செருக்கதாகி
காரமுற்றுப்பண்டுநூல் மொழிந்தகுருவாங்கருணைக் *
கடவுள்கூடல்
ஆரணிக்கிநாயகர்முன் கூடினார் துதிசெய்துரை ... *
யாடினாரே (சாரு.)

சங்கப்புலவர்கள் ஸோமசுந்த ரேசுவரமூர்த்தியை
ஸ்தோத்திரஞ் செய்தது.

பதம்-சுத்தசாவேரிராகம்-ஆதிதாளம்

பல்லவி.

சம்போஅரசங்கரபூபதே - சுவாமின்கருணாநிதே

அநுபல்லவி.

அம்போருஹ-நயனசரணகர-ஹரிசாயகபுர-ஹரிதாயக-சிவ
சம்போ

[ சரணங்கள். ]

(க) தீனரட்சகஅபயவரதகர ... தேஜோமயதேக
ஞானஸனகாதி-முனிவரப்பிரிய நாதாஜெகன்மோக
கானநடனநாக ... கங்கணஅமோக
ஈனபவதகன-ஞானசுகுணஅபி - மானஜெனஇர்தய-ஸ்தான
சம்போ [நிலையசிவ

(உ) சூலதாரண-பரமானந்த ... சுரபூசிதபாத
காலகால-காளகூடவிஷ ... கண்டசாமகீத
நீலலோகிதவேத ... நிசஸ்வரூபபோத
பாலநயனமுனி-பாலபூசிதஜக-பாலகரமிருக-கபாலதரணசிவ
சம்போ

(ந.) மதுராபுரவாசவாசவ ... வந்திதாகிரீச
ஶ்ரீகிநாயகபூதகெணாதிப ... சோமசுந்தரேச
அதிசயம்பிரகாச ... அற்புதகயிலாச
நதிஇமகரநிசா-பதிதரவரகுண-நிதிகினதருணிபார்- வதிமனோ
சம்போ.உஅக. [கரசிவ

விருத்தம்.

தாழ்ந்துதுதித்தெங்கள்செந்தமிழ்த் தாரதரங்களெல்லாஞ் * சாற்றிநாங்கள்
ஆழ்ந்தறியக்காட்டிஐயந் தீர்த்தருளவேணுமென்றார் ... * ஆங்கெட்டானே
சூழ்ந்திடும்விமானலிங்கத் துள்ளிருந்தோர்புலவரெனத் ... * தோன்றித்தாளில்
வீழ்ந்துநின்றஎண்ணூறு புலவரையும்பார்த்துஇதுவிளம்பு... * வாரே (சாச)

பதம் - பந்துவராளிராகம் - சாப்புதாளம்

பல்லவி.

உங்கள்கலகமிது ... தீரும் - நா
முரைப்பதைக்கேளுமெல் - லோரும்

அநுபல்லவி.

சங்கப்புலவரேகோட் - டைக்குள்ப்படைவெட்டேது
தமிழின்தாரதரந் ... தன்னையறிந்திப்போது
உங்கள்

சரணங்கள்.

(க) ஒருவர்க்கொருவர்நீங்கள் - உலைதல்ப்பட்டால்க்கனம்
உண்டோ ஒத்திருப்ப - தன்றோ பெரியதனம்
பெருமைபாலும்நீரும் - போலிருப்பதை அனம்
பிரித்துக் காட்டுவது - போலே இன்றைத்தினம்
உங்கள்

(உ) ஊரிதிலொருவணிகன் ... தனபதிதாரம்
உயர்குணசாலினி ... யவர்மனோவிசாரம்
திருந்தவத்தாலொரு ... தேவன்வந்தவதாரம்
செய்திருக்குருனந்தச் ... சிறுவனுலின்னேரம்
உங்கள்

(௩) அனங்கன்போல்வடிவுள் ... ளவன்வாய்பேசானூமை
அறிந்துசொல்வனேவென்றால்-கவியைக்கேட்டுத்தாமே
மனங்கனிந்தவன்தலை யசைத்தால்ச்சிறந்ததாமே
மகிழாவிடில்ச்சிறப் ... பில்லைஅங்கேபோமே
உங்கள் - உசுய.

விருத்தம்.

வசியன்மகனுல்த்தீருமெனமறைந்தார்ஈசர் ... *
வந்தபுலவோர்சங்கமண்டபத்தில்வணிகப் ... *
பசியசிறுவனை அழைத்துக்கொண்டுவந்துவைத்துப் ... *
பன்மலரால்அர்ச்சித்துஎதிரிருந்துஉள்ளங் ... *
கசிய அவரவர்கவியைச்சொலச்சிலதைப்புகழ்ந்து ... *
கருதாமல்ச்சிலதிகழ்ந்துகபிலன்பரணனு ... *
ருசியருள்நக்கீரன்இன்னோர்சொலுங்கவியைப்புகழ்ந்தா *
னுறுங்கலகம்விட்டுஎல்லோரும்மகிழ்ந்திட்டாரே (௪௯)

———(*)———

விருத்தம்.

கரிதல்தீர்ந்திடுசங்கத்தார் கலகந்தீர்த்திட்டலீலை ... *
விரியவிதுகந்துகேட்போர் மேன்மையதாகிவாழ்வார் ... *
பெரியதோர்இடைக்காடன்றன் பிணக்ககற்றைம்பத்தாறுந் *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௫௰)

———(:)(*)(:)———

சங்கத்தார் கலகந்தீர்த்த திருவிளையாடல் முற்றிற்று.

———

ஆக திருவிருத்தம் - ௪ பதம் - ௨ ஆக - ௬.

ஆக பாயிரம் உள்படத் திருவிளையாடல்-௫௫-க்கு வெண்பா-௫ கொச்சகம்-௩ கலித்துறை-௪ விருத்தம்-௩௯௧௪ பதம்-௨௯௫

ஆக கவிதை-௬௧௬.



ஐம்பத்தாறுவது

# இடைக்காடன்பிணக்குத்தீர்த்த திருவிளையாடல்.



விருத்தம்.

சங்கத்தார்கலகமற்றூர்சண்பகபாண்டியனுந் ... *
தற்பதம்பெற்றானபின்பிரதாபசூரியன்தொட் ... *
டங்கத்தார்முடித்தென்னரீரெழுவர்க்கப்பால் ... *
அவதரித்தகுலேசபாண்டியன்தமிழ்நூலாய்ந்தே ... *
துங்கத்தார்சங்கத்தாருடனிருக்கும்போது ... *
சொல்லுமிடைக்காடன்வந்துபாடவதைஇகழ்ந்தான் *
வங்கத்தார்முதலெவரும்புகழுமிடைக்காடன் ... *
வந்துமதுரேசரிடம்வணங்கியோதுவானே (சாள)

பதம் - காம்போதிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி .]

தமிழருமையறிந்தபெரு ... மானே - என்
தனைஇகழ்வனோதென்னனிவன் தானே

[ அநுபல்லவி ]

அமரர்புகழுமது - ராபுரி ... வாசரே
அங்கயல்க்கண் - ணம்பிகையாள்பிராணேசரே
தமிழருமை

[ சரணங்கள். ]

(க) இசைக்கவிக்கொருவுடன் - குவிக்குங்கனக ... மலை
யிலுமறிவுடையோர்சபா - சென்றுரைத்துத்தலை
அசைப்பதேபெரிதுநான் ... பாடினதெல்லாஞ்செவு
டன்காதிலூதுஞ்சங் - காச்சுதையா ... வினவும்
தமிழருமை

(உ) பாடினவருக்கொரு - பயனுமுதவாக் ... கொடும்
பாலைநிலமோஇவன் ... பாரமரமோநெடுங்
கோடோமிருகமோபட் ... சியோகளிநிலமோமைக்
குரைகடலோஒன்றுங் ... கூறுதிருந்தானேமெய்
தமிழருமை

(௩) வஞ்சனிவன்கல்வியில் - மேலானவ ... னென்றும்
மற்றுங்கற்றவன்வித்தை - யருமைஅறிவானென்றும்

## ௩௬-வது-இடைக்காடன்பிணக்குத் தீர்த்தது.

பஞ்சைஇவனைப்பாடி - னேனிந்த ... அவமதி
பரைக்கும்உமக்குந்தா - னுன்உரைப்பதென்னதுதி
தமிழருமை, உ.௬க.

விருத்தம்.

இதுமொழிந்துபிணங்கியன்பனுங்கபிலனோடு ... *
மிடைக்காடன்சென்றான்பின்னிவனன்புக்கிரங்கி ... *
மதுரைநாயகருமுமையவளுடனேசென்றார் ... *
மற்றசங்கத்தாருமெய்திக்கோவிற்குவடபா ... *
லதில்வைகைத்தென்பாலோராலயங்கண்டிருந்தார் ... *
அன்றுதிருவனந்தல்தொழவந்தஅடியார்கள் ... *
கதிதருசுந்தரலிங்கந்தன்னைக்காணுமல் ... *
கரைந்துகண்ணீரோடுவார்மிகவாடுவாரே (சாஅ)

ஸோமசுந்தரேசுவரமூர்த்தியை திருவிருப்பில்க்காணுமல்
அடியார்கள்தேடிப்புலம்பியது.

ராகம் - ஆனந்தபயிரவி - ஆதிதாளம்.

[ கண்ணிகள். ]

(க) ஐயோஎன்ன - அதிசயம்அதிசயம்
அஷ்டகெஜஞ்சுமந் - திட்டவிமானத்துள்
அமர்ந்தசுந்தரரெங்கே - யெங்கேயெங்கேயென்று
அறைவார்சில - அடியார்

(உ) மெய்யோஇது - பொய்யோபிதற்றுநீர்
விழிதெரியாமலோ - வழிதெரியாமலோ
விமலரைக்காணுத - விதமென்னஎன்னவென்று
மெலிவார்சில - அடியார்

(௩) மாலயனுெழிந்திடுங் - காலமதிலுமிந்த
மதுராபுரிநக - ரிதிலேயின்றுகந்த
மறையாப்பரஞ்சுடர் - மறைந்ததுயேதென்று
மலைத்தார்சில - அடியார்

(௪) சேல்விழியுந்துதிக்கும் - பால்மொழியுங்கதிக்குஞ்
சேர்வையுஞ்சுந்தரர்க் - கேர்வையுமாகிய
தேவியெங்கேநம - தாவியெங்கேயென்று
தேடுவார்சில - அடியார்

(ரு) எவராலுண்டிந்த - இருவரையுங்கைக்கொள்ள
என்னவிதியோநகற் - கென்னஅவதியோநாம்

எப்படித்தேறுவோம்-எப்படி ஆறுவோம்
என்பார்சில - அடியார்
(௬) தவறுமதிகுலத்துக் - கிருவிழியிவர்
தானெழிந்தால்இந்த - மீனவனேதிந்த
தமிழ்நாடேதுஇத் - தலமேதெனச்சொல்லித்
தவிப்பார்சில - அடியார்
(௭) பதியைஇழந்ததொரு - மதிநுதல்போலவும்
பைம்பொற்றிருவிழந்த - அம்புயம்போலவும்
பட்டணம்பறி - போச்சேஎனப்பயப்
படுவார்சில - அடியார்
(அ) இதுநாளினிலில்லா - மதுரேசுவரர்செயல்
எப்படிநாமிதைச் - செப்பிடநாவெழும்
என்னசெய்வோமென்று - மன்னவன்முன்னன்று
ஏகுவார்சில - அடியார் (உகூஉ)

—*—

விருத்தம்.

எனமறுகிஅடியார்கள்சென்றுஅரண்மனையி ... *
லிருந்ததென்னன்றனக்கிதனைஇயம்பஅவன்செவியில் *
அனலுறுநாராசமிட்டதுபோலாய்த்திடுக்கிட் ... *
டரியணையிலிருந்துகீழ்வீழ்ந்தறிவுநீங்கி ... *
இனவமைச்சருங்கலங்கமட்பாவையெனவாங் ... *
கேகிடந்துசிறுபொழுதிலேதெளிந்துதனது ... *
அன்னையைவிட்டுப்பிரிந்தறியாஇளங்குழந்தைதேடி ... *
அகமெலிவதெனஎழுகுவான்அழுகுவானே (சா௯)

பதம்-நீலாம்புரிராகம்-ஆதிதாளம்,

[ பல்லவி. ]

எங்கேஉறைந்தீரோபெரு ... மானே
என்னபிழைசெய்தேன்அடியேனே

[அநுபல்லவி.]

மங்காமலலங்கிருதமா ... ... யெட்டு
மதவாரணந்தாங்கும்விமானம்விட்டு
எங்கே

[ சரணங்கள் ]

(௧) செம்மைமக - மேருவிலோ ... வானோர்
தேடுஞ்சிவ - லோகமதில்த் ... ... தானோ

ருசு-வது-இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது.

தம்மைமறந் - தும்மையேங்கினை ... வானோர்
தம்சிந்தையி - லோஇவ்வித ... மேனோ
எங்கே

(உ) சதிராங்கை - லாசப்பெரு ... மலையோ
தாழ்வேதுமில்லா - வேதத்தின் தலையோ
மதுராபுரியிலுமது ... ... நிலையோ
மற்றெந்தனிடத்தில்க்கி - ருபை... ... இலையோ
எங்கே

(௩) கடிமலரோன்மா - யன்தேடிய ... ... போதும்
காணுரேஜ - யாதேவரீர் ... ... சூது
அடியேனேகண் - டிடுவேன்புவி ... ... மீது
ஆயாசம்என்மீ - தினிலின் ... ... றேது
எங்கே- உகூ௩.

---

விருத்தம்

அஞ்சாததென்னனஞ்சிஏங்கும்போது ... *
ஆங்குசிலர்வந்துநின்றுஅலேநீர்வைகைத் ... *
தென்சாரிலுமையொடுசங்கத்தாரோடுந் ... *
திருவாலவாயீசரிருக்கைசாற்ற ... *
மஞ்சாருங்கரதலத்தான்அச்சந்தீர்ந்து ... *
மகிழ்ந்துசென்றுஅங்குறையுமதுரைநாதர் ... *
முன்சார்ந்துபணிந்தெழுந்தாநந்தவாரி ... *
மூழ்கிமொழிகுளறிநின்றுமொழிகுவானே (சாம)

ஸோமசுந்தரேசுவரமூர்த்தியும் மீனம்பிகாமகாதேவியும்
வடவாலவாயிலெழுந்தருளியிருக்க குலேச
பாண்டியன்கண்டு தெரிசித்து
பிரார்த்தித்தது.

பதம்-எதுகுலகாம்போதிராகம்-ஆதிதாளம்

பல்லவி

இங்கெழுந்தருளியகாரணமேதென்னு- லேதுபிழையுண்டையனே

அநுபல்லவி,

அங்கமானமறை - தேடிஇன்னமுந் தொடர்ந்
தறியாவடிசிவப் - படையஎன் னன்னையுடன்
இங்கெழுந்

சரணங்கள்.

(க) சொல்லுமிந்தத்தமிழ் - நாட்டுக்குஇடையூறு
தோன்றியதேதுவுந்தான் ...கண்டோ - அது

அல்லதென்தமர்களால்-கள்வரால்மிருகத்தால்
ஆராலுமிடர்க ... ளுண்டோ
நல்லமறையொழுக்கம் ... விட்டுதோ
நற்றவந்தான்ஒழிந் ... திட்டுதோ
இல்லறந்துறவறங் ... கெட்டுதோ-தீய
எந்தன்மனதுசிவ - சிந்தனைக் குட்பட்டுதோ

இங்கெழுந்

(௨) எந்தநாளும்நிலை - பிசகாதிருந்ததற்
கின்றுசலனம்வந்த ... தேது - சாமி
அந்தநாளில்வந்த - இட்றிலும்பெருந்துயர்
அடுத்துதோஇவ்வூர்க்கிப் ... போது
எந்தன்சிந்தைமெலிந் தேங்கி
இளைத்திடவேஉயர்ந் ... தோங்கிச்
சுந்தரவாரணந் ... ... தாங்கி - எழிற்
சூழும்விமானத்துள்-வாழுமன்பும் நீங்கி

இங்கெழுந்

(௩) நிலத்தில்அரசுசெய்யு - மனுமுறைதப்பியேஅ
னீதிசெய்யத்தொடுத் ... தேனோ-மதி
குலத்தெய்வந்தேவரீர் - அல்லாதுமற்றொன்றைக்
குறித்தாகிலுங்கையெடுத் ... தேனோ
மலைத்துநான்மயங்கச்செய் ... தீரே
வஞ்சமேனீதுரைப் ... பீரே
சலிக்கினுஞ்சமுத்திரம் ... நேரே - மேரை
தவறுமோஅரஹரசிவனேதேவ ... ரீரே

இங்கெழுந்- ௨௬௪.

---

விருத்தம்.

வாகானதமிழ்நாட்டுமன்னனிது கூறிஇளமதிபுனைந்த ... *
நாகாபரணவிமலனேபோற்றி போற்றியெனநவிலக்கேட்டு ... *
பாகானமொழிக்கயற்கண் ணுமைபாகராமதுரைப்பரனாரன்று *
ஆகாசவாக்கதினலரசன்றன் செவிகேட்கஅருள்செய்வாரே (சாமக)

## ௫௬-வது-இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது.

பதம்-அசாவேரிராகம்-அடதாளசாப்பு.

[ பல்லவி, ]

தென்னநாமிந்த - இடத்தில்இன்னுள்வந்த - செயலிதனைக்கேளாய்

[ அநுபல்லவி ]

மன்னுஉயர்சிவஸ் - தலங்கட்கெல்லாமிந்த
மதுராபுரிநகர் - அதிகமிது உகந்த

தென்ன

[சரணங்கள்]

(க) இப்பதிதனில்அமரர்கள் - முனிவர்கள்முதல்
எவரும்நமதுகுறி ... ... கண்டு - தினம்
தப்பறுபூசனை - செய்துவரங்கள்பெற்ற
ஸ்தலங்கள்அநேகங்க ... ... ளுண்டு-அதில்ச்
செப்புமறுபத்தினு - லதிகம்அதிலும்எட்டு
சிறந்ததெண்டிசைப்பாலர் ... தொண்டு-செய்து
ஒப்பறுபேறுபெற் - றதுஅதுவெல்லாம்ஒரு
ஊழியிலழிந்துதுஆழிஉலகில்ப் ... பண்டு

தென்ன

(உ) இந்தஇடம்நமது - தோழன்பூசைசெய்த
இலிங்கமானதாலிப் ... போதில்-இங்கு
வந்திருந்தோமதனு - லின்றுமுதலாயிது
வடவாலவாயாம்புவி ... மீதில்- மிக
எந்தநாளும்நமக்கே - சொந்தமாய்மூவ
ரெவருமறியாத ... அனுதி- யெனும்
அந்தமானமலர்க் - கடம்பவனம்இதைவிட்
டகலுவோமோஇன்னம் - புகலக்கேள்ஒருசேதி

தென்ன

(௩) ஒன்றாகிலுங்குறை- உன்னுல்நமக்கில்லை
உலகத்திலெமதுமுன் ... ... னுலே- வந்து
நின்றாராகிலும் - துயருரைத்தாலதை
நீக்குவதேநமது ... ... வேலை- கல்வி
நன்றுமிடைக்காடன் - தனையிகழ்ந்தாயேயவ
னம்மைநொந்துகொண்டப் ... பாலே- இன்று
சென்றான்நமதுமெய்-யன்பன்இவன்பிணக்குத்
தீர்க்கவேணுமென்று- நோக்கிஇவன்பின்னுலே

தென்ன- உகூ௫.

விருத்தம்.

விண்ணில்ச்சொல்லியமெய்புரைநிம்பமென் ... *
கண்ணித்தென்னவன்காதினிற்கேட்டபின் ... *
நண்ணித்தன்னுமைநாயகரைத்துதி ... *
பண்ணிப்பண்ணிப்பணிந்திதுசொல்வனே (சாயக)

யிதுவும்குலேசபாண்டியன்ஸ்தோத்திரம்செய்து பிரார்த்தித்தது

பதம் - பியாகடைராகம் - ஆதிதாளம்

[ பல்லவி. ]

அடியேன்செய்தபெரும் - பிழைஇதுபொறுத்தெழுந்
தருளவேணும்ஐயனே

[அநுபல்லவி.]

கொடியேனெனினும்எந் - தனைக்கைவிடத்தகுமோ
கூறும்நீரையடித் - தாலும்நீர் ... விலகுமோ

அடியேன்

[ சரணங்கள் ]

(க) பெற்றசீர்மிகுந்து ... அடக்கமில்லாக்காட்சி
பெருமிதமுள்ளவருக் ... கவமானங்காணியாட்சி
மற்றோரிடத்தில்பார்க்க ... வேணுமோஅத்தாட்சி
வள்ளலேநக்கிரன் ... தானேயிதற்குச்சாட்சி

அடியேன்

(உ) தன்னையறியாவித்தை ... மதத்தாற்பெருவிசாரம்
தரித்தேன்இடைக்காடன்-தமிழைஇகழ்ந்தின்னேரம்
என்னகுற்றஞ்செய்தாலும் ... காப்பதுமதுபாரம்
ஈசுவரனேமக்கள் ... மேலென்னபக்கவாரம்

அடியேன்

(௩) எண்ணுமிடைக்காடன்போ-லென்னையும்ஆள்க்கொண்டு
இரங்கவேணும்ஐயா ... தேவரீர்க்கிரண்டு
கண்ணுஞ்சரிதானேநான் ... செய்ததவறுகண்டு
கண்டித்தாலென்னஇந்தக் ... காரணமெங்கேயுண்டு

அடியேன் - உ௯௪

விருத்தம்.

வடவாலவாயிலிலைவபணிந்தவன்மேலன்பாய் ... *
மனைக்கனுப்பிஉமையொடுபோவாணரெல்லாஞ்சூழ ... *
கடவானைசுமந்தவிமானத்தில்வந்தார்கடவுள் ... *
கௌரியன்பின்னிடைக்காடன்கவிகேட்டுவரிசை ... *
அடைவாகச்செய்தனுப்பிப்புலவரெல்லாமகிழ ... *
அரசுபுரிந்தான்கருணையாலரிமர்த்தனனும் ... *
திடவான்வந்தவதரித்தானவனையரசாளச் ... *
செய்துகுலேசன்பின்புசிவபதமுற்றானே (௩௱௰௩)

---

விருத்தம்.

தரைபுகழிடைக்காடன்றன் - சலிப்புறுபிணக்குத்தீர்த்த ... *
பரைபதிவிளையாட்டீது - பகர்ந்திடக்கேட்போர்வாழ்வார் *
பரவையில்வலைவீசிப்பேர் - படைத்தஜம்பத்தேழாந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௩௱௰௪)

இடைக்காடன்பிணக்குத்தீர்த்த - திருவிளையாடல் முற்றிற்று

---

ஆ திருவிருத்தம் - அ பதம் - சு ஆ ௰௪

ஆ பாயிரம் உள்படத் திருவிளையாடல் ருசு-க்கு வெண்பா-ரு

கலித்துறை-௪ கொச்சகம்-௩ விருத்தம்-௩௱௨ பதம்-௨௯சு.

ஆ கவிதை-எ௱௰.





ஐம்பத்தேழாவது

## வலைவீசிய திருவிளையாடல்.



விருத்தம்.

இடைக்காடன்-பிணக்குத்தீர்த்-தபினரிமற்-றனபாண்டிய ... *
னிப்பாராள்நாள்
விடைக்கால-காலமது-ரேசர்வே-றோரிடத்தில் ... ... *
வீற்றிருந்து
கிடைக்காத-மறைப்பொருளைக்-கேளென்று-பண்டுகிரி ... ... *
மகளாம்அன்ன
நடைக்காவி-விழிஉமையாள்-தனக்குமன-மகிழ்வுடனே ... *
நவின்றிட்டாரே (சாமிடு)

தரு-நாதநாமக்கிரியைராகம்-சாப்புதாளம்.

[கண்ணிகள்]

(க) ஆதிபராபரஞ் - ஜோதியுமைக்கி
அரியமறைப்பொருள் ... தோணச் - சொல்ல
அன்னைபராமுக - மாயதைக்கேட்க
அறையும்அரனது ... கான
போதமில்லாமல்ப் - பராமுகமாகினை
பூவையேகேளத ... னாலே - அப்
புனற்கடல்வேடர் - தனக்குமகளெனப்
போய்ப்பிறப்பாயென்றார் மேலே
(உ) அந்தரிஅஞ்சி - அரனேஉமைவந்
தணைவதெப்போதென ... ஏங்கினள் - அடி
அன்னமேநாமேவந் - துன்னைமணஞ்செய்
தணைந்திடுவோமென ... நீங்கினள்
இந்தவகையெல்லா - மைந்தனெனவந்த
தந்திமுகவனும் ... அறிந்தான் - அங்
கிருந்தமறைப்புஸ்த-கங்களையெல்லாம்
எடுத்துக்கடலினி ... லெறிந்தான்
(ங) தந்தைகரத்தி-லிருந்தமறைப்புஸ்
தகந்தனைக்கந்தனும் ... பறித்தே - நெடுந்

தாழ்கடல்மீதினி லாழவெறிந்தனன்
　　தானதுகண்டரன் ... வெறித்தே
மைந்தரிவரைவர - விட்டதேனென
　　வாசலில்நந்தியை ... நோக்கினர் - பெரு
வாருதிநீரில் - சுறுமச்சமாகி
　　வளர்ந்தலைவாயென ... நீக்கினர்

(௪) தந்திமுகற்கிடுஞ் - சாபந்தமைவந்து
　　சாருமெனவெண்ணிப் ... பொறுத்தார் - குகன்
தன்னையேஊமை - வணிகனெனவே
　　தரையில்ப்பிறவென ... வெறுத்தார் (௨கூ௮)

---

விருத்தம்.

தண்டவளமதிச்சடையாரிந்தவாறு ... *
　சபித்திருந்தாரப்பாலித்தரணிமீது ... *
பண்டொருவன்மிகுந்ததவஞ்செய்துகொஞ்சம் ... *
　பண்ணியதீவினையினற்பலநீர்வேடர் ... *
தெண்டனிடுவேந்தன்மகனைப்பிறந்து ... *
　திரைவைகைநாட்டிற்கீழ்ச்சமுத்திரத்தின் ... *
அண்டையிலோர்துறைப்பாக்கமென்னுமூரில் ... *
　அதிமேன்மையுடனவனிபுரத்திட்டானே. (௬௱௰௬)

பதம் - பைரவிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

பரதவர்குலமன்னன் - தானே - செல்வப்
　பருதிமிகுந்திருந்- தானே

[ அநுபல்லவி. ]

விரைமலர்க்கேதகை - சோலைசூழ்ந் ... துலாவி
　மிகவளஞ்சேர்துறைப் - பாக்கநகரில் ... மேவி

பரத

[ சரணங்கள் ]

(௧) கனவானென்னப்பேர் ... ... பெற்று - பெருங்
　　கடற்செல்வப்பயனெல்லா ... முற்று
　இனவோரெவருஞ்சம் ... ... பந்து - மிகுந்
　　தின்பமுடனேவாழ்க அன்பறிவுமிகுந்து

பரத

(௨) வரநதியுடனிளம் ... ... பிறையே - அணி
மதுராபுரிநக ... ... ரிறையே
பரமெனப்பணிந்துமீன் ... ... திறையே - தந்து
பலபலவேடுவர் பணிந்துநிற்க ... முறையே
பரத
(௩) தன்பெருங்கிளைக்கெல்லா... ... மேலாய் - உயர்
சற்குணமுடன்தர்ம ... ... நூலாய்
அன்புடனனுதின ... ... மாலாய்- மகிழ்ந்
தணையுமனைவியுடன்மதனும்ரதியும் போலாய்
பரத-உ௬அ.

---

விருத்தம்.

உரைபெறுவேடர்வேந்தன் உயர்சுதனின்றியீசர் ... *
மரைமலரடியைவேண்டி வாட்டமுற்றிருக்குநாளில்... *
பரையுரைபாகர்பண்டு பகர்ந்தசாபத்தாற்பாண்டித் ... *
துரைமகள்இந்தவேடத் துரைமகளாகினளே. (சாமிஎ)
மீனம்பிகாமகாதேவிபரதவர்குலத்தில் வந்தவதரித்தது.

பதம்-சௌராஷ்டிராராகம்-ஆதிதாளம்.

பல்லவி

பரதவகுலச்செல்வத் -திருமகளெனச்சொல்ல
பாங்குடனவதரித்தாள்

அநுபல்லவி

அரனரன்றிட்ட ... ... சாபந்தனைச்சுமந்து
அங்கயல்க்கண்ணிபா- ரெங்குமகிழவந்து
பரத

[ சரணங்கள் ]

(க) கரிக்குலமெனவேடர்-வாருதிமீனினங்
களைப்பிடித்திடும்விந்தை ... ... தன்னை
பெருக்கமுடனேகாண-மன்னன்வரும்போதங்கோர்
பின்புறம்உயர்மலர்ப் ... ... புன்னை
மருக்கமழ்நிழல்தன்னில்-வண்டினந்தாராட்டும்
வண்ணமிசைக்கமுகில் ... மின்னை
சிரித்திடும்பேரொளி-விரித்திடுமழகுடன்
கிடந்தருகுழந்தையாய்க்கிடந்தழுதா ளன்னை
பரத
(௨) வந்தவேடுவர்கோன்-சென்றிந்தக்குரல்கேட்டு
வாஞ்சையுடனங்குவந் ... தடுத்து

எந்தத்தெய்வமின்றோ இங்கொருகுழந்தையா
யிருந்தாளென்றுரைத் ... தெடுத்து
சுந்தரரேஎனக்குச்-சுதனில்லைஎனத்தந்த
சுதையிதுவெனத்துயர் ... விடுத்து
மந்தரமெனும்பெரு வலத்தோள் துடித்திட
மனமகிழ்ந்துமனைவி தனதுகையிற் கொடுத்து
பரத

(௩) தந்தமகளைவேடர்-கோன்தன்மனைவிவாங்கி
தன்கண்குளிரஅன்பு ... ... கூர்ந்து
அந்தகன்கண்தெரிந்-திருநிதிகண்டாப்போ
லணைத்துமுத்தமிட்டுச்சி ... ... மோர்ந்து
வந்தவலைஞர்மாதர்-குரவைமுழங்கவேதன்
மனையில்மகிழ்ந்துவந்து ... ... சேர்ந்து
சொந்தமகட்குச்சங்கு மணியும்பாசியுஞ்ஜாதித்
தொழிற்குத்தக்கதுபூட்டிச்-செழித்துவளர்க்கவாழ்ந்து
பரத,௨௯௯,

---

விருத்தம்.

ஏடணிகுழலாள்வேடர்க்கிறைமின்னாய்வளரும்நாளில் ... *
கோடணிநந்திமுந்திக்கொண்டசாபத்தினாலே ... *
நீடலைகடலில்வந்துநெடுஞ்சுறுமீனாயிந்த ... *
வேடர்களனுகாவண்ணம்விலக்கினன்கலக்கினனே (சாமஅ)

பதம்-மோகனராகம்- ஆதிதாளம்.

[ பல்லவி. ]

நந்தியீசனோர்-சுறுமீனாய்க்கடல்- நடுவிலவதரித்தானே

அநுபல்லவி

தந்திமுகவன்கந்தன் - கடலிலெறிந்தபுஸ்த்
தகத்தையெல்லாமுண்டு-மிகத்தைரியங்கொண்டு
நந்தி

[ சரணங்கள். ]

(௧) வலைகளையுங்குறுக்கி வலைஞரையும் நொறுக்கி
அலைகளையுமுறுக்கி ஆரையுமே......நறுக்கி
நந்தி

(௨) வேணியினுயர்ந்தெட்டி மேகங்கிழிய முட்டி
தோணிகளதைக்கிட்டி தூளாக்கிவழிக் கட்டி
நந்தி

(௩) ஆழிபொங்கத்தாவி அலைகடற்குண்மேவி
வாழுமுயிர்களாவி மடியஉண் டுலாவி
நந்தி, ௩௭,

விருத்தம்

மச்சமிவ்வாறிருக்கஅங்குபரதர்வேந்தன் ... *
வலைஞரொடுசென்றதனைவளைந்தாற்றுமல் ... *
இச்சலதிமீன்பிடிப்போர்தமக்கேஎந்தன் ... *
ஏந்திழையைக்கொடுப்பேனென்றிருந்தானன்னாள் *
அச்சுதன்பங்கயனறியாமதுரைஈசர் ... *
அங்கயல்க்கண்ணியைமணஞ்செய்தணைவதற்கு ... *
இச்சையுடன்ஒருவேடன்வடிவுகொண்டு ... *
எழுந்துதுறைப்பாக்கமதற்கேகினரே (சாயிக)

பதம்-தோடிராகம்-ஆதிதாளம்-

பல்லவி.

வேடன்வடிவுகொண்டு-கூடல்நகரில்வாழும்-விமலரெழுந்தருளினர்

[ அநுபல்லவி. ]

ஆடல்சேரழகர்-செயலைப்பறிவதெவர்
ஐங்கணைவேடனைப்-பங்கஞ்செய்ததவ
வேடன்

[சரணங்கள்]

(க) கரியுரியெனத்தோனும் கருங்கச்சையுடையும்
கட்டியுடைவாள்தரித் திட்டதோரிடையும்
விரிசிகையிலணிந்த ... நெய்தல்மலர்த்தொடையும்
விளங்கவலையுங்கூடு மிலங்கமகிழ்வ ... டையும்
வேடன்

(உ) உசந்தகுலமுந்தங்கட் கிளப்பமென்று தள்ளும்
ஓசைக்கடல்வேடுவ ராசைத்திருவைக்கொள்ளும்
இசைந்தவேடமிது வென்றுஅன்னப் புள்ளும்
ஏனமுங்காணாத ஞானரூபர் விள்ளும்
வேடன்

(௩) கோபமிகுந்துஏதும் ... அன்பில்லாமல்மருக்
கூந்தலுமையைவேடக் குலத்தில்பிறக்கவரு
சாபமிட்டதினாலே ... தாமுமந்தவுரு
தாங்கவேணுமென்றோ ... பாங்குடனேஒரு
வேடன், ௩௭௧,

விருத்தம்.

பரதகுலத்திருமகன்போல்வந்தார்வேடர் ... *
பார்த்திபனுங்கண்டிவரைநீராரென்றான் ... *
திரமதுரைவேடர்கோன்மகனுமிந்தத் ... *
திடவலையால்விண்மீனும்பிடிப்போமென்றார் ... *
அரவநீர்க்கடற்பெருமீனிவைபிடிப்பீ ... *
ராகிலெந்தன்மகள்மலர்க்கைபிடிப்பீரென்றான் *
பெருவலையைவீசிஅந்தமீனையுங்கைப் ... *
பிடித்திட்டார்மானையுங்கைப்பிடித்திட்டாரே(௬௱௨௰)

பரதவர்குலமகளாக அவதரித்த அம்பிகையை சோமசுந்தரேசுவர மூர்த்தி திருமணஞ்செய்தது

பதம்- சுருட்டிராகம்-ஆதிதாளம்

பல்லவி.

பரதகுலமகளா - கியமலைமகள்தன்னைப்
பரனார்மணஞ்செய்தார்

அநுபல்லவி

அரவஞ்சூழ்ந்தமது - ராபுரிவிட்டெழுந்து
ஆக்கமிகுந்ததுறைப்-பாக்கமதனில்வந்து

பரத

[ சரணங்கள். ]

(௧) வேடன்வடிவுகொண்டு-வந்துபெரியமீனை
வீசும்வலையாற்கரை ... ... ஏற்றி
நாடிவேடரெல்லா - மகிழ்ந்தேகுலதெய்வம்
நமக்கிவரென்றிடத் ... ... தோற்றி
கோடணிகடல்வேடர் - குலமகள்தனக்கேற்ற
ஆடவரிவரென்று ... ஆருங்கண்டுபோற்ற

பரத

(௨) குரைகடல்வேடுவர்- குரவையொலியும்பல
குலவாத்தியங்களு ... ... மீறி
திரைநெடுங்கடல்ஒலி தனைமறைத்திடப்பெரும்
செம்பொன்மணவரையி ... ... லேறி
மரைவேடனைவென்ற வடிவைஎவரும்பார்க்க
காககீரால்வேடர் ... காவலன்தாரைவார்க்க

பரத

(௩) மணக்கோலத்துடன்-விடைமேலுமையொடு
வானிலெழுந்துகாட்சி ... ... கொடுத்து

இணைத்தாள்தொழுவேடர் - பதிக்கிவரங்கள்மிக
யீந்துகருணையுடன் ... விடுத்து
வணக்கமுகந்தநந்தி - மருவும்சாபம்விண்டு
கணத்துடனேவந்து - கண்டுபணியப்பண்டு
பரத, ௩௭௨.



விருத்தம்.

அம்பிகையாளோடுவிடைமேலெழுந்துசென்று ... *
அருகில்நந்திமுதல்மிகுந்தஅன்பர்சூழ ... *
உம்பர்தொழஞானமாமுனிவரேற்ற ... ... *
உயர்ந்திடும்உத்தரகோசமங்கைசார்ந்து ... *
நம்புமறைப்பொருளைஉமையவளுக்கோதி ... *
நவிலுமன்பர்அறுபதினுயிரவர்க்காங்கு ... *
அன்புடனேமுத்திகொடுத்துமையாளோடும் ... *
அரனூர்தென்மதுரையில்வந்தருளினரே (௬௭௨௧)



விருத்தம்.

குரவையில்வலைஎறிந்தகோவிளையாடலீது ... ... *
நரர்முதலெவருங்கேட்போர்நன்மைசேர்ந்திடுவார்வாத ... *
புரர்தமக்குபதேசித்தபுண்ணியவன்பத்தெட்டாங் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௬௭௨௨)

⊙ ⊙⊙⊙ ⊙

வலைவீசிய திருவிளையாடல் - முற்றுப்பெற்றது.

—∞○✻○∞—

ஆக திருவிருத்தம்-அ பதம்-௬ ஆக ௰௪.

ஆக பாயிரம்உள்படத் திருவிளையாடல் -௫௭-க்கு வெண்பா-௫
கலித்துறை-௪ கொச்சகம்-௩ விருத்தம்-௬௭௰ பதம்-௩௭௨
ஆக கவிதை-௭௭௨௪.





ஐம்பத்தெட்டாவது

## வாதவூரடிகளுக்கு உபதேசித்த திருவிளையாடல்.

விருத்தம்.

வலைவீசியபின் னுயர்ந்தஅரி மர்த்தனன்பா ராள்நாளில் ... *
அலைநீர்வைகை நதிசூழ்தண் டலைசேர்வாத வூரில்என்றும் ... *
நிலையாகியமாத் தியகுலத்தோர் நீதிமறையோன்மகனும்வில் *
மலையாரருளாற் பிறந்துதிரு வாதவூரர் வளர்ந்தாரே (சாஉங)

பதம்-சங்கராபரணராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

மாணிக்கவாசக - ரானசெல்வத்திரு - வாதவூரர்வளர்ந்தார்

அநுபல்லவி.

வேணிக்கடவுளன்பு கொண்டெங்குமேமின்ன
விளங்குகின்றஒளி ... விர்த்திச்சந்திரனென்ன

மாணிக்க

சரணங்கள்.

(க) அஞ்ஞானமாமந்தகாரமு ... மூட
ராகியதாரகையுமறைந் ... தோட
மெய்ஞ்ஞானரானனவிந்தங்கள் ... தேட
வேயுதிக்குங்கதிர்போல்விளை ... யாட

மாணிக்க

(உ) புத்தரெனும்பெரும் பஞ்சுப் ... பொதிக்கி
பொறியென்னவேதீ - வினையை யொதிக்கி
கற்றநான்மறைசொல்லும் ... விதிக்கும்
காணாதசோதியைக் - கண்டு துதிக்கும்

மாணிக்க

(ங) வேதியரெல்லாம் புகழ்ந்திடப்பேர் பெற்று
வேதமுறைப்படி - உபநயனம துற்று

ஆதிமாமறைமுத- லாங்கலை ... முற்று
மானவயதுபதி னாறுக்குள்ளே கற்று
மாணிக்க- நாஉ.

---

விருத்தம்.

வளருமிவர் தஞ்செயலெல்லா மன்னனரிமர்த்தனன்கேட்டு... *
அளவில்மகிழ்வாய்அருகழைத்து அன்றேஅமைச்சி னியல்பீந்தான்
வளமதுகந்துசிறந்ததிரு வாதவூரர்மதுரைதன்னில் ... *
தளமதுயர்ந்ததென்னவர்கோன்றன் மந்திரியாயிருந்தாரே (சஉச)

பதம்- பியாகடைராகம்- ஆதிதாளம்

பல்லவி.

வாதவூரரிமர்த்தனபாண்டியன் - மந்திரியாயிருந்தார்

அநுபல்லவி.

வேதன்மாலுமறியாத போதவுரு- விமலரிருசரணகமலமறவாததிரு
வாத

[ சரணங்கள். ]

(க) தென்னன்புயமு- திசைநாகங்களும் ... பாரந்
தீர்ந்துமகிழப்புவி- தாங்கி ... வேம்பினரா
மன்னன்தனக்குந்தவத்- தோர்க்கும்வலுமை ... சார
வனைந்தகவசம்போலு- மலர்க்கண்போலு முதார
வாத

(உ) உரைசெய்புலகுமன்னன்-மனமுமினமும் ... னாலும்
ஒப்பநடந்துசதுர்- விதஉபாயத் ... தாலும்
அரவணைத்துக்குடி- படைகளையேயெக் ... காலும்
அரசனொருதந்தையுந்-தாமொருதாய் ... போலும்
வாத

(ரு) மதமுள்ளபுவிவாழ்விற்- பயனில்லையென்று ... தத்து
வத்தையுணர்ந்துஜன- னத்தையொழிக்க ... அத்து
விதவடிவானசற்- குருவிந்தஉல ... கத்து
மேலெங்குண்டெனத்தேடி- வேந்தனொடும் ... ஒத்து
வாத - நாச.

---

விருத்தம்.

மந்திரியாயிருக்குநாள் தன்னிலோர்நாள் ... *
வாதவூரரைஅரிமர்த்த னன்பார்த்தன்பாய்க் ... *

ரு அ-வது-வாதவூரடிகளுக்கு
உபதேசித்தது.

கந்துகங்கள்மிகக்கொண்டுவருவீரென்று ... *
கனகவறைதிறந்துவெகுநிதிகளீந்தான் ... *
பந்தமொழிந்தவர்நிதிகளெல்லாம்பெற்று ... *
பார்த்திபன்றன்விடைபெற்றுப்பயணமாகி ... *
இந்தனந்தாங்கிப்பத்திரனையாள்க்கொண்ட ... *
ஈசர்தமைப்பணிந்துதோத்திரஞ்செய்தாரே (௪௨௫)

மாணிக்கவாசகஸ்வாமிகள் ஸோமசுந்தரேசுவரமூர்த்தியை
தெரிசித்துஸ்தோத்திரஞ்செய்தது.

பதம்-ஜகனுராகம்-ஆதிதாள்ம்.

பல்லவி.

பதிதபாவனஉமாபதே-பரமகிருபாநிதே

[ அநுபல்லவி ]

மதுராபுரிநாயகா - மகாவரதாவரதாயகா

பதித

[ சரணங்கள். ]

(க) சந்திரஜடிலசிவசம்போ - சரணாரவிந்தசசிதர நிரந்தரா
இந்திரவிபுதகணவந்திதநிரிநயன-ஸந்ததசுபகர ஸுந்தர

பதித

(உ) சங்கரஅரசிவசம்போதுரிதப-யங்கரபாபவி ... நாசா
மங்களசுமுகபுஜங்ககமலகர-கங்கணரஜதகி ... ரீசா

பதித

(௩) சாமகானசிவசம்போபரபுர -காமதகனகிரி ... சாபா
சோமவதனஅபிராமசுகுணவெகு-நாமகரணுதிபிரதாபா

பதித-நாடு.

விருத்தம்.

வாதவூரிறைவரிந்தவண்ணமேதுதித்து ... *
மன்னனருள்நிதியெல்லாமுமக்குமுமதிருபொற் *
பாதவடியாருக்குமாக்கவென்சிந்தைப் ... *
பருங்குறையீதெனவேண்டிப்பணிந்தெழுந்துநின்ற *
போதரனையர்ச்சிக்குமொருமறையோன்வந்து ... *
புனிதவெண்ணீறளித்திடப்பெற்றணிநுதலிற்புனைந்து
ஈதரியசகுனமெனமகிழ்ந்து,திருமுடியில் ... *
ஈசர்பதம்பூண்டார்பூண்டெழுந்துமீண்டாரே (௪௨௬)

பதம்-சுத்தசாவேரிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

பரிகொள்ளவேநடந்தார் நதிகளும் - பதிகளுமேகடந்தார்

[அநுபல்லவி.]

அரிமர்த்தனபாண்டியன் - மந்திரியெனப் ... பகர்
ஆணிக்கனகமேனி- மாணிக்க ... ... வாசகர்

பரி

[சரணங்கள்.]

(௧) ஆசைமரகத ... ... வல்லி - சராச
ரமெல்லாமருளிய ... தல்லி - மகிழ்
நேசர்கருணையைப் ... ... புல்லி - அரிமர்த்தன
நிருபனிடத்திலுஞ் ... சொல்லி - கொண்டு
வீசுங்கவரி தள்ள - தேசர்வந்தெதிர்கொள்ள
பாசமதனைமெள்ள - ஈசரருளால்த் தள்ள

பரி

(௨) வட்டமுரசம் ... அடிக்க - உயர்ந்திடு
வானமெங்கும் ... இடிக்க - ஆல
வட்டம்உயர்ந்து ... பிடிக்க - எண்ணிய
மனதின்படியே ... முடிக்க - பலபல
ஒட்டகைமேல் நிதி - இட்டுவரவே துதி
வட்டக்குடைகள்உதித் திட்டமதி போற்கதி

பரி

(௩) குதிரைகரிகள்பல ... ... கோடி - பதாதிகள்
கொக்கரித்துக் ... ... கூடி - மிகச்
சதிருடன்உற ... ... வாடி - வரச்சிவிகை
தன்னிலெழுந்து ... ... நாடி - நான்மறை
விதியுறைஉலகெட்டு -மதிபுகழது கிட்டு
மதுரைநகரைவிட்டு- ஸாதினத்திற்புறப்பட்டு

பரி-ஙாசு.



விருத்தம்.

பரிகொள்ளவிவரேகும்போதுகூடற் ... *
பரனோரருமறையோன்படிவமாகி ... *
அருகுள்ளஅடியாரைபாலராக்கி ... *
அவரோடுந்திருப்பெருந்துறையிற்சென்று... *

ரு அ-வது-வாதவூரடிகளுக்கு
உபதேசித்தது.

முருகுள்ளமலர்க்குருந்தினிழலின்மேவி ... *
முனிவர்தொழவிருந்தாரங்கேகிஞான ... *
விரிவுள்ளசிந்தையர்மெய்வாதவூரர் ... *
மேவுமந்தக்கருணைவடிவினைக்கண்டாரே (௬உஎ)

மாணிக்கவாசகஸ்வாமிகள்பெருந்துறையில்சற்குருவடிவமா
யெழுந்தருளியஸ்வாமியைக்கண்டுதெரிசித்தது.

பதம்-மோகனராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

பெருந்துறைநகரிற்-குருந்தநிழலடியில்-இருந்தவரைக்கண்டார்

அநுபல்லவி.

வருந்திவருந்திஎன்று - காண்போமெனவந்த
மாணிக்க வாசகர் - மனமகிழ்வுடனந்த
பெரு

[ சரணங்கள். ]

(க) நீர்நிரைகுளம்குளம் - நிறைகமலம்கமலம்
நிறைந்துமதுவொழுகும் பூவும்
கார்நிறவண்டுகளின்-கானமுங்கானங்கள்
கற்பவரெனக்குயில் ... ... கூவும்
சீருள்ளசோலைகள் - வானவர்சொரிந்திடுஞ்
செழுமலரெனமலர் ... ... தூவும்
நேருள்ளவளமொடு - அருவுருவாகிய
நிமலர்கருணையுடன் ... மேவும்
பெரு

(உ) ஆகமவேதபு - ராணசமயநா
லாய்பவர்சூழ்ந்துள்ளங் ... களிக்க
ஏகமனதுள்ளமெய்ஞ்-ஞானியர்யோகியர்
இன்பசாகரத்தில் ... குளிக்க
தேகமுருகிமகிழ்ந் - தாடிப்பாடிச்சிலர்
சேவித்தானந்தக்கண்ணீர் ... துளிக்க
வாகுள்ளபாலர்சிலர் - ஏவல்செய்திடப்புவி
மாயையெல்லாம் பறந்தோடி ... ஒளிக்க
பெரு

(௩) தேசுபெருகியருத்-திராட்சமணிந்தமெய்யில்
சிறந்தசெங்கனகச்ச ... யிலத்தில்
வீசியநிலவெனநீறும்அருவினன்ன
விளங்குநூலுங்கர ... தலத்தில்

பேசுஞ்சிவஞானமெய்ப் - போதபுஸ்தகமும்
பிடித்துச்சரணக ... மலத்தில்
ஆசையுடன்வணங்கும் ஸனகன்முதலோர்க்காக
ஆலடியிலமர்ந்தாப்போல்இன் ... னிலத்தில்
பெரு-நாள.



விருத்தம்.

நோக்கினனை ஆளவந்தகுருவேசென்ம ... *
நோய்தீர்க்கவேணுமெனப்பணிந்தாராங்கு ... *
தீக்குளுறும்இரும்புண்டநீர்போற்பாசந் ... *
தீர்த்துஉடல்பொருளாவிமூன்றுந்தம்ம ... *
தாக்கியுண்மையுபதேசஞ்செய்தார்ஞான ... *
நந்தசாகரத்துள்ளாய்ஞானவாணி ... *
வாக்கில்வரநற்றிருவாசகத்தைஅன்று ... *
வழுத்தினுர்பரனைமனத்தழுத்தினரே. (௩௨௨)

மாணிக்கவாசகஸ்வாமிகள் உபதேசம்பெற்றபின் ஸ்வாமியை ஸ்தோத்திரஞ்செய்தது.

பதம்-சுருட்டிராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி. ]

குருந்தமிழலிலுற்றகோவே - சற் - குருவேஅருளுருவேதேவே

[ அநுபல்லவி. ]

பரிந்துஅடியேன்வந்து-பணியக்காட்சிதந்து
குருந்த

[ சரணங்கள். ]

(௧) அற்பவாழ்வுசதமென் ... ஞேடி - திரிந்
தலையுங்கானல்மான்போல் ... வாடி
எய்ப்புறுதவழி ... ... தேடித் - தேடி
இச்சைகொண்டவென - தெண்ணமுடிக்கநாடி
குருந்த

(௨) மலமுறுதேகத்தைப் ... பழித்து - மிக
வாஞ்சைவைக்குங்கருத்தை யழித்து
உலகவாழ்வின்மய ... லொழித்து - எனக்
குண்மைகாட்டிஇரு - கண்மலர விழித்து
குருந்த

## ௫௮-வது-வாதவூரடிகளுக்கு உபதேசித்தது.

(௯) பிரபஞ்சக்கடலின்கரை ... காட்டி - என்னைப்
பிடித்தஆசைப்பேயை ... ஓட்டி
நிறைந்தஇன்பவமு ... தூட்டி
நிச்சயமானதை - நிலைபெறவே நாட்டி

குருந்த-௯௱௮

---

விருத்தம்.

சுத்தமொழியானமணிமாலையிதுசாற்றித் ... *
துதிக்கமாணிக்கவாசகரென்றுநாமம் ... *
வைத்தனர்பின்இன்னமிவர்பாடல்தனைக்கேட்டு ... *
மகிழ்ந்தேவல்கொண்டுநிதியாவுங்கைப்பற்றி *
இத்தரையில்இவர்மகிமைதனைக்காட்டவேண்டி ... *
ஈங்குசிலகர்ரியமுண்டிருவென்றுமறைந்தார் *
அத்தர்தமைஅன்பரொடுங்காணாமல்மயங்கி ... *
அழுதுமாணிக்கவாசகர்பகருவாரே ... (௩௱௨௯)

பதம் - முகாரிராகம் - சாப்புதாளம்

பல்லவி

என்னைமறந்துஎங்கே மறைந்தீர் - சாமி
எந்தயிடத்தினிற்சென் - றுறைந்தீர்

அநுபல்லவி.

அன்னைசிசுவைதேற்று - வதுபோலவேதேற்றி
அதுகனவோநினைவோ - என்றிடஎ மாற்றி
என்னை

[ சரணங்கள் ]

(௧) ஈனவினைக்கேபாத்திர - மிவ்வுடலிதைச்சிதைத்
திறப்பேனுமதுடைமையென்றஞ்சு றேனே
ஆனபாவியுயிர் - தானேயுந்தொலையாதே
ஐயோஉமைப்பிரிந்து - ஆவிகொண்டிருந்தேனே
என்னை

(௨) பிறவிக்குருடன்பெற்ற - பெருமணிபோலுமது
பெருமையறியாதநான் - பேரின்பம் ... முழுக
அறிவுதந்தெளிதாய்வந் - தாண்டஅருமையேயென்
னையனேதனியேனு - னஞ்சிபே ... யழுக
என்னை

(௩) மண்முதல்ப்பலதத்து-வங்களில்த்தேடித்தேடி
மதிகெட்டேனையறியா - மயக்கந்தீர்த் ... திட்டு
கண்டெரிந்திடச்செய்து - பின்னும்அன்பரோடு
கலக்காமல்வினையோடு-கலக்கவே ... விட்டு

என்னை - ௩௭௬.

---

விருத்தம்.

பதைத்தேங்கியேங்கித்தாயைப்பிரிந்த ... *
பாலன்போற்கோபுரவாசலிலேவந்து ... *
இதச்சேனைகளைப்பார்த்துக்குதிரையெல்லாம் ... *
இனத்தோடுஞ்சேர்த்துக்கொண்டாடிமாசம் *
முதல்த்தேதிமதுரைவந்துசேர்வோம்நீங்கள் ... *
முன்போய்த்தென்னனுக்குரையுமென்றுரிந்த *
விதச்செய்தியெல்லாந்தென்மதுரைதன்னில் *
மீனவன்முன்சேனைமன்னர்விளம்புவாரே... (௩௭௩ம)

பதம் - பிலகரிராகம் - ஆதிதாளம்

( பல்லவி )

வாதவூரருடசேதி - தென்னர் - மன்னுகேளுமிப்போதில்

[ அநுபல்லவி. ]

ஆதரவும்அமைச் - சியல்புங்குணமுமன்பும்
அவனியிலிவருக்கி - டில்லையென்றுநம்பும்

வாத

[ சரணங்கள் ]

(௧) நிதிகொடுத்தனுப்பிய - நின்விடைபெற்றுச் ... சென்று
நிலமகிழ்பெருந்துறை - தனிலரன்கோயி லொன்று
அதிலொருகுருந்தின்கீழ் - ஒருபெரியவ ரென்று
ஆருந்தொழவிருந்தா - ரவர்முன்சென்று ரன்று

வாத

(௨) பணிபெறுதவசியா - மவரைப்பார்த்துப் பார்த்து
பரனேஅரனேஎன்று - பணிந்துகாத்துக் ... காத்து
அணிதுகில்நிதியெல்லா - மவரிடத்தினில்த் ... தோற்று
ஆண்டிவேஷமானு - ரதுவொருதிருக் ... கூத்து

வாத

உபதேசித்தது.

(ரு) உரிமையானமாமி - தலையிற்கையும் ... வேலிக்
குப்புறத்தியிற்கன் - னும்போலாச்சவர் ... சோலி
பரிகொள்ளும்வினைவில்லை - அரசனேயிது கேலி
, பழகியுன்கருணையே - படைத்தபாக்கிய ... சாலி
வாத-நாய

---

விருத்தம்.

நீதிஇதுகேட்டரசன் இருந்தானங்கு ... *
நிகழ்வாதவூரர்பரி கொள்ளப்போன ... *
சோதிநிதியாவுமரன் திருப்பணிக்குந் ... *
தொண்டருக்குமளித்துநாள் கழித்திருந்தார் *
ஓதியநாளடுத்ததிற் பரிவாரத்தால் ... *
ஓலையொருதூதனிடம் விடுத்தான்தென்னன் ... *
ஆதிநாயகரடியார் வாதவூரார் ... *
அவ்வோலைதனைவாசித் தறிகுவாரே ... (சருயக)

பதம் - சாவேரிராகம் - ஆதிதாளம்

பல்லவி.

ஸ்ரீமன்அரிமர்த்தன - தென்னவன்திருமுகம் - திருவாதவூரர்காண்க

அநுபல்லவி.

நாமனுப்பியபின்னீர் ... பெருந்துறையிற் சென்றங்கே
நடத்தியதறிந்தோமின் - னுளேவருவீ ... ரிங்கே
ஸ்ரீமன்

சரணங்கள்

(க) பாம்பொடுபழகுவ - தரசர்நேச ... மெனப்
படித்தவர்நீரறி - யாதவரலச் ... சினம்
ஆம்படிபலர்கள்வந் - துரைத்தார்நமது மனம்
அதுநிசங்கொள்ளவில்லை - யாகையாலெழு ... தினம்
ஸ்ரீமன்

(உ) பூதலத்தினிற்பெரி - யோரென்றுபுரை ... கடம்
பூண்டுபிறரைத்தெட்டிப்-பொருள்கொண்டிடுங்கபடம்
மேதொழிலாய்த்திரி - வார்சில ... ரவரிடம்
ஏதுமறியாரடுத் - திடுவாரதப ... கெடம்
ஸ்ரீமன்

(௩) கொடுமையீதளவில்லா - நிதிகட்குப்பல ... தொகைக்
குதிரைகொள்ளாமலொரு - கோவணங்கொண்டீர்நகைக்
கிடமிதுபெருஞ்செல்வ - மிழந்துநம்மையும் .... பகைத்
திரந்துண்ணவோயெழி - லெடுத்தீரிதென்ன வகை
ஸ்ரீமன் - ௩௱௰௧.

---

விருத்தம்.

ஒப்பமிட்டெழுதுதென்னன் ஓலைவாசித்தறிந்து ... *
அப்பொழுதேயெழுந்து அன்புள்ளவாதவூரார் ... *
ஒப்பறுகருணேசர் உறைந்தசன்னிதிமுன்னின்று *
இப்படிதென்னன்ஓலைக்கென்சொல்வேன்பரிக்கென்பாரே (௪௩௨)

மாணிக்கவாசக ஸ்வாமிகள் அரிமர்த்தன பாண்டியனிடத்தில்
குதிரைக்கியென்னவகை சொல்வோமென்று
ஸ்வாமியை தியானித்துக் கூறியது
பதம் - ஆகிரிராகம் - சாப்புதாளம்

பல்லவி.

என்சொல்வேனே - குதிரை - எங்கேயென்ருல்த்தானே

அநுபல்லவி.

வன்சொற்கேட்கவிதி - வசமோகணிசமோநான்
என்

[ சரணங்கள். ]

(௧) அடியவரொடுங்கூட - அழைத்திடாமலிந்த
மடிவுசெய்தெனையிங்கே ... மடுத்தீரே
விடியவில்லையோமன - வேதினைக்காளாகக்
கடினவசனத்தென்னன்-கையிற்காட்டிக்கொடுத்தீரே
என்

(௨) இருவினைகளொழித்தயென்னை-இன்னமுந்துன்ப
மருவக்கடத்திவிட்ட ... வாறேதோ
பெரியகொடியவஞ்சப்-பீடையாமுலகிற்
சொரிபெருமழைவிட்டுந் - தூவானம் போகாதோ
என்

(௩) பொன்னெல்லாமுமது- புண்ணியவடியார்க்கும்
மன்னுந்திருப்பணிக்கு ... மாய்த்தானே
சொன்னபடியளித்துத் - தொலைந்துதேபரிகொண்டு
தென்னனுக்கெந்தவிதஞ் செலுத்துவ...தறியேனே
என் - ௩௱௰௨.

உபதேசித்தது.

விருத்தம்.

என்சொல்வேனெனநாளைவருங்குதிரையென்றே ... *
எழுதோலையெனவிண்சொற்கேட்டோலைவிடுத்தார் *
அஞ்சாமல்அரசன்முன்நீபோபரிகள்கொண்டு ... *
ஆங்குவருவோமெனசொப்பனத்திலரனுரைக்க *
நெஞ்சுவந்துவாதவூரார்மதுரையுற்று ... *
நிருபனைக்கண்டார்நிருபன்நிதியெவளவதற்கு ... *
விஞ்சுபரிகொண்டதெவளவுசொல்லுமென்று ... *
விளம்பவெதிர்வாதவூர்வேதியரோதுவரே (௩௩௩)

பதம் - மத்தியமாவதிராகம் - சாப்புதாளம்.

பல்லவி.

வரும்நீபாராய் - பரிகளெல்லா - மன்னுநேராய்

அநுபல்லவி,

விருதுபுனைந்துநல்ல - வேளையில்நாளையே

வரும்

சரணங்கள்

(௧) வளருநற் கதியே - உள்ளபரிகள்
வாங்கச்சம்மதியே - செய்துநீதந்த
அளவில்லா நிதியே - கொண்டபரியும்
அளவில்லைபதியே

வரும்

(௨) துதிசெய்யும்வேக - முள்ளதாய்நல்ல
சுழி சுத்தமாக - இவ்வுலகிற்கண்
டெதிரிகள் நோக - அசுவபதிநீ
யென்றுபேராக

வரும்

(௩) விரசுடனென்னை - வரச்சொல்லிநீ
விடுமோலைதன்னைக் - கண்டவுடனே
அரசேநான்முன்னே - வந்தேன்பரி
யவளவும்பின்னே

வரும், ௩௭௩.

—*—

விருத்தம்.

வருமானதுரங்கமென்ன மகிழ்ந்துதென்னன் ... *
வரிசைகள்செய்தனுப்பினன்வந்துகூடற் ... *

பெருமானைப்பணிந்துநான்வேண்டும்வண்ணம் ... *
பெற்றேனின்னமுங்காப்பீரென்றுவேண்ட ... *
வெருவாமலிருபரிகள்கொண்டுவந்து ... *
விடுவோமென்றேவிண்ணில்விளம்பக்கேட்டு ... *
திருவாதவூரர்மனையுற்றார்உற்றார் ... *
செல்லுவார்இவர்க்குமதிசொல்லுவாரே (சஙச)

மாணிக்கவாசகஸ்வாமிகளைப்பார்த்து
உறவின்முறையார்கள்கூறியது,
பதம்-காம்போதிராகம்-ஆதிதாளம்-

பல்லவி.

அடுக்கிதுநமக்கில்லை ... காணும் - உமக்
கானாங்கள்சொல்ல...வேணும்

அநுபல்லவி-

எடுக்கும்உழவுக்கும் - அக்கினிகோத்திரத்துக்கும்
எட்டுமாமற்றிதை ... விட்டிகபரத்துக்கும்

அடுக்

[ சரணங்கள். ]

(க) நம்மைவணங்குவோர்க்கு- நாமேவல்த்தொழில்க்கேட்டு
நடப்பதுஎன்ன ... ... ... விகாரம்
நான்மறையவருக்கும்-ராஜகாரியத்தின்
நடத்தைக்குமேவெகு ... ... தூரம்
செம்மைஅல்லஅது ... தப்பிமந்திரித்தொழில்
செய்தால்மன்னனுக் ... கோர்க்கடப்பதெழில்
இம்மைஉலகில்த்தன் ... வீட்டுவிளக்கெனமுத்தம்
இட்டாலதுசுட்டு .... விடுமேஎன்னஅனற்தம்

அடுக்

(உ) அகலவுமாகாது-அணுகவுமாகாது
அனற்காய்ந்திருந்திடும் ... ... விதமே
அரசரையடுத்தவர்-நோக்கமறிந்தறிந்து
அஞ்சிநடக்கவேணும் ... ... நிதமே
சகலமுந்தெரிந்தவ ... ... ருமக்கிதுஆகாது
தானெடுங்கத்தன்குல- மொடுங்கும்ஐயாஇதேது
இகல்மன்னனுக்குமுன்னே- பரிவருமென்றிவ்வேளை
இயம்பிவந்தீரேஅதற்- கென்னசொல்லுவீர்நாளை

அடுக்

உபதேசித்தது.

(ரு) பற்றியவிதிஎல்லா-மெத்தவுஞ்சிவதர்மம்
பண்ணிச்செலவழித்தீ ... ... ராமே
பரிகொள்ளவேஇல்லை என்றுசிலரெங்கட்குப்
பகர்ந்திடக்கேட்டஞ்சு ... ரேமே
மித்தையுரைத்தாலவ ... மானம்வருமவதி
வேந்தன்சீறிலாந் ... துணையில்லையெவர்கதி
சுற்றியஎங்களைக் ... ... காக்கவினைத்தீரில்லை
துக்கமும்வெட்கமுந் துறந்தீரென்ன ... தொல்லை
அடுக்-நாயக.

---

விருத்தம்.

சுற்றமானவரிவ்வாறு சூழ்ந்திருந்துரைக்கக்கேட்டுச் ... *
சித்தமாசொழிந்துமேன்மைசிறந்தமெய்வாதவூரார் ... *
அத்தரெந்தனையாள்க்கொண்டவன்றேசுற்றமுமில்வாழ்வும்
இற்றதுகுறையெனக்குயேதெனஓதுவாரே (சருடு)

பதம்-பைரவிராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி. ]

அரனென்னைஆள்க்கொண்ட-போதே - குறை
அற்றேனேபுவி ... மீதே

அநுபல்லவி.

இரவும்பகலுங்கைப்பும் - இனிப்புந்தீதும்நன்றும்
இன்பமுந்துன்பமும் - எல்லாஞ்சரிஎன்றும்
அரனெ

[சரணங்கள்]

(க) தாய்தந்தைகுருஅரன்பரனுருட ... தொண்டு
தானென்கிளைகள்எழு பிறப்புமெந்தனைக் கண்டு
காயும்பகைவரெல்லா உயிரும்மைந்தர் பெண்டு
கலக்கும்பிராசையே பிலக்களந்தனுக் குண்டு
கலக்கமென்னசொல்லுங் கான்மலையை அடுத்து
அலைக்குங்குளிருக்கஞ்சு வானேனருள்தொடுத்து
அரனெ

(உ) ஊரெங்கினுஞ்சமைத்த ... ... சாதமெனதுதரை
உசந்தபாயல்திரு ... ... வெண்ணீறேவிரை
ஆரம்ருத்திராட்சமே ... ... பெருவிலைமணிஅரை
அணிந்தகோவணமே ... செம்பொன்னுடைஉரை

அறையும்இரக்கவேஷ- மணிந்தவர்க்குண்டோதுக்கம்
துறவியாகிமனந் ... துணிந்தவர்க்கென்னவெட்கம்
அரனே

(௩) அஞ்சிடேன்மகிழே ... னென்றுக்கும்பழவினை
அதைத்தள்ளுவதாரிந்த அரசன்சினத்தாலெனை
என்செய்வான்தலைக்கி மிஞ்சியவாக்கினை
இல்லையேஅவதி ... எதுவரினுஞ்சிவனை
யேகருத்தினிற்கொள்வ தென்கடனுயிர்விட்டு
சாகத்துணிந்தவர்க்குச்-சமுத்திரமுழங்கால் ... மட்டு
அரனே-௩௭௫.

---

விருத்தம்.

சுற்றத்தார்எதிர் சொல்வதற்கிடமறச்சொல்லிப் ... ... *
பற்றற்றூர்முடிப் பாண்டியன்செயலையும்பாராச் ... ... *
சித்தத்தார்திரு வாதவூரிறைவர்தென்மதுரை ... ... *
மத்தத்தாரணி வரனையேமதித்திருந்தனரே (௪௩௬)

---

விருத்தம்

உரிவையினுடையார்வாத வூரருக்குபதேசித்த ... *
கருணையாமிஃதுகேட்போர் கனமுடன்தினமும்வாழ்வார் ... *
நரிகளைப்பரிகளாக்கி நடத்தியஅன்பத்தொன்பாந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௪௩௭)

---

வாதவூரடிகளுக்குபதேசித்த - திருவிளையாடல் - முற்றிற்று

ஆக திருவிருத்தம்-௫௫-பதம்-௫௩-ஆக உஅ.
ஆக பாயிரம்உள்படத்திருவிளையாடல்-௫அக்கு-வெண்பா-௫-
கலித்துறை-௪-கொச்சகம்-௩-விருத்தம்-௪௯௨௫-பதம்-௩௭௫-
ஆக கவிதை எ௫௨.





ஐம்பத்தொன்பதாவது

## நரியைப்பரியாக்கின திருவிளையாடல்.



விருத்தம்.

வாதவூரிறைவருபதேசம்பெற்று ... *
வந்திந்தவிதமிருந்தார்மறுநாள்தென்னன் ... *
ஏதுபரிவரஇல்லைஎன்றான்நாள்மூன் ... *
றினில்வருமின்றதற்குநீர்த்தடமிடங்கள் ... *
ஆதரவாயமைத்திடென்றார்அமைத்தானன்றும் ... *
அசுவம்வராதால்த்தென்னன்சிலரைநோக்கி ... *
தீதகனும்வாதவூரான்சொல்லெல்லாம் ... *
தீங்கென்பான்பொன்னைஎல்லாம்வாங்கென்பானே ( )

பதம்- மோகனராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி. ]

பொன்னைஎல்லாம்கையில் ... வாங்கு - வாத
புரனிவன்சொல்லெல்லாம் தீங்கு

[ அநுபல்லவி ]

பின்னைஎன்னகொட்டி - ஞல்த்தேள் கொட்டாவிடில்
பிள்ளைப்பூச்சியென்ப ... துள்ளதுதொகைப்படி
பொன்

[ சரணங்கள். ]

(க) இவனேதருதிரை ... ஏது - என்முன்
இன்றுநாளைஎன்று ... ஓது - வது
தவறிவனினேவேதோ ... சூது - இனி
தப்பவிடாமலே ... தடுத்துஇப்போது
பொன்

(உ) பெருங்கடைத்தேங்காயை ... எடுத்து - வழிப்
பிள்ளையார்க்குடைத்தாப்போ லடுத்து - எந்தன்
அரும்பொருள்யாவையும் ... கெடுத்து - கேலி
யாக்கிவிட்டானேதண்டனையது-கொடுத்து
பொன்

(ரு) ஆர்பொருளார்செய்வ ... தறமே - செல
வழித்ததென்னநெஞ்சுத் ... திறமே - எவர்க்
கோர்வையாகும்இன்னங் ... குறமே - படித்
தேய்த்துவிடுவான்தள்ளுதள்ளு அப்புறமே
பொன் - நாயகசு

---

விருத்தம்.

பொன்மறித்துவாங்குமெனத்தென்னன்சொல்ல *
பொங்குசினத்தோடுமெள்ளர்புறங்கொண்டேகி ... *
வன்மொழிகள்சிலபேசிப்பொன்னுக்கென்ன ... *
வகைசொல்லென்றேவெயிலில்மறித்துக்கொண்டு *
கன்மனத்தார்இரக்கமற்றகொடியார்பாரக் ... *
கல்லையெடுத்தேற்றினர்வாதவூரர் ... *
புன்மதிமள்ளர்கள்வைத்தகல்லின்பாரம் ... *
பொருந்தினர்பரனைஎண்ணிவருந்தினரே (சருகூ)

மாணிக்கவாசகஸ்வாமிகள் தமது நெற்றியில் கல்லேற்றியபோது ஸ்வாமியை தியானித்துக்கூறியது

பதம் - புன்னுகவராளிராகம் - ஆதிதாளம்,

[ பல்லவி. ]

பாரம்உமக்கேயீதையா - அடியேன்மேற்
பராமுகம்இதுஎதையா

[ அநுபல்லவி. ]

ஆரணிசோமசுந் - தரனேசிவபரனே.
பாரம்

[ சரணங்கள். ]

(க) சொன்னதவணை ... போச்சே - சாமிஎந்தன்
சொற்பிசகது ... வாச்சே
பொன்னைக்கையில்வைத்துப் - போவென்றுகொடுஞ்சொல்லி
மன்னனேவியமள்ளர் - வைத்திட்டபெருங்கல்லின் [ன்
பாரம்

(உ) எனதுடல்பொரு ... ளாவியே - உமதுடமை
இனிஒருவரைக் ... கூவியே
கனவிலும்உயிர்வாழக் - கருதேன்கருதேன் எரி
அனலினுய்த்தாலுங்கழு - வதனில்வைத்தாலுஞ்சரி
பாரம்

(௩) விதிவசத்தின் ... பொருட்டோ - படுவதிது
விடிஞ்சுமிஞ்சின ... இருட்டோ
கதிபெறும்விருப்பத்தால் - கவலைகளிதுபூணேன்
அதிபதியிதிக்கும்மை - அல்லால்வழியுங்காணேன்
பாரம் - ஙாயன.

---

விருத்தம்.

தூயவரிவ்வாறு துதிசெய்யயீசர் ... *
துணையினல்பெருங்கல்லின் பாரம்நீங்கி ... *
யேயதிகமகிழ்வுடனே நிற்கும்போது ... *
எரிசினத்துத்தறுகண்ண ரிதனைவதோ ... *
மாயமென்றுவாதபுரர் கையுங்காலும்
வருந்தவேகிட்டிகட்டி வைபொன்னென்ருர் ... *
ஆயறிவாற்சிவநாமா மிர்தத்தையென்றும் ... *
அருந்துவார்துதிசெய்து வருந்துவாரே (௪௪ய)

மாணிக்கவாசக ஸ்வாமிகள் தமதுகையில் கிட்டிகட்டி
வருத்தப் படுத்தியபோது ஸ்வாமியை
தியானித்துக் கூறியது.

பதம் - கெண்டாராகம் - ஆதிதாளம்

பல்லவி.

அநுபவிக்குந்தொல்லையோ - இதுசிவனே - ஆள்வதற்கருளில்லையோ

[ அநுபல்லவி ]

அநுதினமும்உமது ... வனசமலரடிக்கி
ஆளாகியும்இவர் ... அவதிசெய்திடச்சிக்கி
அநு

[ சரணங்கள் ] .

(௧) அன்றுமதுபதத்தூ ... ளழுந்தாதபாழ்நெற்றி
ஆனதாற்பெருங்கல் அழுந்தப்பட்டதுபுத்தி
இன்றுவந்துதுஉல ... கென்னுங்கற்காணத்தி
லெள்ளுப்போலரையுண் ... டேஇவ்வுடலைப்பற்றி
அநு

(௨) உருகுமுள்ளத்துடன் ... ஒத்துநடந்துமது
உருக்கண்டுகுவித்துக்கட் ... டுண்ணுதகரமிது
குருதிஒழுகும்படி ... கிட்டிகட்டப்பெற்றது
குவலயத்தினிலார்மேல் ... குறையுரைத்திடுவது
அநு

(௩) தேவரீர்வடிவ ... மானசற்குருவினை
தேடிமனத்தேர்டன்று ... செல்லாதகால்தனை

நோவச்செய்தானிந்தக் ... காவலனவன்றனை
நொந்திடலாமோ ... தொடர்ந்தபிராறத்வவினை

அறு - கூாயஅ.

விருத்தம்.

விதியிதெனப்பரனைஎண்ணி வருந்தும்போது ... *
வேதனையற்றிருந்தா ரப்போதுமள்ளர் ... *
அதிசயித்தார் அன்றுபகல் நீங்கிக்கங்கு ... *
லாச்சுதிருட்டறையினுக்கு ளடைத்துப்பூட்டி *
பதிதர்மிகுதுன்பஞ்செய்தா ரிராப்போய் ... *
பகலவன்வந்துதித்தானன் றெழுந்துநின்று *
மதுரையரன்பொன்விமானத் தைநோக்கி ... *
மலர்க்கரங்கள்குவித்தழுது வழுத்துவாரே (சசக)

மாணிக்கவாசக ஸ்வாமிகளை யிருட்டறையிலடைத்து
வருத்தப்படுத்தியபோது ஸ்வாமியை
தியானித்துக் கூறியது.

பதம்-எதுகுலகாம்போதிராகம்- ஆதிதாளம்

பல்லவி.

இரக்கமற்றிருப்பதேதோ-கொடியே-னெனக்கிரங்கவொண்ணாதோ

[ அநுபல்லவி. ]

சுரர்க்கருளும்பரனே - சோமசுந்தரனே
இரக்க

[ சரணங்கள். ]

(க) இலகுமுயிருக்கெல்லா - மிரங்கும்பசுபதிநீ
ரலவோநானுமோருயிரல் ... லேனோ - உம்மைப்
பலபலதுதிசெய்வதில் ... லேனோ - என்றும்
நிலவரமானநெறி ... நில்லேனோ - இந்த
உலகில்மயங்கவிட்டா-லுமைவைதுசொல்லேனோ
இரக்க

(உ) இயம்புமெங்குங்கண்ணா - யிருந்தறியுமுமக்குத்
தியங்குமெனதுதுயர் ... தெரியாதோ - மிகப்
பயந்தவனெனமனம் ... பரியாதோ - விஷப்
புயங்கமணிந்தாலருள் ... புரியாதோ - என்னைத்
தயங்கவிட்டாலும்மைத் - தாரணி... சிரியாதோ
இரக்க

(ங) என்சொல்வேன்வெளிக - ளெல்லாமுமதுசெவி
கெஞ்சிநானழுவது ... கேளாமல் - இங்கே
அஞ்சலஞ்சலென்றுவந் ... தாளாமல் - எந்தன்

நெஞ்சில்ப்பெருந்துயரம் ... நீளாமல் - நீரே
தஞ்சமென்றிருக்குமெங் - தனைச்சிறை மீளாமல்
இரக்க, ௬௱௰௧,

விருத்தம்.

நேசரிவ்வாறுகூறி நின்றழுங்குறையைமாற்ற ... *
ஈசனார்இரங்கிநந்தி யேமுதற்கணங்கள்தம்மைக் ... *
காசினியதனில்காட்டிற் கதித்திடும்நரியையெல்லாம் ... *
வாசியதாக்கிக்கொண்டு வாருமென்றுரைசெய்வாரே ... (சசஉ)

ஸோமசுந்தரேசுவரமூர்த்தி நந்திகேசுவரர் முதலாகிய
பிறமதகணங்களைப்பார்த்து பூலோகத்திலுள்ள
நரிகளையெல்லாம் குதிரைகளாக்கிக்கொண்டுவரும்படி
யனுக்கிரகஞ்செய்தது,

பதம்-கலியாணிராகம்-சாப்புதாளம்,

பல்லவி

நந்திமுதலாங்கணத்தோரே - கேளும் - நமதுசொற்படிநடப்பீரே

[ அநுபல்லவி ]

வந்துதுஆவணி - மூலம்அதனிற் ... சென்று
மதுரைமன்னவனுக்குக் - குதிரைசெலுத்தஇன்று
நந்தி

[ சரணங்கள் ]

(க) அதிவிரைவுடனிப்போ தேசென்றுபெருங் ... காட்டி
லகப்படும்நரியினங் களையெல்லாம்பிடித் தோட்டி
குதிரைகளாக்கியே சதிருள்ளபணி ... பூட்டிக்
கொண்டுவாரும்ஆருங் கண்டிடத்தமிழ் ... நாட்டில்
நந்தி

(உ) அவனியிலரசரும் விண்ணிலிந்திரனுங் ... காணும்
அளவில்த்தங்கள்பரி யதனைஇகழ்ந்து ... நாணுங்
கவனப்பரியிலேறி மனிதர்வடிவம் ... பூணுங்
காலத்துக்குத்தக்கது கோலம்எடுக்க ... வேணும்
நந்தி

(௩) வேதத்தைப்பரியாக்கிக் கொண்டுநாமுங் ... கூட
வேவருகிறோமது - ரைக்குமாய ... வேட
மீதுகண்டுநம தன்பனைமனம் ... வாட
இறைவன்செய்யுந்துன்ப மெல்லாம்பறந் தோட
நந்தி, ௬௱௰௨,

விருத்தம்.

மொழியிதுகேட்டுநந்தி முதற்கணநாதர்சென்று ... *
செழிவுறுநரியையெல்லாந் திரட்டியேபரிகளாக்கி ... *

எழிலுடன்ஏறிவந்தார் இசைப்பெருந்துறையில்நெத்தி ... *
விழிஅரனுரும்வேத மெய்ப்பரிஏறினுரே (௪௪௩)

நந்திகேசுவரர்முதலாகிய பிறமதகணங்களெல்லாம் நரிப்பரிகளில் சூழ்ந்துவர ஸோமசுந்தரேசுவரமூர்த்தியும் வேதாசுவத்தி லெழுந்தருளியது,

பதம்-தோடிராகம்-ஆதிதாளம்,

பல்லவி.

அசுவமீதிலெழுந்தருளினர்- அதிகமகிமையுள்ள-மதுரைநகர்விமலர்

[ அநுபல்லவி ]

விசுவபதியாகியநடனவிநோத- வேணியருயர்- சூலபாணியர்வேத

அசுவ

[ சரணங்கள் ]

(க) உறைவிதியேமுகம் பரமபரமென்றறி
உணர்வுவிழிநிஷேதம் ... ... வால்
அறையும்ஞானகாண்டம் கர்மகாண்டங்கா
தறமுதல்நாற்பொருளுங் ... ... கால்
புறவணியேமறை ... புகல்தந்திரங்கள்
புலம்புசதங்கை ... சிலம்புகள்மந்திரங்கள்
மறைபுகழ்ந்திடுதா ... ரகப்பிர்ம்மமேகடி
வாளஞ்சந்திரனுஞ் - சூரியனுமேஅங்கவடி
வனையுபநிஷதக லனையணிபெருமகா

அசுவ

(உ) சாய்ந்தகொண்டையும் வச்சிரகண்டியுமிரு
தங்கமலைப்புயத்தில் ... வளைகளும்
வேய்ந்தவெண்டுகி லுடைந்திருநுதலில்
விளங்குநீரணியுங் ... குழைகளும்
ஆய்ந்தஞான ... வாளும்மிகப்புலம்பும்
அன்பர்செவிகுளிர ... இரையுஞ்சிலம்பும்
காய்ந்தம்தனைவென்ற ... வடிவுங்கவசமும்
கவரியுங்குடைகளும் கனமுள்ளதுவசமும்
கண்டவர்கள்மகிழ அண்டர்முனிவர்தொழ

அசுவ

(௩) இரையும்புராணங்க ளீரொன்பதுமிசைந்த
தென்னவாத்தியங்கள் ... ... மீறி
தரையிலுள்ளநரி எல்லாங்குதிரையாய்த்
தாவிச்சூழவதி ... ... ... லேறி
வருசிவகணங்களங் ... கணிந்தபட்டுடையும்
வன்னகக்கவசமுங்கை·வாளுஞ்சொன்னக்குடையும்

உரமுள்ளபடையு-மம்பராத்தூணியும்வில்லும்
உகந்தவெண்ணீறணிந் - திடும்புண்டரனுதலும்
ஒளிசெய்யவேககன-வெளியில்மனிதரென

அசுவ-௩௨௪

விருத்தம்.

சிறுநரியின்பரிசூழவேதாசுவத்தில்த் ... *
தென்மதுரைக்கிக்கீழ்பாலரைக்காதத்திற் ... *
குறுகுமுன்னம்வாதபுரரறிந்திச்செய்தி ... *
கொற்றவனுக்குரைக்கமகிழ்ந்தவன்பொன்னுடை *
உறுபணிகளீந்துகொலுவிருந்தானப்போ ... *
தும்பரிகள்வரத்தாமதித்ததாலே ... *
மறுவறுவேதியரைமன்னன்சொல்லாலேய ... *
வதிசெய்தாரவர்பரனைத்துதிசெய்தாரே (௪௪௪)

மாணிக்கவாசகஸ்வாமிகளைபின்னும் குதிரைவரவில்லையென்று
வருத்தப்படுத்தஸ்வாமியைத்தியானித்துக்கூறியது.

பதம்-நீலாம்புரிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஏனிவளவுசோதனை-சாமி-எனக்கோஇந்தவேதனை

அநுபல்லவி

வான்மகிழ்மதுரை ... வாசரோசரே
மங்கையங்கயற்கண்ணி மருவும்பிராணேசரே
ஏனிவளவு

சரணங்கள்

(௧) வேதனறியாநெறி - தந்துசெந்தமிழ்மாலை
விரும்பியணிந்தேவல்கொண் ... டீரே
விளம்புமென்னுடல்பொரு-ளாவியுமதல்லவோ
வேறினியாதர ... ... வாரே
காதகரிவர்செய்யுந் - தோதகத்துக்குள்ளாகக்
காட்டிக்கொடுத்ததுவும் ... நீரே
கருணைக்கிதழகோளன் - னையனேபாலுக்குங்
காவலாகிப்பூனைக்குந் - தோழராகி ... நீரே
ஏனிவளவு

(௨) அஞ்சலஞ்சலென்றுவந் - தாளாமலேதுக்கு
ஆழமும்நீச்சுங்காட் ... டுகுறீர்
அழுகவுஞ்சிரிக்கவும் - அச்சமுந்திடமுந்தந்
தடிக்கொருவினைமூட் ... டுகுறீர்
பஞ்சவன்விடுமிந்த - வஞ்சகருடையகைப்
பண்டக்கோஇரைஊட் ... ... டுகுறீர்

பார்க்குளஙித்தியமாய் நீர்க்குமிழியாமிந்தப்
பாழுடம்பைவைத்தேனே -பம்பரமாட்டுகிறீர்
ஏனிவளவு

(௬) பூர்வத்திற்சிசுவான - தேவரீர்க்கெனது
புலப்பங்களெல்லாந்தா ... ... ராட்டுப்
போலிருக்குதோவிழி - பொருந்துகிறீரோநல்ல
புதுமையையாயிந்தச்சி ... ... ராட்டுக்
கூறும்பாம்புபோலே - அடிக்கடிமீனவன்
கோவித்துச்செய்யும்போ ... ராட்டுக்
கூடத்தெரிந்துமிரங்-காதென்னசிந்தைகல்லோ
கொத்தவிட்டுவேடிக்கை-பார்ப்பதென்ன பாராட்டு
ஏனிவளவு-௬௱௨௨.

---

விருத்தம்.

பணிசூடும்பரனடியாரிவ்வாறேங்கப் ... *
பாலனமுகுரற்கிரங்கிவருதாயென்ன ... *
அணிமீறுவேதவான்பரியிற்கூட ... *
லழகேசலெழுந்தருளியாருங்காணத் ... *
துணிவானநரிப்பரியிற்சிவகணங்கள் ... *
சூழ்ந்துவரவாதபுரர்துயர்தீர்த்தேயா ... *
வணிமூலநாளினிலத்தென்மதுரையூர்க்குள் ... *
வந்தாண்டார்பரியினங்கள்தந்தாண்டாரே (௪௪௫)

ஸோமசுந்தரேசுவரமூர்த்தி அரிமர்த்தனபாண்டியன்முன்பாகக்
குதிரைகள்கொண்டுவந்துவிட்டது.

பதம்-பந்துவராளிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

குதிரைகொண்டுவந்தார்-கோமதுரைவளர்-சோமசுந்தரர்

அநுபல்லவி.

அதிவிதமுடனல்ல - புதுமையெனவேசொல்ல
குதிரை

[ சரணங்கள். ]

(௧) ஐயன்றன்னடிதுதி - செய்யுமவர்மகிழ
ஆகாசத்தை ... முட்டியே - பெருமழை
பெய்யுமுகிலெனவே-வாய்நுரைபுவியினிற்
பிரளயமாகக் ... ... கொட்டியே-மிருபகை
செய்யும்இந்திரன்பண்டு-மதுரையைவெல்லவிட்ட
திரைக்கடலென ... வெட்டியே - மிறைந்திந்த

வையகந்தனிலுள்ளோர்-ஐயமுற்றிதுவிண்ணோர்
வான்பரியெனக் ... ... கிட்டியே - வரக்கண்டு
வெய்யவனெழுப ரியோ - பசுமைநிற
மேயதிதற்கெதிரியோ - விண்ணவர்தொழு
மெய்யிந்திரனுதொன்றே -ஐயஅதுவுமன்றே
வெகுபரியிதுகன-மகிமைமகிமையென
குதிரை
(௨) வண்ணலட்சம்பரிகள் - எண்ணத்தொலைந்திடாமல்
வந்துவந்துநிறைந் ... திட - தமதிரு
கண்ணெதிரேஇதைச் - சேரனுஞ்சோழனும்
கண்டுபெருமூச்சு ... விடத்-துதிபெறும்
அண்ணல்வாதபுர - ரைத்துயர்செய்திட்ட
அரசனுள்ளமுஞ் ... சுட - மிகஒளி
நண்ணும்சதங்கைஒலி-அநுமானிப்பொலியில்
நாற்றிசைசெவிடு ... பட - வரும்பரி
மண்ணிலத்தினில் நடந்தோ - வருகுதிது
வானிலத்தினில் படர்ந்தோவருகுதிதென்
றெண்ணியெவரும்யுத்தி - பண்ணிமயங்கத்தத்தி
எழில்மதுரையில்யோக - வழுதிதன்னெதிராக
குதிரை
(௩) வட்டமிட்டுத்திசைக - ளெட்டிலுமெதிரெதிர்
மாறிமாறித் ... ... திரியும்-வெம்பரிமே
லிட்டவீரர் - மனம்போற்சென்றடிபந்
தெனவேநடை ... ... புரியும் - அநுமானித்
திட்ஒசையிலும் - சதங்கைஓசையிலு
மேபரியெனத் ... ... தெரியும்-அல்லாதுவிண்
தொட்டசெந்தூளியி - லெவரறிவார்விண்ணில்த்
துலங்கியேகதிர் ... விரியும்- சூர்யனுமகப்
பட்டுத்தன்கதி தாழ - இப்படிநரிப்
பரிகளெல்லாஞ்சூழ - நடுவிலொரு
வட்டக்குழைநிழற்றத் - திட்டக்கவரிசுற்ற
மறைப்பரியிற்பொருந்து - சிறப்புடனேஇருந்து
குதிரை. ௩௨௩.

---

விருத்தம்.

புரவிவரக்கண்டுதென்னன்மகிழ்ந்துவாத ... *
புரனைஅழைத்தருகிருத்திப்புரவிக்கெல்லாம் ... *

அரசனுரெனகேட்கவாதவூரார் ... *
அறியேமென்றார்நந்திமுதலானோர்கள் ... *
துரகமெல்லாம்நடத்திக்காட்டினர்பின்தங்கள் *
துரையையுங்காட்டினர்கண்டான்தனைமறந்தான் ... *
அரனருள்கொண்டான்தனதுமுடிமேற்செம்பொன் *
அங்கைகுவித்தங்கரிமர்த்தனன்னின்றானே (சசசு)

---

விருத்தம்.

கும்பிடுதென்னவன்பின்புநாமேதிந்தக் ... *
குதிரைப்பாகனைத்தொழுதுநின்றதென்று *
அம்பொனரியணையிலிருந்திடவும்நாணி ... *
அங்கெழுந்தபடிநின்றானப்போதீசர் ... *
உம்பர்புகழுனதமைச்சன்சொரிந்தபொன்னுக் *
குயர்ந்தபரிகொண்டுவந்தோம்கேளாய்தென்ன ... *
நம்புமிந்தக்குதிரைகளைக்கயிறுமாறின் ... *
னுளேன்பார்இலக்கணங்கள்கேளென்பாரே (சசஎ)

அரிமர்த்தனபாண்டியனுக்கு ஸோமசுந்தரேசுவரமூர்த்தி குதிரைகளினிலக்கணங்களைப் பொதுவாய்க்கூறியது.

பதம் - சுருட்டிராகம் - அடதாளசாப்பு

பல்லவி.

இந்தக்குதிரைகளின் ... லட்சணம் - இது
வேகயிறுமாறிக்கொள் ளிட்சணம்

அநுபல்லவி

வந்துதினிமேலொரு ... லாபசேதமேதும்
வரில்நமக்குமுனக்கும் - வழக்கில்லைஒருபோதும்
இந்த

[ சரணங்கள் ]

(க) புகலுமுனதுமந்திரி - எங்கட்குன்பொன்னெல்லாம்
பொழிந்துறவாடியே ... அன்று
பொருந்தியதால்மயி ரூடாடாதநட்புப்
பொருளூடாடக்கெடு ... மென்று
மகிழ்பெருந்தீவுமலை - வனமெங்குந்தேடியிந்த
வான்பரிகொண்டுவந்தோ ... மின்று
மனிதரேறத்தகா - திதுவிண்ணவர்களுக்கும்
வாய்க்குமோநீபெற்ற - பாக்கியமேபாக்கியம்நன்று
இந்த

(உ) பொருந்தலட்சணமெல்லா - முள்ளஉத்தமமான
புரவியிதொன்றுள்ள ... பேரும்

பூர்ணுயுள்பெற்று - மகிழுவார்செல்வமும்
புகழும்நாளுக்குநாள்ச் ... சேரும்
திருந்துமிப்பரிக - ளநேகமழகழகாய்ச்
சேர்ந்திடினுனக்கினே ... ஆரும்
செப்பலாமோசொல்லும் இப்பரியெல்லாமிவ்வூர்
தெருவினுளவிநாளே ... வருமேஅப்போதுபாரு
இந்த

(கூ) அண்ணலேகே - ளோரிப்பரிசமய
மதுவரில்நாயிலும் ... வேக
மாகத்தாண்டுங்கண் - ணுக்குத்தெரியாத்துவா
ரத்திலும்புகும்பசி ... போக
உண்ணுதையுமுண்ணும் - கண்டவிடங்களெல்லாம்
உலவிஎக்களிக்கும் ... நோக
உற்றவெம்போர்கண்டால் - மெத்தக்கொண்டாட்டமாய்
ஓடிவட்டமிட்டுச் ... சாடுமேதுணிவாக
இந்த - கூஉச.



குதிரைகளின் இலக்கணங்களை விரித்துச்சொல்லியது.

விருத்தம்.

பரியிதின்இலக்கணங்கள் பகர்ந்தனம்பொதுவாய்மற்றும் ... *
அரியமான்சுழிகள்உண்டாய் அதுவரும்தேசம்பேர்கள் *
உரியதுவெல்லாம்நன்ருய் ஓதுவோம்உலகில்யாற்கும் ... *
தெரியவேகேட்பாயென்று திகழ்த்துவார்கிகழ்த்துவாரே (சசரு)

வண்ணம்.

நவரோசுராகம்

சந்தம்

தானதனதன - தானதந்தன - தான - தாந்தன
தானதனதன - தானதனதன - தா - னதந் - தனந் - தனந்தன
தத்ததந்த - தனத்ததந்தனம்- தத்ததந்தனம்- தத்ததந்தன- தத்த
தனதத்த - தனதத்த - தனதத்த - தனதத்த - தானதந்தன
தனதனதனன - தனதனதனன - தனதனதனன - தனதனதனன
தானதந்தன - தானதந்தன - தானதந்தன - தானன - தனனு.

சீருயருமிகல் வாசியின்புகழ்கேளும்
மாந்தளிர் போலும் அழகுளநாவும் மிக உயர்வாய்
உறும்குளம்பும் ஒன்றுபோல் ஒத்துகந்தபிலத்த
தந்தமும் நச்சுறும்பணி நற்படந்தனை ஒத்த
உரம்மற்றுயர் கழுத்துள பரிப்பெயர்
உயர்த்தபாடலம் புகல் அகனுதல் புருஷர்சிகைமயிர்
நிகர்கொயுழை அல்குலிணையு முகமும் ஒருநிறம்
ஆனதங்குயர் கோடகம்பொருபோரில் நின்றெதிரே
பெருவசியே
வீசினு முனிவதே மிகுந்தெதிர்
சிறுபாம்பென ஆனைசரபமும் நாயுமுயல்புலிபாய்

குரங்குசம்புவந்தனேர்-பெற்றிடுங்கதி தொட்டெழுந்து
நடத்திடும் சமரத்தைவென்றதுவெற்றி-யிவுளிப்பெயர்
உயர்ச்சிநெடில் ஒத்தவுடல்பற்று வாயினின்றெழி-கிய
நுரைபணிலமினிய கழையினிரசமெனவே பினநிற
முளதுவனி யோதுபஞ்சகல்யாண மெண்டுகை
யானமங்கலம் தேவமணி இதே
சேர்வதுகுதிரையாமே குங்குமம் நானமாம்புகை வீசுமகி லொடு பூரமெனமிகவாச - மொன்றுமங்கமும் கொள்மா - நத்து மங்குலம்உற்ற சிங்கமெனப்பெருந் தொனியொத்த தம்பரி - சுத்து - கடசல்செய்துநிறுத்தியதெனத்திடமிகுத்த கால்களும் சுழல்நடைவிடு பொழுது தணலுறுதறிவளைய மெனவளருகதிபுமிசை யுறுவீரனங் குகொள் காலுளொன்றிய தோதுகந்துகம் பேரிதுஉளதே
அரியதாமிதுபுவியிலே—கலை (க)

உரை.

மாந்தளிர்போன்ற நாக்கும், உயர்ந்தகுளம்புகளும், வரிசையாக ஒன்றுபோலே ஒத்துப் பிலமுள்ள தந்தங்களும் பாம்பின் படம்போல் மார்பும் கழுத்துமுள்ள குதிரைக்குப்பெயர் பாடலம்

அகன்றநெத்தியும் புருஷர்மயிர்போன்ற உழைமயிரும் மூன்றுகோணமாயுள்ள முகமும் ஒருநிற முமாயுள்ள குதிரைக்குப்பெயர் - கோடகம்

உயுத்தகளத்தில் வாள்வீசிக்கொண்டுநிற்கும் சுத்தவீரனைக்கோபித்துச்சீறிக்கொண்டு பாம்பு யானை சரபம் நாய் முயல் புலி குரங்கு நரி இவைகள்போல் அதிவேகமாய் எதிர்த்துப் பாய்ந்து சத்துருவைவெல்லும் குதிரைக்குப்பெயர் இவுளி

நீண்டு உயர்ந்த உடலும் வாய்நுரை சங்கு கருப்பன்சாறுபோல் நிறமும் வேறுவேறு நிறமுள்ள குதிரைக்குப்பெயர்வன்னி

பஞ்சகல்யாணம் அஷ்டமங்கலம் தேவமணி இவைகள் உள்ள குதிரையின்பெயர் குதிரை

குங்குமம் சவ்வாது சந்தனம் பச்சைக்கர்ப்பூரம் இவைகளின் வாசனைகளுள்ள தேகமும் சங்கு சிங்கம் மேகம் இவைகள்போல் தொனிக்கும் அனுமானிப்புமுள்ள குதிரையின்பெயர் பரி-

கடசல்செய்து நிறுத்தியதுபோன்ற நாலுகால்களும் சுழன்ற நடைவிடும்போது கொள்ளிவட்டம்போன்ற அதிவேகமும் அதின்மேல் ஏறிநடத்தும் சுத்தவீரனுக்குள் அடங்கிய குதிரையின் பெயர் - கந்துகம்,

பாடல்.

ஆரும் அரணமும் ஆறும்மண்டிய காடும்நீந்திய மீறுபிலமுள-தாகி மிகுதெளிவாய் விளங்கும் - இந்தஅந்தமாம் - நற்றுரங்க வினத்துகந்த சுபப்பலந்தரும் - மற்றுயர்ந்தயிலக் - கணம் மிகுத்ததுகள் - எட்டுவயதுற்றது உன்வெற்றிவேலினலேயெ - திரிகள் - உடலதுசிதையவிழும் கிணம்உணும் விசையம்அது - தரும்வயமிதுகான்மீரமுஞ் சொலும்ஆரியந்தனிலே - உகந்திடும் பாடலம் - இதுவே

சாலியெனுமுயர் தேசமிங்குள தானவான்கிளி - கோரமிது வுறு மாளவம் - உரைசெய்கோணம் இங்கிலங்குகின்ற - மா - மிக்கமந்தரம் இச்சொல்கந்துகம் உற்றசிந்து வதிற்பொருந்துரகத்தி - னிடமற்றிமயவெற்பு வருகொக்கிவைய மக்கம் மாமருடமி - வனி இவனுறு குதிரை துளுவம் உறுகொயுழை இதுயவனமே துரகதமி - தோ புறந்தருதீவுகுந்தமதோ துகந்தர - தேசமுடையதே

ஆகுமகிழ்வுறு காடகந்தனி - லாருமாங்குயர் வீரமிகுகனல் கேகயந்தனிலாரு மிந்தவன்றுரங்கமே சுக்கிலஞ்சொல் சிவப்பதம்பொன் நிறக்கருங்குணம் மற்றுமொன்றுகலக்கும் - வணமுற்றிடு விதத்தை வகையுற்றதை விரித்து ஓதுவோமது - தரளம்இரஜிதம் இனியபயமதிபனி பணிலநிறமுள துரகதமும் - மாதளம்பு வோடே சிவந்துளதான பஞ்சிணைசேர் துரகமுமே

தெரியமேலினம் நவில்வமே—கலை (உ)

உரை.

கோட்டைகள் ஆறுகள் காடுகள் இவைகளைக் கடந்துபோகும் பிலமும் தெளிவும் விளங்குகின்ற இந்த அழகுள்ள யெட்டுவயசுஆன குதிரைகள் சுபபலங்களைத்தரும் மற்றும் காஸ்மீரதேசம் இந்தக் குதிரை ஆரியதேசம் இந்தப்பாடலம் சாலியதேசம் இந்தக்கிள்ளை மாளவதேசம் இந்தக்கோரம் கோணதேசம் இந்த - மா - மந்தர பர்வதம் இந்தக்கந்துகம் சிந்துதேசம் இந்ததுரகதம் இமையபர்வதம். இந்தக்கொக்கு மக்கதேசம் இந்தவயம் மருடதேசம் இந்த வன்னி துளுவதேசம் இந்தக்குதிரை யவனதேசம் இந்தகொய்யுழைகந்தர தேசம் இந்தகுந்தம் காடகதேசம் இந்தகன்னல் கேகயதேசம் இந்தத்துரங்கம் காம்போசம் இந்தப்பரி காந்தாரதேசம் இந்தப்புரவி வான்மீகதேசம் இந்தக்குரங்குளை பாஞ்சாலதேசம் இந்தக் கனவட்டம் கலிங்கதேசம் இந்தகற்கி கூர்ச்சரதேசம் இந்த அசுவம் வனயுசதேசம் இந்தபாய்மா வாசந்திகதேசம் இந்தக்கோடகம் சௌராஷ்டகதேசம் இந்த அரி குருக்ஷேத்திரம் இந்தக் குரகதம் இந்தக் குதி

ரைகள் வெள்ளை சிவப்பு கறுப்பு பொன்னிறம் பலநிறம் ஆக ஐந்து நிறங்களும் உள்ளதாகயிருக்கும், அதின் விபரம் முத்து, வெள்ளி, பால், சந்திரன், பனி, சங்கு, மாதளம்பு, செம்பஞ்சி மற்ற பல சிவப்பு நிறங்களும்.

பாடல்.

கார்குயில் - மை - நிறமேர்துரங்கமும் - ஏமம் ஒங்கும் முரேரசனை - பொன்னிவை, நேர்நிறவரியும் ஆகஇங்கறைந்த இந்தநான்மெய்த்துரங்கமும்மிச்சிரம்பகர் அஷ்டமங்கல நற்குணம் சொல்வமுச்சியுரம்மற்றடிகள் புச்சம் முகம்யெட்டிடம் வெளுத்ததாகுமே - களம் - அதனில்வலமுற ஒருசுழிஉளது உயருதெய்வமணி முகமடிகளொரு நாலினும்சிதமேயுகந்ததுதானே பஞ்சகல்யாணம் யெனுமிதே.

நாசிதலைமுகம் மார்பமங்கிரு நாலதாஞ்சுழி தாள்பின்னுறுபுறமீதிலிருசுழி ஆக ஐந்திரண்டும் நன்றதாம் - மற்றுரந்தனிலுற்ற ஐந்து ஸ்ரீவச்சமென்பது நெத்தியங்கிரு முச்சுழியிருப்பினும் வலப்படு சதுற்சுழிகளுற்றபோதுமே நலம் இருசுழிகளது கதிகொளுமுனுறுசரணம் அதிலுளதுவும் நலதவடிமூலம் அங்குளதாயினும் கனமேசிறந்ததுவாகும் உலகிலே.

காணுமொருசுழி ஜானுவுஞ்சொல்கபோலமாங்குள மேலிதள்முன்னெரு காலடிகளிவை நாலினும்பிறந்திருந்துதேல் கர்த்தன்அன்றுயிறப்பனங்கது உற்றபந்தியும் அற்றிடும் சொல்இரட்டை உளவிச்சுழிகணைச்சரணதில்த் தலையிலுயக்குமேயதே களம் நடுவினுறில் மிடிபலதுயரிறையை மருவும்நிறமெதுவும் மிக உளதினிலே கலந்துசுவேதமங்குளதாயிநன்றென ஒதுமறைகளே.

உரியபேரெழில் பெறுவரே—கலை (ரு)

உரை.

குயில் மேகம் இந்த நிறங்களும் தங்கம் வெள்ளி யிந்தநிறங்களும் ஆகும் பலநிற முள்ள குதிரைக்கு மிச்சிரம்யென்றுபேர் - உச்சி மார்பு-கால்- வால்- முகம் இந்தயெட்டுயிடங்களும் வெளுப்பு உள்ளது அஷ்டமங்கலம் என்றுபேர் கழுத்தில் வலமாய் ஒருசுழி யிருக்கில் அது தேவமணியென்றுபேர் முகம்நாலுகால் - இந்த அஞ்சுயிடமும் வெளுத்துயிருந்தால் அதுபஞ்சகல்யாணம் என்றுபேர் - மூக்கு-தலை முகம்- மார்பு கால்கள் இந்தயெட்டிலும் - எட்டுச்சுழிகளும் முதுகில்இரண்டுசுழியும்உள்ளது நன்மைகழுத்தில்அஞ்சுசுழி யிருந்தால் அது ஸ்ரீவஸ்ஸமென்று பெயர் நெத்தியில்- இரண்டுசுழிமூன்றுசுழி நாலுசுழி-வலம்படயிருக்கினும் நன்மை- காலிலிருக்கின் நன்மை-முழங்காலும் கன்னம் மேலுதடு முன்னங்காலடி யிவைகளில்சுழிகளிருந்தால் அந்தக்குதிரையின் எசமான் இறந்துபோவான் அதுகட்டிடி

ருந்தபந்தியும் அழிந்துபோகும் கணைக்காலில் இரட்டைச்சுழியிருந் தால் அதின் எசமானுக்கு விலங்கு கிடைக்கும் அந்த யிரட்டைசுழி நடுக்கழுத்திலிருந்தால் தரித்திரமுதலான துன்பத்தைக் கொடுக்கும் எந்தநிறங்களும் உள்ளகுதிரையின் சரீரத்தில் வெள்ளை நிறமும் கூடக் கலந்துயிருந்தால் மிகவும் நன்மை.

பாடல்.

காரரி வயறிநாலும் நெஞ்சிலினுலும் ஆர்ந்த சுவேதம் முளத து வாருணம் யெனவுமாகு மென்றிடும் சிறந்த பார் செப்பு மிந்த யிடத்தில்வந்து சிவப்புகந்திடில் நற்செயங் தரும் அப்பிடர் வெளு ப்புயரு புத்ரர் முகம் நற்செயம் மகிட்சி மார்பதே பொருள்களம் முதுகு சுகம் இவைகள் இடமுறில் உயர்மணமகவுவலமுளது தனதா னியம்பகர் வால்ஜயம்தருமே விளம்பிய நாபிமுதலதாய்.

பாலவிருள் வலிபோல முன்புறமேனி சேந்து பின் மேனிவெ ளுமையதாகில் அதுபகலே ஜயந்தரும் புறம்பெலா மிக்க செம்பரு திக்கிணைந்து வெளுப்புமுன்புற முற்றதிங்கிரவில்ச் செய மிதற்கே புரவிப்பெயர் புவிக்குள் நடையுற்றபோது பந்தென யிரையுமொலி ம தகரியை அடும் அரியெனவுயருகதி பவனமென நடமாடுகின்றவள் நேரிசைந்திடும் நேரினின்றிடு போதுமலையதே.

காணு மரிகரிபோல் நடந்து நல்மாதராம் கவிழ் வாமுகமும் அணிமாலைகளபமுமே தினங்கொளும் தனுகத்தில் அற்புதந்தருமைக் கருங்கண் நெய்தல்க் கிணைந்திடும் மக்கருங்குவளைக்கிணை மணக்கு மிவை உத்தமமெனச்சொல்வர் விரல்க்கள் நூறதேயுயர்வதுள திரு பதொடு பனிருவய ததனிலிடைஇடை அவதி ஒருபதுவாமே யிங்கு ளமாதுரங்கமெலாம் முகந்துலகே சொல வாழ்வையே.

விரியஓதிய விவைகளே—கலை (ச)

வண்ணம்-முற்றிற்று—கூஉ௫.

உரை.

கருமைநிறமாகியகுதிரையின் வயிற்றிலாவது நெஞ்சிலாவதுவெள் ளைநிறமிருந்தால்அதற்குபேர் வாருணம் அந்தயிடங்களில் சிவப்புயிரு ந்தால் செயத்தைக்கொடுக்கும் பிடரியில் வெளுப்புயிருந்தால் புத்தி ரபாக்கியம்கொடுக்கும் முகத்தில்வெளுப்புயிருந்தால் ஜெயம் மார்பி ல் வெளுப்பு மகிட்சியைக் கொடுக்கும் கழுத்திலிருந்தால் தனத்தைக் கொடுக்கும் - முதுகில் வெளுப்பு யிருந்தால் சுகத்தைக் கொடுக்கும் இது வலதுபக்கத்தி லிருந்தால் தன தான்னியங்கள் உண்டாகும். இடதுபக்கத்தில் இருந்தால் பூமிலாபம்வீடு புத்திரலாபம் வாலி ல்வெள்ளையும் நன்மை - உடலில் வாலசூரியன்போல முன்புறம்சி வந்துயிருந்து பின்புறம் வெளுத்துயிருந்தால் அந்தக்குதிரைபகலி

ல்ஜெயத்தைக்கொடுக்கும் பின்புறம்சிவந்து- முன்புறம் வெளுத்துயிருந்தால் அது இராத்திரியில் ஜெயங்கொடுக்கும் இதற்குப் புரவியென்று பெயர் இதைநடை விடும்போது பந்து அடித்தாப்போலே நடையும்-சிங்கம்போலே குரலும் அதிவேகமான காற்றுபோலே வேகமும் நிர்த்தனம்பண்ணுகிறவள் போலே நடையும் நிற்கும்போது மலைபோலேயும் கற்புடையபெண்கள் போலே கவிழ்ந்தமுகமும் கந்த களபபுஷ்பங்களில் பிரியமும் நிலோற்பல புஷ்பம்போலே நேத்திரங்களும் அந்தப்புஷ்பம்போலே தேகவாசனையும் உள்ள குதிரைகள் உத்தமமானது நூறுவிரல் உயரமுள்ளது உத்தமம் எண்பத்திநாலுவிரல் உயரமுள்ளது மத்திபம் அறுபத்தொரு விரல் உயரமுள்ளது அதமம் ஆமென்பது. இந்த-குதிரைகளுக்குவயசு- முப்பத்திரண்டு இதற்குள் பத்துக்கெண்டம் வரும்.

குதிரையிலக்கணம் முற்றுப்பெற்றது.



விருத்தம்.

அசுவலட்சணமிவ்வாறனைத்துஞ்சொல்லி ... *
அன்பொடுவாழ்த்திக்கொடுத்தார்அரசனுந்தன் *
வசமுறவேமகிட்சியொடுகயிறுமாறி ... *
வாங்கிஅரன்முதலோர்க்குவரிசைசெய்து ... *
திசைமகிழுநரிப்பரிகளதனையெல்லாஞ் ... *
சிறப்பொடுபண்டுளபரிகளுடனேசேர்த்து ... *
நிசமெனவீற்றிருந்தான்பின்னந்தியாதி ... *
நிறைகணங்களுடன்பரனூர்நிலேசேர்ந்தாரே (௪௪௯)

———(:)(*)(:)———

விருத்தம்.

திரிநரிபரிகளானசெயலிதுகேட்போரென்றும் ... *
பரிபுரப்பாதத்தேவிபாகர்தம்பதத்தில்வாழ்வார் ... *
பரிகளைநரிகளாகப்பண்ணியவறுபதான ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே.()

நரியைப்பரியாக்கின - திருவிளையாடல் - முற்றிற்று.



ஆக திருவிருத்தம்-ம்௯-பதம்-ம்-ஆக உ௯.

ஆக பாயிரம்உள்படத்- திருவிளையாடல்-௫௯க்கு-வெண்பா-௫-கலித்துறை-௪-கொச்சகம்-௯-விருத்தம்-௪௱௯௮-பதம்-௯௱௨௫-

ஆக கவிதை-௭௭௫-



அறுபதாவது

## பரிநரியாக்கிய திருவிளையாடல்.



விருத்தம்.

நரிபரியாகக்கயிறு மாறியேதென் ... *
னவன்கைக்கொண்டபின் வாதபுரர்மன்னன்பால் *
வரிசைகளநேகம்பெற் றகத்தில்வந்து ... *
மகிழ்ந்தரனைத்துதித்திருந்தாரன்றிராவில் ... *
கரியகந்தரர்கருணை விளையாட்டாலே ... *
கந்துகஞ்சேர்பந்திதனிற்கட்டிநின்ற ... *
பெரியநரிப்பரிகளெல்லாம்நரிகளாகிப் ... *
பிரிந்துதாம்ஊளையிட்டுத்திரிந்துதாமே, ...(சறுக)

குதிரைகளெல்லாம் நரிகளாகி ஓடிப்போனது,

பதம்-சௌராஷ்டிரராகம்-ஆதிதாளம்

[ பல்லவி. ]

பரியானதுநரியாகியே - பாய்ந்துதேவெளியில்

அநுபல்லவி

அரியாரணனறியாதவுபாய- வமலராரிமர்த்தனனுக்கருளுமாயப்
பரியா

[ சரணங்கள். ]

(க) ஐயோபகல்முழு-வதும்குதிரைக
ளாகிமனிதர்களைத் ... தாங்கி - சுற்றி
அலைந்தேவாயும்-வரண்டுகாலோய்ந்தவ
ரடிக்குங்கொறடாவடி ... வாங்கி - காட்டில்
மெய்யாய்கிழற்-கோழிபோலிருந்திட்ட
மேனியெல்லாமிளைத் ... தேங்கிப் - பல
மிகுதாம்புச்சங்- கிலியாற்கட்டுண்டோ
மேகால்களும் ... வீங்கி - இப்போ
துய்யும்விதிவசத்தாற் ... சிவனருளாலே
ஒழிந்துதுபரியுரு ... நாமினிமேலே
வெய்யவர்காணுமுன் ... விடியுமுன்னாலே
வெளிப்படவேணுமென்று-செழித்தெழுந்தொருக்காலே
பரியா

(௨) பசியோமிகுந்தது - இந்தக்கொள்ளுப்புல்லுப்
பயறுகள்தின்னப் ... படாதே - வெளிப்
பட்டால்வயல்வரப் - புகள்தன்னைச்சுற்றி
பார்க்கலாமென்று ... அப்போதே - வெகு
விசிவாகியகயிறு - சங்கிலிகளை
வெடுக்கென்றறுத்து ... தரூதே - பில
மிகவானதை - முளைகளுடன்பிடிங்கி
விட்டுதுமுன்பசிக் ... கிதே - என்று
அசுவங்களங்குமின் ... றதுகளைத்தாவி
அரைப்பசிகால்ப்பசிக் ... காச்சென்றுலாவி
தசைகளைத்தின்றுகுடல் ... பிடிங்கிக்குலாவி
தருணம்வாச்சுதென்று ... தானிரைத்திட்டுக்கூவி

பரியா

(௩) காவற்காறர்கள் - விழித்தெழுந்தாரதைக்
கண்டுதையாநரிக் ... கூட்டம் - மதில்
கடந்தேசில - சிலநரிகாடே
கதியாயெடுத்துதே ... ஒட்டம் - எட்டித்
தாவிச்சாளர - வழியாற்புகுந்தே
தப்பித்துச்சிலநரி ... யீட்டம் - பெருஞ்
சலதாரைகள்பல - திட்டிகளில்நுழைந்து
தான்சென்றநரிக ... ளதேஷ்டம் - மிக
நோவுற்றநரி ... கிழட்டோரிகுறுட்டு
நொண்டிநரிகளந்த ... இடந்தனைவிட்டு
தாவிப்போகமுடி ... யாதகப்பட்டு
தயங்கிக்கிடந்தலைந்து ... மயங்கியேஊளையிட்டு

பரியா

(௪) உரமாகவேசி - னந்துவிரட்டிவரு
வோரைக்கடித்துக்கடித் ... தரியும் - குட்டி
யுடனேசில - நரிகள்தாவிக்குதித்
தோடமதிலிடிந்து ... சரியும் - மலர்
மரமீறியசோலை - கள்ாலய
வாசல்கள்மதுமழை ... சொரியும் - பல
மலர்வாவிகள்கடை - வீதிகளெங்கும்
வளைந்துஊளையிட்டுத் ... திரியும் - இந்த
இரவிலிதென்னவென்று ... நகரிலுள்ளவதர்கிட்ட
வேபநறிவிழிக்க ... வெங்கும்நாய்கள்அதட்ட

அரவமொடுங்கும்புட்கள் ... கலையமுன்னிருந்திட்ட
அரிக்குலமுமொழிய ... நரிக்குரல்கடல்முட்ட

பரியா

(ரு) அகமெங்கிலும்புகுந் - தேகறிபலகா
ரஞ்சாதங்களை ... அடுத்து - மிக
அதிகப்பசி - ஆறத்தின்றேதன
தானகுட்டிகளுக்குங் ... கொடுத்து - அங்கே
மிகவாகியபயிர்-களைப்பிடிங்கியே
வேரொடுந்தூறெடுங் ... கெடுத்து - அதில்
விளைபிஞ்சுகள் - காய்கனிபூவொடு
மெல்லிலைகளையும்வாய் ... மடுத்து - பின்னும்
பகரும்ஆடு ... ... கோழிகள்பலகோடி
பதுங்கிப்பதுங்கிப்பிடித் - துண்டுகொண்டாடி
இகலிடவருநாய் ... களை எல்லாஞ்ஜாடி
எதிர்த்துத்துரத்தித்துரத். தியேகூட்டங்கூடிக்கூடி

பரியா-ஙஉசு.

---

விருத்தம்.

நகரினிலிரவுமுற்றும் நரிகளதூளையிட்டு ... *
மிகவுமேதிரிந்துகங்குல் விடிந்தபின்திறந்தகோட்டைச் ... *
சிகரவாசலினூற்காட்டிற் சென்றதிச்செய்தியெல்லாம் ... *
அகமிகவேங்கிக்காப்போர் அரசனுக்கோதுவாரே ... (சஙஉ)

அரிமர்த்தனபாண்டியனிடத்தில் குதிரைகள்நரிகளாகிஓடிப்போன
தைகாவல்காறர்கள் கூறியது.

பதம் - ஆரபிராகம் - ஆதிதாளம்.

பல்லவி.

கோவேநேத்துநீர் - கயிறுமாறிக்கொண்ட - குதிரைச்செய்திகேளும்.

(அநுபல்லவி)

ஆவலாய்க்குதிரைக் ... கள்ளிவிட்டபொன்னெல்லாம்
ஆற்றிற்கரைத்தபுளி ஆச்சுதென்னசொல்லலாம்

கோவே

[சரணங்கள்.]

(க) ஏதுமாயமோமா ... நீதியுள்ளதுரை
யேதுணிநதென்னென்று ... இயம்புவோமிவ்வுரை
பாதிஇரவிலழ ... கானபெருங்குதிரைப்
பந்தியெல்லாம்நரிப் ... பந்தியாச்சேமதுரைக்

கோவே

(௨) கூடியநரிகள்முன் ... னிருந்தபரிகளதை
கூடக்குடல்பிடுங்கிக் ... கொன்றுதின்றுதேசதை
ஓடியேவந்தவெள்ள ... மிருந்தவெள்ளமதை
யுங்கொண்டுபோனது ... போலாச்சென்னகதை
கோவே

(௩) ஊரெல்லாமலைக்க ... ஊளையிட்டேகத்தி
உறுக்கிஎதிர்த்தபேரை ... யுங்கடித்துத்துரத்தி
போரிட்டேமனைகள் ... தோறும்புகுந்துசுற்றிப்
போதுவிடிந்தவுடன் ... புகுந்துதேகானத்தில்
கோவே,௩௨௭.

---

விருத்தம்.

கருதருகுதிரைப்பந்தி காப்பவர்குதிரைஎல்லாம் ... *
வருநரியாகிக்காட்டில் மறைந்துதென்றுரைக்கக்கேட்டு ... *
இருவிழிசிவந்துகோடை யிடியெனவதட்டிஅங்கே ... *
அருகுளஅமைச்சரைப்பார்த் தரசனீதுரைசெய்வானே (௪௫௩)

பதம்-சுருட்டிராகம்-சாப்புதாளம்.

[ பல்லவி. ]

கேளும்சுமதிமந்திரி ... மாரே - இந்த
கேலிக்கென்னசெய்வோம் சொல்வீரே

[அநுபல்லவி.]

ஆளிவனுடனிதா ... னந்தெரியாமற்போச்சு
ஆசையாய்நாம்பிள்ளை - யார்பண்ணகுரங்காச்சு
கேளும்

[ சரணங்கள் ]

(௧) வாதவூரனென்னும் - கள்வனிவனைமெத்த
வாசித்தறிவுடைய ... ... ... சாது
வாய்மையுள்ளவனென்றுங் கட்கெல்லாமேன்மையாய்
வைத்திருந்தோம்இவ்வூர் ... ... மீது
ஏதுகாணும்பசு-ஏழையும்பார்ப்பானில்
ஏழையும்நம்பக்கூ ... ... ... டாது
என்றுசொல்லும்பழ-மொழிக்கிசம்உறவுபோ
லிருந்துகுளவிபோலேகொட்டினனிப் ... போது
கேளும்

(உ) அடருங்குதிரைவாங்கி - கொண்டுவருகிறேமென்
றளவற்றநிதியைவிசு ... ... வாசம்
ஆகவாங்கிக்கொண்டுகாட்டில்த்திரியும்நரிக
ளைப்பிடித்துப்பல ... ... தேசம்
படரும்பரிகளென்று-கொண்டுவந்துவிட்டான்சொப்
பனத்திலும்அறியோம்இம் ... ... மோசம்
பாருங்காணுமர - மேறத்தெரியார்க்கிலை
பறித்துக்காட்டினாப்போல்-பண்ணினான்பரி ... யாசம்
கேளும்

(௩) மாயப்பரிகளெல்லாம் நரிகளாய்முன்னுள்ள
வான்பரியையுங்கொன்று ... ... போட்டு
வனம்புகுந்ததுபரி-தேடவுள்ளதும்போச்சு
வஞ்சகனிவன்சொல்லைக் ... ... கேட்டு
தீயனிவனையிதற்-கென்செய்யலாமினி
செப்புவீர்செந்தமிழ் ... ... நாட்டு
தென்னவன்துரைத்தனம் இதுவென்றுசோழனும்
சேரனும்சிரித்திடத் தேடினேமிந்தத் ... தேட்டு
கேளும், ௩௨அ.

---

விருத்தம்.

அமைச்சரைப்பார்த்திதுகூறும் அப்போதந்தவாதபுரர் ... *
தமக்கிதொன்றுந்தெரியாமல்த் தானேவந்தார்கண்டுதென்னன் *
நமக்குமதிமந்திரியாகிராஜகாரியம்பார்க்கும் ... *
சமத்தனீஎன்றிந்தவசனந்தான்சொல்லிச்சினந்தானே (சருச)

பதம்-அசாவேரிராகம்-சாப்புதாளம்.

(பல்லவி)

ராஜகாரியம்பார்க்குமந்திரி - உனைப்போலிந்த
நானிலமெங்குமுண்டோ

[அநுபல்லவி.]

ஆசையாய்ப்பொன்னெல்லாங்- கைப்பற்றிக்கொண்டுநல்ல
அசுவந்தேடிக்கொடுத் ... தாயேஅதென்னசொல்ல
ராஜ

[சரணங்கள்]

(௧) பார்க்கின்றபேரெல்லாம் - இந்தப்பூனையும்இந்தப்
பாலைக்குடிக்குமோவென் ... ... றிடவே

ஏற்கும்குதிரைகொண்டு ... வந்ததற்குக்குறைச்ச
லென்னவென்றுரைத்தாயே ... அடவே
ஊர்க்குட்கேலியிது ... நேத்துக்கயிறுமாறி
உற்றகுதிரையெல்லா மெத்தயிரவில்மீறி
நாற்கடலோசையும் ... ஓடுங்கவூளையிட்டுதே
நகரெல்லாம்நடுங்க நரிகளாகிவிட்டுதே

ராஜ

(உ) வந்தநரிகள்முன்-னிருந்தபரிகளையும்
மாய்த்துக்குடல்பிடுங்கித் ... தின்றுதே
பந்திவிட்டெழுந்துவந்- தெவர்களையுங்காயப்
படுத்திப்பெருவனத்திற் ... சென்றுதே
இந்தயிதவஞ்சகம் - சிந்தையிற் ... குறித்தாயே
என்னைத்தானேயெற்றிப் பொன்னெல்லாம்பறித்தாயே
சொந்தம்போலவேயி - ருந்துநீ வெறுத்தாயே
சுற்றும்நகைக்கசிங்கா - ரித்துமூக் கறுத்தாயே

ராஜ

(ந) கண்ணுங்கவசமும்போல்- காரியம்பார்க்குமுன்
கருத்திநினைவறியேன் ... இக்கொலையே
பண்ணுமந்திரித்தனம்- நன்றந்தணனெனப்பேர்
படைத்தபெருமையல்லால் ... வேறில்லையே
புண்ணியமறையோனென்- றெண்ணிப் பார்க்கஇது
பொறுக்காமலேநெஞ்சி லுறுக்குதேநீ செய்தது
திண்ணமற்றொருவ னுகிற்சித்தி ... ராக்கினை
செய்துவிடுவேனதற்- கையமுண்டோ ... நினை

ராஜ- நஉக.

——*——

விருத்தம்.

சினந்தரசனிவையுரைத்து எதிரேநின்ற ... *
சேவகரைநோக்கியிந்த வாதவூரான் ... *
இனந்தயங்கத்தண்டித்துப் பொன்னையெல்லாம்... *
இக்கணத்தில்வாங்குமென யேவிவிட்டான் ... *
மனந்தயவிலாதவர்வெய்யிலி லிழுத்து ... *
வைத்துமலர்க்கைமீதும் நெற்றிமீதும் ... *
கனந்தருகல்வைக்கநொந்து பரனேவந்து ... *
காவென்பார்வஞ்சமிதாமோ வென்பாரே (சஉரு)

குதிரைகளெல்லாம் நரிகளாகி ஓடிப்போனதால் மாணிக்கவாசக
சுவாமிகளை வருத்தப்படுத்தும்போது ஸோமசுந்தரேசுவர
மூர்த்தியை தியானித்துக் கூறியது.

பதம்-ஆகிரிராகம்-ஆதிதாளம்

பல்லவி.

இதுவென்ன மோசம் - இதுவென்னகிலேசம்
இதுவென்ன பரியாசம்

அநுபல்லவி.

மதுரைநாயகரே- சதிசெய்தோரீங்கினீர்
வானிலேறவிட்டு- ஏணியைவாங்கினீர்—இது

[ சரணங்கள் ]

(க) விதியும்அரியும்அண்டர்- பதியும்அறிந்திடாத
விமலவடிவேபரப் ... பிர்ம
வேதமுடிவேயென்- மனோதுக்கமொழியாத
விதமிதுவேனென்ன ... கர்மம்
அதிசயமிந்தப்பரி- நரியாகவேசெய்தீர்
அடியேன்மீதிலுண்டோ ... வர்மம்
ஐயோதொட்டிலுமாட்டித்தொடையிலுங்கிள்ளியே
அடிக்கடிஎனையிவ்வ - வதிசெய்வதுவோ தர்மம்
இது

(உ) கடனொழிந்துதென்றெண்ணித்- திடமிகுந்திருந்தேனே
காரணமிதுவென்ன ... மாயம்
கடவுளேஉள்ளனு- மாகிவந்துரையுங்
கலைத்திட்டீரேஈத ... ... பாயம்
உடல்பொருளாவியீ- துமதல்லவோயிந்த
உடலைவருத்துவதோ ... ஞாயம்
உபத்திரமிவளவே- னையாபலதீட்டுக்
கொருமுழுக்காகவே- ஒழிப்பதல்லோ...சகாயம்
இது

(௩) வள்ளலே உமது - கதியென்றடைந்துமினி
மற்றெவரடியில்வீழ் ... வேனோ
மனதிலொன்றும்வாக்கி - லொன்றுமானயிந்த
வஞ்சஉலகிலினிவாழ் ... வேனோ
பள்ளமாயைக்குழிக் - குள்ளேயேயழுந்திப்
பரதவித்திப்படித்தாழ் ... வேனோ
பரனேகள்ளனுமாகி - விளக்கும்பிடித்துநின்றீர்
பாவமென்செய்தேனிந்தப் - பதிதர்கையால்மாள்வேனோ
இது-௩௩௰.

விருத்தம்.

சோகமுடன்வாதபுரரிவ்வாறோதித் ... *
துதிசெய்யக்கேட்டிரங்கிச்சுந்தரேசர்
நாகமதிகொன்றையணிசடையில்வாழும் ... *
நதிமடந்தைதன்னையெண்ணினாரப்போது ... *
சாகரங்களேழும்புகாந்தத்திலொன்றாய்த் ... *
தானெழுந்துவருவதுபோற்பொங்கிப்பொங்கி *
வேகவதிநதியதிருகரைமேற்கொண்டு ... *
விரைந்துதான்வெள்ளம்வந்துதிரைந்துதானே (௪௫௬)

பதம் - சங்கராபரணம் - ரூபகசாப்புதாளம்.

[ கண்ணிகள். ]

(௧) வேகவதியில்அமோகப்பிரளய ... மிகுந்துதே - அதி
வேகமுடன்கன - மாகநகருள்ப் ... புகுந்துதே
மாகமுறுத்திரு - மாமதில்வீழவே ... சாச்சுதே - திரு
மாநகரெங்கெங்குந்-தானேபெருவெள்ள ... மாச்சுதே

(௨) அங்குறைமானிடர் -தங்கள்பொருள்களைக்காப்பார்-செம்பொ
னுடைகள்மாமணி-மேடைகள்போச்செனப் பார்ப்பார்
மங்கையர்கள்சிலர் - தங்கள்மதலையை ... எடுப்பார்-சிலர்
மைந்தரைக்காணமல் - நொந்துநொந்தேகண்ணீர்விடுப்பார்

(௩) சுந்தரமாதரை - மைந்தர்கள்கைப்பிடித் ... தோடுவார் - சிலர்
சொந்தமனைநமக் - கெந்தவிடமெனத் ... தேடுவார்
இந்தப்பெருவெள்ள-மின்றைக்குவந்தது நேத்து - பரி
யெல்லாம்நரியாயெழுந்துதென்னதிருக் ... கூத்து

(௪) குற்றமிதேதரி - மர்த்தனன்செங்கோல் ... அநீதியோ-இந்தக்
கூடலரன்விளையாடலோயென்ன ... பாதியோ
எத்தனைகுண்டோ - தரன்குடித்தாலும் ... வற்றாதே - இவ்
விதையெவர்தான்வற்-றிடச்செய்துகாப்ப ரிப்போதே

(௫) கங்கையணிந்தவ - ரிங்கருள்செய்பிலி ... தாரே - அவர்
கற்றைச்சடைநுனி-யொற்றைக்குள்ளாமிந்த நீரே

இங்கிந்தமாருதி - இப்படிக்கோவித்த ... தேதென்றார் - ஊ

ழிருக்கப்படாதென்றுமாளிகைமேற்சிலபேர் சென்றார்

 (௩௩௧)

விருத்தம்

பதியோரிந்தப்படிகலங்கப்பகரும்வாதவூரரைய ... வ

வதியேசெய்வோரவரைவிட்டுவைகைநீரால்த்தங்கள்மனை ... *

யதிலேதாமோவெனவோடினார்களிந்தவாதபுரர் ... *

மதுரேசுரர்சன்னிதிக்கேகிமகிழ்ந்துதுதிசெய்திருந்தாரே (௪௰௭)



விருத்தம்.

துரகதம்நரிகளாகித்தொலைந்திடுலீலைகேட்போர் ... *

மரகதமெனனவேயென்றும்வாழ்வர்மாமதுரைவாழி *

சுரருயர்பிட்டுக்கேமண்சுமந்திடுமெறுபத்தோராந்

திருவிளையாடல்தன்னைத்தெரிந்திடஉரைசெய்வேனே (௪௰௮)



பரிநரியாக்கிய திருவிளையாடல்

முற்றும்.



ஆ திருவிருத்தம், அ, பதம் ௬, ஆ ௰௪

ஆ பாயிரம்உள்படத் திருவிளையாடல்-௬௰க்கு, வெண்பா-௫,

கலித்துறை ௪, கொச்சகம் ௩, விருத்தம் ௪௪௬, பதம் ௩௩௪.

ஆ கவிதை எஅ௬.





அறுபத்தொன்றுவது

## மண்சுமந்த திருவிளையாடல்.



### விருத்தம்.

பரிநரியாகியபின்புவைகைவெள்ளம் ... *
பரந்துவருவதையடைக்கும்படியாய்த்தென்னன் *
கருதியுரைத்திடவமைச்சர்சென்றுவைகைக் ... *
கரையிலவ்வூர்க்குடியீவிலளந்தடைக்க ... *
வருகவெனப்பறையறை செய்தாரியாரும் ... *
வந்தடைத்தார்மதுரைதனில்வந்தியென்னும் ... *
ஒருபிட்டுவாணிச்சிக்காளில்லாமல் ... *
உருகுவாள்ஆள்த்தேடிவருகுவாளே ... (சஙூ)

பதம் - நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்

பல்லவி.

வந்தாள்பிட்டுவாணிச்சி - மதுரைவிமலர்மது - மலரடிதுதிசெய்து
வந்தாள்

[ அநுபல்லவி ]

சிந்தாகுல-மாகவே ... சென்று
தெய்வமேயென்ன ... செய்குவேனென்று
வந்தாள்

சரணங்கள்

(க) நடுக்கமிகுந்தவில்லுப் - போலுடல் ... கூனி
நரைத்துச்சணைபோல - வேதிரங்கிய மேனி
ஒடுக்கமுடன்கடைவாய் - நுரைத்திட ... வாய்நீ
ரொழுகப்பேசியீச - ருக்கபி ... மானி
வந்தாள்

(உ) மேதினிதனிலாரு - மற்றவள்நான் ... பிட்டு
விற்றுவயிறுவளர்த் - திருந்தேனிந்த ... மட்டு
மேதொருகுறைகளு - மறியேனிடை ... யிட்டு
இன்றிந்தக்குறைவந்து - தேயென்றுமுறைப் பட்டு
வந்தாள்

(ங) அரைஞாண்கட்டியபிள்ளை-முதலாயெல்லோரும் பொங்கும்
ஆறடைக்கச்சென்றாரே-யங்கேயெனது ... பங்குக்

கொருவரில்லையேதென்னன் - தண்டிப்பானே ... இங்கு
உதவுங்கூலியாளுண்டோ - வென்றுதெருவெங் கெங்கும்
வந்தாள் . ௩௱௩௨



விருத்தம்.

பிட்டுவாணிச்சிபடுந்துயரந்தீர்க்கப் ... *
பிறைமுடியார்பண்டுகுண்டோதரனுக்காக ... *
மட்டுவார்குழற்கங்கைமனைவிவைகை ... *
மானதியாய்ப்பிரிந்தவளைமருவவேண்டி ... *
நெட்டுவாள்விழிஉமையாள்காணுவண்ணம் ... *
நிறமாறியதுபோலவேஷங்கொண்டு ... *
எட்டுவாரணஞ்சூழ்விமானம்விட்டு ... *
எழுந்தருளிக்கூலியாளெனவந்தாரே ... (௪௬௰)

பதம் - சாவேரிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

கூலிதந்துவேலைகொள்வாருண்டோவென்றுகூறிக்கொண்டுவந்தார்

அநுபல்லவி

மேலவர்முனிவர்க - ளெவரையும்பாரில்
வேலைகொள்ளும்சுந்த - ரேசரவ்வூரில்
கூலி

[ சரணங்கள். ]

(௧) அரையிலழுக்கடைந்த - பழந்துணி ... யுடுத்து
அகன்றதோளிலொரு - மண்வெட்டி தொடுத்து
சிரமதிற்சும்மாடுங் - கூடையு ... மெடுத்துத்
தேடிமெலிந்தவள்தன் - தெருவதனி ... லடுத்து
கூலி

(௨) இசைமுனிவர்கள்மகத் - தமுதுங்களரி ... தந்த
இனியவமுதும்வயி - றிரம்பவில்லையோ அந்தப்
பசிதீர்க்கவோபிட்டின் - ருசிபார்க்கவோ சொந்தப்
பாலன்தாயைத்தேடி - வருவதுபோல ... முந்த
கூலி

(௩) ஜெகமகளணிமரு - மலரெனச் ... சூட்டு
திருவடிசிவந்திட - நடந்திது ... கேட்டு

அகமகிழ்ந்திடப்பிட்டு - வாணிச்சி ... வீட்டுக்
கருகினில்வந்திரைந் - தொருகுரல்ப் ... போட்டு
கூலி, ௩௬௩.

———*———

விருத்தம்.

அன்புடையவந்திவருகூலியாளை ... *
அப்பாகூலிக்குளபிட்டருள்வேனுற்றில் ... *
என்பிரிவையடைத்துவாவென்றளன்னே ... *
இப்போதுமுன்பசிதீரென்றார்கேட்டுப் ... *
பின்பதமாகிபுமாகாமலும்வேம்பிட்டைப் ... *
பிதிர்த்தீய்ந்தாள்சுடச்சுடஎன்னையன்வாங்கி *
இன்பவமுதிலும்ருசிக்குதென்றுண்டாற்றுக்... *
கேகினர்வந்திக்காளாகினரே (௪௬௪)

பதம்-சௌராஷ்டிராகம்-ஆதிதாளம்,

[ பல்லவி. ]

வந்திக்கொரு - கூலிஆளென - வந்துவிளையாடினர்

அநுபல்லவி

அந்திப்பிறைச்சடை - யதனை ... மறைத்து
வந்திப்பவர்க்கெளி -யவரென ... உற்று
உந்திங்கரைக்கணுகியவரோ ... டொத்து
முந்திக்கணக்கத- னிலெழுதி ... வைத்து
வந்திக்

[ சரணங்கள். ]

(௧) விரசாய்வேலைசெய்பவர்போலெவர்களும்
மெச்சவேமண் ... வெட்டுவர் - மண்ணதையிரு
கரமதனுற்கூ- டையிலெடுப்பவர்வெகு
கனமிதென்று ... கொட்டுவர் - கொட்டியமண்ணைச்
சிரமதிலரையரைக்- கூடைசுமப்பர்தலைச்
சிம்மாடுவிழத் ... தட்டுவர் - மறுபடியும்
உரமுடனேசும் - மாடுதனையெடுப்பர்
ஓயாமலே ... கட்டுவர் - சிறந்தவைகைக்
கரையிலிந்தவிதமாய்த்-திரிவருயர்பொழுது
கடத்திமண்சுமந் ... தோடுவர்-ஓடியேநின்று
இரைவர்விழுவர்விழுந் - தெழுவர்இருவிசைமண்
ணெடுத்துமாமுகம் ... வாடுவர்-வாடியேமெத்த

சிரமமிருந்தவர்போல் பதமுங்கையுஞ்சிரமுஞ்
சிவப்புற்றுத்தள் ... ளாடுவர் - சிறந்தபல
நிரையிதட்பெருகிய விரைமலர்ச்செழுமர
நிழலுந்தென்றலுந் ... தேடுவர் - தேடியேஇந்தத்
தரைமகளிவர்திரு மெய்தோய ... வருந்து
தவப்பயனோஒரு தருநிழலி ... லிருந்து
ஒருகூடையில்த்தலை வைத்துவிழி ... பொருந்து
உறக்கம்போற்படுத்து உறங்கி எழுந்திருந்து
வந்திக்

(உ) ஆடுவர்மண்ணை அள்ளுவர்அள்ளி
அடுத்தவன்பங்கை ... அடைப்பர் - இசைந்தகவி
பாடுவர்நீரிற் பாய்குவர்அடைப் ·
பானஅணையை ... உடைப்பர் - உடைக்கவிட்டு
ஓடுவர்நகைத் தோதுவர்கரத்
தொடுகைசேர்த்துப் ... புடைப்பர் - உடைப்பிலணை
போடுவர்எங்கும் - போகுவர்மெய்யிற்
புழுதிஅணிவர் ... துடைப்பர் - இரைச்சலிட்டுக்
கூடியேவேலைசெய்வோர்முன்-கூடையுந்தலையுமாடக்
குதித்துக்குதித் தோங்குவர் - மெய்யெங்கும்வேர்வை
ஓடியேபெருகிடவா - யொலிசெய்துகாற்றழைத்து
ஓய்ந்தோய்ந்துகளை ... தாங்குவர்-மிகுந்தநரை
மூடியகிழவிமுன்போய் - மூச்செறிந்துகொண்டுபசி
மூண்டுதென்றுநின்...றேங்குவர் - இன்னமும்அணை
போடவேணுமேவெந்தது-போதுமுந்தானையிற்போடு
போடென்றுபிட்டெல்லாம்வாங்குவர் - வாங்கியேமதி
சூடியபெருமான்வெகு - சுவையுள்ளபிட்டி ... தென்று
துதிசெய்துவாங்கியபின்-துரைபோல்நடந்து சென்று
நாடியாறடைப்பவர்க்குங் - கொடுத்துக்கொடுத்துத் தின்று
நானிலமெங்குமகிழ - நகைத்துநகைத்து ... நின்று
வந்திக்

(௩) ஏகுவர்பிட்டை - இருகையிலள்ளிவா
யிரம்பக்கொட்டிக் ... கொள்ளுவர் - மிகவுமகிழ்
வாகவேலைசெய் - வாரைத்தழுவிடன்
பத்தமாய்த் ... ... துள்ளுவர் - நடந்துஅதி
வேகமாகமண் - வெட்டுவர்மெள்ள
வேகூடையி ... லள்ளுவர் - அங்கயற்கண்ணி

பாகர்வேலைகொள் - வாரிலெலவருக்கும்
பயப்படாமல் ... விள்ளுவர் - எவருங்காண
மாகமுட்டக்கிளம்புவர் - வைகைவெள்ளத்திற்குதிப்பர்
மறைந்துமறைந்து ஒளிப்பர் - வெள்ளத்திற்பல
சாகையுள்ளமரங்களைத் - தானேதெப்பமாக்கிக்கொள்வர்
தாழ்ந்துநீரில்மொக் குளிப்பர்- கரையில்வந்து
வாகுமண்வெட்டிகழட்டி- மாட்டுவர் ஆப்பறைகுவர்
மண்ணெடுப்பர் தத்தளிப்பர்- மண்கூடையோடு
சோகமுற்றுவீழ்வர் மண்- கூடையைவெள்ளத்தில்விட்டுச்
சோருவர்எடுப்பர் ... களிப்பர்- அங்கிந்தப்படி
யாகப்பலபலவி- நோதங்கள்செய்து ... பித்த
னுமிவனென்னவிளை- யாடியேதமக் ... குற்ற
பாகத்திலெவ்வளவு- மடைத்திடாமலே எற்ற
பாண்டியன்சேவகர்-பார்த்துப்பிரமித்துச்சுற்ற
வந்திக்- கூ௩௪.

---

விருத்தம்.

ஈறிலாரிந்தவித மூலவமற்றோ ... *
ரிடுமணையெல்லாங்கண்டு இந்தவந்தி ... *
கூறடையாதவரைமிகச் சினந்துதெய்வக் ... *
கோலங்கண்டடிக்கவஞ்சித் தென்னன்முன்போய் *
ஆறணையிட்டாரெவரும் வந்திபங்கொன் ... *
றடைக்கவில்லையவள்கூலி யாளாமாங்கோர் ... *
வீறடையானவன்செய்தி கேளுமென்று ... *
மிகவணங்கியேவல்செய்வோர் விளம்புவாரே ௪கூ௨

பதம்- பைரவிராகம்- ஆதிதாளம்

பல்லவி.

ஆரோவந்தி-கூலியாளாம்-அவன்செயலிதுகேளும்

அநுபல்லவி,

நேராய்க்கணக்கெழுதிவைத்துந்தான் நெடுமாநதியணையிட்வந்தான்
ஆரோ

[ சரணங்கள். ]

(௧) குதித்துக்கொண்டொருகொட்டு மண்வெட்டுவானதைக்
கூடையிலெவ்வளவும் ... அள்ளான்- அந்தக்
கூலியைஎற்றிப்பிட்டு வாங்கித்தின்பதிலும்தன்
கூத்திலுமேமிக ... வுள்ளான்

எதிர்த்துச்சினந்துகோ லோங்கிபதட்டிச்சொன்ன
லெங்களுரையைச்சற்றும் ... எள்ளான்- அவ
னிறுமாப்பென்னசொல்லத் தேவர்முனிவர்சித்தர்
இசைந்தமூவரையுமேபொருளென் றுகொள்ளான்
ஆரோ

(உ) நதிக்கரையினிலலை வாய்த்தரும்பென்னவே
நாங்களலேந்து ... ... நைவோம்- அதை
நாடியெவரும்பயந் தடைப்பாரிவனின்று
நகைப்பானுறுக்கி ... வைவோம்
அதட்டுக்கஞ்சானயத் திலுமிணங்கானிதை
அறைந்தெங்களாவி ... உய்வோம்- என்று
அஞ்சிஒடிவந் - தோம்அரசேயுமதாணைக்கி
அஞ்சாதவனையே அடியேன்களென்னசெய்வோம்.
ஆரோ

(௩) தந்தைதாய்மனைவி மைந்தர்ப்பிறவியற்றுத்
தமியனை ... பித்தனே-பிட்டில்த்
தாகமாய்க்கிழவிதன்னை ஏய்த்துத்தின்னத்
தானேவந்த ... எத்தனே
இந்திரசாலஞ்செய் பவனேமன்னவர்
எழில்மகனே ... ...சித்தனே- மற்
றெவனேவென்றடிப் பதற்கஞ்சினேம்அழகை
யென்சொலமாயனே இந்தநகர் அத்தனே
ஆரோ - ௬௫௫.

—*—

சந்தவிருத்தம்.

என்றிவர்மொழிந்திட வெழுந்தரசனங்கணே ... *
யிடுங்கரையில்வந்தணைக ளதைநாடி ... *
இங்குசரிவந்திவிடு வம்பனெவனென்றிட ... *
யெதிர்ந்துகொடுவந்தனர்க ளிறையோனை ... *
வென்றனில்முனிந்தரச னங்கைகொள்பிரம்படி ... *
விழுந்ததுசொரிந்தனர்மண் ணொருகூடை ... *
வெம்புனல்சூடிந்தணைய தங்குயரவும்பரன் ... *
விரைந்துவின்மறைந்தனரோ ரடியாலே ... *
நின்றவசரஞ்சர முகுந்தன் முதல்விண்டலம் ... *
நின்றந்தவர்மெய்நொந்துவடு வதுகான ... *

நிம்பமணிகின்றவனும்நொந்துமெய்தழும்புபட ... *
நிந்தையறுவந்தியையொ-ருவிமானம் ... *
அன்றுகொடுசென்றதுவிண்-ணம்பரர்புகழ்ந்திடயீ *
தந்தநகரந்தனிலெ-வரும்நாட ... *
அன்போடிதுவென்புதுமை-என்றரசனுங்கருத ... *
அண்டமதிலன்றெழு மிம்மொழிதானே (சகஙு)

அரிமர்த்தனபாண்டியனுக்கு சுவாமி ஆகாசவாக்கா
... லனுக்கிரகஞ்செய்தது,

பதம்-கௌளிபந்துராகம்-அடதாளசாப்புதாளம்

பல்லவி

இதுகேளரிமர்த்தன-நமதுசெய-லென்றேஅவ்அத்தனும்

[ அநுபல்லவி. ]

புதுமையெய்தவனை ... நோகாமலம்பைநொந்தாப்
போலேவாதபுரன் ... மேலேயேதோஙினைந்தாய்
இதுகேள்

சரணங்கள்.

(க) உனதுநிதியையெல்லாம் ... ... வாத - புர
னுதவிநான்நமக்கே ... ... ஆத - வினல்
சினமுடனவனைப்பொல் ... லாத - துயர்
செய்தாயேஅது ... தீர்ப்பதற்கோத
இதுகேள்

(உ) நரியைப்பரிகளாக்கிக் ... கொடுத்தோம் - பரி
நரிகளாகவும்லீலை ... தொடுத்தோம் - வாத
புரனைத்துயர்செய்வது ... தடுத்தோம் - பெரும்
புனலைவைகையில்வந்து பொங்கவும் விடுத்தோம்
இதுகேள்

(ங) வந்திகூலியாளாய் ... வந்தோம் - பிட்டு
வாங்கியுண்டுமண்சு ... மந்தோம் - இன்று
உந்தன்பிரம்படியு ... ... கந்தோம் - நம
துலகைவந்திதனக் ... குதவி மகிழ்ந்தோம்
இதுகேள்

(ச) இவன்பொருட்டிதுவெல்லா ... நாமே - செய்த
திவன்செய்ததனதறந் ... தாமே - மா
தவமிகுந்தவனிவன் ... ... ஆமே - இவன்
தன்னிச்சைப்படிவிட்டுவிடுவாய்சொன்னேமே ...
இதுகேள்-ஙஙச

விருத்தம்.

செப்புமிந்தவின்னுரைகேட்டதிசயித்துத் ... *
தென்னவனச்சமுமகிழ்வுஞ்சிந்தைகொள்ளா *
தப்பெரியவாதவூராரைத்தேடி ... *
அழகேசர்சன்னிதியிற்கண்டுபோற்றி ... *
ஒப்பறுமேலவருமதுபெருமைதோணு ... *
தொறுத்திகழ்ந்தேன்புல்லறிவதுடையேன்செய்த *
இப்பிழையெல்லாம்பொறுத்துஇங்கேதானே ... *
இருமென்பான்முன்போலமருமென்பானே (சகுச)

அரிமர்த்தனபாண்டியன் மாணிக்கவாசகசுவாமிகளைத் தோத்திரஞ்செய்து பிரார்த்தித்தது.

பதம்-பூரிகல்யாணிராகம்-ஆதிதாளம்

பல்லவி

இங்கேஇருந்திடவேணும்- உம- திச்சைப்படிநடப்பேன்காணும்

[ அநுபல்லவி ]

உங்கள்நாடிது ... ... முன்போற்காவல்பூண்டு
உயருமதிகுலமும் ... நிலமுந்தழைக்கஆண்டு
இங்கே

[ சரணங்கள். ]

(க) அரசென்னுந்துயருள்ள ... ... நானே-பேதை
அறிவுக்கிசைந்ததை யேசெய்திட்டேனே
நரகமதனிற்புகு ... ... ... வேனே - எந்த
னற்றவம்போலவந்துற்றநீர் ... தானே
இங்கே

(உ) உற்றதுஉமையறி ... ... யாதே-என
துள்ளமயங்கிமிக வேசெய்தேன்தீதே
குற்றமிதுபொறுமிப் ... போதே - இந்தக்
கொஞ்சமதிநினைத்தேன் பஞ்சையிப்புவிமீதே
இங்கே

(ஙு) தேடும்பெருநிதியாற் ... ... செய்யா - வினை
செய்தேஇவ்வுடல்ஜெனித்தது மெய்யா
வாடும்உலகமிது ... பொய்யா - மென்னை
மருவும்பிறவிநோய்க்குஅருமருந்தானீ ரையா
இங்கே-ஙுஙுஎ

---

விருத்தம்.

தென்னவனிப்படியுரைத்ததெல்லாஞ்செல்வத் ... *
திருவாதவூரர்செவிக்கேறுமற் ... *

புன்னகைசெய்தென்னஉரைசொன்னீரிந்தப் ... ௭
புவிபோகந்தனுகரணம்பொருந்துமாசை ... ௭
பின்னலறவத்துவிதபரமாநந்தம் ... ௭
பெருகியதோர்பெருங்கடலிற்பிரிந்திடாவென் ... ௭
றன்னையினிஅமைச்சியற்குவிரும்பவேண்டாந் ... ௭
தள்ளுமென்பாருலகையொப்புக்கொள்ளுமென்பாரே

பதம்-முகாரிராகம்-சாப்புதாளம் (சாகூ௫)

பல்லவி.

தள்ளும்தள்ளும்-உலகைஒப்புக்-கொள்ளும்கொள்ளும்

[ அநுபல்லவி ]

எள்ளளவாகிலும்-இசையேனெனை ... யழைத்
திரங்கவேண்டாமெனக்கேதுக்கிந்தப்பிழை
தள்ளும்

[ சரணங்கள். ]

(க) உம்மையடுத்ததாலிவ் - வுலகியல்மறைநெறி
உணர்ந்தேனதிற்சித்த ... சுத்தி
செம்மையாச்சுதந்த - சித்தசுத்தியால்மற்ற
தெய்வங்களெல்லாம ... வித்தி - யமென்
றிம்மையுலகில்சித்திய - மானதுசிவபத்தி
யென்றுணர்ந்தேன்சிவ பத்தி
பொய்மயமாயையைத் - தொலைத்துதேயெனக்குநீர்
புன்மைசெய்தோமென்று - புகன்றீரிதென்னயுத்தி
தள்ளும்

(உ) மெய்யின்படிதைத்தந்து - தன்மயமாக்கிய
மெய்ச்சிவனேஅன்பர் ... பூசை
செய்யவேஉலகைத்-தந்துகாத்தழித்துச்
செகத்திலுழல்பிறவி ... மாசை - என்றும்
கொய்யுங்கடவுளவர் - கருணைப்பெருங்கடலிற்
குளித்திந்தஉலகப்பி ... சாசை
பொய்யென்றுதள்ளிநான் - குளிக்கப்போயுஞ்சேறு
பூசிக்கொள்ளல்லமோ - போமென்னசிற் றாசை
தள்ளும்

(௩) பரவுங்கயிலேமுதற் பதிகளிலுறைகூடற்
பரமசிவனேஅருள் ... பூத்து
விரைவிலெனைப்புலியூர்க் கேகவுமுமையிங்கே
வீற்றிருந்திடவுமே ... சாற்று - மந்த
திருவாய்க்கெதிர்வாயுண்டோ-தவஞ்செய்யாமலவஞ்
செய்யலாமோதுயர் ... தீர்த்து
உரைசெய்தனுப்புங்கனி-யிருக்கக்காயுண்ணென்று
உபசரிப்பாரோயென் னுள்ளக்குறிப்பைப்பார்த்து
தள்ளும். ௩௩அ.

———O✳O———

விருத்தம்.

புலனடங்கியதோர்வாத புரரிவையுரைத்துத்தென்னர் ... *
தலைவனைநிறுத்திகூடற் ருனுவைப்பணிந்துபோற்றி ... *
நலமுறுவிடைபெற்றேகி னூர்தென்னனனுப்பிவந்து ... *
பலமருள் சுந்தரேசர் பதம்பணிந்துரை செய்வானே ... (௪௬௬)

அரிமர்த்தனபாண்டியன் ஸோமசுந்தரேசுவரமூர்த்தியை
தோத்திரஞ்செய்தது.

பதம் ஆநந்தபைரவி ராகம் அடதாளசாப்பு

[ பல்லவி ]

அடியவர்க்கெளிமையாய் வந்தீரே - இந்த
அதிசயங்கள்துதிசெயும்பேராரே

[ அநுபல்லவி ]

கொடியவென்பிறவிப்பிணி - பொடிசெயும்அம்புலியணி
கூடல்நகர்வாசரேவிளை - யாடல்செய்யும்ஈசரே
அடி

[ சரணங்கள் ]

(௧) கல்லெறியும்விஜயன்கை - வில்லடியும்பொற்பிரம்பின்
வல்லடியும் பொறுத்துதோ - செல்லமேனியிற் சிவனே
நல்லதுதீ தறியாத - புல்லறிவுடையவெந்தன்
கல்லெனுமன முருக - நல்லறிவருள் ... சிவனே
அடி

(௨) வானமுகில் வண்ணன்முத - லானகடவுளுமிந்த
மானிலஉயிரு மான ஞானவடிவே ... சிவனே
ஏனிதுமண் சுமந்தடி தானுகந்தீரந்தவடி
நானுமுகந்துமதுபொன் மேனியானேனே ... சிவனே
அடி

(௩) மெய்த்தவ ருமதடியார்- பற்றியமருந்தெனவே
கைத்திருந்து பிறவிநோ- யைத்தொலைத்தாரே ... சிவனே
எத்தனையோ நானவரை- மெத்தவேசெய்துயர்தள்ளிப்
புத்திசொன்னதற்குக்கைமா-றெத்தைநான்செய்வேன்சிவனே

அடி

(௪) தூயசிறுத்தொண்டனுட - னேயொருவேடனுந்தரு
சேயுடலுழுனு முன்ன - வேயெழுந்தாப்போற் சிவனே
நேயமுடனே வந்தீரே - தாயிலாவுமக்குவந்தி
யேயனையோ பிட்டினிய - தூயவமுதோ ... ... சிவனே

அடி

(௫) தேசுநரிப் பரியில்வந் - தோசைநதிமுடியிலென்
தூசணிந் தருளியபிர - காசவடிவே ... சிவனே
தேசிகொள்வதில்மிருந்த - ஆசையாலுமைத்தோணமற்
பேசமிறுமாப்படைந்து - மோசம்போனேனே ... சிவனே

அடி, ௩௩௯

—*—

விருத்தம்.

அகனுவொத்திவைதுதித்தன்ருதியாக ... *
வரனடிக்கன்பாயரிமர்த்தனன்பாராண்டு ... *
ஜெகநாதனெனுமகவீன்றுலகையாளச் ... *
செய்துசிவபதமுற்றுன்வாதவூரார் ... *
சுகநாடித்தில்லையுற்றுப்புத்தர்வாது ... *
தொலையவென்றூமையைப்பேசச்செய்துாசர் ... *
மிகநாளுமகிழுவின்சொல்மாலைசாற்றி ... *
மேதினியோர்தொழவிமலவீடுற்றுரே (௪௬௭)

விருத்தம்.

விரைமலர்க்கொன்றைவேணி விமலர்மண்சுமந்தலீலை ... *
இருமையதொழியக்கேட்போ ரிச்சையதடைந்துவாழ்வார் *
சுரமொழித்தன்ருேர்பாண்டியன் தொழவளரறுபத்திராங் ... *
திருவிளையாடல்தன்னைத்தெரிந்திடஉரைசெய்வேனே (௪௬௮)

மண்சுமந்ததிருவிளையாடல்முற்றும்.

ஆ திருவிருத்தம்,ம, பதம் அ ஆ மஅ,
ஆ பாயிரம்உள்படத் திருவிளையாடல்-௬௪க்கு, வெண்பா- ௫.
கலித்துறை ௪, கொச்சகம் ௩.விருத்தம் ௪௫௬.பதம் ௩௩௯,
ஆ கவிதை அாஎ.

அறுபத்திரண்டாவது

## பாண்டியன் சுரந்தீர்த்த திருவிளையாடல்.

விருத்தம்.

மண்சுமந்துவாதபுரர்தம்மையீசர் ... *
மகிழ்ந்தாண்டபின்பரிமர்த்தனன்றன்மைந்தன் *
திண்சுமந்தபுயன்ஜெகநாதன்தொட்டன்பு ... *
சேர்ந்திடுசத்துருசாதனன்மட்டாக ... *
எண்சுமந்தஈரைந்துதென்னர்பாராண் ... *
டெய்தினர்பின்புசத்துருசாதனன்சேய் ... *
பண்சுமந்தமொழியார்கள்வில்வேளென்னப் ... *
பகர்ந்திடுகூன்பாண்டியனிப்பாராண்டானே (சகூகூ)

தரு-அடாணராகம்-ரூபகசாப்புதாளம்.
[ கண்ணிகள். ]

(க) சத்துருசாதன-பாண்டியன்-வர
புத்திரனுனதென் ... னவனே - மிகத்
தான்பண்டுசெய்- வினையால்மெய்யில்க்
கூன்கொண்டநன் ... னவனே
வெற்றிசேர்ந்திடுகூன் - பாண்டியனென்
றற்றபேரது ... ... பூண்டான்... - ஜெய
வீரவாள்அமர்த்-திறத்தால்-மன்னர்
பாரெல்லாங்கட்டி ... ஆண்டான்

(உ) சேரர்கோன்வெகு-நிதியுங்-கரித்
திரளுமட ... ... வாரும் - இந்தத்
தென்னவன்தனக்- கிந்து- பெற்றநன்
தேசமுந்தன் ... னூரும்
ஆரம்பூண்டிடு-சோழன்வெற்றிய
தாமிவன்தன்னை ... ... அடுத்து - மக
ளானமங்கை-யர்க்கரசி-அவ
ளைமணஞ்செய்து ... கொடுத்து

(ங) தேரும்பலகரியும்-பரித்
திரளும்விளை ... ... நாடும் - குலச்

சிறையென்றொரு - மதிமா - னையுந்
திருமாமக ளோடும்
ஆரும்புகழ்ந்திடச்சோ - ழனு
மன்றுபாண்டியனுக் ... கீந்தான் - சோழன்
அன்றிழந்ததன்னுடு - பெற்றர
சாளுமூரது ... ... சேர்ந்தான்
(ச) மகிழுங்குலச்சிறை - யுத்திய
மதியுந்தென்னன் ... பார்த்தான் - தன்
வாசல்மந்திரி - யாக்கிக்கொண் - டிந்த
மாநிலமெல்லாங் ... காத்தான்
நிகரிலாமங்கையற் - கரசியை
நேசமாயுற்றுத் ... ... தானே - எங்கும்
நீண்டபார்தனையாண்டு - கொண்டுகூன்
பாண்டியனிருந் தானே (கூசம)



விருத்தம்.

சோழன்விட்டகுலச்சிறையைமந்திரியாக்கித் ... *
தொல்புவியைஆண்டுகொண்டுசோழனீன்ற ... *
மாழைநிறமங்கையற்கரசியோடு ... *
வாழ்ந்திருந்துகூன்பாண்டியன்மதியில்லாத ... *
பாழமணர்போதனைக்குள்ளாகிச்சைவ ... *
பத்திவிட்டுச்சமணர்கள்தன்மதத்துக்குள்ளாய் ... *
மூழ்கிவிட்டான்சமணரெல்லாமிருள்போல்வந்து ... *
மூடினார்மதுரையிலூடாடினாரே ... (சஎம)

பாண்டியதேசமெங்கும் சமணர்கள் வியாபித்துக்கொண்டது.

பதம் - மத்தியமாவதிராகம் - ஆதிதாளம்.

பல்லவி.

தென்னனுடெங்குந் துன்னச்சமணர்கள்
செழித்தார்சைவத்தைப் ... பழித்தாரே

அநுபல்லவி.

மன்னனுங்கூன் ... பாண்டியன் - கைவசு
மானனினிஎங்குந் ... தானமெனத்தங்கும்
தென்ன

[ சரணங்கள் ]

(க) பறிபடுதலையுஞ் ... சிறுபாயுடையும்
பாசிபடர்ந்த ... பல்லும் - கையினில்

உறியுங்கலசமு - ம்அஸ்திராஸ்தியென்
ரேதியிடுஞ் ... சொல்லும்
அறிவில்லார்கள்போ - லம்மண் ... இடையும்
ஆகியேதினஞ்சேஷ்டையை ... யடையும்
குறிகளோடுகெரி ... நிறமுள்ளகாகக்
கூட்டம்போலவேகொண் ... டாட்டமதாக
தென்ன

(உ) உத்திராட்சமும் - விபூதியுமறை
ஓதுமகமும் ... வாட - அரிகர
பத்திமார்க்கத்தோ - ரெவர்களுந்தப்பியே
பரதேசத்தி ... லோட
அத்தியைஅரவைப் - பசுவைமுன்வதைத்
தழித்தோநமை - யவமதித்தஊரிதை
வெற்றிகொண்டோமெனவே ... மெத்தவேசென்று
மேதினிமேற்சைவ - மேதினி ... மேலென்று
தென்ன

(ங) செந்தமிழ்நாட்டுள்ள - தெய்வாலயங்கட்குச்
செல்லுமார்கம் ... மறையக் - கொடிய
தந்தநாகமது - விழுங்குஞ்செங்கதிர்
தனைப்போலொளி ... குறைய
எந்தஊர்களிலுஞ் - சமணர்கள் ... பேச்சு
எங்குமேஅருகன் - கோவிலுண் ... டாச்சு
சுந்தரேசருட - செந்தாமரை ... யடி
சூடாமலெவரும் - நாடாதிந்தப் ... படி
தென்ன - ஙசக.

---*---

விருத்தம்.

பந்தமுறுசமணர்களிப்படிநிறைந்துமலிந்தார் ... *
பாவைமங்கையர்க்கரசியோடுகுலச்சிறையுஞ் ... *
சிந்தைதனில்மதுரேசர்தம்மைமறவாமற் ... *
சீலமதிலுயர்ந்துசிவவேஷமணியாமல் ... *
அந்தரங்கபத்தியுடனிருந்தார்களோர்நாள் ... *
ஐயோவிச்சமண்மதத்தையழித்துலகம்புகழ ... *
இந்தமதுராபுரியிற்சைவமதைவிளக்க ... *
எவாவருகுவார்சிவனேயென்றேங்குவாரே (சஎக)

பதம் - ஆனந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

எவர்வருவாரோஇங்கே அறியோமே - ஐயோ
இந்தச்சமணையொழித்திடத்தாமே

[ அநுபல்லவி. ]

சிவனாரடிதொழுஞ் - சைவந்தனைவெறுத்த
தென்னனைரட்சித்தறந் - தன்னைநிலைநிறுத்த
எவர்

[சரணங்கள்.]

(க) மெய்யில்ருத்திராட்சமுந் - திருவெண்ணீறும்நுதலில்
விளங்கமகிட்சியுடன் ... ... பூண்போமோ
விளைந்தபுற்றினிலீசல் - போலச்சமணரெல்லாம்
விழுந்துமடிந்திடக் ... காண்போமோ
தெய்வமேயிவர்க்குச் செல்காலமோஇது
சிறந்திட்டசைவமினித் ... ... தான்போமோ
சிவசிந்தனையில்லாத - சென்மமேதுக்கிந்த
தென்னனறிவிப்படி ... வீண்போமோ- ஐயோ
மையுறுசமண்மதம் - பொய்யென்றெவர்க்குங்காட்டச்
சைவம்வைதிகந்தானே - மெய்யென்றுநிலை நாட்ட
எவர்

(உ) பேய்போற்பிதற்றிஇந்தச் - சைவந்தனையிகழ்ந்து
பேசியவாய்புழுத்துச் ... ... சொரியாதோ
பெருத்தமுப்புரத்தோரை-எரித்ததெய்வத்துக்கிந்த
பித்தர்தமையெரிக்கத் ... ... தெரியாதோ
பாயுமுறியுமயிர் - பறிந்ததலையும்பாசிப்
பல்லுமுடம்பும்பற்றி ... ... எறியாதோ
பண்டுபட்டதைமறந் - தேனிங்குவந்துகெட்டோ
மென்றிவர்தமக்கச்சந் ... ... தரியாதோ- ஐயோ
நாய்போற்குலைக்குமிவர் - வாயிலெட்டிஅடிக்கத்
தீயரிவ ருடைய - கோயிலையு மிடிக்க
எவர்

(ங.) எப்படிப்பார்க்கவொண்ணுஊரிதிலிவர்கள்தா
னெந்தவிதத்திலோவந் ... ... தடுத்தாரே
என்னகாலகதியோ - தென்னர்பிரானுக்குத்தா
னிந்தப்புலையர்க்கிடங் ... ... கொடுத்தாரே

வெட்டுக்காட்டில்முளைத் - திட்டசிருபொலிந்தப்
பட்டணமெங்குந்தலை ... ... யெடுத்தாரே
வீணரிவர்கறுவிக்-கறுவியிவ்வூரையு
மீனவன்பேரையும் ... ... கெடுத்தாரே-ஐயோ
வட்டப்புவியி லிவர் கொட்டமடிக்கு மிக்க
துஷ்டத்தனமொழித்து வெட்டிக்கழுவில் வைக்க
எவர். ௩சயஉ.

---

விருத்தம்.

ஏங்கியேயிருவர்தாமு மெழில்பெறுமதுரையீசர் ... *
ஓங்கியகோயிலெய்தி உமைகயல்க்கண்ணியோடும் ... *
ஆங்குறைசுந்தரேசர் அடியிணைபணிந்துநின்று ... *
பாங்குள்ளசைவமோங்கப் பாருமென்றெற்றுவாரே. (சஎ௰உ)

மங்கயர்க்கரசியாரும் குலச்சிறையாரும் ஸோமசுந்தரேசுவர
மூர்த்தியைதோத்திரம்செய்துபிரார்த்தித்தது.

பதம்- அசாவேரிராகம் - ஆதிதாளம்.

( பல்லவி. )

அடிமைகொள்ளுவீரரனே-பரனே - சுந்தரனேசிவபுரனே

[ அநுபல்லவி. ]

கொடுமையிதென்னசம ணரைமிஞ்சவிடலாமோ
குவலயத்திற்சைவர்வை திகர்துக்கப்படலாமோ
அடிமை

[ சரணங்கள். ]

(க) பதிதபாவனநதி மதியணிபவனேயு
மதுகருணைநிறைந்த பதிகளிலுயர்ந்திடு
மதுரைவளநகர மிதுசமணடைந்திடு
வதுபுகழோகருணை நிதியேஉமாபதியே
அடிமை

(உ) சேமமிகுந்தசைவ மாமதந்தனைவிட்டு
பாமரச்சமணர்க்குள் ளேமன்னவன்மருவி
நேமமொழியவிட லாமோமுனிவர்புகழ்
மாமதுரையில்வளர் சோமசுந்தரேசரே
அடிமை

(௩) துறவர்கள்தமக்கன்று மறையின்பொருளுரைத்து
அறிவுதந்ததுபோல இறைவன்றனையுமின்று

குறையுள்ளசமண்மதத்- துறையொழிந்துதேவரீர்
நறைமலர்ப்பதந்தொழு - முறையருளிரட்சித்து
அடிமை - ௩௪௩.

விருத்தம்.

இவரிந்தப்படிதுதித்து நிற்கும்போது ... *
எழிற்புண்டரீகபுரத் திருந்தோர்நூலோன் ... *
அவனிபுகழ்மதுரேசர் தரிசனங்கண் ... *
டடிபணியவந்தானங் கவனைநோக்கி ... *
தவமுடையீரெங்கிருந்து வந்தீரென்றார் ... *
தலைமையாம்பொன்னிநா டென்றானங்கே ... *
சிவனருளாற்புதுமைகளே தேனுமுண்டோ ... *
செப்புமென்றார்விப்பிரனுஞ் செப்புவானே (௪எ௩)

ஸ்ரீசுப்பிரமணியக் கடவுளார் சீர்காழியில் திருமெஞ்ஞான சம்பந்தமூர்த்திகளாகத் திருவவதாரஞ்செய் தெழுந்தருளி யிருக்கின்றாரென்று ஒரு பிராமணோத்தமர் வந்து மங்கயர்க் கரசியாருக்கு தெரிவித்தது.

பதம்- தோடிராகம்- ஆதிதாளம்

பல்லவி.

அதிசயமதுசொல்லக்கேளும்-நீங்க-ளறியீரோஇதுநாளும்

அநுபல்லவி.

மதுரேசரருளாற்-சமணர்க்கழிவு ... காலம்
வந்துதேஉலகில்மி- குந்துதேஅநு கூலம்

அதி

[ சரணங்கள் ]

(க) சீர்காழியிற்சிவபா தவிதையரென்றொருவே
தியர்சமணரைவென்று ... கதிக்க
வாகாமொருபிள்ளையே வேணுமென்றுபெருமை
மாதவம்புரிந்தவர் ... ... மதிக்க
நாகாபரணரரு ளாலேஅவருக்கந்த
நாளொருபிள்ளைவந் ... துதிக்க
பாகாமொழியாளொடு சிவபாதவிதையர்
பாலகனைவளர்த்தார் பாரோரெல்லாந் ...துதிக்க

அதி

(உ) பாலன்றனுக்குமூன்றும் பருவத்தில்விடையினிற்
பரனுருடனுமை ... ... வந்து
கோலமுறுமொருபொற் கிண்ணத்திற்பாலுடன்
கூடவேஞானமுங் ... கலந்து

மாலுடனேகொடுக்க வாங்கியருந்திஅந்த
மதலைதனக்கறி ... ... வுகந்து
ஞாலமிதில்ஓதா மற்கலையெல்லாங்கற்றுத்திரு
ஞானசம்பந்தரென்ன நாமம்பெற்று ருவந்து
அதி

(ரு) சிந்தைமகிழ்ந்துசிவன் பதியெங்குஞ்சென்றுபாடி
சிவனருள்செம்பொற்றாளம் ... முத்து
பந்தல்முத்துப்பல்லக்கு பெக்காளமும்பெற்று
பாலையைநெய்தலாக்கி ... வைத்து
தந்தபொற்படிக்காசு பெற்றுவேதாரண்யந்
தன்னிற்கதவதை ... ... யடைத்து
செந்தமிழ்ப்பாடியே ஸ்தலமெல்லாங்கண்டுகெண்டு
சேவித்துவருகிறா ரிங்கும்வரக் ... கருத்து
அதி, ருசச.

—*—

விருத்தம்

அருமறையோனிதையுரைக்கச் சைவநெறிவேஷம் ... *
அப்போதேதரித்துயர் சிறப்பதமடைந்தாப்போலே... *
இருவருமேமகிழ்ந்துதங்கள் பேர்வைத்தோரோலை ... *
எழுதிமறையோனிட மீந்தனுப்பிமதுரேசர் ... *
திருவடியிற்பணிந்துமனை யுற்றார்பின்மறையோன் ... *
சென்றந்தஓலைதனைச் சைவசிகாமணியாய் ... *
மருவுதிருமெய்ஞ்ஞான சம்பந்தமூர்த்தி ... *
மகிழ்ந்தறியவேபேசித் தான்வாசித்தானே (சஎச)

மங்கயர்க்கரசியார் உத்தரவின்படி குலச்சிறையார்திருமெஞ்ஞான சம்பந்தமூர்த்திகளைப் பிரார்த்தித்து பத்திரிகை அனுப்பியது.

பதம்- கலியாணிராகம்- ஆதிதாளம்.

பல்லவி.

சாமியவர்கள்பாதாரவிந்தத்தில்த் தெண்டனிட்டுச்
சாற்றும்விண்ணப்ப மிதுவே

அநுபல்லவி.

பாமரனுமென்னைப் பாவனை முறைப்
படியேயருள்செய்வீ ரடியேன்குலச்சிறை
சாமி

[ சரணங்கள். ]

(க) மானிலம்புகழ்மது ராபுரியிதி ... லானும்
வைதீகர்சைவர்கள் மலிந்திடவே ... காணும்

ஈனச்சமணரெல்லாம் - பானுவைக்கண்ட ... நாணும்
இருளெனஓடவெழுந் - தருளிவந்திட ... வேணும்
சாமி
(உ) இனிபதானசைவ நன்னெறியிதை ... மாற்றி
இவர்க்குட்சிக்கிமயங்கு-மெங்கள்தென்னனைத்தெற்றிப்
புனிதமாக்கித்தேவ ரீர்திருக்கண் ... சாற்றிப்
புனையும்நீறுகொடுத் - தருள்வீர்கருணை ... மூர்த்தி
சாமி
(ங) பொங்குசெந்தமிழேவி ளங்குதென்னு ... டிதிற்
பூதிசாதனவழிநிலைநிறுத்தியே ... மதித்
தெங்களையாட்கொள்வதுங்கட்குக்கடன் ... துதி
யேதுரைப்பேன்தேவரீர்பாதமலரே ... கெதி
சாமி - கூசடு.

விருத்தம்.

பாசுரமிதுகேட்டுச்சம் - பந்தரச்சமணராண ... *
மாசுடையாரைவெல்ல - மதுரைமூதூர்க்கெழுந்தார் ... *
தேசுளவவரைநோக்கித் - திருநாவுக்கரையரந்த ... *
நீசர்முன்செலத்தகாது - நீலுமெனச்சொல்லுவாரே (சஎடு)

திருமெஞ்ஞான சம்பந்தமூர்த்திகள் மதுராபுரிக்கி
யெழுந்தருள இப்போது அங்கே போகக்கூடாதென்று
அப்பர்சுவாமிகள் தடுத்தது.

பதம் - பைரவிராகம் - அடதாளசாப்பு

[ பல்லவி. ]

அந்தச்சமணரைஇப்போது - வெல்ல - லாமென்றெழுவதுதகாது

அநுபல்லவி.

இந்தவேளைதமிழ் - நாடெங்குமவர் ... பேச்சு
இனமும்பாண்டித்துரைத் தனமுமவரே யாச்சு (அந்த)

[ சரணங்கள். ]

(க) காலதேசவர்த்த மானம்பார்த்திட்டொரு
காரியந்தொடுப்பாரிச் ... செகத்தில் - ஏதும்
சீலமற்றவரே மேலவரையிகட்சி
செய்வாரிக்கலி ... யுகத்தில்
சாலநெடுநாள்க்கூடப் - பழகியிருந்தவென்னைத்
தானேயவர்செய்யவ மானவேதனைதன்னைக்
காலனிடத்திலும்ப டேனதுசொல்லப் ... போமா
கால்போகாவிடத்தினிற்றலையிட்டுக்கொள்ளாலாமா
அந்த

(உ) கொல்லுங்கொலைக்கஞ்சாத புல்லரவருடனே
கூடவார்த்தைசொல்லப் ... படுமா - ஞாய
மல்லாறச்சேற்றிற் கல்லெறிந்தால்மெய்யி
லதுபடாமல்விட்டு ... விடுமா
செல்காலமவருக்கிப் போதவர் ... செய்தி
தெரியாதுமக்குநீர் சிறுபிள்ளை ... யங்கெய்தி
வெல்லாவிடில்நமக்கெல்லாருக்கும் ... வசை
மிஞ்சிவிடுஞ்சைவமி தஞ்சிவிடுமன் ... மிசை
அந்த

(ங) வாரும்மனவலுவு மாற்றான்வலுவுந்துணை
வலுவுந்தூக்கிச்செய்ய ... வேணும் - கிரக
சாரபலனிப்போது போதாதுமக்கென்சொல்
தட்டாமல்க்கேளுங் ... காணும்
பாருமெதுவும்யோசி ... யாமலேஇளங்கன்று
பயமறியாதுபோற் ... பகருகுறீரின்று
ஆருமுமக்கெதிரி ... இல்லையென்றாலும்பாரில்
அஞ்சிஆண்மைசெய்ய ... வேணுமதுரையூரில்
அந்த - ௩சசு.

---

விருத்தம்.

செம்மைசேரடியார்மெச்சுந் திருநாவுக்கரையரோத ... *
தம்மிணையில்லாஞான சம்பந்தமூர்த்திகேட்டு ... *
அம்மழலணிந்தஈச ரருளில்லாதவரைப்போல ... *
இம்மொழியேதுரைத்திட்டீரென்பார்நீரென்பாரே ... ()

இப்படித்தடுத்தஅப்பர்ஸ்வாமிகளைப்பார்த்துதிருமெஞ்ஞான
சம்பந்தமூற்திகள் திருவாய்மலர்ந்தருளியது,

பதம் - சாரங்கராகம் - ஆதிதாளம்.

பல்லவி.

ஈசரருளில்லாஆ - பாஸர்போலவேநல்ல
ஏழைமதிசொன்னீ - ரையா

[அநுபல்லவி.]

தாசர்தொழுமெய்ஞ்ஞானநேசர்நம்தந்தையான
தற்பரனெங்குமிருக் கப்பயமென்னகண்டோ
செப்பும்பிடாரிபிள்ளையைப்பேயடிப்பதுண்டோ
ஈசரரு

சரணங்கள்.

(க) வெண்ணெக்கிப்பல்லு முளைத்தாப்போலவே ... யந்த
வெய்யசமணர்தானே வெல்லுவாரென் ... றெந்த

வண்ணமுரைத்தீர்சைவ மிதுதனிந்தா ... லிந்த
மண்ணுல கெதுநல விண்ணுல கேதுமல
ரன்னானுஞ்சிஷ்டிப்பனோ - கண்ணனும்ரெட்சிப்பனோ

ஈசரரு

(௨) அரியநாளுங்கோளும் புள்ளும்விலங்கும் ... வெய்ய
அசுரர்பூதருமற் றுருநம்மன்னை ... மைய
ரிருவரேவல்ப்படி தானேநடப்ப ... தைய
இருவரிவர்நம்சிந்தை மருவியிருக்கநிந்தை
வருமோசொல்லும்நீர்பண்டு வெருவிய துயர்கொண்டு

ஈசரரு

(௩) அதிகவெண்ணுயிரர்க் - கீரெண்ணுயிர்செல் ... வோம்
அச்சமென்னமுண்டனுக் கிரண்டாள்நாமேவெல்வோம்
விதிமொழியினிலவ மதிசெய்தவரைக்கொல் ... வோம்
விதனமிதென்னபஞ்சுப் பொதியைக்கண்டெருதஞ்சு
விதமுரைசெய்தீரந்த மதுரைதனிலுகந்த

ஈசரரு - ௩௭௭.

---

விருத்தம்.

திகழுமுயர் திருநாவுக்கரையர்தமக்கிவ்வாறுதெளியவோதிப் ... *
பகருதிருமெய்ஞ்ஞானசம்பந்தமூர்த்திசைவப்பாலோர்சூழச் ... *
சிகரமணிமாடமலர்ச்சோலைகள்சாலைகள்நிறைந்துசிறந்தசெம்பொன் *
மகளுலவுதிருமதுராபுரிநகருக்கெழுந்தருளிவருகுவாரே (௭௭௭)

திருமெய்ஞ்ஞானசம்பந்தமூர்த்திகள்மதுராபுரிக்கி
யெழுந்தருளிவந்தது.

பதம் - சாவேரிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

வருதிருமெய்ஞ்ஞான - சம்பந்தமூர்த்திதென்
மதுராபுரிக்கெழுந்தார்

அநுபல்லவி.

பெருமறைக்கவுணி ... யகுலவாகாழியில்
பிறந்துசந்திரனென்னவே - சிறந்துசீர்காழியில்
வருதி

[ சரணங்கள். ]

(௧) அடும்பகையசுரரை - பண்டுவென்றமரரை
ஆண்டக்கருணையுடன் ... பரிந்து - மிகக்
கொடுங்கலியுகமதில் - மானிடத்திருவுருக்
கொண்டெவர்களுந்தொழத் ... தெரிந்து - இந்த

நெடும்புவியில்விளங்க - வேதத்தைத்தமிழாக
நிகழ்த்திமறுமதங்க ... ளெரிந்து - நீறாய்
விடும்படிசைவம்வை திகமுமேமுத்தி
வீடருளுமென்றாருந் ... தேடவருள்புரிந்து
வருதி

(௨) சங்கமுரசொலிக - ளெங்குமுழங்கவிரு
சாமரையிருபாலும் ... வீச - உமை
பங்கரருளுமுத்துப் - பந்தலுள்நிறைமுத்துப்
பல்லக்கின்மீதுப்பிர ... காச - முள்ள
செங்கதிர்வரக்கண்ட - பங்கயமலரெனச்
சிட்டர்முகமலர ... யீசர் - புகழ்
தங்குமுயர்பதிக - ளெங்கினுந்தமிழ்மாலை
சாற்றி அரனைப்பணிந் - தேற்றியேதுதிபேச
வருதி

(௩) விரிபொன்னிநன்னாடு நீங்கித்தென்னாட்டினில்
வெற்புவனங்கடந்து ... கலிக்க - ஒளி
அருமணிப்பந்தல்வெண் - மதியென்னநீறணி
யன்பர்பாற்கடலென்னச்- ... சொலிக்கக் - கறை
இருளென்னுஞ்சமணஞ்சி யோடப்பெருஞ்சைவத்தை
யென்றும்நிலைநிறுத்திக் ... கெலிக்க - இதோ
பரசமயகோளரி - வந்தார்வந்தாரென்று
பாரெங்கும்அறியவே - வீரசின்னமொலிக்க
வருதி - ௩௪௮.

---

விருத்தம்.

சீகாழிச்செல்வரிந்தப்படிவரவேசமணர் ... *
சென்றுதடுத்துங்கட்கொன்றறஞ்சொன்னதேவை *
வாகாய்க்கும்பிடவந்தால்விருதெனவீறென்ன ... *
மற்றெவரைவென்றீர்நின்றுரைந்திடுவீரென்று ... *
ஆகாதசமணர்சொல்லத்தாமரைநூலாலோர் ... *
அடுமதவேழங்கட்டுப்படுவதுண்டோஅதுபோ ... *
லேகாணுமிவரையெண்ணாதேபுகலிவேந்தர் ... *
ஏகிமதுரேசரடியிணைபணிந்தேற்றுவரே (௪௭௮)

திருஞானசம்பந்தமூர்த்திகள் ஸோமசுந்தரேசுவரமூர்த்தியை
தெரிசித்துஸ்தோத்திரம் செய்தது.

பதம் - செஞ்சுருட்டிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

மாமதுரேசா - ஜெகவந்திதா

[ அநுபல்லவி ]

காமதகனனே பால சோமதரணனே மத
மாமுகனைத்தந்த வுமைவாமவரனே சாமி
மாமது

[ சரணங்கள் ]

(க) சூல தாரணு - ஆதி மூலகாரணு - ஜெய
காலமாரணு - பரி-பால பூரணு - சாமி
மாம
(உ) பாப நாசனு - கரி-சாபமோசனு - விஷ
தாப போசனு - சல்-லாப நேசனும் - சாமி
மாமது
(ங) ஆடல்மா மறை-வழி-நாடவறியாச்-சமண
மூடரைநான்வென்றுவாதாடவருள்வீர்சாமி
மாமது ஙசகூ.



விருத்தம்.

பாகீர்திச்சடையாரைக்கயற்கண்ணாளைப் ... *
பணிந்திந்தப்படிவேண்டிக்கருணைபெற்றுமீண்டு *
வாகீசரெனுமொருவர்வேண்டஅவர்மடத்தில் ... *
வந்தமுதுண்டிருந்தார் சம்பந்தரன்றிராவி ... *
லேகீழ்மைச்சமணர்எண்ணாயிரருமொருமித்து ... *
யிருந்துயோசித்துவைதீகத்தலைவரான ... *
மாகீர்த்திச்சீர்காழிமறைமுதல்வந்திருக்கு ... *
மடத்தினையேசுடக்கொடுந்தீயிடத்தொடங்கினரே.( )

பதம்-ஆரபிராகம்-ரூபகசாப்புதாளம்.

கண்ணிகள்.

(க) வந்துசமண ரிருந்தொருதந்திர ... மெடுத்தார்- சம்
பந்தரிருந்தம டந்தனிலங்கியை ... விடுத்தார்
(உ) அங்கிமுன்தக்கன் மகத்திற்கையற்றவன் றனே-இந்தப்
பங்கருரைத்தபடி செய்யவஞ்சியின் ... றனே
(ங) அஞ்சவறிந்தவ ரந்தழல்கொண்டுபோய் வைத்தார் - அந்த
வஞ்சமிதைச்சம் பந்தர்க்கடியார்தெரி வித்தார்

(ச) தெரிந்தவரன்றுபரன்-றனைப்பாடியே நோக்கினர் - பின்
வருந்துசமணை-வளர்த்திட்டதென்னன்மேற்றாக்கினர்

(ரு) தென்னனுடம்பது-தன்னிற்சுரமெனப் ... பெருக - அணி
பொன்னுமலரும்-புனைவதெல்லாம்வெந்து ... கருக

(சு) கருகித்துயிலணையுங்-கலையுந்தள்ளி ... நீங்கினன் - மெய்
யுருகியனல்மெழு-கொத்துமிகக்களைத் தேங்கினன்

(எ) ஏங்கக்குலச்சிறையுமன்னன்தேவியு ... நண்ணினர் - மிக
ஆங்குவயித்தியராற் பலபண்டிதம் ... பண்ணினர்

(அ) பண்ணும்வயித்திய ரெண்ணமறந்துகை...விட்டார் - அங்கு
நண்ணுஞ்சமணர்கள் திண்ணமுடனேவந் - திட்டார்

(கூ) வந்தவர்தந்திர-மந்திரத்தாற்பல ... நாடினர் - சுர
முந்தணியாமலே-நொந்தவர்சிந்தையும் வாடினர் (கூருய)

---

விருத்தம்.

இரவெல்லாந்தென்னவனிப்படிவெதும்ப ... *
வேவிடிந்தபின்புகுலச்சிறையுந்தென்ன ... *
னரபதிதேவியுமரசேசுரமீதந்த ... *
ஞானசம்பந்தரன்றித்தீராதென்ன ... *
வரவழைபுமென்றனப்போதமைச்சன் ... *
வந்துபணிந்தழைத்திடச்சம்பந்தராரும் ... *
பரவவந்துதென்னனைச்சைவருக்குள்ளாகப் ... *
பணித்திட்டார்சுரந்தனையுந் தணித்திட்டாரே (சஅய)

திருமெஞ்ஞானசம்பந்தமூர்த்திகள்கூன்பாண்டியன்

சுரந்தீர்த்தது

பதம் - பிபாகடைராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

பாண்டியன்சுரந்தீர்த்தார் - சிவ - பத்திபதனிற்சேர்த்தார்

[ அநுபல்லவி ]

ஆண்டிமயவரை-ஆட்கொண்ட ... கந்தர்
ஆனதொருதிருமெய்ஞ் - ஞானசம்பந்தர்

பாண்டியன்

[ சரணங்கள். ]

(க) மதுராபுரிதக ரெங்குஞ்சிங்காரித்து
வளர்ந்தகாவணங்கள் ... நாட்டி

கதலிகமுகுகரும்- பெங்குலிருத்திமலர்
கமழ்ந்ததோரணங்கள் ... நீட்டி
அதிரவாத்தியமெங்கு- முழங்கயமங்கலவகை
யழகுடனெதிர்வரக் ... ... காட்டி
துதிசெய்மங்கையர்க்கர- சியுங்குலச்சிறையொடு
தோத்திரஞ்செய்துமுடி மேல்த்திருவடி ... சூட்டி
தொழுந்தகுதியொடு- செழுந்தரளமணி
யழுந்துசிவிகையில் - எழுந்தருளிவந்து

பாண்டியன்

(௨) வந்துதென்னன்பணிய - மணிப்பீடத்திருந்து
மகிழச்சமணர்முகங் ... கடுத்து
இந்தவல்பிணியிடம்- புறநாங்களேதீர்ப்போம்
என்னஅதற்குமிடங் ... கொடுத்து
முந்தவெழிற்பைத்திரு - நீற்றையெடுக்கஅந்த
மூடர்தடுக்கஅதை ... விடுத்து
சுந்தரேசுவரர்தம் - மடப்பளித்திருநீற்றைத்
துரிதமுடனேஅங்கு - வரவழைத்தே ... யெடுத்து
துதிசெய் தீசரரு - ளதிகமாகவுயர்
பதிகம்பாடிச்செங்கை - யதினல்மெய்யில்த்தடவி

பாண்டியன்

(௩) வலதுபுறங்குளிர - இடதுபுறத்தினிற்ச
மணர்தங்கள்தெய்வத்தைக்கொண் ... டாடி
கலசநீரையிறைத்து - மயிலிறகாற்றடவிக்
கருதிப்பலவிதமாய் ... நாடி
உலைவதல்லாமற்சுரம் - விலகாதவிதத்தினல்
உரமொழிந்தவர்முகம் ... வாடி
மலைவுறக்கண்டுபின் - மன்னன்றனக்கேஇட
மருங்குங்குளிரச்செய்து - நெருங்கும்புகழே தேடி
வானுமண்ணுலகிது - தானும்புகழுமலர்த்
தேனுறைநிம்பமணி - கூனுடம்புய்நிமிர

பாண்டியன் - நடுக.

விருத்தம்.

சுரந்தீர்த்ததிருக்கருணை நோக்கத்தாலுஞ் ... *
சொல்லாலும்நீறிட்டுச் சீர்காழீசர் ... *
கரந்தீண்டப்பெற்றதினாலுங் கூன்பாண்டியன் ... *
கதிசேரும்புனிதனெனக் களிப்புற்றேசுந் ... *
தரஞ்சேர்ந்துசவுந்தரபாண்டியனெனப்பேர் ... *
தாணுகிஞானசம்பந்தர் தாளிற் ... *
சிரஞ்சேரப்பணிந்துப தேசம்பெற்றன்பாய்ச் ... *
சிவனடியார்க்கடிமையாய்ச் சிறந்திட்டானே (சஅக)

விருத்தம்.

சுரமதுதீர்த்தலீலைத் துதியிதுகேட்டோரென்றுங் *
கிரமமதுற்றுவாழ்வார் கேடுறுசமணர்தம்மை *
மரமுறுகழுவிலிட்டு மாய்த்திட்டஅறுபான்மூன்றாந் *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (சஅஉ)



பாண்டியன்சுரந்தீர்த்ததிருவிளையாடல்

முற்றிற்று.



ஆ திருவிருத்தம் - கச - பதம் - கஉ - ஆ உசு.

ஆ பாயிரம்உள்படத்திருவிளையாடல் - சுஉ- க்கு - வெண்பா - ரு.

கலித்துறை-ச-கொச்சகம்-ஙு-விருத்தம்-சஎ௰-பதம்-ஙுரு௧.

ஆ கவிதை - அஙு.



அறுபத்துமூன்றாவது

## சமணரைக்கழுவிலேற்றிய திருவிளையாடல்.



விருத்தம்.

வெஞ்சுரந்தீர்த்தபின்பு மீனவன்தேவியாரும் ... *
அஞ்சனமிடற்றார்க்கன்ப னுங்குலச்சிறையுமேலோர் ... *
தஞ்சிகாமணியாய்வந்த சம்பந்தர்தமைப்பணிந்து ... *
துஞ்சுவெஞ்சமணர்தம்மைத் தொலைத்திடவேண்டுவாரே (௪௮௩)

பதம்-சுருட்டிராகம்-சாப்புதாளம்.

பல்லவி.

துஷ்டச்சமணிருளைத் தானே - வென்று
தொலைக்கவேணும்பெருமானே

[ அநுபல்லவி. ]

சிஷ்டர்தொழுஞ்சீர்காழித் - திருநகரினில்வந்த
செழுமறைமுதலேயித் - தென்னாட்டினில்இந்த
துஷ்டச்

[ சரணங்கள். ]

(௧) பரனருள்தரும்வெண்ணீ ... றணியத் - தென்னன்
பாசமுங்கூனலுந் ... தணிய
சுரமிதொழித்தீரின்னம் - அடியேன்களுக்கொரு
துயருமில்லாமலே ... தயவுசெய்வீர்வரு
துஷ்டச்

(௨) தமிழ்நாடெங்குமெய் காட்டிச் - சிவ
சமயத்தையேநிலை ... நாட்டி
மமதையுற்றவரிவர் ... வாட்டமுற்றுநைய
வருத்தவேணும்வைத்து - வளர்க்கவேண்டாமைய
துஷ்டச்

(௩) வெருவாமற்செய்வார் சூது - இனி
மேலிவரைவிடலாகாது
அரசனமதுபட்ச - மானதுபெரி ... தல்ல
அரவைத்தலைவிட்டடி-வால்பிடித்தென்னசொல்ல
துஷ்டச்-௩௫௨.

விருத்தம்.

மந்திரியுந்தேவியாரும் வந்திவைபுரைக்கவேசம் ... *
பந்தர்கேட்டீசருள்ளம் பார்த்திதுசெய்வோமென்று ... *
அந்தநல்லிருவரோடு மலர்ப்பொற்றாமரையிலாடிச் ... *
சுந்தரேசுவரர்முன்சென்று தொழுதிதுதுதிசெய்வாரே ...(௪அ௪)

திருமெஞ்ஞானசம்பந்தமூர்த்திகள் ஸோமசுந்தரேசுவர
மூர்த்தியைப் பிரார்த்தித்தது.

பதம் - வராளிராகம் - சாப்புதாளம்.

பல்லவி.

சந்திரசேகரஉல்லாசா - சோம - சுந்தரமாமதுரேசா

அநுபல்லவி.

இந்திரபூசிதசிங்காரா - அர - அந்தகாசுரசங்காரா

சந்திர

[ சரணங்கள் ]

(௧) சுத்தபத்தபரி பாலா - சிவ - நித்தியநிஷ்களதிரி சூலா
சத்தியசுகுணகால காலா - தகு- தத்தியெனும்நடனலோலா

சந்திர

(௨) கானசாமப்பிரியநாதா - மெய்ஞ் - ஞானமுனிவர்பணிபாதா
தீனரட்சகவி நோதா - ஜெய - மீனலோசனே ... சமேதா

சந்திர

(௩) மேவுமறையைவிட்டுத்தீங்கு- உ- -லாவுஞ்சமணுழியவோங்கு
தேவரீர்திருவுள்ளப்பாங்கு - ஏ-தோவருள்செய்யவேணுமீங்கு

சந்திர-௩௫௩.

விருத்தம்.

சுருதியைமறவாரீது துதித்திடக்கேட்டுத்தொண்டர் ... *
கருதியதெதுவுந்தந்து கருணையேவடிவாய்க்காணு ... *
ஒருசுடராகியெங்கு முறைமதுரேசருள்ளத் ... *
தருளினுலெழுந்துதாங்கோ ரந்தரவசனந்தானே ... (௪௯௫)
திருமெஞ்ஞான சம்பந்தமூர்த்திகளுக்கு ஸோமசுந்தரேசுவரமூர்த்தி
ஆகாசவாக்கால் அநுக்கிரகஞ் செய்தது.

பதம் - மோகனராகம் - ஆதிதாளம்

[ பல்லவி. ]

சமணரினிஒழுகுவாரே - சிவ - சமயமேநிற்கும்அறிவீரே

[ அநுபல்லவி. ]

மமதையுள்ளவரவர் - தமதுபகையை வெல்வீர்
மங்கியவரேதோற்ப - ரிங்குமகிழ்ந்து செல்வீர்

சமண

[ சரணங்கள் ].

(க) உமதுசம்மதந்தானே ... நமதுசம்மதமாமே
உற்றதொண்டருட ... சித்தமாவதுநாமே
நமதுதொண்டர்நொந்தா ... லமரருலகும்நோமே
நற்றொழிலற்றபித்தர் ... சுற்றமுழுதும்வேமே
சமண

(உ) அருமறைநெறிதப்பி ... மறுநெறிநடந்திடும்
அதுபலுகுவதுபோ ... லாமடியுடன்கெடும்
உறையுமணற்சுவர் ... படையேறுமோவிடும்
உலகிலெவரையுந்தன் ... வினைதன்னையேசுடும்
சமண

(ங) இப்பொழுதெமதுசொல் ... லாலுமதுள்ளந்தேறி
யேசென்றுபாண்டிய ...னிருக்குஞ்சபையிலேறி
தப்புளசமணே ... டெதிர்ப்பீர்வாதுகூறி
தாழ்ந்தவர்மாளுவர் ... தாமேகழுவிலேறி
சமண - கூருச.

—*—

விருத்தம்.

மைமலிகந்தரரிந்தவாறுகூற ... *
மகிழ்ந்துகேட்டிறைஞ்சிச்சீர்காழிவேந்தர் ... *
தம்மடமுற்றரமைச்சுந்தேவியாருந் ... *
தம்மிருக்கைசார்ந்தார்மற்றநாள்த்தென்னன் *
நன்மனையும்நல்லமைச்சும்ஞானவேந்தும் ... *
நலமுறவந்துயர்தென்னர்கோவைநோக்கிச் *
செம்மையறுசமணர்களைகடிந்துசைவச் ... *
செழும்பயிரைவளர்க்கவிதுசெப்புவாரே (சஅசு)

பதம்-சங்கராபரணராகம்-சாப்புதாளம்

பல்லவி.

அருகரெல்லாரையுந் - தானே - வேரோ
டறுக்கவேணும்பெருமானே

அநுபல்லவி.

இருநிலமெங்கெங்கு மிருக்குஞ்சைவர்வைதிக
ரெவருக்குமேகளை ... எடுத்ததுபோலாக
அருக

(க) கனத்தசெந்தமிழ்நா ... டிதுவே - இந்தக்
கசடரால்மயங்கி ... யதுவே

மனத்தால்மறுவில ... ரேனுந்தான்சேர்ந்திட்ட
இனத்தாலிகழப்படு ... வாரல்லவோதுட்ட
அருக

(உ) எழுதாமறைமொழி ... தீது - என்ற
இவரைநம்பிப்பெற்ற ... தேது
கழுதையைக்கட்டிவைத் ... தோமம்வளர்த்ததாலே
பழுதில்லாமற்பெறும்- பயனுண்டோபுவிமேலே
அருக

(௩) இனியிவருடையபாழ் ... முகத்தில் - விழித்
திடலாமோநம ... தகத்தில்
கனிவும்மிகுந்ததேசுங் ... கதியும்பெரும்புகழும்
புனிதமுந்தந்தவி ... பூதிதனையிகழும்
அருக,௩டுடு

—*—

விருத்தம்.

அல்லிநறுங்குழல்மாதுமமைச்சுமிவ்வா ... *
றறையமன்னனும்அனுக்ஞைசெய்தான்குன்ற *
வில்லியநுக்ஞையுங்கண்டம்மூவர்தாமும் ... *
மேதினிவாழ்நாளிதெனமகிழ்ந்தாரப்பால் ... *
புல்லியவெஞ்சுரந்தீர்த்திடாமற்றோற்றுப் ... *
போயமணர்மனைபுகுந்தபோதாங்குள்ள ... *
மெல்லியருமைந்தர்களும்வாயைவாயை ... *
மெல்லுவார்சமணரெதிர்சொல்லுவாரே (சஅஎ)

அபஜயப்பட்டுவந்த சமணர்களைப்பார்த்து அவர்களது
மனைவியர்களேசியது.

பதம் - காம்போதிராகம் - ஆதிதாளம்

பல்லவி.

பாலகன்றனக்கிளைத்தீரே-சமண்பயப்படப்பழிவிளைத்தீரே

அநுபல்லவி.

மேலென்னவாயினி - மீனவன்துய ... ருறு
வெஞ்சுரந்தீர்த்திட - வேமுடியாமற்சிறு
பாலகன்

[ சரணங்கள் ]

(க) சாம்பலணிந்தவர்கள் - சமயமதனிற் சென்று
சர்ப்பமணிந்தவனைத்- தானேதெய்வ மென்று
வேம்பணிந்தவனுங்கள் - விரதநெறியைக்கொன்று
விட்டானேபழித் - திட்டானே ... இன்று
பாலகன்

(௨) வலுத்தசமணரெல்லாம்-மண்குதிரையாய் விட்டீர்
மன்னவன்சலுகைபோய் - மானமழியப்பட்டீர்
சலித்தசைவர்கள்மிக வலுத்திடயிழுத் ... திட்டீர்
தன்தலையிற்கொள்ளி தானேவைத்துக்கொண்டுகெட்டீர்
பாலகன்

(௩) ஓதுமுங்கள்மந்திர தந்திரமெல்லாம் ... அடி
யோடழிந்துதினிமே லுமக்குண்டோவா ... யடி
ஏதுகாணும்நமக் கிந்தஊரிற் ... ... குடி
யிருப்பில்லையிடந்தேடும் இனிமேற்பழைய படி
பாலகன். ௩௱௬.

---

விருத்தம்,

மங்கையர்மைந்தரிந்த வாறுரைத்திடவேகேட்டு ... *
பங்கராஞ்சமணரந்தப் பாலனைவாதில்வென்று ... *
இங்குநாம்வருவோமென்றே யினமுடனெழுந்தாரன்னோர் *
நங்கைமாரதுகண்டுள்ளம் நடுக்கின்றார்தடுக்கின்றாரே (௪௮௮)

திருமெஞ்ஞானசம்பந்தமூர்த்திகளுடனே வாதுசெய்ய
எழுந்தசமணர்களை அவர்களதுமனைவியர்கள் தடுத்தது.

பதம்-எதுகுலகாம்போதிராகம்-ஆதிதாளம்

பல்லவி.

ஐயகோபோகவேண்டாம் - வாரும் - நாங்க
ளறைந்திடக்கேளு-மெல்லோரும்

[ அநுபல்லவி. ]

வெய்யபாலகனைவாது - செய்யஉங்களா - லாகாது
வெற்றிபெறுவிடிலுயிர்வைத்திருக்கவும்-போகாது
ஐயகோ

[ சரணங்கள். ]

(௧) வல்லிபத்தைப்பாம்பைப் பசு மாட்டை - விட்டு
வருந்திமுன்னோர்கள்பட்ட பாட்டை
சொல்லவறியீரோஅந்தக் ... கேட்டை - என்றுந்
தோர்வைதானேயேனிந்தச்சேட்டை
செல்லாவிடத்திற்சினந் தீதல்லவோஉங்களுக்... கந்தத்
தென்னவன்துணையுமில்லை என்னசெய்வீருயிர்சிந்தக்
கொல்லவந்தயானைமுன்னே கல்லெறியவேண்டா மிந்த
கூத்தாடிச்சிலம்பம்படைக் கேற்றிடாதுசொன்னோமுந்த
ஐயகோ

(௨) சாலமோநம்தெய்வ ... வனுவுள்ள - மந்திரந்
தானுமுதவவில்லை ... யேகள்ள
ராலொழிந்ததோவெந்ததோ வெள்ளங் - கள்வந்
தரித்துக்கொண்டுபோச்சுதோவிள்ள
ஞாலமிதிற்புதைந்ததோ காலமிவளவோ......பைய
நாடியிவ்வூரைவிட்டினி ஓடுவதேகாரியம் வெய்ய
ஆலமுண்டவனுடைய பாலன்பகைவேண்டா முய்ய
ஆருயிரிருந்தாலுப்பு மாறியும்பிழைப்போமைய
ஐயகோ

(௩) அங்கமெங்குஞ்சாம்பலே........ஜொலிக்க - சைவ
அடையாளங்கொண்டோரொருமிக்க
இங்குநமதூரெங்குமே ... மொய்க்க - நம
திறைவன்கோவில்களிலு ... மிக்க
வெங்கயமதொன்றுவந்து நங்குருக்கள்மார்க ளேக
விரட்டியசோகத்தையும் விழத்தள்ளவே யநேக
கங்குல்சிறமானநீங்கள் வெங்கழுவிலேறிச் ... சாக
கதறிநாங்களழுகக் - கனவுகண்டோமெய் யாக
ஐயகோ - கூுள,

———○*○———

விருத்தம்.

அரிவையர் துரைக்கரில்லோமென்றூர்நாளே *
யாகிலும்போமெனக்கேளாதொளித்துமாத *
ரெரிசினத்தாற்றேற்பிரென்றேசபிக்க ... *
வேசகுனம்பலதடுக்கவேகிச்சம்பந் *
தரைபடுந்துத்தடுத்துமன்னன்சபைக்கழைத்தார் *
சம்பந்தர்வந்துதென்னன்தாழ்ந்துபோற்ற *
அரியணையிலிருந்தார்கண்டேபொருமை ... *
யாய்ச்சமணரெல்லாமீதறைகுவாரே ... (௪அ௩)

பதம்-பியாகடைராகம்-சாப்புதாளம்.

பல்லவி.

வாதுசெய்தேங்களைவெல்லு - மற்றமாபவித்தையாலென்னசொல்லு

[அநுபல்லவி.]

ஓதுமொழிதேறாத - சிறுவனீயென்ன......கற்றாய்
உற்றகரந்தீர்த்தோமென் - றேகறுவிதழுற்றாய்.

வாது

[ சரணங்கள் ]

(க) மிகழும்நீரில்வண்டோர்வ-தொருக்காலத் ... திருந்து
நேருமெழுத்தாமது-போலநீ ... இருந்து
புகலுஞ்சிறுசொல்லுஞ்சாம் - பலுமந்திரமுமருந்து
போலாச்சுதுசுரம்-போகவுதோ ... பொருந்தும்
வாது

(உ) அரவுந்தோலுமணிந்த-வனைத்தெய்வமென் ... றேச்சு
அரசனைமயக்கிவிட்-டாயதிலென்ன ... வாச்சு
புரவலன்பிணிதீர்த்தோ- மில்லையென்பதோ ரேச்சுப்
பொறுவொருகனவிலோ -பொழுதுவிடிந்துபோச்சு
வாது

(ந) எங்கள்மந்திரமு-முங்கள்மந்திரமுமின் ... னொரு
ஏட்டிலெழுதித்தீயி-லிடுவோம்வெந்ததைக் ... கரு
துங்களேடுவேகா - திருந்தாலுங்கட்கே ... விரு
தோதுசமணஞ்சஇப்- போதுஇங்கே ... பெரு
வாது, நடு௮,

—o—

விருத்தம்.

வாதுசெய்தெங்களைவெல்வாயென்றுரைத்து ... *
மற்றுமுங்களீசனடுமிலையற்றுங்கட் ... *
காதரவாவானிவ்வூர்க்கப்புறம்போ ... *
யமர்ந்திருந்தவாதுசெய்யவருவீரென்று ... *
நீதமாயெங்குமுறைபரனென்றெண்ணு ... *
நெறிச்சமணரழைத்திடநன்றெனவெழுந்து ... *
நாதராஞ்சம்பந்தரடியார்சூழ ... *
நடந்திட்டார்வாதுசெய்யத்தொடர்ந்திட்டாரே (சகூ௰)

திருஞானசம்பந்தமூர்த்திகளுடன் சமணர்கள்
வாதுசெய்து அக்கினியில் ஏடிட்டுத்தோற்றது.
தரு-மத்தியமாவதிராகம்-சாப்புதாளம்

[ கண்ணிகள். ]

(க) வாதுபுரியச்-சமணரெண்ணாயிர
வருமொருமித்து ... நேர்ந்தார் - தென்
மதுரைநகர்க்குக்-கிழக்குத்திசையினில்
வந்தோரிடத்தினிற் ... சேர்ந்தார்
ஓதுபொற்றாள-மெக்காளமொலிக்க
உயர்முத்துப்பல்லக்கின் ... மீது - நல்
லொளிமுத்துப்பந்த-லிலங்கச்சம்பந்தரும்
ஓங்கிவந்தாரேஅப் ... போது

(௨) அன்பரொருபதி- னாறுயிரரும்
அருகர்நடுங்கவே ... மிறைந்தார் - அங்
கரசனுமந்திரியுந்- தென்னவன்தேவியும்
ஆருமகிழ்ந்துவந் ... துறைந்தார்
தன்புதல்வன்வினை- யாடலைக்காணவே
தான்கயற்கண்ணியைக் ... கூடி - உயர்
தற்பரன்மாமது- ரேசருவந்தங்கே
தானிருந்தாரருள் ... நாடி

(௩) மிக்கசமணர்க-ளப்போதங்கோர்குழி
வெட்டியதிற்றழல் ... மூட்டினர் - தாங்கள்
வெற்றிபெறவேநீர் - வற்றுதலையிற்
கற்றமந்திரமெல்லாந் ... தீட்டினர்
அக்கினிமீதிலெண்-ணாயிரரும்வெவ்வே
றாய்வரைந்தேடுகள் ... குவித்தார்- ஏ
டத்தனையும்பிடி- சாம்பலாய்வெந்து
அடங்கக்கண்டேமிகத் தவித்தார்

(௪) சம்பந்தர்பின்புமுன்-சாற்றுந்திருமுறை
தன்னிற்கயிறது ... சாற்றினர் - அதில்
தற்பரைபேரத-கப்படஏடதைத்
தானெரிமேலிட்டுப் ... போற்றினர்
பின்பந்தஏடது-தானடுநீரிற்
பெருநாள்க்கிடந்தது ... போலே - அப்
பெருந்தழல்மீது-பசப்புற்றிருக்கப்
பெருமைகண்டார்புவி ... மேலே

(௫) வெற்றிபெறவே-நினைத்துச்சமணர்
விரும்பியஅவ்விட ... ... மன்று - இந்த
மெய்ஞ்ஞானசம்பந்தர்க்-கேவெற்றிதந்ததால்
மெய்ஞ்ஞானசம்பந்த ... மென்று
எத்திசையோரும்- புகழப்பேராச்சுது
என்றென்றுஞ்சைவரே ... வாழ்ந்தார் - அங்கு
ஈதுகண்டுள்ள-முறங்குஞ்சமணர்க
ளின்னமோர்வாதுக்குச் ... சூழ்ந்தார்
(௬) அக்கினியைக்கட்டி - வெற்றிகொண்டீர்வைகை
ஆற்றில்வருவெள்ள ... மீதில் - உங்கள்

அத்தத்தினேடும் எங்கள்கையினேடும்
அகலவிடுவோமப் ... போதில்
எக்களிப்பாய்வரும் நீரிலெதிர்த்தேறும்
ஏடுடையார்களே ... வென்ருர் - பின்
இளைத்தவர்வென்றவர்க் கேவலாளாவ
திதுவேமெய்யானவா ... தென்ருர் (௯௫௬)

விருத்தம்.

வைகையிலேடிட்டிளைத்தோர் வென்றபேர்க்கு ... *
வழியடிமையாவதென்னச் சமணர்கூற ... *
ஐயரதுகேட்டடிமை கொள்ளோமுங்க ... *
ளைக்கழுவில்வைப்போம்நாம் வென்றுலென்னப் *
பொய்யரதற்கிசைந்துவைகை நீரிலேடு ... *
போட்டிளைத்தார்சம்பந்த மூர்த்திவென்று ... *
மையடைந்தசமணர்களைக் கழுவிலங்கு ... *
மாட்டினர்சைவம்நிலை நாட்டினரே ... (௪௬௧)

சமணர்களைக் கழுவி லேற்றியது.

பதம்- கலியாணிராகம்- ஆதிதாளம்

( பல்லவி )

எண்ணுயிரஞ்சமணரையும்வென்- றிட்டார்கழுவினிலிட்டாரே

[ அநுபல்லவி. ]

கண்ணுயிர ... ... னுடையபழியொழித்த
கடவுளர்மதுரையி ... லடவுடனேசெழித்த
எண்ணு

[ சரணங்கள். ]

(௧) மெத்தவரும்வெள்ளத்தின்- வேகமடக்கியதில்
மிகச்சமணர்களே ... டிட்டார்-அங்
குற்சைப்பந்தருமே- பதிகம்பாடிவரைந்
தேரேடதனையும் ... ... விட்டார்-இந்த
அத்தர்பாலரே- டெதிர்செல்லச்சமணரே
டதுகடற்புகக்கண் ... டிட்டார்-என்றும்
வெற்றிசைவருக்காச்-சென்றுபுவிபுகழ
விண்ணவர்மலர்சொரிந் ... திட்டார்-தென்னர்
கொற்றவனுமன்றிது ... புதுமையெனவேஉள்ளங்
குளிர்ந்திடமதிமந்திரி ... குலச்சிறையுடனுள்ள
மற்றெவர்களுமிகப் ... புகழ்ந்துபுகழ்ந்துதுள்ள
மங்கையர்க்கரசியு ... மனதுமகிட்சிகொள்ள
எண்ணு

(உ) தோற்றதுநாங்களே நீங்கள்வென்றவரெனச்
சொல்லிச்சமணர்நாணி ... நிற்கப்- பணிந்
தேற்றியரனைப்புகழ்ந் தினியாகிலுமுய்யும்
என்றுசம்பந்தரருள் ... வைக்க- என்ன
வார்த்தைசொன்னீரென்று முனிந்துசிலசமணர்
மானமுடனேஒரு ... மிக்கப்- பிற
ரேற்றுமுன்னேதாமே யேறினார்கழுவினி
லேசிலசமணர்கள் ... துக்க- முற
ஆற்றுஞ்சைவர்பிடித் தழுத்தியே செழிக்க
அருகர்மதமொழிந்து தாவென்றே ... பழிக்கப்
பார்த்துச்சிலசமணர் பதுங்கியே சுழிக்கப்
பயந்துசிலர்பரக்கப் பரக்கநின்று ... முழிக்க

எண்ணு

(ங) அங்குசிலசமணர் நீறணிந்திடநீ
றற்றவர்கோமயத்தை ... யணியச்-சிலர்
எங்குங்கோமயமு மற்றணிந்தவர்நெற்றி
யினில்நெற்றியிணைத்தச்சந் ... தணிய- அங்கே
தங்கும்பசுவின்கன்றைத் தோளிலிட்டுச்சில
சமணர்சைவர்களெதிர் ... துணியச்- சிலர்
பங்கமுள்ளஅருகன் - றனைமறந்தோஞ்சிவ
பரனேதெய்வமென்று ... ... பணிய - அன்று
இங்கிப்படிநடந்தோ - ரெல்லாமுயிர்பெற்றார்
எரிநரகினில்விழு -வோர்கழுவினி லுற்றார்
கங்கம்நரிநாய்காக்கை- கழுகுபிடுங்கச்செத்தார்
காசினியினிற்சமணர் - களில்லாமலே யற்றார்

எண்ணு-கூகூ௰.

---

விருத்தம்

கழுவமணருற்றபின் தென்னவன்சீர்காழிக் ... *
கடவுளைப்பார்த்தையாநீர்வைகைநீரி ... *
லெழுதியிட்டவேடெதிர்த்துச்சென்றுதேய ... *
தெங்கேயென்றிடவந்த வேட்டைக்கூட ... *
லழகாருளாலின்றேவருவிப்போமென் ... *
றப்போதேசம்பந்தர்குடபால்நோக்கி ... *
எழில்பெருகிவருவைகைவெள்ளநீரி ... *
லெதிர்த்தேறுமேட்டினைப்பார்ந்தேசென்றாரே,(௪கூஉ)

பதம்-சௌராஷ்டிரராகம்- ஆதிதாளம்.

[ கண்ணிகள். ]

(க) வைகைநீரிலெதிர்த் தேகுமேட்டைமகிழ்
வாகநாடிநாடிச் ... சென்றார்-அங்கே
எய்துங்காதவழி தூரஞ்சென்றபின்னவ்
வேடுதான்மறைய ... நின்றார்

(உ.) நின்றசம்பந்தர்முன் சிறுவரங்குபசு
நிரைகள்மேய்த்துநிற்கக் - கண்டார் - நீங்கள்
துன்றவேபுதுமை யேதுங்கண்டதுண்டோ
சொல்லுவீரெனவாய் ... விண்டார்

(ங) நாங்களொன்றுமறி-யோமென்றார்சிறுவர்
நவிலப்பின்னுமங்கு ... நாடினார்-இங்கு
பாங்கதாம்புதுமை-காணவேணுமெயெப்
படியுமென்றானைப் ... பாடினார்

(ச) பாடல்கேட்டுமகிழ்ந்-தீசரங்குலிங்கப்
படிவங்காட்டியெதிர் ... தோற்றினார்-வில்வக்
காடுமத்தியிற்-சுயம்புலிங்கமுமுன்
கண்டுதான்துதித்துப் போற்றினார்

(ரு) தென்னர்கோனுமிது-கேட்டுமந்திரியுந்
தென்னன்தேவியருஞ் ... சென்றார்-அங்கு
மின்னுலிங்கத்தி-லிருந்துமீசரொரு
வேதியன்போலவே நின்றார்

(சா) ஆயிரம்பிறையைக்-கண்டவேதியர்போ
லாகியன்புசெய்து ... பேசினார் - இங்கு
நீபெந்தன்யிளைய-சுதன்போலுற்றுயென்று
நேசமாகநீறு ... பூசினார்

(எ) நீறுசாற்றியருள் செய்தவேதியரை
நின்றசம்பந்தரும் பணிந்தார் - தமக்
கூறுஞானமன்று-தந்ததந்தையென்று
உன்னிதுசொல்லத் ... துணிந்தார்

(அ) ஐயனேநானிந்த-நதியில்விட்டநல்லே
டதைபெடுத்ததுவும் ... - நீரே -எந்தன்
கையினிற்றருவி ரென்றுகேட்கவரன்
கருணைசெய்துஉரைப் ... பாரே

(௬) இன்னமுஞ்சிலதுநா-ளிருந்துநம்மை
எங்கும்பாடிக்கண்டு ... நீயே - எங்குந்
துன்னுமூடர்மதந்-தொலைத்துப்பின்னமது
ஜோதிவீட்டில்வரு ... வாயே

(௭) என்றுஆசியுரைத்-தேடுமீந்துமின்ன
லெனமறைந்தார்விளை ... யாட்டினார்-அங்கு
அன்றுதென்னவனுக்-கறியஓதிச்சம்பந்
தருமவ்வேடுதனைக் ... காட்டினார் (௩௬௧)

---

விருத்தம்.

ஏடதனைக்காட்டக்கண்டிந்தவண்ணம் ... *
ஈசரருள்பெற்றஉமையேசோதித்த ... *
மூடனானெனதுபிழைபொறுப்பீரென்று ... *
மொழிந்துசம்பந்தரையேபணிந்துதென்னன் *
தோடவிழ்கூவிளவனத்துள்ளெழுந்தஜோதிச் ... *
சுயம்புமூர்த்திக்குயராலயமுமன்பர் ... *
நாடுதிருவேடகமாந்தலமீதென்று ... *
நன்னகருங்காட்டினான்நாட்டினானே ... *

பதம்-அசாவேரிராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி. ]

திருவேடகமாநகரையுண்டாக்கியே-சிறந்தானேகூன்பாண்டியன்

[ அநுபல்லவி ]

அருள்வேதியனென அரன்வந்தேடுதந்த
தாலவ்விடந்திருவே- டகமென்றுரைத்தே...யந்த
திருவே

[ சரணங்கள் ]

(௧) கனகமணிக்கோயிலு ... மதிலுந்திருவுலாவுங்
கனகவீதிகளும் ... வாவியுமலர்க்காவும்
தினமுமாறுமலே ... செய்யும்திருவிழாவும்
சிறக்கச்செய்துமகிழ ... தேவருந்தொழமேவுந்
திருவே

(௨) முன்புமாலுங்கரு ... டனுஞ்சேடனுமேற்றி
மூன்றுயுகந்தனிலு ... முறையேவணங்கத்தோற்றி
இன்பமருளிவில்வ வனத்துள்ளெழுந்தமூர்த்தி
யினைக்கலியுகத்தினி ... லெவருங்காணவேபோற்றி
திருவே

(ஈ) பகர்வறுசமணரைக் ... கூடியேமுன்வருந்து
பாவந்தீரவேசம் ... பந்தரருள்பொருந்து
மகிழவுடனேடக ... நாதமரெழில்திருந்து
மலரடிக்காளாயோர் ... வருஷமங்கேயிருந்து

திருவே, ஈகூஉ.

---

விருத்தம்.

ஏடகமாநகரிவ்வாறிலங்கச்செய்தாங் ... *
கிருந்தோராண்டகன்றுசம்பந்தரோடுங் ... *
கூடலில்வந்துறைந்தான்தென்னவன்சம்பந்தர் ... *
குலவியதென்னடெங்குஞ்சைவமார்க்கம் ... *
நீடியதுவழுவாமற்செய்துசின்னள் ... *
நிலைத்தங்கேயிருந்துபின்சீர்காழிக்கேக ... *
நாடியெழுந்தேகிமதுரேசர்முன்பு ... *
நண்ணினர்பணிந்துதிபண்ணினரே ... (சகூச)

திருமெஞ்ஞானசம்பந்தமூர்த்திகள் ஸோமசுந்தரேசுவரமூர்த்தியை
தோத்திரஞ்செய்து விடைபெற்றுக்கொண்டது.

பதம்-சங்கராபரணராகம்-ஆதிதாளம்,

[ பல்லவி. ]

சம்போதுரிதவிநாசா-சிவ-சரணஞ்சரணமதுரேசா

[ அநுபல்லவி ]

அம்போதகவுரி - யணிந்ததயா ... பரனே
அரனேசங் கரனேயங் - தரனெசுந்தரனே
சம்போ

[ சரணங்கள். ]

(க) நிமலநிட்களவனு ... கூலா - அர
நிரஞ்சனநிர்க்குண ... லோலா
கமலகரசரண ... கருணலயகால
காலாதிரிசூலா-ஜெய-கோலாகலசிலா
சம்போ

(உ) சமன்மதமொழித்த சர்வேசா - சைவ
சமயப்பிரிய சுயம்பிரகாசா
இமயவர்முனிவர்க - ளெவரும்புகழும்நேசா
ஈசா - கிரிவாசா - புரநாசா - உல்லாசா
சம்போ

(௧) அங்கயற்கண்ணிச ... மேதா - அடி
யவர்க்கருளும்வரப்பிரசாதா
பங்கயன்மாலிந்திரன் - பதஞ்சலிபணிநீத
பாதா - சாமகீதா - சதுர்வேதா - கமநாதா

சம்போ, ௧௬௧

---

விருத்தம்.

மதுரேசர்தம்மையிந்தவண்ணம்போற்றி ... *
வரம்பெற்றுவிடைகொண்டெழுந்தேதென்ன ... *
டதிலுளநற்றலமெல்லாம்பணிந்துபாடி ... *
யருள்பெற்றுமங்கையர்க்கரசியோடு ... *
சதுரனுக்குலச்சிறையுந்தென்னர்வேந்துந் ... *
தாழ்ந்துவிடைபெறஅனுப்பியேசம்பந்தர் ... *
புதுமையுளசோழநாடுற்றுயாரும் ... *
புகழ்ச்சீர்காழிநகர்பொருந்தினரே ... (௪௬௫)

---

விருத்தம்.

கரவுறுசமணர்தம்மைக்-கழுவினிலிட்டவிச்சங் ... *
கரருடலீலைகேட்போர் -கதியுறுவார்கள்வன்னி ... *
மரமொடுகிணறிலிங்கம்-வருமறுபத்துநான்காந் ... *
திருவிளையாடல்தன்னைத் தெரிந்திடஉரைசெய்வேனே (௪௬௬)

———(:)(*) :)———

சமணரைக்கழுவிலேற்றியதிருவிளையாடல்

முற்றிற்று

—∝O*O∝—

ஆக திருவிருத்தம்-௰௪-பதம்-௰௨. ஆக ௨௬.

ஆக பாயிரம்உள்படத்திருவிளையாடல் - ௬௧ - க்கு - வெண்பா - ௫

கலித்துறை-௪-சொச்சகம்-௧-விருத்தம்-௪௮௪. பதம்-௧௬௧.

---

ஆக கவிதை - ௮௫௧.

அறுபத்துநான்காவது

# வன்னியுங்கிணறு மிலிங்கமுமழைத்த திருவிளையாடல்.

விருத்தம்.

சமணர்களைக்கழுவிலிட்ட பின்னுள்க்கூடல் ... *
தன்னிலொருவணிகனவன் றனக்குமாமன் ... *
அமருகடற்கரையிலொரு பதியிலுள்ளான் ... *
அளகேசன்போல்நிதிபெற் றவன்சேயின்றி ... *
இமயவரைமகள்பாகர் தம்மைநோக்கி ... *
யேமனைவியொடு பலநாட்செய்தவத்தால் ... *
கமலையெனஒருமகளைப் பெற்றுத்துன்பங் ... *
கழித்திட்டான்வளர்த்துமனஞ் செழித்திட்டானே சகுன

பதம்-கேதாரகௌளராகம்-சாப்புதாளம்

[ கண்ணிகள். ]

(க) மகிழ்ந்துமகளைவளர்த் ... திட்டான் - சிந்தை
வருந்துதுயரமெல்லாம் ... விட்டான்
மிகுந்தபணிவகைகள் ... பூட்டினான் - இந்த
மேதினிபுகழச்சீ ... ராட்டினான்

(உ) நங்கையிவளுக்குநா ... யகனே - தா
னவிலுஞ்சகோதரி மகனே
அங்கவனுக்கேபாரி ... யென்றான் - ஆரும்
அறியஒதிவளர்க் கின்றான்

(ங) வளர்ந்துயெவ்வனமுற்ற ... போது - அந்த
வணிகன்விதியாற்புவி ... மீது
தளர்ந்துதன்னுவியைத் துறக்க - அவன்
தன்மனைவியுங்கூட ... இறக்க

(ச) ஈமவிதிகளெல்லாந் ... தீர்த்து - அங்
கிருந்தயினத்தாரெல்லாம் ... பார்த்து
மாமருகனுக்கோலை விட்டார் - மாமன்
வகுத்திட்டதுமறிக்கை ... யிட்டார்

(ரு) மருகன்கேட்டுக்கண்ணீர் ... சிந்தினன் - வாடி
வாடியழுதுள்ளம்வ ருந்தினன்
அருகுள்ளோரமத்த ... மாறினன் - மாம
னகத்துக்கேகஉள்ளந் ... தேறினன்
(சு) பண்டுமணந்ததொரு ... மின்னாள் - தன்னை
பரிவுடன்மனையில்வைத் தன்னாள்
கொண்டதுயரமொடு ... போந்தான் - சென்று
கூறுமாமன்பதி ... சேர்ந்தான்
(எ) மாமன்மனையதனிற் ... போனன் - மாமன்
மகளைக்கண்டுதுய ரானன்
போமுன்னங்குள்ளவர் ... தேற்றினர் - பல
புகன்றுதுயரமதை ... மாற்றினர்
(அ) சிலபகலங்கிருந் ... துற்றான் - மாமன்
தேடியநிதியெல்லாம் ... பெற்றான்
மலர்முகமாமன்ம ... களையே - உயர்
மதுரையிலழைத்தேகிக் கிளையே
(கூ) அரியமாமணஞ்செய்வே னென்றான் - உற்றார்
அனுப்பவேயழைத்துச் ... சென்றான்
உறையுமாமனூரை ... நீக்கினன் - நடந்
துயர்மதுரைக்கிவர நோக்கினன் (ரு-கூச)

—*—

விருத்தம்

மாமன்மகளோடுவருகையி லோரூரில் ... *
வரனுறைகோவிலு மதிலோர்கிணறும்வன்னிப் *
பூமரமுங்கண்டங்கு தங்கிக்கூவற் ... *
புனலாடிவன்னி மாடமுதமைத்துத் ... *
தாமருந்திவிழிதுயிலு மிரவில்நாகந் ... *
தான்தீண்டிவணிகமக னிறக்கக்கண்டு ... *
காமரதிளனும்வணிக மடவாள்விம்மிக் ... *
கத்துவாள்வாய்திறந் தரற்றுவாளே ... (சகூஅ)

பதம்-நீலாம்புரிராகம்-ஆதிதாளம்

[ பல்லவி ]

இந்தவிதிக்குநா ... னென்செய்வேன் - இனி
யெப்படியிருந்துயி ... ருப்வேன்

[ அநுபல்லவி. ]

தந்தையுந்தாயுமி ... ... றந்ததுயரைத்தானே
தணிக்கவுந்தனிழலே - சார்பாமென்றிருந்தேனே
இந்த

[ சரணங்கள். ]

(க) ஆவிபோலவந்த - உன்னையுமென்னைப்பெற்ற
அன்னைதந்தயுமிழந்து ... விட்டேனே - கொடும்
பாவியாகிச்சிற - கிரண்டும்பறிகொடுத்த
பறவையாகிமெலிந் ... திட்டேனே
கூவிக்கூவிமனங் - குறைந்திடக்கெடுத் ... தாயே
குன்றியிணைபிரிந்தஅன்றில்போல் - விடுத்தாயே
ஆவலாய்வந்திந்த - அனியாயங்தொடுத் ... தாயே
ஐயோயெனையனுதை - யாய்விட்டுப்படுத் தாயே
இந்த

(உ) மாமன்மாமியையுந் - தேடிச்சென்ருயோஅவர்
வாவென்றணைத்தழுவிக் ... கொண்டாரோ-அங்கே
போமுன்னுடனெனையும் - அழையாமல்வஞ்சித்துப்
போனவுனைமகிழ்ந்து ... கண்டாரோ
ஆமினத்தவரையெல்லாரையு ... மறந்திட்டாய்
அடுத்தயென்னையுமிந்த - யிடத்தினிற்கைவிட்டாய்
வேமனல்தனைஎந்தன் ... அடிவயிற்றினிலிட்டாய்
வெங்கண்ணரவினுக்கோ-விருந்தாய்வந்தகப்பட்டாய்
இந்த

(ங) மாகமின்னர்தம்மை - மருவிடவோஅளகை
மன்னன்பதிமின்னரைக் ... கூடவோ - பண
நாகமின்னுரைத்தேடி-யணைந்திடவோசென்றிட்டாய்
நானிங்கழுதழுது ... வாடவோ
மோகமானஎந்தன் ... தந்தையுடன்தாய்சாக
முறையாய்அவருடன் ... முடிந்துநீயும்போக
ஏகமாகிப்பிணந் ... ... தின்னிப்பூச்சிபோலாக
இருப்பேனேஇதோவரு... வேனுனக்குமுன்பாக
இந்த - ஙசுரு.

---

விருத்தம்.

மடக்கொடியிவ்விதமவ்வூருறங்காதேங்க ... ... *
வருந்துமப்போதப்பதியிலன்று இந்த ... ... *

லிங்கமும் அழைத்தது.

யிடத்தருகோர்மடத்தினிற்சம்பந்தமூர்த்தி ... *
யெழுந்தருளியிருந்தாரங்கிதுகேட்டிந்த ... ... *
விடத்துயிர்மாண்டவனைவந்துபார்த்தார்அன்னோன் ... *
விழிதுயின்றாப்போலெழுந்தான்புகழ்ந்தார்யாரும் ... *
திடத்துடனேவணிகர்மகன்பணிந்துநிற்கத் ... ... *
திருஞானசம்பந்தர்செப்புவாரே ... (௪௬௬)

பதம் - மத்தியமாவதிராகம் - சாப்புதாளம்.

[ பல்லவி. ]

வணிகாநீயிங்கேதானே - இந்த - மாதைமணஞ்செய்சொன்னேனே

[ அநுபல்லவி. ]

அணிகொள்ளவாழ்வொடு ... விருப்பாய் - என்றும்
அன்புபொருந்தியே-இன்பமுற்றிருப்பாய்
வணிகா

[ சரணங்கள். ]

(௧) மதுரைநகர்தனிற் ... ... சென்று - அங்கே
மணஞ்செய்குவேனென்று ... யன்று - செய்யும்
அதுவரையினிற்றானே ... துன்று - துய
ரல்லாற்சுகமுண்டோசொல்லிவள்க் -கின்று
வணிகா

(௨) மாமன்வீட்டினிலப் ... ... போது - மண
வாமல்நீவந்ததே ... ... தீது - இன்று
ஓமென்றுகேளென்சொல்... ... லீது - அட
ஊர்க்கோபால்வார்த்துண்பதுடம்புக்கோஒது
வணிகா

(௩) ஆமுந்தன்வங்கிஷத் ... ... தோரே - ஈ
தறியவேணுமென்றாய் ... நேரே - சொன்ன
மாமனுரையையறி ... ... வாரே - இந்த
வன்னிகிணறுலிங்கம்சாட்சியாம் ... பாரே
வணிகா - ௩௬௬.

---

விருத்தம்.

கயிலைஅரனருள்சேர்சம்பந்தரீது ... ... *
கனிந்துரைக்கவணிகனங்குபணிந்துயெந்தன் *
உயிரருள்தெய்வமுங்குருவுங்கிளையும்நீரே ... *
உரைத்தபடிநடப்பேனென்றுரைப்பியந்த ... *

மயிலையன்னாள்தனில் யிலிங்கங்கிணறுவன்னி ... *
மரமுமுற்றஅவ்விடத்தே மணங்கொண்டாடி *
எயில்வளையுமதுரையில்வந் திவையெல்லாந்தன் *
இனமறியமனையில்மகிழ் திருந்திட்டானே (௬௭)

தரு-முகரஞ்சனிராகம்-சாப்புதாளம்.

[ கண்ணிகள் ]

(௧) வணிகன்தன்மனையில் ... மகிழ்ந்துமென்மேலே
மாதரிருவருடன் ... வடிவேலன்போலே
(௨) அணிகொள்செல்வமிகுந் ... தரசர்கொண்டாட
அளகேசனெனவே ... யெவர்களுநாட
(௩) வாழும்நாளில்மூத்த ... மனைவியுமிளைய
மனைவியும்மிகுந்த ... மனதன்புவிளைய
(௪) தாழ்வில்லாதசெல்வ ... மைந்தரைப்பெற்றார்
தழைத்துமைந்தர்களுந் தான்வளர்ந்துற்றார் (௩௬௭)



விருத்தம்.

வளருமோர்மூத்தாள்மைந்தர் வன்கணாிளையாள்சேயைத் ... *
தளரவேயடித்தாரோர்நாள்த் தாயெனுமிளையாள்கண்டு ... *
விளமொடுமூத்தாள்சேயை வெறுப்பொடுவைதாள்வைத ... *
இளையவள்தன்னைமூத்தாளெதிர்சினந்தேசுவாளே ... (௬௭௧)

பதம்-மோகனராகம்-ஆதிதாளம்.

[ பல்லவி, ]

எந்தஊர்நீ. ... யெந்தசாதி - அடி
எவர்மகளெவர்க்குப்பெண் சாதி

[ அநுபல்லவி ]

வந்தமாடுவள ... ர்ந்தபுல்லைத்தின்குதென்று
மனம்பொறுக்கப்பொறுக்க ... மலிகிருயோநன்று
எந்த

[ சரணங்கள். ]

(௧), என்கணவனுக்காசை கொண்டு - தொடர்ந்
திட்டவள்நீவைப்புப் பெண்டு
உன்களவறியேனோ ... ஊதப்பறந்துஓடும்
உதட்டுத்துரும்படிநீஉனக்குவாயோயென்னோடும்
எந்த
(௨) அக்கினிசாட்சியா ... யார்கொண்டார் - எந்தன்
அதிபன்மணஞ்செய்த - தார்கண்டார்

லிங்கமும் அழைத்தது.

வெக்கமில்லையோயிந்த ... வீறும்சினமும்ஏது
வேசையானஉனக்கு ரோசமென்னடிஓது
எந்த

(கூ) வன்னிகிணறிலிங்கந் ... தானே - உன்னை
மணந்ததறியுமென்றாய் ... மானே
பன்னும்இம்மொழிசொல்லி-வளர்க்குறாயே - வயிறு
பார்த்தவர்நகையாரோ பஞ்சமோசாண்கயிறு
எந்த,கூகூஅ,

---*---

விருத்தம்.

கொடியவளிவ்வாறேசிப்பின்னுமெந்தன் ... *
கொழுநனைமணந்ததற்குச்சாட்சியுன்சொற் *
படிகிணறும்வன்னியும்லிங்கமுமேயாகிற் ... *
பரிந்ததிங்கேவரில்மெய்தான்பகர்ந்ததென்றாள் *
வடிவஇளையாள்கேட்டுவெட்கிமெத்த ... *
வருந்தியன்றாணுறக்கமற்றுமறுநாட்கங்கைச் *
சடிலர்மதுரேசரெதிர்சென்றுபோற்றிச் ... *
சாற்றுவாளிருகண்ணீர்தூற்றுவாளே, (ருாஉ)

செட்டிப்பெண்ஸோமசுந்தரேசுவரமூர்த்தியைதோத்திரம்செய்து பிரார்த்தித்தது,

பதம்-மணிரங்குராகம்-சாப்புதாளம்,

பல்லவி.

மதுராபுரிநாதா

[ அநுபல்லவி. ]

சதுர்மறைபுகல்கீதா - கதிதருமலர்ப்பாதா
மதுரா

[ சரணங்கள். ]

(க) ஏழையடியாளைக்காரும் இந்தவேளைநீர்கண்-பாரும்
தாழுமென்கவலை தீரும் சார்பெனக்கிங்கில்லை-யாரும்
மாழைமலைவிற்பரனே மால்புகழும்தற்பரனே
மதுரா

(உ.) என்கணவன்கைப்பிடித்த - தில்லையென்றுவாயடித்த
வன்கணாள்வசைபடித்த - மானத்தால்மனந்துடித்த
என்கவலைதீர்க்கவேணும் - இதுஉமக்கல்லோதோணும்
மதுரா

(௩) அன்றுவன்னிகிணை றுட்சி- யானதேவரீரே சாட்சி
இன்றுமிங்கேவந்தத்தாட்சி இதுசெய்குவீர்கண் காட்சி
மன்றில்முன்வணிகனேரே-மாமன்போல்வந்தாண்டவரே

மதுரா - ௩௬௧.

——○○——

விருத்தம்

கணவனன்றுமணந்ததுகண்டிருந்தாப்போலக் ... *
கடவுளும்வன்னியுங்கிணறுமிங்குவந்தென் ... *
குணமிகழ்ந்தவிவள்நகையைமாற்றுவிட்டாற் ... *
கோவேஇங்குயிர்விடுவேனென்றுநின்றாள் ... *
இணையில்மதுரேசரருளாலங்கீச ... *
ரிருக்கும்விமானத்திற்குவடகீழ்பாலிற் ... *
கிணறுமிலிங்கமும்வன்னிமரமுங்கண்டாள் ... *
கிளைத்திட்டாள்கற்பையன்றுவிளைத்திட்டாளே (௫௱௩)

பதம்- பைரவிராகம்- அடதாளசாப்பு.

[ கண்ணிகள். ]

(௧) மங்கையிளையா- ளிலிங்கமுங்கூவதும்
வன்னிமரமுங்கண் ... டாளே- கற்பு
மின்னிமகிழ்வுகொண் ... டாளே- இரு
செங்கைகுவித்துப்- பரனைத்துதித்துயர்
தேசுமிகுந்துடல் ... தழைத்தாள்- தன்னை
யேசினவளையங் ... கழைத்தாள்

(௨) ஈதுகிணறீது- லிங்கமிதுவன்னி
யெந்தனுடசாட்சி ... பாரென்றாள் - இனி
உந்தனிடசினந் ... தீரென்றாள் - அந்த
மாதிதுகண்டு - பகைநகையற்று
மலைவுடனேஉட ... லுட்கினாள்- தன்
தலைகவிழ்ந்தேமுகம் ... வெட்கினாள்

(௩) அன்றுமணஞ்செய்- தலத்திலிருந்தநிய
கற்புதமாகவந் ... ததுவே- இவள்
கற்பின்மகிமையா ... மிதுவே-நவம்

லிங்கமும் அழைத்தது.

என்றிவளன்பையு-மீசரருளையும்
எல்லாருங்கண்டிசை புகழ்ந்தார் - மூத்தாள்
பொல்லாதவளென்றுஇகழ்ந்தார்

(௪) குற்றமிவளுக்- குரைத்தகிளத்தியைக்
கொண்டவனும்வையத்தொடுத்தான் - எந்தன்
பெண்டல்லநீயென்று...விடுத்தான் - அங்கு
மற்றிளையாளுமென்- கற்பிவளால்வெளி
வந்ததெனச்சொல்லித்தேற்றினாள் - பின்சி
னந்தகணவனைப் ... போற்றினாள்

(௫) அன்னையில்லேனுக்கு-அன்னையிவளூற
வாடிஉடலுயிர்...போலே- என்றுங்
கூடியிருப்பேனன்பாலே- என்று
மின்னிளையாள் சொல்ல- முன்னவள்தன்னை
விவேகக்கணவனுஞ்சேர்த்தான்- அதி
யோகத்துடன்புக ழேர்த்தான்—(௩௭௰)

---

விருத்தம்.

அருந்ததிக்கு நிகராகி ஐவாய்நாகம் ... *
அருந்துமிரை யுடலொன்றி லணுகிஇன்பம் ... *
பொருந்துதல்போ லுடலிரண்டோ ருயிராய்மூத்த... *
பூவையொடுபொருந்தியே கணவனுக்குத் ... *
திருந்துமுயராயுள்மைந்த ரறிவுவாய்மை ... *
செம்பொனறந் தவங்கீர்த்தி தினமுமோங்க ... *
இருந்திளையாள் செங்கமலச் செல்வியென்ன ... *
எப்புவியுமகிழ்ந்து துதித்திட வாழ்ந்தானே (௫௱௪)

---

விருத்தம்.

இன்னமதுரேசர்விளை யாட்டையார்கண் ... *
டியம்பவல்லாரென்று குருபரனெனக்குச் ... *
சொன்னபடிலீலை யறுபத்துநாலுஞ் ... *
சொன்னேனென் றுயர் மலையமுனிகைகூப்பிப் ,,, *

பன்னிருகை வேளையுமவ் வேளன்பாகப் ... *
பகர்மொழியு முள்ளடக்கி மதுரைமூதூர் ... *
மன்னுவிமலரைக் கயற்கண்ணாளோடெண்ணி ... *
மலமறுமாநந்த பரவசமுற்றாரே (௫௱௫)

---

விருத்தம்.

தருவன்னிகிணறுலிங்கந் - தானழைத்திட்டலீலை ... ... *
பரியந்தமாகக்கேட்போர் - பரனருள்பெற்றுவாழ்வார் ... *
அரணுயர்மதுரைதன்னில் - அகஸ்தியர்முதலோர்வந்து ... *
திரிவிழிப்பரனையேஅர்ச் - சித்தவாறோதுவேனே ...(௫௱௬)

வன்னியுங்கிணறு மிலிங்கமுமழைத்த திருவிளையாடல்

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம், ௰, பதம் ௭, ஆ ௰௭,

---

ஆ திருவாலவாய்காண்டம்-௧-க்கு-திருவிளையாடல், ௰௬,

ஆ காண்டம்-௩-க்கு பாயிரம்உள்படத் திருவிளையாடல் ௬௪க்கு,

வெண்பா-௫ கொச்சகம்௩- கலித்துறை ௪,

விருத்தம் ௪௯௰௪ ப்தம்-௩௭௰.

---

ஆ கவிதை அ௱௭௬.





சிவமயம்.

# அர்ச்சனைப்படலம்,



விருத்தம்.

மதுரையரன்விளையாட்டெட்டெட்டுங்கேட்டு ... *
வதிஷ்டமுனிமுதலானோர்மகிழ்ந்துபோற்றி ... *
முதுமைபெறுமகஸ்தியமாமுனியைலோபா ... *
முத்திரையாளுடனேயாசனத்தில்வைத்து ... *
சதுமறைகளோதிச்சந்தனங்கஸ்தூரி ... *
சாற்றிநால்வகைமலருந்தானர்ச்சித்து ... *
விதுவதனமலரஉபசரித்துநோக்கி ... *
வேண்டுவார்பவவேலைதாண்டுவாரே ... (௩௱எ)

பதம் - பந்துவராளிராகம் - ஆதிதாளம்.

[ பல்லவி. ]

அகஸ்தியமாமுனியேநீரே- இன்னம்- அருளுட-னிதுசெய்குவீரே

[ அநுபல்லவி. ]

செகத்துள்ளோர்தொழுமேவும்-தென்பொதியையுலாவும்

அகஸ்திய

[ சரணங்கள். ]

(க) வரையைவில்லாய்வளைத்த-மகிமைஅரன் ... விளைத்த
அருமைக்கேள்வியாற்காது-அமைந்தபேறுற்றோ... மோது

அகஸ்திய

(உ) திடமாமிக்கேள்வியாலே-செவிகள்மகிழ்ந்தாப் ... போலே
கடவுள்வடிவைக்கண்டே-கண்களிக்கஆசை...கொண்டேம்

அகஸ்திய

(௩) ஓதியமதுரைக்கின்றே-உற்றுநாமெல்லோருஞ் சென்றே
ஜோதிமதிநதிபூணுஞ்-சுந்தரரைத்தொழ ... வேணும்

அகஸ்திய-௩௱எக.

---

விருத்தம்

இச்சையாமுனிவரீது-இயம்பவேமகிழ்ந்துகேட்டுப் ... *
பச்சையால்காணுநானைப்-பணிந்திடவினைந்தேன்யானும் ... *

நிச்சயமிதுபொருந்த - நிகழ்த்தினீர்நீங்களென்று ... *
செச்சையம்புயத்தான்சீடத்-திடமுனிசெப்புவாரே (௫௱அ)

பதம்-ஆரபிராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

இச்சையானமுனிவோரே-யெந்த-னிருசெவிகுளிரச்சொன்னீரே

அநுபல்லவி.

அச்சுதன்சோதரி -யான ... ... நீலக்குழ
லங்கயற்கண்ணாள்பங் - காளரைக்கண்டுதொழ
இச்சை

[ சரணங்கள் ]

(க) பண்ணார்மறைமுடி-தண்ணார்மொழி விண்டு
பரவியின்னமறியாப்-பரனையன்பு கொண்டு
எண்ணளவில்லா-வெந்தக்கலையாற் கண்டு
மென்னமனக்கண்ணாற்-காணற்கின்பமே துண்டு
இச்சை

(உ) சதிருறுமாறுறு-தத்துவங்களும் ... நாணத்
தள்ளிநின்றஅருந்-தவரேஇன்பம் பூணக்
கதிதருவிமலர்தங்-கதைகளெல்லாந் தோணக்
காதிற்கேட்டபடியே-கண்களாலுங் காண
இச்சை

(ங) தானினைத்ததும்பால்பண்டி-தனுமேபா லென்று
சாற்றியதுபோல்மது-ரேசரைத்தொழ வின்று
நானினைத்தபடியே-நீருஞ்சொன்னீர் சென்று
நாடிப்பணிந்துபாதஞ்-சூடிவருவோம் ... நன்று
இச்சை. ௩௭உ.

---

விருத்தம்.

மலயமுனிஇவையுரைத்துமுனிவரோடு ... *
மங்கலஓரைத்தினத்திற்கங்கையாடி ... *
உலகநாதரைப்பணிந்துசங்கற்பஞ்செய் ... *
துடனனுக்ஞைபெற்றுமதுரேசர்பாத ... *
மலரைஎண்ணிஐந்தெழுத்தோதிக்கைகூப்பி ... *
மாதவச்சைவத்தெய்வத்தேர்மேலூர்ந்து ... *
புலனுறநற்றலநிலைகளெல்லாங்காட்டிப் ... *
புகலுவார்எழில்மதுரைக்ககலுவாரே. (௫௱கூ)

அகஸ்தியமகாரிஷி அனேகரிஷீசுவராளுடன்காசிட்சேத்திரத்தி
லிருந்துஹாலாஸ்யட்சேத்திரத்துக்குவரும்மார்க்கத்திலுள்ள
சிவஸ்தலங்களெல்லாங்காட்டியது.

பதம்-அசாவேரிராகம்-சாப்புதாளம்.

பாரும்பாரும்-முனிவரே-வாரும்வாரும்

[ அநுபல்லவி. ]

நீருயர்நதிகளும் - வனங்களுமலைகளும்
நீதமாமுனிவர் - மாதவநிலை களும்
பாரும்

[சரணங்கள்]

(க) சீறும்ராவணனைச்-செயிக்கராமன்பூசை
செய்துபணிந்துமிக-மெய்திகழ்தல மிது
ஏறிப்புவியில்விழுந்-திறந்தோர்க்குமறுமைமுன்
னெண்ணியவரந்தரு-புண்ணியமலை யது
பாரும்

(உ) சுரபிச்செவியிலிங்கச்-சுடருருவானிரவிற்
சோதித்தேர்நடத்தும்-ஆதிதன்னூ ரிது
மருவும்விருச்சிகக்கார்த்-திகையில்மணித்தேரூர்ந்து
மன்றல்நடக்கும்வெள்ளிக்-குன்றவன்பதியது
பாரும்

(ந) வேடனெச்சிலுண்ட-விமலன்றன்கிரியிது
வெடித்தகாளிதோற்க-நடித்திட்டநக ரது
ஈடில்மாமிழற்-கற்புடையாளொருத்திமுன்
இன்பமெய்திடத்தவஞ்-செய்திடுதல மிது
பாரும்

(ச) மாயனுலகங்காக்கும்-வலிபெறவிமலரை
வருந்திப்பூசித்தன்பு-பொருந்தியதல மது
ஆயும்விமலர்சந்தை-கூட்டிமுனிவர்களுக்
கருமறைப்பொருள்சொன்ன பெருமைசேர்தலமிது
பாரும்

(ரு) அடிமுடிதேடிய-விலங்கும்புள்ளுங்காண
தண்டம்பிளந்துசோதி-நின்றதன்னிலை யது
வடிவுகழுகாயிரு-வர்கள்தவம்புரிந்திடு
மலையிதுவூழிகள்-பலகண்டசிலை ... யது
பாரும்

(௬) அந்தகாசுரனை-அழித்திட்டஇடமிது
அன்றுமுப்புரத்தோரை-வென்றவர்மிலை ... யது
வந்தரன்நடனம்- புரிந்தவம்பலமிது
மற்றிதிற்பிறந்தோர்க்கு-முத்திதருமூ ... ரது
பாரும்

(எ) வேதநான்கும்பூசித்-தேதமறத்துதித்து
வேண்டிநின்றமலைக்-காண்டிபன்பதி ... யிது
ஓதும்பிரளயத்தில்-மாதவனயன்தேவர்
உய்யத்தோணியேற்றுஞ்-செய்யவன்புர ... மது
பாரும்

(அ) பண்டுசடாயுசம்-பாதிபூசைசெய்து
பரவவிருநோய்தீர்த்த-வரனுறைபதி ... யிது
வண்டணிகுழலுமை-அண்டர்நாயகனை
மயிலதாகிப்பூசை-செயுமுயர்ஸ்தல ... மது
பாரும்

(௯) கூறுந்துலாமதியில்-மீறும்பொன்னியில்மூன்று
கோடிமுனிவர்கள்வந் - தாடும்நற்பதி ... யது
தேறுமறக்கடவு - ளூறுமன்புபெருகிச்
சிவனடிபூசித்துத் - தவமுற்றபதி ... யிது
பாரும்

(௰) எதிர்த்ததாருகனை - விற்றகொம்புபெற
ஈரிருகொம்பானை - யேற்றியதல ... மது
கதிக்குந்தாடகைமானங் - கார்க்கத்தணிந்திழுக்கும்
கலையரன்புக்கெழுந்த - கடவுளார்பதி ... யிது
பாரும்

(௰௧) கரிமுகத்தசுரனைக்-காய்ந்துவெல்வதற்குக்
கரிமுகன்பூசித்த-திருமலன்புர ... மது
பரனையர்ச்சித்தாவின் - பாலபிஷேகித்து
பரன்முடிமாலைசூடு - முருகன்தன்புர ... மிது
பாரும்

(௰௨) காலனையுதைத்தொரு-பாலனையாண்டந
கரமிதுகரியுரிபோர்த்தவர்புர ... மது
சாலமறையுணர்ந்த-சலசமலர்க்கடவுள்
தருபரிகலங்கொண்ட - தற்பரன்பதி ... யிது
பாரும்

(௰௩) அங்கசனையெரித்த-செங்கண்ணர்நகரிது
அரியதக்கனுக்காட்டுச்-சிரமீந்தவரூ ... ரது
செங்கட்சலந்தரனைச் சிவனடிப்பெருவிரல்
கீட்டுசக்கரமுண்ண-வூட்டியபுர ... மிது
பாரும்

(௰௪) வணிகமாதைத்திரு-மணஞ்செய்யச்சாட்சியாய்
வன்னிகிணறிலிங்க-முன்னுள்ளஇட ... மது
திணிகொள்பிரமகத்தி-நீக்குமுன்வரகுணத்
தென்னவன்பூசித்த-முன்னவன்புர ... மிது
பாரும்

(௰௫) மாமகந்தோறும்வந்தே-மகிழ்வுடனூரும்
வருந்தியேபுனலாடும் பெருந்திருநக ... ரது
சாமகானருக்கு-மாமறைக்குருமொழி
தாமுரைத்தயென்குரு-சாமிமாமலை ... யிது
பாரும்

(௰௬) அண்ணலடியின்மாயன்-கண்ணைப்பிடுங்கியன்று
அர்ச்சித்துச்சக்கரம்-பெற்றிட்டதல ... மிது
வண்ணநந்திகேசன்-புண்ணியவுடல்பெற
வருந்திப்பூசைசெய்து-பொருந்தியநக ... ரது
பாரும்

(௰எ) சிலந்தியுடனேயானை-நலந்திகழுமுமையாள்
செங்கண்மாலும்பூசித்த-சங்கரநக ... ரிது
பிலம்புகுந்திரிசிரன்-பலம்பெறுமலையது
பெரும்பாவமகற்றவே-வருங்காவேரியா ... றிது
பாரும். ௩௭௩.

—*—

விருத்தம்.

இருடியர்க்குத்தலமிதெல்லாங்காட்டிச்சோணா ... *
டிதுசுவர்க்கம்வழுக்கிமண்மேல்விழுந்ததென்னப் *
பெருமைபெறந்தோன்றுததோபாரும்வைகைப் *
பிரளயமாநதிசிறந்ததமிழ்நாடென்ற ... *
கரகமுனியொடுமுனிவரெல்லாஞ்சென்று ... *
கன்னிநாட்டின்வளமுங்கைலைக்கொப்பாம் ... *
அரியசிவஸ்தலநலமுங்கண்டுகண்டன் ... *
பாகுவார்பணிந்துபணிந்தேகுவாரே (௩௭௰)

அகஸ்தியமகாரிஷி அனேகரிஷீசுவரர்களுடனேபாண்டியதேசத்திலுள்
ளசிவஸ்தலங்களை அர்ச்சனைசெய்து தெரிசித்துக்கொண்டுவந்தது

பதம்-தோடிராகம்-ஆதிதாளம்

[ பல்லவி ]

கண்டுதெரிசித்துநின்றாரே - மெத்தக்
கற்றமுனிவர்கள்அர்ச்சித்துச்சென்றாரே

அநுபல்லவி

அண்டர்பணிகொடுங் - குன்றுதளிபுத்தூரும்
அண்ணல்வளர்பூ - வண்ணநகர்ச் சீரும்
கண்டு

[ சரணங்கள். ]

(க) கானையுந்திருவா டானையுமிந்தக்
காசினிசொல்புன - வாசல் ... தனையுஞ்
சேனைமிகும்லெங்கைக் கோனைக்கொன்றபழி
தீர்ராமன்தொழும் - ஸ்ரீராமேச் ... சுரமும்
கண்டு

(உ.) மாசில்லாமறை பேசியேநிறை
மருப்பொழில் - பெருகுதிருச் ... சுழியலும்
தேசுளமணிகள் வீசுபொருனைவாழ்
திருநெல்வேலியும் திருக்குத் ... தாலமும்
கண்டு

(ங.) பார்த்தன்சிலையடி பேற்றசடைமுடிப்
பரன்பதிகள்பல பரங்கிரியு மறை
ஆர்த்தவேடகமுமாப்ப னூருமென்
னையனருள்பெருகும் - வைகைமா ... நதியும்
கண்டு-ஙளச,





சிவமயம்.

# மகா அபிஷேகம்.

விருத்தம்.

பணிகொண்டசிங்காரப் பதிகளெல்லாம் ... *
பணிந்துகொண்டு மதுரைவளம்பதியில்வந்து *
மணிகொண்டகோபுரங்கண் டிறைஞ்சிச்சுற்றி *
வாசல்தொறும்பணிந்துபணிந் தெழுந்துமீனக் ... *
கணிகொண்டபேராசைக் கினியமுக்கட் ... *
கரும்பையருட்கடலை யிந்திரவிமானத் *
தணிகொண்டசோதியைக்கண் டபிஷேகஞ்செய் *
தர்ச்சித்தார்முனிவரெல்லாங் கர்ச்சித்தாரே (நாயக)

அகஸ்தியமகாரிஷி அனேக ரிஷீசுவரர்களுடன்
ஸோமசுந்த ரேசுவரமூர்த்தியைப் பூஜித்தது.

பதம்-சௌராஷ்டிரராகம்-ஆதிதாளம்

பல்லவி.

அபிஷேகஞ்செய்து அர்ச்சித் ... தாரே - வந்த
அந்தணரனைவருஞ் - சிந்தைமகிழ்ந்துநேரே (அபி)

[ அநுபல்லவி. ]

தபவகஸ்தியர்-நாரதர்வால் ... மீகர்
சுகர்கௌதமர்-ஸனகாதியர் ... மாக
விபுதர்சொல்வதிஷ்டர்-பராசரர் ... யோக
வியாஸருடனேவாம-தேவர்முதலா னோர்கள்

அபிஷேகம்.

சரணங்கள்.

(௧) பொற்றாமரையில்தீர்த்த மாடி - வெண்ணீறணிந்து
நித்தியானுஷ்டானங்கள்கொண் டாடி-ஐந்தெழுத்தெண்ணி
சித்திவிநாயகனை ... நாடிப் - பணிந்தெழுந்து
துத்தியஞ்செய்துஅருள் தேடி - மலையத்துவசன்
புத்திரியாயவ-தரித்தரசுசெய்த பொன்முடியாள்-திசைகளெட்டும்
வெற்றிசெய்துகெடிசெ-லுத்திவருமகரக்கொடியாள்-பாண்டியகுலம்
நித்தமகிமைபெற-வைத்தகருணைவிழி நெடியாள்- துதிசெய்திடும்
பத்தரிடமனதில்-நித்தனமிடுமலர டியாள்-தேவர்கள்தொழும்
புத்தமுதினித்தமது-முக்கனியைமிக்கவசனத்தாள்
எண்டிசையானை
மத்தகமோடத்தன்மலை-யெய்த்துவிடயெத்திய தனத்தாள்
காமனைவென்ற
சுத்தமுதலைத்தன்மயல்-சுற்றவடிவுற்றமோ கனத்தாள்
பெருமையான
சத்தமறைநித்தமுறை-பொற்கமலமொத்தவத னத்தாள்
சுந்தரர்பங்கில்
புண்ணியமிகுகயற்-கண்ணியைக் கண்டு
புதுமதுரமொழுகு- நறுமலர் கொண்டு
கண்ணியமுடனர்ச்சனை-பண்ணியே விண்டு
கமலப்பதம்பணிந்து-கருணைபடைத்துப் பண்டு

(௨) அபிஷேகம்
சுத்தவிமலர்பரஞ் சோதி - மாயாவிகார
மற்றபராபர வநாதி - சலனமில்லா
நித்தியாநந்தமய சுகாதி - பரிபூரண
சத்தியசதோதயப்பிரக்கியாதி- யானமஹேசர்
துஷ்டமதனையெரித்- திட்டசெந்தழல்விழிப்பாலர்மார்க்கண்டனையே
தொட்டுவருமறலி-பட்டுவிழவுதைத்த காலர் - கரந்தைகொன்றை
மட்டலரணிபெறு-கட்டழகினிலுயர் சீலர் - மகிட்சியாக
அஷ்டதிசைதொழஎட்-டெட்டுலீலைகள்செய்தலோலர்பிரபஞ்சவாழ்வு
சொற்பனவிதப்பொருளி- தற்பமெனவிட்டகலும்நீதர்- சாதுசங்கஞ்சேர்
விற்பனர்மகிட்சியொடு-சித்தமுருகித்துதிக ளோத-அருள்புரியும்
சிற்பரமிகுத்ததனி வஸ்துமறையுச்சியில்வி நோத முடனனந்த
நிற்தமதுதத்தகுர்தி மித்தியெனவுற்றமலர்ப் பாத ராகியசோம
சுந்தரரதிகசவுந்தர மூர்த்தி
துலங்குவிமானமதிலிலங்கக்கண் டேற்றி
வந்தனைசெய்துவலம் வந்தடி போற்றி
மகிழ்ந்துஆனந்தக்கண்ணீர்வடித்துவடித்துத்தூற்றி
அபிஷேகம்

(௯)
அன்றுபவாசம திருந்து - பின்புமறுநாட்
சென்றுபொற்றுமரை பொருந்து - தீர்த்தத்திலாடி
என்றுமெய்மகிழத் திருந்து - பிறவிநோயை
வென்றுவிடுமரு மருந்து - வடிவமான

அஷ்டகெசங்கள்சுமந் - திட்டவிமானபர மேட்டிக் - கிளநீர்கரும்
பட்டசர்க்கரைருசித் - திட்டகனிபால்தேனுங்கூட்டிச்சொரிந்துமணச்
சட்டஞ்சவ்வாதுபன்னீர்விட்டகர்ப்பூரநன்னீராட்டிக் - கனகப்பரி
வட்டமுடுத்திக்கமழ்ந் - திட்டசந்தனமிகத்தீட்டி - மறைமொழிந்து
அற்புதமணிக்கனக - நற்பணிகள்பொற்புறையச் சேர்த்து
வில்வம்வெண்தும்பை
நற்பலவிதச்செழு-மலர்த்தொடைவிசித்திரமொடு கோத்து
அன்பொடுசாத்தி
மெய்ப்பொடுசமைக்குமமுதிற்சுவைகொள்வர்க்கவகைசேர்த்து
நைவேத்யஞ்செய்து
செப்பியவீரெட்டுபசரிப்பையுமுடித்துத்தீபம்பார்த்து
பணிந்துசம்போ

ஹரஹரஹரஹரவெனுமொழி யெங்கும்
அதிரமுரசொலிசங்கொலிகள் முழங்கும்
சிரமதிலிருகரங் - குவித்து விளங்குந்
தேகம்பரவசம - தாகமகிட்சி பொங்கும்

அபிஷேகம் ௯௭௫

அர்ச்சித்தாநந்தபரவசமதாயோ ... *
மாதிகருமங்களாலமணரேவ ... *
மர்ச்சித்தானந்தவெழுமேறேறுதி ... *
வரனைப்பூசித்தந்தப்பலனையன்று ... *
யர்ச்சித்தாநந்தமிகும்மதுரையென்றே ... *
யமர்ந்தபரன்பால்மணநீரதனுவீந்து ... *
சற்சித்தானந்தமயவடிவையேயா ... *
தரஞ்செய்வார்முனிவர்கள்தோத்திரஞ்செய்வாரே (௫௰௨)

அகஸ்தியர்முதலானரிஷீசுவரரள் சோமசுந்தரேசுவரமூர்த்தியை
தோத்திரம்செய்தது.

பதம்-கமாசுராகம் - ஆதிதாளம்,

[ பல்லவி. ]

மாமதுரநகரநிலையஅரா - வரசுரமிருகதர (ம)

[ அநுபல்லவி ]

ஸோமதரவிஷம - காமதகனஜெய
சூலமேருதனு - காவரதவிர்ஷப
மாமதுர

—

[சரணங்கள்.]

(௧) துரிதபவரகித ஸுகுணஜெனஇர்தயஸ்மரணு...வாஸா
ஸுகரசிசுபாலனசோக ... விநாசா
பரசுதரசுபகரதிரிபுரஜெயஜெக
பாசமோசனகை - லாஸசிகரவர
மாமது

(௨) கடினகனகதட - கடகுஜகிரிஸுதைரமணு-மோகா
காலபயஸரச-லோலதயாகரதேவா
நடனதிடநளின-சரணஸுபணகண
நாகபூஷணஸு-ரேசவமலசிவ
மாமது

(௩) ஸுமுகமுனிவிபுத - ஸமுகரஜிதஸபாநடணு - வேஷா
ஸோமஸுந்தரமஹேசுவர - தீனதயாளா
விமலகமலகர-சரணவதனஸ்ரீ
மீனலோசனி-மநோகரஅரஹர
மாமது. ௩௭௬.



விருத்தம்.

அருந்தவர்களிவைதுதித்தெண்ணெண்ணிலீலை ... *
யதைபுரைத்துந்தொழவவிலிங்கத்தெழுந்து ... *
திருந்தநீர்பூசித்துத்துதித்ததெந்தத் ... *
தெய்வமுமெவ்வுயிருக்குந்திர்ப்தியாகி ... *
யிருந்ததுநாமும்மகிழ்ந்தோமென்றுபின்னும் ... *
எழிற்கும்பமுனியையருகழைத்துயின்பம் ... *
பொருந்தமலர்க்கரஞ்சிரத்திலிருத்தியன்பால்ப் ... *
புறந்தடவிச்சிறந்தரனுர்புகலுவாரே. (௱௰௩)

அகஸ்தியமகாரிஷிக்கிஸோமசுந்தரேசுவரமூர்த்தி
பிரத்தியட்சமாகி அனுக்கிரகம்செய்தது.

பதம்-சாவேரிராகம்-ஆதிதாளம்.

[பல்லவி.]

வாராயகஸ்தியமுனியே- தரும்-வரமேதுனக்குண்டு இனியே

[அநுபல்லவி]

ஆராய்ந்தருமறை-நூல்கள்யாவுங் கற்றாய்
அநுதினம் நம்மையுந்தன்- மனதிலிருக்கவைத்தாய்
வாரா

[ சரணங்கள். ]

(க) நவமணித்திரைகடற் சூழும் - இந்த
நானிலத்தோரும்விண்ணுட்டினில்வாழும்
எவருமகிழ்ந்துதொழத்-தவவடிவான நீயே
யெங்கும்நிறையும்நமக்-கிணையாகுமறிவாயே
வாரா

(உ) மண்டலங்கள்புகழ்ந்து ... விள்ள - உந்தன்
மனதுக்கிசைந்தகற்பும் - வடிவமுமுள்ள
முண்டகமுமதனன் - முடியும்நாணுங் ...துணை
முலோபாமுத்திரை- மலைமகள்தனக்கிணை
வாரா

(ங) கனத்ததவங்களெல்லாம் ... ... புரிந்தாய்- நல்ல
கருமத்தவத்துறுதி- பெற்றெல்லாந்தெரிந்தாய்
உனக்கரிதாம்பொரு- ளுண்டோசொல்லு ... நாமே
உதவவென்றுலெல்லா- முள்ளவனுகக்கண்டோமே
வாரா. ஙஎஎ.

---

விருத்தம்.

அகஸ்தியருக்கிவையுரைத்துக்கருணைசெய்து ... *
அவ்விலிங்கத்துட்புகுந்தாரரனுராங்கு ... *
செகத்திலுயர்முனிவரெல்லாந்தங்கள்பேராற் ... *
சிவலிங்கந்தாபித்துப்பூசைசெய்து ... *
மிகத்திகழுங்கயற்கண்ணிதனையுமந்த ... *
விமலரையும்பணிந்துதிருமதுரைதன்னில் ... *
மகத்தியல்புமாதவமுமோங்கவென்று ... *
மகிழ்ந்துதபோவனஞ்சென்றுவாழ்ந்திட்டாரே. (ருாயச)

---

விருத்தம்.

என்றுவெள்ளிவெற்பிலிந்தவிளையாட்டெல்லா ... *
மியம்பியசூதரைமுனிவர்புகழ்ந்துபோற்றி ... *
அன்றுஅவருடன்மதுரைப்பதியில்வந்து ... *
அலர்பொற்றாமரைநீரிலாடிப்பாடிச் ... *
சென்றுசித்திக்கணபதியைப்பணிந்துபாண்டிச் ... *
செல்வியையுந்தொழுதுமதுரேசர்முன்பு ... *
நின்றுபணிந்தபிஷேகித்தநர்சித்தேற்றி ... *
நேசித்துமகிழ்வாகிநிலையுற்றாரே (ருாயரு)

விருத்தம்

மாநிலங்கள்வாழிதென்னாடுவாழி ... *
மதுரைமீனாட்சிசுந்தரேசர்வாழி ... *
மோனகுருபரன்வாழிமூவர்வாழி ... *
முதிர்தவஞ்சேர்அகஸ்தியமுனிமுதலோர்வாழி ... *
வானவர்கள்மனிதர்பலவுயிர்கள்வாழி ... *
மழவைச்சுப்பிரமணியமறையோன்றன்வாக் ... *
கானகீர்த்தனையிதனைப்படிப்போர்கேட்போர் ... *
அரனருள்பெற்றிடவாழிவாழிவாழி (௵.ய௬)

அர்ச்சனைப்படலம்- முற்றுப்பெற்றது.

---

ஆ திருவிருத்தம்- கூ- பதம்- எ- ஆ ய௬.

ஆ அர்ச்சனையுள்படத்- திருவிளையாடல்-௬௪- க்கு-பாயிரமுள் பட-வெண்பா-௫-கலித்துறை-௪- கொச்சகம்-௩- விருத்தம் -௵௪;

---

பதம்- ௩௭௭- ஆ கவிதை- அ௱கூ௩

திருவிளையாடற்கீர்த்தனை




ஸ-ஹஸ-ஶ.

உ

சிவமயம்.

நூலாசிரியராலியற்றிய

# ஸ்தோத்ரச்சுந்தரமாலை.

(சந்தவிருத்தம்)

காப்பு.

வெண்பா.

சுந்தர நீலக் கடவுள் விளையாடற்
சுந்தர மாலையிவை சொல்வேனே-அந்தமுயர்
சித்தி விநாயகன்றாள் சேவித்த வன்புகழை
நத்தி வினவியே நான்.

சந்தவிருத்தம்.

திருமகண் மகிணனு மயனு மறிவரிய
திகழொளி யுருவொரு செஞ்சடி லவமல மதுரேசா
மருவள ருகனக கமல விமலதட
வழுதி மகண்மருவு மங்கள கரவர மணவாளா
பெருமை பெறுசரண வனசவ மரரிறை
பிழையறு சினகர பிங்கல னுரிமைபெ ருகுதோழா
சுருதி தொழுமுனது புகழை யினிமையொடு
சொலவெ னுளமுறைவை சுந்தர அரஅர சுரதேவா. (க)
மூல பீதக முண்டக பதகர முகசீலா
கால மாரக கண்டக புரஜெய ககனேசா
நீல சோபித கந்தர சுபசுக நிசரூபா
சூல தாரண சுந்தர அரஅர சுரதேவா (உ)
மந்தர குசகிரி மங்கள கரசுதை வரநீல
கந்தர பணிகண கங்கண தரகர சரணார
விந்தர மணியமு கந்தந கரநட விதசோம
சுந்தர முனிவர வந்தித அரஅர சுரதேவா. (ங)
நாம துங்கவி ராசித சோபன நடராசா
ஏம விந்த தடாக வகோசர விதநேசா
வாம மங்கள சாபர லோசனை மணவாளா
சோமசுந்தர நாயக அர்அர சுரதேவா. (ச)

பாக சாதன வந்தித சசிதர பரமேசா
நாக தாரண ரஞ்சித நயஜெய நகராசா
மாக நாயக சங்கரி சுகவர மதுரேசா
சோக மோசன சுந்தர அரஅர சுரதேவா. (ரு)

அங்கவி டமயபு சங்கத ரணஜெய
அங்கச புரஅர அம்பர சுரவர வதிகாரா
மங்கள வரதத ரங்க நதிதரண
மஞ்சுள சசிபதி வந்தித திரிநயன மதநாசா
சங்கர விதசன சங்கரி மலசுக
சங்கரி சகிதஸ்ரீ சந்த்ர சடிலசர தமகேசா
துங்க சுபவரக தம்ப மதுகரசு
கந்தவி பினவதி சுந்தர அரஅர சுரதேவா (சு)

ஏகவ னேகவ மோகவை போகசு ரேசம கேசுர
இந்திர கனகம ணிவிமான
மாகவி நாயக வாரண சாபரி வாரண வாரண
மங்கள கரஜெய மதுரேசா
நாகவி பூஷண நாதச தாசிவ நாரிச மேதவ
னந்தச சிரிபரி சசுரூபா
சோகவி நாசன சோபித மோகன சோபன தாயக
சுந்தர அரஅர சுரதேவா. (எ)

இபசாபவி நாசதி வாகர விமசோமவு தாசனலோசன
இததீனகி லேசுரி வாரண விங்கிதபரதரு டவினோதா
உபவாசத போபல யோகிக ளிதயாமது ராபுர நாயக
உரகாபர ணகிர ணதிவி யும்பர மரர்பணி கயிலாசா
விபவாகன மேருச ராசன வரிசாயக சேஷகு ணபுர
விஜயாபரி தாபவி ஷாசன விந்தச யிலஜெய முனிநேசா
சுபதாயகி தேவிம னோன்மணி நவகோமள ரூபிகிர் பாகரி
சுகமீனவி லோசனி நாயக சுந்தர அரஅர சுரதேவா. (அ)

கரிவதன குகஜனனி தடாதகா கஞ்சுக நகிலவ கிலதேவி
பரிவொடுத யமுறவருள் க்ருபாகராபங்கச யுகளப தவமோகா
அரிணதர ணகரவர சதாசிவா வஞ்சன களதர வமரேசா
துரிதபவ ரகிதசுக வுமாபதே சுந்தர அரஅர சுரதேவா. (கூ)

மதிக்கு லாதிபன் மாமக ளெனமுனம்
வளர்க்க வேதமிழ் நாடுசெய் தவமிது
வழுத்த மாமது ராபுரி நகரினில்
மங்கள வொலிமிக மலிவாக

உதித்த நாரணி காரணி யடியவர்
துதிக்கு மாகவி யாலனு தினமவ
ருளத்தில் வாழ்பவ ளுயினு மெளியனை
யும்பொரு ளெனவருள் கிருபைவாரி
கதிக்கு மாதவி மாபுஜ பலமொடு
பெருத்த வேழ்கட லேழ்புவி களைவளை
கனத்த லோகம லோகமி தெனுமுல
கங்களை யொருவனு வெனநாடித்
துதிக்க வேதிசை யோர்களை யடுமுயர்
திருத்த டாதகை தேவியை மணமுறு
துரைத்த ஞதிக ளேசெய்து பணிபெறு
சுந்தர அரஅர சுரதேவா. (௰)

சகஞ்சே வகஞ்செய்மீ னுட்சி தேவிதிரு
மணஞ்சே ரருஞ்சுபம் பார்க்க மேவிவரு
தண்பொ னுலகர்முத லுளர்யாரும்
அகஞ்சே ரிதங்கொடு போற்றி யேபுணவு
மிகுந்தே னுறும்பலஞ் சேர்த்த போசனம
தன்பொ டுதவுமவை நுகர்போது
இகஞ்சேர் சிதம்பர மேற்றி டாமலேயே
அருந்தோ மருந்தவந் தேற்ற மாகுமிது
என்று திருவடிதொ ழுதுகூறும்
சுகஞ்சேர் பதஞ்சலி வியாக்கிர பாதரிர
சிதஞ்சேர் பெருஞ்சபை நோக்க வாடியருள்
சுந்தர அரஅர சுரதேவா. (௧௧)

வண்டோ தியினுரை கண்டோ வெனுமுமை
மங்கள மதுதொழ வருவோரில்
உண்டோர் செலவின முண்டோ வருபவர்
உண்டொழி யுமோவெனு மவர்நாணக்
குண்டோ தரனும்வெ ருண்டோ வெனவுமி
குடபசி யுறவரு ளதுநாடி
துண்டோர் மதியணி கொண்டோ யனமருள்
சுந்தர அரஅர சுரதேவா. (௧௨)

மின்னற் கொடியிடை மதுவென வினித்த
கன்னற் பனிமொழி வரிசையி னமைத்த
வெண்டர ளமிதெனு நகையேயார்
அன்னப் பிடிநடை யிடமொடு பெருத்த

சொர்னக் குடமுலை வழுதியர் குலத்து
வம்பிகை திருமண மதின்மேரு
என்னக் குமியல்செய் கறிவகை மிகுத்த
வன்னக் குவடொடு பலவுண வளித்து
வெம்பிய பசியொடு மிகுதாகம்
துன்னக் குடவயி றனுடல் தழைக்க
வன்னக் குழியுமவை கையும்வர வழைத்த
சுந்தர அரஅர சுரதேவா. (கங)

வழுதியர் குலத்தை யெழில்பெற விளக்கி
வந்தர சுசெய்தரு ளொடுமோமி
முழுமறை யுணர்த்து கவுதம ருரைக்க
முன்பெரு மையினெடு கடலாட
எழுவது தடுத்து வழகுள கயற்க
ணிங்கித மொழியுமை மகிழ்வாகத்
தொழுமது ரையிற்கொ ளெழுகட லழைத்த
சுந்தர அரஅர சுரதேவா. (கச)

அலையுற் றகடற் றென்மதுரை மெய்க்க
வரவைத் ததில்மற் றன்னையை யழைத்து
அன்பொடு முழுகென மடமாதர்
நிலைமெய்ப் பதியுற் றன்னவர் மரிக்கில்
மகனைக் கொடுமுற் றின்னவர் முழுக்கு
வின்கட லினிலென மறையோர்கள்
சொலையுற் றகமெய்ப் புண்ணிய மிகுத்த
வனையத் துயரைச் சொன்னதை யுணர்த்து
சொந்த வுமையருளி லவர்பாசம்
தொலையத் தவநற் றன்னுல களிக்க
மலையத் துவசத் தென்னனை யழைத்த
சுந்தர அரஅர சுரதேவா. (கரு)



தக்க னுந்திற லயன்மன வகமக
மெய்க்க வோங்கிய சினமிகு புரகர
சங்கர நதிதர கிரிசாப
மிக்க வாஞ்சையி னடியவர் மனதுறை
செக்கர் வான்பிறை யணிசடி லவிமல
மென்கையில் மழுமறி யுறுவீர
பக்க மார்ந்திடு வழுதிம கள்கருது
சித்த மோர்ந்துயர் மதிகுல மலியவே

பைம்பொ னிலவமுத வுணவூறு
சொர்க்கம் வாய்ந்திடு மமரர்கள் பணியவே
னுக்ர பாண்டியனே யருளிய சிவபர
சுந்தர அரஅர சுரதேவா. (கசு)
அடுக்கு மாமதி யின்குலம் வளர்வுற
வுதித்த சேயவன் வன்புய வலியொடும் —அழகார்பேர்
எடுக்கு மேன்மையு மன்புறு மனைவியு
முயற்சி யாகிய திண்புவி யரசையு—மேசார
நடுக்கு மார்பகை சிந்துவ மரரிறை
பெருத்த மேருவ கங்கெட வடரென—நலமோடு
தொடுக்கும் வேல்வளை செண்டுக ருணையொடு
கொடுத்து வாழ்வருள் சுந்தர அரஅர—சுரதேவா.(கஎ)
திடமுயர்கு மாரனண்ட ருடனெவரு மேபயந்து
தெண்டனி டவிசய மதுமீறிப்
புடவிதொழ வேதுரங்க மகமதுசெய் போதுகந்த
புங்கவர் பதிமிகு பகையாகி
அடரவுயர் கூடலன்று வெருவலற வேதுயின்ற
அன்புறு சிறுதிரு மகனாலே
தொடருமலை யோடெழுந்த கடல்சுவற வேலெறிந்த
சுந்தர அரஅர சுரதேவா. (கஅ)
தரணியில் மழையற துயரினில் நரர்படு
சஞ்சல மதொழிய வயில்மேவு
கரவறு முகர் குகர் வழுதிகு லசிருபர்
கண்டகர் வெருவவ ருகுமாரர்
உரமொடு முகில்களை வலிமிகு சிறையிட
வும்பகை கொடுவெதிர் சமராடு
சுரபதி முடிபொடி படவளை விடவருள்
சுந்தர அரஅர சுரதேவா. (கசு)
அங்கண் மாநிலப் பைங்கூழ் மாறவு
மம்பர மழைபொழி வதுதானே
மங்க யாவருக் குந்தாழ் வேமிக
வந்திடு கலியுறு தமிழ்நாடு
பொங்க மாநிதிக் கும்பே மீறிடு
புங்கமு றவருவ ழுதியாலே
துங்க மேருவைச் செண்டான் மோதிய
சுந்தர அரஅர சுரதேவா. (உ0)

வெருவக் கிருதையுக முடிவிற் பிரளைய
மிஞ்சியு லகொழிய மலரோனல்
வருமற் றுறுமுக மதனிற் புவியிது
வந்திட மனுமுத லுளரியாருங்
கருமத் தொழில்செயும் வழியைத் தெளிவொடு
கண்டிலர் மலைவுற வவையோது
சுருதிப் பொருளினை முனிவர்க் கருளிய
சுந்தர அரஅர சுரதேவா. (உக)

அடவியின் மடிவுறு-தாதைக் கன்புள
வங்கனை யர்கள்சில சிலர்போக
மடவியர் சுதர்பல பேருற் றங்குள
வன்கரி பரிபல பொருளியாவும்
திடமொடு கொடுசெல வேபட் டம்பெறு
திகழ்வழு தியர்மர புறுபாலன்
சுடர்மணி முடிகொள மாணிக் கம்பகர்
சுந்தர அரஅர சுரதேவா. (உஉ)

வழுதிமு னன்மையி னிணையர்ச் சித்தபின்
மங்கை சசிகணவ னுயர்பூசை
பழுதற வின்மகிழ் வொடுமுற் றித்திகழ்
பைம்பொனி லமதுற வதுகேளா
எழிலுன தின்மகி மையின்முக் யத்தினை
யின்பமொ டறியம துரைமீதே
தொழுவரு ணன்விடு கடல்வற் றச்செய்த
சுந்தர அரஅர சுரதேவா. (உங)

நதியார் வாரிப் பேரழ லார்த்திடு
நஞ்சணி களரென நாடாது
எதிராய மீறிச் சோதனை பார்த்தது
வெஞ்சலு றுவருண னலிவாற
மதியா மேகச் சேனையி னுற்றுயர்
வந்தத கலமது ரையைநாடி
துதிநான் மாடக் கூடல தாக்கிய
சுந்தர அரஅர சுரதேவா (உச)

இணையே இல்லா வெல்லையற்ற வாழ்கட
லென்பிற வியிதற வெதிர்மேவு
பிணையே நல்லார் சொல்லுதுத் யமேமிகு
பிஞ்சும தியணிகொள் பெருமானே

வினையேர் சொல்லாள் முல்லையுற்ற வாணகை
விந்தம லர்வதன மலைமானுள்
துணையே யெல்லாம் வல்லசித்த ராகிய
சுந்தர அரஅர சுரதேவா. (உரு)

எதிரில்கல் லாரத்தி னிலங்குமி தழ்ப்பருவ
விந்துவ தனமட வியராளாய்
மதிசெய்கல் லாமைக்குண் மயங்குமெ னக்கெதிரே
வந்துவி டையிலுமை யுடனுள்வாய்
கதிகொள்நல் லோர்மெய்க்க வருந்தென னுக்குமனக்
கம்பலை யறவுமெ யவனேது
துதிகொள்கல் லானைக்குக் கரும்புகொ டுத்தசிவ
சுந்தர அர அர சுரதேவா. (உசு)

அடருப கைமுதிரு மொருசோழன் முன்வைய
மஞ்சம துரைநக ரதிலேவ
படரும றையையிக ழுழிபாமரரைய
பங்கந ரகில்விழு வதுநாடா
விடமிக ருகொடிய திடமாரணமெய்து
விஞ்சையு யருமக மதினாலே
தொடரு சமணர்விடு மதயானையையெய்த
சுந்தர அர அர சுரதேவா. (உஎ)

அகமதி ரக்கமி லாத லோபராங்
கன்புட னரிதிரு வருடேடு
தகையரெ னச்சொல்வ தேய லாததாங்
தங்கண் மனதிலிலர் சதிகாரர்
இகழுவ ருத்துவ தொல்வி சாரமோங்
கெஞ்சுக வுரிமன மெலிவோடச்
சுகமெய் விருத்தகு மார பாலராஞ்
சுந்தர அர அர சுரதேவா. (உஅ)

பல்லவ மார்பத நாரி பாகவர
பங்கய னரிபணி பரபோதச்
செல்வம தார்கரி காலசோழனிகர்
திண்டிறல் கலையறு பானுலின்
வல்லமை யானவி ராச சேகரன்
வருந்து துயரமற மகிழ்வாகத்
தொல்லுல கோர்தொழ மாறி யாடியருள்
சுந்தர அர அர சுரதேவா. (உசு)

உயர்புது வையில்மறை யவன்மனை கொம்பினி
லொன்றிய கணையினி லுயிர்மாய
அயலுறும் வனசரனொருவனை யங்கன
மங்கனை யுயிருணி யெனவேடன்
செயலறி கிலனென மறையவ னொந்திடு
சிந்தைவ ழுதியெம படராலே
துயரற வருளிய வெம்பழி யஞ்சிய
சுந்தர அர அர சுரதேவா. (௬0)

அடமத னேவா லறம்போக் கியயிக
ழுந்தமு யருமனை தனபாரத்
தடமது தோய்வா னெமன்போற் றருமொரு
தந்தையை யுயிர்கவர் கொலைதானே
விடமது போலே வடர்ந்தேக் கமதுற
வெம்புமறையவனை மிகமீறித்
தொடருமபாதகந்தீர்த் தருளிய
சுந்தர அர அர சுரதேவா. (௬௧)

இட்டத் திற்சம ரஞ்செய் வித்தைக
ளெந்தவ கையுமருள் குருவாழ்வை
கிட்டிப் பெற்றிட நின்றும் மற்றவர்
கிஞ்சுக விதழிள மனையாளை
எட்டித் தொட்டிட நெஞ்சம் வைக்கவு
மெஞ்சிய வளமுத துயர்தீரத்
துட்டச் சித்தன தங்கம் வெட்டிய
சுந்தர அர அர சுரதேவா. (௬௨)

பணிவாய் விடமமு தாக வெய்தவருள்
பஞ்சவ தனர்பகர் மறைகூறும்
அணிவாய் விதிமுறை யோது சைவநெறி
யன்பினர் பெருவலி யறியாது
தணிவாய் ரவுரவ மூழ்கு பொய்யமணர்
சந்தத முயர்மது ரையின்மீது
துணிவாய் விடவரு நாகமெய்தசிவ
சுந்தர அர அர சுரதேவா. (௬௩)

உயர்வுள வேதப் பெருமை மிகுத்திட
வும்புவி துதிசெய மதமூறு
கயமொடு நாகத் தினையும் வதைத்திடல்
கண்டு மனதின்மிகு சினமீறு

கயவர்க ளாமச் சமண ரிழைத்துமெய்
கம்பமு றமதுரை நகர்வாழ்வோர்
துயரற மாயப் பசுவைவ தைத்துயர்
சுந்தர அர அர சுரதேவா. (௩௪)

வந்தியர் சூழ்கின்ற வழுதிவிற் போர்க்குற்ற
வன்றிட வயவர்கள் மலிசேனை
தந்திடு வாயென்று நிதிதரச் சேர்த்துப்பொற்
சந்தந வமணிம யவிமானம்
அந்தம தாகினற் பணிகளோ டேற்றிட்ட
வன்புறு சிவவிட யமதாகச்
சுந்தர சாமந்த னுதவமெய்க் காட்டிட்ட
சுந்தர அர அர சுரதேவா. (௩௫)

தூற்றியே மலிகார்த் துளியற மிகுகலி
துன்றிபு யருதமிழ் நிலம்வாட
ஏற்றியே சிவமார்க் கமதனில் மதியுறு
கின்றது வெனவினி யிகழாதே
போற்றியே மறையோர்க் குதவுவை யெனவருள்
பொங்கி வழுதிகன வினினேரே
தோற்றியே வுலவாக் கிழியது வருளிய
சுந்தர அர அர சுரதேவா. (௩௬)

அல்லல தார்பவத் தொடர்தீர் தவமுற்று
மந்தண ருறைவன மதிலேகி
மெல்லிழை யார்கள்கற் பதைநா டிடவுற்ற
விண்புகழ் பலிபெற வருவேட
நல்லுரு வால்மயக் குறுபோ தருளற்று
நண்புறு முனிவர்க ளிடுசாபத்
தொல்லையி னலடுத் தணியார் வளைவிற்ற
சுந்தர அர அர சுரதேவா. (௩௭)

வாகை வேற்பற்று பாலர்க்கு முலைதர
வந்துமு மையவள தருள்சேரா
தாகை யாற்பெற்ற சாபத்தி னிருணிற
வங்கம ருவுசிலை யதுதானுய்
ஒகை போய்ப்பட்ட வூருற்று உணர்வழி
வுந்துத லொழியுமொ ரறுமீனும்
தோகை யார்க்கட்ட மாசித்தி யருளிய
சுந்தர அர அர சுரதேவா. (௩௮)

வாழுமிக் கூடலை மனமகிழ்ச் சியதுற்று
வந்துத ரிசனம தனைநாடா
தாழுமிக் காவலி னுணவுறக் கமதற்று
வன்புறு நினைவுக னவுமீதாய்த்
தாழுமெய்ப் போதமே யுயருகச் சியில்வெற்றி
தங்குமி ரவிகுல பதியாய்வாழ்
சோழனுக் காகவே விடையிலச் சினையிட்ட
சுந்தர அர அர சுரதேவா. (ரு௯)

எழுவள வனடுத்துப் பன்னாட் சொந்தமுற்ற
வின்பமு றவகலு பகையாலே
குழுமியி கலியொத்துத் தென்னாட் டின்கணச்சங்
கொண்டிட மதுரையி னெயில்சூழ்போ
தொழுகும வர்மிகுத்த வன்னாட் கங்கமொய்த்து
வுந்தின டவில்வெயி லினிலோய்வால்
தொழுவழு திபடைக்குள் தண்ணீர்ப் பந்தல்வைத்த
சுந்தர அர அர சுரதேவா. (௬௰)

அணியுறு மின்னினுக்கி ணையதா கஞ்செய்ய
வம்பெனும் விழியின ளணிபோலார்
குணமிகு மென்னகைக்க ணிகையா குந்தையல்
கும்பிடு கரமொடு திருநீறே
அணிபவ ளன்னமிட்ட டியரே யுண்டெய்த
வன்புறு நடையின ளறனேதான்
றுணையுறு பொன்னனைக்கி ரசவா தஞ்செய்த
சுந்தர அர அர சுரதேவா. (௬௧)

ஆழவுததிவளை பார்க்குளிகபரங்க
ளன்பொடு தருகன கையினாலே
வாழைகமுகுகழை தோப்பினுயருதெங்கு
மஞ்சுற விளைபயிர் வளமேதான்
சூழமிகவுமுள நாட்டினுயர்விதென்று
துங்கர் புகழ்புனல் மலிநாடான்
சோழனைமடுவினில் வீட்டியருள்புரிந்த
சுந்தர அர அர சுரதேவா. (௬௨)

அன்னம திடல்மேற் றேற்றிய வறமென
வன்புள னுழுதொழி லினனுமோர்
பின்னவன் மகிழ்வாய்ப் போற்றியெ வருநுகர்
பின்புனு மவன்வினை வதுதாழ்வாய்ப்

பன்னில மனைப்பாட் பாத்திர முறுபணி
பண்டமெ துவுமறு கலிதானே
துன்னிட வுலவாக் கோட்டைய தருளிய
சுந்தர அர அர சுரதேவா. (சங)

செல்வ நாய்கனோர் மைந்தன தற்றிளைத்த
சிந்தையி னொருபகி னியினுசை
புல்லு சேயனே சொந்தமெ னக்கொடுத்த
பொன்பல பொருணில மனையாவும்
வல்ல ஞாதியோர் கொண்டிகலத்தடுத்து
மன்றில்வ ருபொழுதி லவர்நேரே
சொல்லு மாமனுய் வந்துவ ழக்குரைத்த
சுந்தர அர அர சுரதேவா. (சச)

வல்விட மதின்சுவை யாய்முன் தேவர்க்கெய்த
வந்திடு மமுதென நுகர்நீத
செல்வம தனன்மது வூறும் பூவைப்பெய்தல்
சிந்தையி னலனென வருளாது
ஒல்லையி னவனுட னீறுந் தீயிட்டெய்த
வுந்திய நுதலுறு விழியோனே
சொல்வர குணன்சிவ லோகங் காணச்செய்த
சுந்தர அர அர சுரதேவா. (சரு)

மொய்த்தெம படரெதி ருற்றிட வுறவினர்
முன்பழு பொழுதினு முனையேதான்
வைத்திடு மெனதக முற்றிய துதிமொழி
வந்தனை யதுதின மறவாதே
பத்திர ரெனுமுயர் பத்தரை யிசுலுறு
பண்பினர் தமைவெல வருளாலே
சுத்தர்தொ ழுவிறகு விற்றிசை யதுபயில்
சுந்தர அர அர சுரதேவா. (சசு)

அரிமுத லெவருமெ யடிதொழு முனதிட
மன்பில னடிபணி வதுபோலே
திரிபவ னுலகமெ யெனநிதி தரவுறு
சிந்தையன் மடவியர் மயலாலே
எரியுணும் வரையுழல் பவனெனை யருளுவை
யின்பவி சைபயினு முயர்பாணர்
சொரிநிதி பெறவொரு திருமுக மருளிய
சுந்தர அர அர சுரதேவா (சஎ)

மயல்செய் மக்கள்மனை யுறவெ னக்கருதி
வந்துன தடிதொழும் வழிதேடா
நியம முற்றுநிதி நசையி னற்பர்களு
நிந்தனை செயமன முழல்வேனே
கயல்வி ழிக்கணவ கடுவணிக்கரிய
கந்தர கனியிசை பயில்பாணர்
துயர கற்றியுயர் பலகை யிட்டசிவ
சுந்தர அர அர சுரதேவா. (சஅ)

கோது கொண்டவுட லீது கொண்டுகமழ்
குங்கும மணிகன தனமேயார்
மாது பங்கசிவ போத வென்றுதினம்
வந்தனை செயும்வழி யறியேனே
ஓது சண்டனெதி ரேதி யங்கவொழி
யும்பர்பு கழிசையி றைவன்மாணுள்
தோது குன்றவிசை வாது வென்றசிவ
சுந்தர அர அர சுரதேவா. (சகூ)

சாக ரச்சனன சோக முற்றுழலு
சங்கட மறவுன தடியாரார்
சேக ரத்திலெனை யேகி யுய்க்கவருள்
சிந்தைய தனிலுனை விடவேறோர்
ஆக ரத்தையறி யேனி கத்திலினி
யஞ்ச லெனவேயுன தருளாலே
சூக ரக்குருளை பாலு ணத்துணைசெய்
சுந்தர அர அர சுரதேவா. (ருய)

சந்தம டவியரு யர்ந்தத னதடமெ
சந்தத முமருவு மதியாலே
சிந்தையு ழலவதி நிந்தைபெ ருகுபல
சிந்தனை யிலுமுனை யொருவேனை
வந்தனை புரிபவ னெந்தனை யுனதடி
மன்றன் மலரதனி லுறவாளாய்ச்
சொந்தவி ருளிகளை மந்திரி யெனவருள்
சுந்தர அர அர சுரதேவா. (ருக)

நேர்ந்த கருக்குழி யிற்புக வேநித்த
நிந்தனை பெறுமுட லிதனாலே
தேர்ந்த தவத்தர்க ளைப்பணி யேனுற்ற
சிந்தையி லுமுனது திருவேடம்

ஆர்ந்த வரைக்கரு தித்துதி யேனுக்கு
 ளன்புறு வகையருள் வாய்நாளுஞ்
சோர்ந்த கருக்குரு விக்குப தேசித்த
 சுந்தர அர அர சுரதேவா. (ருஉ)

ஏத்தியு ளுமத்தை நித்தம தித்துருகி
 யின்பம டையுமுன தடியார்தாள்
போற்றுகி லேனுற்ற பத்தர்க ளைப்பரவு
 புந்தியி லிகசுக மடையாதே
நாற்றிசை போயெய்த்து மக்கண்ம னைக்கலையு
 நன்றிலி யெனையரு ணலமேதான்
தோற்றிய நாரைக்கு முத்திகொ டுத்தசிவ
 சுந்தர அர அர சுரதேவா. (ருங)

தபமத கலத்தின மாசையே மேற்கொடு
 தந்திர முறுபல தொழிலாலே
விபவம லியத்தொகை யாகவே சேர்த்துடல்
 வெம்பியு ழல்பிறவி தொலையாயா
நிபமதொ ழியப்புகல் வேதன்மால் நோக்கற
 நின்றநெ டுநிமல நிலையாமோர்
சுபமது ரையைத்திரு வாலவா யாக்கிய
 சுந்தர அர அர சுரதேவா. (ருச)

அந்தரத் தோரும் பொய்தவிர் தவமிகு
 மந்தணர் களுமதி துதியாலே
சுந்தரத் தேருங் கைமல ரதுகொடு
 சொந்தமு டனெதொழ வருடாளா
இந்தரத் தேருந் தெய்வமு கநயன
 வின்பவி மையமலை மகள்பாகா
சுந்தரப் பேரம் பெய்தரு ளியசிவ
 சுந்தர அரஅர சுரதேவா. (ருரு)

அகமது மங்கக் கலகவி ழித்துணை
 யங்கனை யர்கள்மய லதிலேயாழ்
செகமிதி லிந்தப் பிறவிதொ லைத்தருள்
 திங்கள ணிசடில சிவைவாம
பகருமு குந்தற் கரியத வத்துயர்
 பந்தமில் முனிவரர் பணிபாதா
சுகமுறு சங்கப் பலகை கொடுத்திடு
 சுந்தர அரஅர சுரதேவா. (ருசு)

திணையிகழ் நடையுற் றுப்புப் பொதிபெறு
திண்கர மெனமதி தெளியாதே
பணைமுலை மகளிர்க் குட்சிக் கியசுழல்
பம்பர மெனவுமெ பலநாளாய்
அணைவுறு தனமக்கட் கொக்கற்கலை
வங்கமி தொழிவகை யருளீசா
துணையறு தருமிக் குப்பொற் கிழியருள்
சுந்தர அரஅர சுரதேவா. (ருஎ)

நாரியர்க் கேவலை யேபுரி காத்திர
னம்புவ துனையனு தினமேயே
நேருறச் சேர்பத மேதரு நீத்தனெ
னிந்தனை விடவிரு நிலமீதே
ஆரிருக் காரர னேபல தீத்தொழி
லன்பொடு செயுமெனை யருள்வாயே
சோருநக் கீரனை யேகரை யேற்றிய
சுந்தர அர அர சுரதேவா. (ருஅ)

சீயெனச் சீமிகுத் தேமலக் குழிபுரை
செங்குட முலையினர் குறிதேடி
நாயெனப் போயடுத் தேயவர்க் கிதமொழி
நண்புற வனவர தமுமேதான்
நேயமுற் றேமிகத் தேடுகைப் பொருளற
நிந்தனை யுறுமெனை யருள்வாயோ
தூயநக் கீரனுக் கேயிலக் கணமருள்
சுந்தர அரஅர சுரதேவா. (ருகூ)

உடல்கொண் டிப்பா ரிடமென் றீத்தொழி
லொன்றல வதுபல வுனைநாடா
அடவின் சொற்சார் துதிபண் பாற்செய
வன்பில னெனையுமே யருள்வாயோ
படர்துங் கத்தார் நகிலம்பாற்படு
பைங்கிளி மொழியுமை யவள்பாகா
தொடர்சங் கத்தார் கலகந் தீர்த்தருள்
சுந்தர அர அர சுரதேவா. (சூய)

பல்லுயிர் கட்கே யன்பினிச் செகத்திடை
பங்கய மலரவி ரவிபோலே
நல்லுற வுற்றே துன்பறக் கடற்கிடை
நஞ்சமு தெனநுகர் நடநாதா

கல்லுறை யத்தா வந்தகப் பகைப்பத
கங்கை யணிசடில கவுரீசா
சொல்லு மிடைக்கா டன்பிணக் ககற்றிய
சுந்தர அர அர சுரதேவா. (சுக)

கனியுறு மகளிர்க ளிதழூற லமரர்
கண்டுணு மமுதென வவர்தானே
பனியுறு மலரென வுணர்வே னுனதிரு
பங்கய மலரடி பணியேனே
முனிவுறும் யமபடர் கவர்போ துவருவை
முந்தியெ னமொழியில் வருவாயோ
தொனியுறு கடலிடை வலைவீ சியசிவ
சுந்தர அர அர சுரதேவா. (சுஉ)

பாதி யாயுளோ சுழுத்தியி னுலற்ற
பஞ்சென நரையுறு கிழமாயும்
மாதி னுசையே மிகுத்துழல் வேனுக்கு
வன்பிற விதொலையும் வழியாதோ
ஆதி நாயக னேதடுத் தாளத்த
வன்பின்ம கனையனை யடுமீசா
சோதி வாதவூ ரர்க்குப தேசித்த
சுந்தர அர அர சுரதேவா. (சுங)

பல்லுல கினுயிருக் குயிராய்த் திகழ்பவ
பஞ்சை யெனையுமருள் பவையானே
வல்லுயி ரினிறுதிக் கிடமாய்த் தினமுடல்
மங்கினு நரர்துதி யதுபாடேன்
அல்லினு மனுகுமெப் பகல்நாட் களுமுன
தம்பொன டிபுகழ்வ தகலேனே
தொல்லுல கினரியைப் பரியாக் கியசிவ
சுந்தர அர அர சுரதேவா. (சுச)

இகமிதி லுழலு முயிர்வேட் டதருளி
யெங்கினு முறையொரு பொருளாகி
நிகரற வுலவும் மறிவாய்ப் பரிவொடு
நின்றவ வெவருனை விடவேறே
புகலுள வெனையு மடியார்க் கடிமைசெய்
புந்தியு ளனெனவை புரலாகா
தொகையறு பரியை நரியாக் கியசிவ
சுந்தர அர அர சுரதேவா. (சுரு)

புவியிடை யத்தத்தில் மிஞ்சிகஞ் சொத்தசிறு
புந்தியி னரர்புகழ் புகலாதே
தவமிகு சுத்தர்க்கு ளன்பினின் றுற்றனது
தஞ்சமெ னவுமரு ளதுதேடி
அவமற மெய்த்தவ வின்பமொன் றித்தொடரு
மந்தக னிடரற வடைவேனே

சுவையுறு பிட்டுக்கு மண்சுமந் திட்டசிவ
சுந்தர அர அர சுரதேவா. (சுசு)

பாருறு வீண்பவம் புகுந்தேற் றுதலறு
பண்புள னுனதடி யவரோடே
சேருறு நோன்பினி னற்றம்பார்ப் பதுமறு
சிந்தையி லனுதின நிதிதேடி
நேரலர் வேந்தர்வெம் பெருந்தீக் கடவுளு
நின்றுண மயலுறு மதிதீராய்
சோருறு பாண்டியன் சுரந்தீர்த் தருளிய
சுந்தர அரஅர சுரதேவா. (சுஎ)

பாதிவ யததுநி னைப்பது தூக்கமே
பைந்தொடி யர்கள்மயல் படுமாறல்
ஓதுமி ருபதினெ டுற்றவை நீக்கவு
மொண்டு மி ருபதொடை யுறல்தானே
தீதுறு சரைபிணி யிற்படு மாற்றலில்
சிந்தையி லுனைநினை கிலனுள்வாய்
சூதுறு சமணர்க ளைக்கழு வேற்றிய
சுந்தர அரஅர சுரதேவா. (சுஅ)

பாகையி னைசொல்மின்னி னிடையினங் கையிடத்த
பஞ்சவ தனசிவ பணியாரா
மாகமு னிவர்துன்னி யடிதொழ வந்துதித்த
மங்கள மகிபுகழ் மதுரேசா
ஏகவி மலபன்னி மகிழுமென் புந்திகுற்ற
மென்றிடி னுமருள்வை யியல்நாய்கர்
தோகை மகிழவன்னி கிணறிலிங் கம்மழைத்த
சுந்தர அரஅர சுரதேவா. (சுகூ)

உகுமட் டலரத னினுமேன் மையுறுவ
தொன்றுசு வையலர்வ தொழியாதே
மிகுபுத் தமுதிணை யிதுவே தமகிழ
வென்றிகொள் புகழ்பதி னறுநாலாம்
பகர்சுப்ரமணிய மறையோன் மொழி யிவை
பைந்தமிழ் மணவழ கியமாலை
புகலுத் தமரர னருள்பெறு வாருயர்
புங்கவர் தொழுபத மடைவாரே. (எ0)

மதுரைத் திருவிளையாடற்
சுந்தரமாலைச் சந்தவிருத்தம்


முற்றிற்று.

# திருவிளையாடல் அட்டவணை.







முற்றிற்று.

உ

இந்நூலாசிரியராகிய சுப்ரமண்ய ஐயரவர்களின்

# சரித்திரச் சுருக்கம்.

1. பாண்டிமண்டலத்திற், றிருவாலவாயென்னும் மதுரைக்குக் கிழக்குத்திசையிற் சுமார் இரண்டு காவதமுள்ள வைகைமாநதிதீரத்திற் புவனேக வீரபாண்டியபுரத்திற்குப் பிரதிநாமமான மழவாபுரியின்கண், ஏறக்குறைய நூற்றைம்பது வருடங்களுக்குமுன் எஜுர்வேதபாரக, வாதூலகோத்ர ஆபஸ்தம்பசூத்திரராய் இராஜகெம்பீரபிரகச்சரணதிலகராய் அவதரித்து சுப்பிரமண்யபாரதிகளென நாமகரணந்தரித்து, பன்னிரண்டுவயதிற்குள்த் தொன்னூலென்னும் வடநூல் தென்னூற் கல்விப்புலமையும் அஷ்டாவதானத்தின்றிறமையும் நாளுக்குநாள் விர்த்தி சந்திரனைப்போற் சிறந்தோங்கி வியாபகதிசையடைந்து அனேகஇராஜாங்கங்களிற் சென்று கனகதண்டிகை கிராமமுதலாய பற்பலவரிசைகளும் பெற்றுக் கீர்த்திவந்தராய் வாழுநாளிற் பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த மக்கட்பேறல்லபிற என்று நாயனர் சொல்லியிருப்பதால் நல்ல சந்தானப்பேற்றை விரும்பிக் கவலையுற்றவராய்மயின் மலையென்னுங் குன்றக்குடி க்ஷேத்திரத்திற்போய் வதிவுறுந்தினத்தினோர் தினம் உதையத்தில் ஸ்நானதிகர்மானுஷ்டானங்களைமுடித்துக்கொண்டு நமதுபெருங்கருணைக்கடலாகிய ஷண்முகநாதன்வாழுகின்றபருவதத்திற் சென்று சன்னிதியினின்று விள்ளற்கரும்பொருட் பிள்ளைக்கவியென்னும் ஓர்பிரபந்தத்தை யோர் பகற்பொழுதிற் பாடிமுடித்து அக்குமாரக்கடவுள் திருவருட்பிரசாதத்தைப் பெற்றுத் தமதூரினுற்றுச் சின்னளாயினபின் ஷண்முகேசன் கிருபையாற் சற்புத்ரப்பேறடைந்து வாழ்நாளின் வைதீகக்கர்மாக்களின் அதிசிரத்தையுள்ளவராதலின் யாகாதிகிர்துக்களுஞ் செய்து தீட்சிதரென்னும் பெயரை வகித்தும் வேதாந்த சிரவணத்தான் ஜீவன்முக்தராகி விதேகமுத்தியை யடைந்தனர். கூடஸ்தராகிய இச்சுப்ரமண்ய பாரதிகளினது பரம்பரையினரிற் சிலர் சங்கீத சாகித்யங்களிலும் அஷ்டாவதானத்திலும் சிறந்த வித்வத்துள்ளவராயும் சிலர் வேதசாஸ்திர பாரங்கதராகவுமே முன்னும் பின்னுமாய்த் தொன்றுதொட்டு விளங்கிவருகின்றனர். இவையெல்லாம் பாயிரத்திற் கண்டுணர்க. விரிக்கிற் பெருகும்.

2. அஃதன்றி இப்பாரதிகள் வம்சத்திலவதரித்த உதையமூர்த்திஅய்யர் குமாரரும் வேதாந்தசுப்பையர் சகோதரருமாகிய சுந்தரமய்யர் புத்திரர் சுப்பிரமண்ய ஐயரென்பவர் இளமைப்பருவத்தே சமஸ்கிருதத்திலும் திராவிடபாஷையின் இலக்கண இலக்கியங்களினுந் தேர்ச்சியுள்ளவராயினர். இது நிற்க சங்கிதத்திலுங் கவனசக்தியினுஞ் சிறந்த வல்லவராய்ப்பற்பல சாகித்யங்கள் செய்தும் சோமசுந்தரக்கடவுண்மீதுவைத்த சிறந்த பக்திவிசேஷத்தால் இந்நூலியற்றித் திருவாலவாயின்கண்ணே மீனம்பிகா மகாதேவி சன்னிதியின் அறுகாற்பீடத்திருந்து அனேகவித்வான்களும் கனதனவான்களுங்கூடிய சபையின் கலியாப்தம் நாலாயிரத்துத் தொளாயிரத்தைம்பத்துமூன்றிற் சாலிவாகன சகாப்தம் ஆயிரத்தெழுநூற்றெழுபத்துநாலின் நிகழும் பரிதாபி வருடம் ஆவணிமீ 24உ சுக்கிரவாரதினம் அரங்கேற்றினபின்சிறிதுநாட்சென்று அச்சிடுமுயற்சியினிச்சையுட்கொண்டு மெச்சிடும்சென்னை

## சரித்திரச் சுருக்கம்.

நன்னகருற்று அங்குள்ள கல்வி செல்வவான்க ணிறைந்த சதுர்வேத சித்தாந்த சபையின் ஆனந்த வருடம் மார்கழிமீ கூ சுக்ரவார தினம் அரங்கேற்றி யச்சிடுவித்தும் பிரமோதூதவருடம் ஆனிமாஸ்தையில் இரண்டாமுறை அச்சியற்றியும் இந்நூலாசிரியர் நரஸ்துதிசெய்யா நிய மம்பூண்டவ ராதலின் தெய்வ விஷயமாகவே யின்னு மிவரா லியற்றிய நூற்கள் பலவுண்டு அவைகளிற்சில அச்சிட்டிருப்பவை இலக்குமி புர ஸ்தலபுராணச்செய்யுள், கூடற்றிருவிளையாடல் யமகவந்தாதி, திருவிளையாடற்சுந்தரமாலைச் சந்தவிருத்தம், திருமெய்யம் ஈசுவரன்கோவில் ஸ்தலபுராணக்கீர்த்தனை, ஷ விஷ்ணுகோவில் ஸ்தலபுராணகீர்த்தனை, (மகாதேவபஞ்சகம், மகாதேவிபஞ்சகம், என்கின்ற வடமொழி ஆசிரியவிருத்தம், சரசக்கழிநெடில் விருத்தம், நலங்கழைப்பு, நலங்கு, ஊஞ்சல், கப்பல், பத்தியம், லாலி, சோபனம், குஞ்சரிகதவுதிறப்புஏசல், கும்மி) இவை, பன்னிரண்டு விதமான சாகித்யங்க ளமைந்த ஒரு கட்டிடமாகவும் சேர்க்கப்பட்டன. இவை யன்னியில் இன்னும் அச்சிடவேண்டியவை யனேகமிருக்கின்றன அவையெழுதின் விரியும், அச்சிடுவித்த மேற் சொல்லிய நூல்களும் இவருள்ள காலத்திலேயே அச்சிட்டிருக்கின்றன இவரும் சர்வதாரி வருடம் வைகாசி மீ 29 உ ஸ்திரவாரத்தின் சோமசுந்தரேசுவர மூர்த்தியினது திவ்யசரணாரவிந்த நீழலின் ஐக்கியமாயினர் இந்நூலை இரண்டுமுறை அச்சிட்டும் வேண்டுவோர்களுக்குக் கிடைத்த லருமையாதனோக்கி, அவர் புத்திரர்களே மூன்றாமுறை அச்சிடுவித்தனர்.

3. அதுநிற்கதிருநயம் கிர்ஷ்ணபாரதிகளியற்றிய திருவிளையாடற் கீர்த்தனைப்புஸ்தகத்தின் சரித்திரச்சுருக்கத்தினெழுதியது மிகவும்வியப்பே, என்னெனின், இந்நூலியற்றினோரும் கிருஷ்ணபாரதிகளும் திருவாலவாயின்கண்ணேசந்தித்து அவரது நூலைமுன்னிட்டு இந்நூல்விளங்காவோவென்னும் ஐயத்தான் அக்கிர்ஷ்ணபாரதிகளின் அனுமதிபெற்று முதலிலரங்கேற்றி யச்சிட்டுவிட்டதாகவும் அவர்கட்குப் பொருளுதவி யின்மையின் அப்பாரதிகளின் பிற்காலம் அச்சிட்டதாகவும் சிலவிஷயங்கள் நுட்பமாயுள்ளதை விஸ்தரித்துச் சொல்லியிருக்கிறதாகவும் பொற்பணிக்குப் பொடிவைப்பெனவும் காசியின்வீசம் அதிகம் இத்தலமெனவும் கங்கையினு மித்தீர்த்தம் விசேடமென்றாற் போலும் எழுதினவர் திறமை புலப்படக் கூறினர் என்னே அரிதரிது. பாரதிகள் அறிவின்மிக்கவராதலின் இந்நூன்முன்னிலையிற் றம்மாலியற்றிய நூல் நிலைபெறாவென்னு நிச்சயத்தால் அச்சிடு நோக்கமின்றி, கல்லாதவரு நனிநல்லர் கற்றார்முற் சொல்லாதிருக்கப்பெறி னென்னுந் திருக்குறளின்படி யிருந்தனர். அஃதுணரா துரிமைபாராட்டி யச்சிட்டது அவரது பெருமையை மன்றிலிழுத்ததாயிற்று. இன்னும்பல சொல்லின் விரியும், புராணம் இரண்டினுட் பொருளொன்றேயாயினும் சொற்சுவை பொருட்சுவைகளின் றரங்களை யாவரானும் எளிதி னுணரலாம்; எவ்வாறெனின் திராட்சாபலத்தின் சுவையின் றரம் நாவிற்கொண்டவுடன் அறிவார்களல்லவா அவைபோற் சுரோத்திரேந்திரிய துவாரா உலகோர் புகழ்ந் தறிவாரென்பதே துணிவு.



## சாற்றுகவிகள்.



இஃது
புவனேகவீரபாண்டியபுரமென்னுமழவாபுரத்திலிருக்கும்
அஷ்டாவதானம்
**சுப்பையரவர்களியற்றிய**
ஆசிரியவிருத்தம்.

மின்னுடுமிடையுமையாள்தனையொருபாகத்தணிந்தவிமலநாதன் *
பொன்னுடுபுரந்தரசுபுரிந்தியற்றும்வாசவன்வாழ்புலவர்மால்போ *
தன்னுடும்துரேசர்மகிழ்ந்துசெயும்லீலையைக்கீர்த்தனையாச்செய்த *
னன்னுடுகளைக்கடிந்த சுப்பிரமணியபூசுரநன்னுவலோனே *

கலிவிருத்தம்.

சீதவெண்பிறைச்செல்வன்மதுரையிற் ... *
சோதிலீலைதனைசுப்பிரமண்ய ... ... *
வேதியன்புனைவித்தனன்கீர்த்தனை ... ... *
ஓதுவோர்தம்பிறப்பொழிந்துய்யவே... ... *

---

வேப்பத்தூர் - கவிராஜபண்டிதர்
வம்சோத்பவராகிய - பெரியசாமாவையர்குமாரர்
**முத்துவேங்கடசுப்பையர்**
பாடியது—ஆசிரியவிருத்தம்.

எழிற்சாலிவாகனசகாப்தமோராயிரத்தெழுநூற்றியெழுபத்தினுன் *
கிற்கலியுகாப்த்தம்நாலாயிரத்துத்தொளாயிரமுமன்பத்திமூன்றும் *
செழித்துநிகழ்பரிதாபிவருஷமாவணி மதித்தெய்தியிருபத்திநாலு *
திகழ்வாரம்வெள்ளிதுவாதசிதிதிப்பூசநாள்சேர்பரிகநாமயோகம் *
வழுத்துகவுலவகரணமிப்பகற் பத்தரையில்வருமமிர்த கடிகையிந்த *
மங்களதினத்திரவுமீனலக்கினத்தினில் மதுரேசர்மருவுமீன ... *
விழிப்பரைமுன்னூறுகாற்பீடத்திருந்துகனவிற்பனர்கள்புகழுமழவை *
மேவுசுப்பிரமணியபூசுரன் தமிழிதை விரித்தரங்கேற்றினனே *

விருத்தம்,

மகிழ்பாண்டிநாட்டில் வைகைவளஞ்சேருமழவைதனில் வாழ்வோன்
மிகுராஜகெம்பீரபிரகசரணவேதிபரில்விளங்குமேன்மை [செல்வ
தகுமுயர்சுந்தரபூசுரன்சொல்சுப்பிரமணியவந்தணனன்பாக ... *
பகர்சுந்தரேசர்விளையாடலைக்கீர்த்தனமாகப்பாடினனே ... *

இஃது-திருவாவடுதுறை - ஆதீனவித்துவான்

## தாண்டவராயசுவாமிகள்

செய்தருளியது.

நேரிசைவெண்பா.

தென்மதுரைஈசர்திருவிளையாடற்கதையை ... *
மன்மழவைவாழ்சுப்பிரமணிய...நன்மறையோன் *
கீர்த்தனஞ்செய்தானஃதைக்கேசவமாலச்சமைத்தான்
சீர்த்தவழகப்பசெட்டி ... ... ... *

---

இஃது- யூநிவர்ஸிட்டியென்னுஞ் சகலசாஸ்திரசாலைத்
தமிழ்த்தலைமைப்புலமைநடாத்தும்
திருத்தணிகை

## விசாகப்பெருமாளையரவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

செழியர்பொருட்டெழின்மதுரைச்சிவன்செய்திருவிளையாடற் ... *
சிறப்பைச்செவ்வே ... ... ... ... ... *
மொழிபெயர்ப்பாம்யாப்பினருட்பரஞ்சோதிமுனிமொழிந்த ... *
முறையேயன்பு ... ... ... ... ... *
பொழியுமிசைக்கீர்த்தனமாப்புகன்றுபெரும்புகழ்படைத்தான் ... *
புவியோர்போற்றக் ... ... ... ... ... *
கழிபெருஞ்சீர்மழவையிற்சுப்பிரமணியமறையவனுங் ... ... *
கவிஞன்மாதோ ... ... ... ... ... ... *

---

இஃது

தமிழ்ப்புலவர்

## புதுவை-பொன்னுசாமிமுதலியாரால்

சொல்லப்பட்டது

உலகெலாம்பரவுமொருமுதன்மேனா ... *
ளுவந்தருளியதிருவிளையாட் ... ... *
டிலகுமெய்ப்பொருண்முற்றெளிதினன்குணர்ந்தெவ்
வுயிர்களுமின்புறீஇயுய்வா ... ... *
னலகிலின்னிசைக்கீர்த்தனமதாச்சொற்று ... *
னந்தணன்மழவையம்பதியோ ... ... *

னிலவியபுகழ்ச்சுப்பிரமணியைய ... ... *
னெனுமியற்பெயர்கொணுவலனே ... *



இஃது
சிதம்பரம் - தளவரிசை
சுப்பிரமணியபண்டிதர்
அவர்கருத்து.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்கொண்டபரஞ்சோதிமுனிவர்முனமியற்றுஞ் ... *
செய்யதிருவிளையாடலெனும்பெருங்காப்பியத்தை *
பார்கொண்டகீர்த்தனமாகச்சுருக்கியுரைத்தான் *
பகர்மழவைப்பதியுறைவிப்பிரகுலமாமணியா *
மேர்கொண்டகலைபுணர்சுப்பிரமணியக்கவிஞ ... *
னிருநிலமுய்ந்திடவதனையழகப்பமகிபன் ... *
பேர்கொண்டகேசவமாலச்சுக்கூடத்திற் ... *
பிழையறவச்சிற்பதித்துப்பெரும்புகழ்பெற்றனனே *



இஃது, தருமபுரம்ஆதீனஞ்
சோமசுந்தர கவிராயர்
இயற்றியது.

ஆறுபத்துநான்குவிளையாடலைக்கீர்த்தனைத்தமிழாயகிலமுய்யக் *
கூறுமதிமதிமழவைசுப்ரமண்யமறைக்கோமான்கூறயாருந் *
தேறுமொழியழகப்பதீரனஃதச்சுறுத்துஞ்சிந்தையோர்ந்தே *
பேறுபெறுகேசவமாலச்சுக்கூடத்தியற்றிப்பேர்பெற்றானே *



இஃது,
சென்னைமாநகரம்
சதுர்வேதசித்தாந்த சபாப்பிரசங்கத்
தமிழ்த் தலைமைப் புலமை நடாத்தும்
தாரங்காபுரம்- அஷ்டாவதானம்
கதிர்வேல் கவிராஜபண்டித ரியற்றிய
இரட்டையாசிரியவிருத்தம்.

சந்திரஜடாதார திரிநைநசொக்கேசர் ... ... *
சதுரையருண்மதுரைநகரிற் ... ... *

ருனடத்துஞ்சரிதை யானதிருவிளையாட ... ... *
றன்னைபூவலயத்தினிற் ... ... *
சர்வத்ரசாதாரணஞ்செயத்திருமழவை ... ... *
தன்னிலேயவதரித்த ... ... *
சாதுரியவுனதையமூர்த்திக்குரவனுகிவளர் ... ... *
சர்க்குணச்சுந்தரையர் ... ... *
மைந்தனெனவந்தபிர பந்தமிசைசந்தமிகு ... ... *
வள்ளல்சுப்பிரமணியவேள் ... ... *
வளமுடையகீர்த்தனைகளாகநல்கியவதனை ... ... *
வண்சுந்த்ரசோழபுரம்வாழ் ... ... *
வணிகரிற்றலைமைசேரழகப்பமகிபதியின் ... ... *
மாண்புளமுயற்சியதனுல் ... ... *
மாதிரமெலாம்புகழுநீதிசேராதிபுரி ... ... *
மானகரிலேயுதித்தே ... ... *
யந்தகாரந்தவிரவந்தபாற்கரனைநிக ... ... *
ரஞ்ஞானவிருளகற்றி ... ... *
யண்டினோர்க்குதவுநென்மண்டிவெங்கிடசாமி... ... *
யற்புதத்தபோபலத்தா ... ... *
னத்விதமகாயோகனித்யமதிவைபோக ... ... *
னருந்தமிழிலேவிவேக ... ... *
னுதுலர்க்குபகாரன்மாதுரியவிவகார ... ... *
னளகைவளருங்குபேரன் ... ... *
மந்த்ரமிகு திரிபதகைமரபில்வருபாக்கியன் ... ... *
மடலெழுதுபோகபோக்யன் ... ... *
மாருதசெல்வநிறை நாராயணச்சுவாமி ... ... *
வள்ளலுக்கனுஜனுனேன் ... ... *
வாசவப்பிரதாப கேசவப்பிரபுடீக ... ... *
மந்திராஜலப்புயத்தான் ... ... *
மனமகிழ்ந்தச்சிற்பதிப்பித்தளித்தனன் ... ... *
மகாகீர்த்திநிலைநிற்கவே ... ... *

---

இஃது- தரங்காபுரம்

சண்முகக்கவிராயர் பாடியது.

எழுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

வெற்றிபெறு மழவைவளர் சுப்பிரமண்யக் கன்ய ... *
வேதவேதியர் மரபினேன் ... ... *

விமலர்திரு விளையாடல் கீர்த்தனஞ் செய்ததனை ... *
விருதுமரு தாந்தபுரம்வாழ் ... *
வுற்றவழ கப்பவணி கக்குபே ரன்சைவ ... *
மோங்குசிவ பூசைநெறியா ... *
னுவந்தச் சினிற்பதித் திட்டமாங் கேசவற் ... *
குரியசோ தரனுடன்மரீஇ ... *
யிற்றவுறு மாநந்த வருடங் தநுத்திங்க ... *
ணிறைதெய்தி யொன்பானனு ... *
ணிறைபெற்ற சுக்ரவா ரந்திதிகொள் யோகநிறை ... *
நேருசுப லக்கினத்தில் ... *
சொற்றிறங் கற்றமுத் தமிழனோர் தங்கண்முன் ... *
சொற்றாங் கேற்றி வைத்தான் ... *
றாய்மையுறு சதுர்வேத சித்தாந்த சபையினிற் ... *
சுபசோபனம் பெருகவே ... *



## சிறப்புப் பாயிரம்

### நிலமண்டில ஆசிரியப்பா.

உலகினி லுயர்வுறு பலவளமதுபெறு - பொன்னாட்டினுமிகு தென்னாட்டிடைமிகு - மரபினில் முறைமுறை அரசுசெய் பாண்டியர் - அடிமுடிநடுவறு வடிவரனருளுறு - நான்மறைவழிச் செங்கோன்முறை நடாத்தி - அளவறுபுகழொடு வளரிடமாகியும்- மலயமாமுனியென நிலைகொள்மாயவனல்- செழிவுறுதமிழெனும் மொழிபெறுமமுதம்- புலவர்கள்களிகொள நலமிகவுதவிப் - புல்லறிவுணர்கள் வல்லமையொழித்து- பங்கப்படாது பரனெடுமருவச்- சங்கப்பலகை தருந்தலமாகியும்- அரவமான் மதமலை உரியதுதரித்து- அலவனும்ஆரமும் நலமொடுபுனைந்து- அங்கயற்கண்ணியைப் பங்கினிற்சேர்த்து- யெங்குமாயன்றே டிடவேநீண்டு - பாரிடஞ்செழிக்க நீர்மிகவுதவிக் - கதிதருமுக்கட் கடவுள்நேர்வைகை- நதியருகினிலுறு நலமவையுடையது-புகழணி அகழியும் புரிசையுமாடமும்-சுகமுறுமரங்கமும் சோதி செய்குன்றமும் - கோபுரவாயிலுங் கோயிலும்தடங்களும் - பூபர்கள் துதிசெயும்பொன்னணிநகரமும்- அளகையும்இணையல அதற்கதேஇணையென- ஒளிவுயர்மறைமுடி யுறைமதுராபுரி-அம்பிகைபாகர்க் காகமாமிவை, வெம்பிடாதெளிதாய் வீடருள்

வழியெனப், பிழையற நிலத்தோர் பிழைக்கும் பொருட்டுச், செழிவு டனியற்றுந் திருவிளையாடல், எட்டெட்டுந்தமி ழின்கலையாகும், மட்டறவுணர்ந்த மாட்சிசார் சைவ, சமயசிகாமணி தவவுருவென வந், தமைபரஞ்சோதி யாமா முனிவன், மொழிபெயர்த்தருளினன் முயல் சிவபக்தியும், ஒழிவறுஞானமும் உற்றமேன்பாடும், விரிந்த புராணமாய் மேலவர் புகழ, அருந்தமிழ்ச் சொற்பொருள் அழகுறவமைத்ததை, வான்மழை வறக்கினும் வளமிகுவைகையின், பான்மையதுளவுயர் பாண்டி மண்டலத்திடை, தண்டலைமதுவின் தண்ணதியெழுந்து, கொண்டலை யெறிந்து குளங்களும் பழனமும், பெருகவேயென்றும் பீடுறவிளைந்த, கருதரு செந்நலின் கலந்திடு கன்னலின், மணிகளை மள்ளர் மகளிருங் கொழித்து, அணிகொளு மழவையம்பதியுளனேத், தேசம் புகழுஞ் செல்வம துயர்ந்த, ராஜகெம்பீர நற்பிரகசரண, வேதியன் உயர் எசுர் வேதபாரகன், கோதில் வாதூல கோத்திரோத்பவன், ஆபஸ்தம்ப மாஞ்ஸூத்திரத்தோன், பூபர்கள் மகிழப் புகலுமுத் தமிழும், அறைந்து சாமியமும் அஷ்டாவதானமும், நிறந்தரநடத்துந் திடமிகு கல்வியான், பெருமயில் மலைவேள் பிள்ளைத்தமிழ்க்கவி, ஒருபகற்பொழுதி லுரைத்தமாவாக்கி, நலமகம்பலவு நடத்திய தவத்தான், பலமருள் அரனையே பணிந்திடு பத்தியான், கோடி மன்னனுக்குங் குழந்தை மன்னனுக்குந், தேடிய புகழ்சேர் தேவைமன்னனுக்கும், தஞ்சைமன்னனுக்குந் தானுபதியாய், மிஞ்சியமதிமான் வேலவர் புகழே, வழுத்துமால் சுப்பிரமண்ணியபாரதி, தழைத்திடு மரபிற் றத்துவ முணர்ந்து, பொய்த்திடுமுலகிற் பொருந்தாதுற்று, உத்தமகுணமோ டொப்பறக் கற்று, மெஞ்ஞானத்தின் விரிவொளிவாகி, அஞ்ஞானவிரு ளகற்றியேசிறந்த, உதயமூர்த்திபூ சுரனருள் பெருமைச், சுதன்வேதாந்த சுப்பிரமண்ணியமால், சோதரனென சுந்தர பூசுரன், மாதவப்பயனால் வருவரபுத்திரன், சுப்பிர மண்ணியபூ சுரன் மதுரேசர், மெய்ப்பத மருவும் விருப்பது மிகுந்து, சாற்றிய ராகமும் தாளமு மிசைந்த, கீர்த்தனையுடனே கிளர்த்துபா வினங்களும், நிகழ்த்தின னிந்த நிலமெலாம் விளங்க, மிகுத்திடச்செய்ய வேணுமென் றெண்ணி, அரங்கம்பாடியும் ஆக்கமுநிறைந்த, தரங்கம்பாடி தனில்வளர் கனவான், கங்கைகுலத்தோன் கணைவிழிமடவார், குங்கும முலைதோய் குவளைத்தாரான், கார்காத்தருளிக் கருணையே படைத்தோன், பார்காத்தருளும் பார்த்திபர் மகிழ்வோன், திறப்படும் அரசர் செயக் கொடிக்கெல்லாம், விறற்கொழு கொம்பாம் மேழிக்கொடியான், ஏற்பவர்க்கெல்லா மிருநிதியானேன், சீர்ப்பொலி பரணைச் சிந்தையிற் கொண்டோன், வெற்றிகொள் குழந்தை வேல்மகிழ்ந் தருளும், முத்தமிழ்மொழிசன் முதக்கவி ராஜன், மழையது நன்னீர் மகிழ்ந்துதவு

தல்போற், பிழையதுதிருத்திப் பிரபலமாக்க, உக்கிரவீர பாண்டியன்பண்டு; நற்குடிவேண்டி நயமுடன் அழைக்க, மதித்திடு தொண்ட மண்டலமதனில், கதித்த காவேரிப்பூம் பட்டணத்தில், நிறைந்தவரன்னகர் நீங்கியே பெழுந்து, சிறந்திடு வளஞ்சேர் தென்னுடதனுள், கிளைமிகமலிஜெய சோள கெம்பீர, வளநாடாகிய மருவுகோனுட்டுள், படர்பொன் னமரா பதிநன் னுட்டின், வடபத்துச்சேர் வளமுளசுந்தர, சோழபுரத்திற் சுகமுடன் மருவி, வாழும் நால்நகர வணிகசிகாமணி, ஆநந்தவல்லி அம்பிகையுடனே, தானந்தமுள்ள தாந்தோன்றியீசர், பொன்னடி பணிவோன் புன்னைவமா முனிவன், றன்னையே குருவாய்ச் சார்ந்திடுசீடன், புகல்மரு தாந்த புரமுடை யவனும், செகமிகமகிழும் சிங்கடா லுடையான், சந்ததம்சிரகத் தாரணி மார்பன், சுந்தர மடவார் சூழ்ந்திடு மெழிலான், அவனியில் மகிழும் அழகப்பவணிகமால் - தவ மிகச்செய்து தருவரபுத்திரன் - தருவெனும்ராம சாமிமால்தனையும் - தருவனும் குப்பைய சுமுகன்றனையும் - துணையெனக் கொண்டோன் சொரிமா முகிலும் - இணையலவெனவே எழில்பெறு கொடையான் - வச்சிரதேகன் வளரதியோகன் - மெச்சும்விவேகன் மெல்லியர்மோகன் - அழகப்ப வணிக னுமதிகனவான் - உழையுற்றிடுகர உத்தமவரனுர் - மதுரைமா நகர்தம் மரபினேராலே - துதிபெற ஆக்கிய தொன்மைய துணர்ந்து - அப்பெரும்புகழை அவனிகளெங்கும் - விற்பனராலே விளக்கிடக்கருதி - தேசம்புகழுஞ் சென்னைமாநகரில் - பேசுசிந்தாத்திரிப் பேட்டையிற் றுலங்கும் - நலவெங்கிட்ட ராமமுதலியார் - உலகினர் வியப்ப உதவியசுதரிற் - கேசவமுதலியார் கிளர்பிரபாகர - தேசுறும் அச்சுத் திகழ்கூடத்தில் - தொழுதாருஞ்சொலச்சோதியின்புகழை- எழுதா வெழுத்தில் இசைவித்தனனே. ... ... ... *

---*---

இந்தக்கீர்த்தனையை அச்சிட்டுவைத்த

## அழகப்ப செட்டியார் பேரில் பாடிய

### ஆசிரியவிருத்தம்.

திருமருவமருவமருமிதழிதழிமதியமதி... ... ... *
சிதநதிசேர்வேணியர் ... ... ... ... *
தேவியானந்தவல்லிக்கிறைவர் கருணைவளர் ... ... *
சிலர்தான்தோன்றிசர் ... ... ... ... *

இருபதம்பணிவோன் திருப்புனவைமாமுனிவர் ... ... *
யிணையடிவணங்குசீடன் ... ... ... ... *
எழில்கொண்டசுந்தரச்சோழபுரநன்னகரில் ... ... *
எவருமகிழ்கனயோகவான் ... ... ... ... *
பெருமைபெருகியநேயன்மருதாந்தபுரமுடைய ... ... *
பிரபலனழகப்பவணிகன் ... ... ... ... *
பெற்றருளுமழகப்பவணிகேசனிருநிதிகள் ... ... *
பெருகும்அளகேசனெனவே ... ... ... *
மருவிமதுரேசர்விளையாடலின்கீர்த்தனம் ... ... *
மானிலமெலாந்துதித்து ... ... ... ... *
மகிழவச்சுப்புத்தகத்திற்பதித்தனன் ... ... ... *
மதுரேசரருள்புரியவே ... ... ... ... *



இந்தத் திருவிளையாடற்கீர்த்தனையைத் திருத்தமாகப் பார்வையிட்ட

தரங்காபுரம்

சண்முகக்கவிராசர்

சொல்லியது—கட்டளைக்கலித்துறை.

கருவிளையாமற்கயற்கண்ணிநாதர்கருணைவளர் ... ... *
திருவிளையாடற்புராணநற்கீர்த்தனைசெய்தனன்வான் ... *
தருவிளையும்பொழிலார்மழவைக்கண்டழைக்குமறைக் ... *
குருவிளைபுண்யகுலன்சுப்ரமண்யகுணாகரனே ... ... *

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

சண்முகதேவைப்பரவுமாதிசைவத் ... ... *
தகைபெருகுமுதற்குலத்தோன்சதுர்வேதத்தோன் ... *
சண்முகபாரதியுதித்தமரபோன்சீடர் ... ... *
தமக்கருள்வோன்குறுமுனிக்குச்சகாயமானோன் ... *
சண்முகமாமதமகிழச்சுப்ரமண்யத் ... ... *
தமிழ்ப்பெருமான்கீர்த்தனைசெய்தளிக்கச்சீர்சேர் ... *
சண்முகமுத்தமிழ்க்கவிஞன்பார்வையிட்டுத் ... ... *
தரவேங்கடாசலனேர்ந்தச்சிட்டானே ... ... *

திருவண்ணுமலை

## வெங்கடாசலமுதலியார்

சொல்லியது.

கலித்துறை.

சிந்தையினையத்தந் - தீர்த்திடு நூல்கள் தினந்தனுடன் ... ௯
வந்துணர்ந்தோனுந்தன் - சீடனும்பாயிரம்வாழ்த்தான்னூற் ... ௯
றெருந்தமென்றேபவ - ணந்திசொற்றூர்முன் றுவக்கமுதல் ... ௯
அந்தமுற்றும்அச் - சடுக்கிய யான் றுதியாடுவனே ... ௯

பதம்-தோடிராகம்-ஆதிதாளம்,

[பல்லவி,]

சுப்பிரமண்யபூ-சுரன்சீரைப் பூவின்மேலே
சொல்லவுண்டோநாவி ... னூலே

[அநுபல்லவி.]

எப்பதியுந்தொழுமழ - வைப்பதிதன்னில் ... வாசன்
எந்தையாகியசோம - சுந்தரேசுவரர் ... தாசன்
சொற்பொருளுணர்ந்தகல் - விப்பிரசங்கர்க்கு நேசன்
சூரியனைப்போற்றுன்னும் - ஆரியகுலப்பிர காசன்
சொன்னமொழிகள்தவ - றுதமெய்ப்புண்ணிய
னென்னுநற்பெயர்கொண் - டிட்டிடு கண்ணிய
சுப்பிர

[சரணங்கள்.]

(க) துதிமிகவுடையதென் - மதுரைநகருற்றாழை
தொடைத்தருள் கொடுத்திடத் ... தேடும் - எழிற்சோம
சுந்தரேசுவரரிட - சிந்தைமகிழ்ந்தெவருந்
தொழுமன்றுள்நின்றன் றூடும் - விளையாடலை
விதியுடனேதவத் - ததிபர்கள்கிரந்தமாய்
விளம்பினரதுபய ... னேடும் - வேதியர்க்கே
விள்ளுமதின்பின்புகழ் - கொள்ளும்பரஞ்சோதிமுனி
விருத்தமாய்ச்செய்தாரதன் பாடும் - கற்றவர்க்கே
மதியிற்படுமற்றேருக் - கிதுதெரிந்திடல் ... மெத்த
வருத்தமெனத்தனது - கருத்தினினைந்தொப்பற்ற
வாகியவறுபத்து - நாலையுமெழி ... அற்ற
தாகியகீர்த்தனை - யாகச்செய்திடக் ... கற்ற
சுப்பிர

(உ) விள்ளற்கரியசொல்லைத் - தள்ளிவெள்ளைச்சொற்களை
விரும்பியெடுத்தடுக்கிய ... வீரமும் - ராகதாள
மிகவும்கேட்பவர்க்கு - அகமுகங்களிப்புற
விதவிதமாய்ப்புகட்டிய ... தீரமும்- மிகவுமவர்
கொள்ளுங்கதைக்கேயுகந் - துள்ளகண்ணிகள்தருக்
கோர்வையாகச்சேர்த்தகெம்... பீரமும்-வீட்டினிலுள
கோதையருந்தெரியாப் - பேதையரும்படித்துக்
கொளவடிபிரித்தவு ... தாரமும் - சின்னஞ்சிறிய
பிள்ளைமொழிகள்போலத் தெள்ளியசொற் பகட்டும்
பேதமில்லாப்பதத்தின் - ஆதியந்தத்தின்... கட்டும்
பெருமையும்விருத்தத்தின் - முடிவினிற்றரு வொட்டும்
ஒருமையுங்கற்பனைச்சொல்-லருமையும்விண்ணிலெட்டும்
சுப்பிர

(௩) இப்படியாகச்செய்த - ஒப்பில்லாக்கீர்த்தனையை
எழிலாதிபுரிநகர் ... மேலே - வாழ்ந்தேகீர்த்தி
யெங்கும்தங்கும்ஜெய - துங்கன்வெங்கட்ராமேந்தர
னியற்றியமகன்றவத் ... தாலே - தோன்றியகேச
வப்புனிதனுமெய்யைக் - கைப்பிடித்தறந்தனை
வளர்க்கவுமுறுமாரன் ... போலே - யுதித்தேயவர்
மனதுக்கிசைந்ததம்பி - யெனுநாராயணசாமி
மகிபனிருவரிருவ ... ராலே - எவர்களுமெச்
சிப்புகழ்ந்திடவும்வைச் - சப்பிரதாபங்கொண்டிட்ட
செழுங்கலைக்கியானங்களை - ஒழுங்குரத்தரப்பட்ட
சித்திரப்பிரபாகர - வச்சினிற்பதித்திட் ...டட்ட
திசைமுழுமையும்பர - விச்செறிவுற்றிட விட்ட
சுப்பிர

———*———

சாற்றுக்கவிகள் - முற்றும்.